# நிலைத்து நிற்கும் வாழ்க்கைத் தத்துவங்கள்

## பாகம் - 1

## PHILOSOPHIA PERENNIS - I

ஓஷோ

தமிழில்
சிவதர்ஷினி

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.
போன் - 2433 2682 / 2433 8712
மதுரை • கோவை • புதுச்சேரி

# பொருளடக்கம்

# முன்னுரை

கிரேக்க நாடு உலகிற்கு அளித்த அதிமுக்கியத்துவம் பெற்ற மனிதர்களில் பிதாகரஸ் ஒருவர். கிரேக்கம் உலகிற்குத் தந்த அந்த சிறந்த அறிவாளிகள் குறித்து ஏனோ அதிகம் பேசப்படவில்லை. பிதாகோரஸ், சாக்ரட்டீஸ், ஹிராகிளிட்டஸ், எபிக்கியூரஸ் போன்ற இவர்கள் அதிகம் பேசப்பட வேண்டியவர்களில் சிலராக இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்குப் பதிலாகப் பல்கலைக்கழகங்கள் பிளேட்டோவை பற்றிக் கற்பிப்பதில் கவனம் செலுத்துகின்றன. அரிஸ்டாட்டில் பற்றிச் சொல்லித் தருவதில் அக்கறை கொள்கின்றன.

பிளேட்டோ வெறும் ஆவணக் காப்பாளர் மட்டும்தான். அவருக்கென்று எந்த ஒரு சொந்தக் கருத்தும் இல்லை. அவர் சாக்ரட்டீஸ் மீது பக்தி விசுவாசம் கொண்டிருந்தார். எதையெல்லாம் சாக்ரட்டீஸ் சொன்னாரோ அவற்றை அப்படியே பதிவு செய்து வைத்தார், எழுதி வைத்தார். சிறந்த ஆசான்கள் எதையும் எழுதி வைத்துவிட்டுப் போவதில்லை. அதுபோலவே சாக்ரட்டீஸும் எதையும் எழுதிவைக்கவில்லை. பிளேட்டோ நிச்சயமாகவே ஒரு நல்ல எழுத்தாளர். சாக்ரட்டீஸ் எழுதியிருந்தாலும் இந்த அளவுக்கு அவரால் இவ்வளவு அழகாக எழுதியிருக்க இயலாது. சாக்ரட்டீஸின் போதனைகளைப் பிளேட்டோ தன்னால் எவ்வளவு முடியுமோ அந்த அளவுக்கு அழகாக எழுதி வைத்தார். தனது சொந்தக் கருத்து எதையும் பதிவு செய்து வைக்கவில்லை. இன்றைய நாளாக இருந்தால் அந்த வேலையை ஒரு ஒலிப் பதிவுக் கருவியே செய்துவிடும். அரிஸ்டாட்டில் வெறும் அறிவாளி மட்டும்தான். ஆத்மா பற்றிய புரிதல் அவருக்கு இல்லை அல்லது அதைத் தேடும் ஆசையும் இருக்கவில்லை. இப்படிப்பட்ட மனிதர்களைப் பற்றித்தான் பலகலைக்கழகங்களில் கற்பிக்கிறார்கள்.

நான் கல்லூரியில் படிக்கும்போது அங்கு இருந்த பேராசிரியர்களுடன் சதா சண்டையிடுவது வழக்கம். பிளேட்டோ பற்றி அவர்கள் பாடம் நடத்தும்போது நான் அவர்களைப் பார்த்து, "இது சுத்த அபத்தம். காரணம் பிளேட்டோ சுயமாக எதையும் சொன்னதில்லை. எனவே சாக்ரட்டீஸ் குறித்து போதிப்பதே சிறந்ததாக இருக்கும்" என்று கூறுவேன். பிளேட்டோவை மேற்கோளாக மட்டுமே காட்டலாம். அவர்தான் எல்லாவற்றையும் தொகுத்து வைத்தார். ஆனால் சாக்ரட்டீஸின் பெயர் கற்பனையான ஒன்று போலாகிவிட்டது. பிளேட்டோ நிஜமானவர்போல் மாறிவிட்டார். நேற்று இரவு நான் சொன்னதுபோல் அஸ்பென்ஸ்கி ஒரு குருவாக மாறிவிட்டார். காரணம் அவர் புத்தகங்கள் எழுதியிருக்கிறார். அழகான புத்தகங்கள் எழுதியிருக்கிறார். ஒருநாள் குர்ட்ஜிஃப்பை மக்கள் மறந்துவிடுவார்கள். ஏற்கெனவே அவர் மறக்கப்பட்டுவிட்டார். அஸ்பென்ஸ்கி பல நூற்றாண்டுகளாக நினைவு கூறப்பட்டு வருகிறார். விரைவிலோ அல்லது தாமதமாகவோ அவர் எழுதி வைத்திருப்பதெல்லாம் அவரது சொந்தக் கருத்துக்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுவிடும். அது எதுவுமே அவரின் சொந்த கருத்து கிடையாது.

உலகிலுள்ள எந்த ஒரு பல்கலைக்கழகமும் பிதாகோரஸ் பற்றிக் கவலைப்பட்டதே இல்லை. அதற்கான எளிய காரணம், வழக்கமான வகையைச் சேர்ந்த கல்வியாளராக அவர் இருக்கவல்லை என்பதேயாகும். அவர் நிஜமான தேடல் கொண்டிருந்தார். எங்கு வேண்டுமானாலும் போகத் தயாராக இருந்தார். தனது வாழ்நாள் முழுவதையும் பயணத்திலேயே கழித்தார். ஞானத்தின் ஒளிக்கீற்று எங்காவது ஒரு மனிதரிடம் சற்றே தென்பட்டாலும் அங்கு சென்று அவரிடம் கொஞ்சம் தெரிந்துகொள்ள முடியும் என்று எண்ணினார். பல துணுக்குகளைச் சேகரித்தார். அவற்றை அழகாக ஒருங்கிணைத்தார்.

ஆனால் கிரேக்கர்கள் அவரைக் கண்டுகொள்ளவில்லை. காரணம், அவர் கிரேக்க தத்துவங்கள் குறித்து எதுவும் பேசவில்லை. அவர் அயல்நாட்டுத் தத்துவங்களைக் கொண்டு வந்திருந்தார். அலெக்ஸாண்ட்ரியாவுக்கு அவை வினோதமானவை. நாளந்தா, தட்சசீலம் போன்ற இடங்களில் இருந்து அவர் கொண்டுவந்தார். கிட்டத்தட்ட அவர் ஒரு கிரேக்கராகவே இல்லை. அவர் கொண்டு வந்தவை மீது அவர்கள் அக்கறை காட்டவில்லை. அவர் கொண்டு வந்ததை வைத்துக் கொண்டு கிரேக்கர்களோ, இந்தியர்களோ, எகிப்தியர்களோ எதுவும் செய்ய இயலாது என்று கருதினார்கள். அவர் நிராகரிக்கப்பட்டார். மிகவும் முக்கியத்துவம் நிறைந்த ஒரு மனிதர் முற்றிலுமாக நிராரிக்கப் பட்டார்.

அதுதான் டயோஜெனஸுக்கும் நடந்தது. அவர் நிராகரிக்கப்பட்டார். காரணம், கிரேக்கர்கள் வெறுக்கும் விதத்தில் அவர் காணப்பட்டார். அவர் நிஜமானவர். சிந்தனைகளில் மட்டுமின்றி வாழ்விலும் அவர் செய்யும் ஒவ்வொரு காரியமும் நிஜமானதாக இருந்தது. அவர் அபாரமான துணிச்சல் உள்ளவர். பேரரசர் அலெக்ஸாண்டரைப் பார்த்து, "நீ முட்டாள்போல நடந்து கொள்கிறாய். உலகை வெல்லும் உனது திட்டம் அறிவீனமானது. எதற்காக உலகத்தை வெல்ல நினைக்கிறாய்? வென்ற பிறகு என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்க முடிந்தது.

அதற்கு அலெக்ஸாண்டர், "அதன் பிறகு என்ன செய்வேனா? நான் ஓய்வு எடுத்துக்கொண்டு வாழ்வை அனுபவிப்பேன்" என்றார். அதைக் கேட்ட டயோஜெனஸ் தனது நாயைப் பார்த்தார். அவர்கள் இருவரும் நண்பர்கள். ஒன்றாக வசித்து வந்தார்கள். அவர் நாயிடம், "கேட்டாயா? இவன் உலகத்தை வென்ற பின்னர் நிம்மதியாக ஓய்வு எடுக்கப் போகிறானாம். எதையும் வெல்லாமலே நாம் இப்போது அதை அனுபவித்துக் கொண்டுதான் இருக்கிறோம்! அப்படியிருக்க எதற்கு அதிகமான சிரமங்களை எதிர்கொள்ள வேண்டும்?" என்று கேட்டார்.

ஒரு நிர்வாணமான மனிதனால் அலெக்ஸாண்டரைப் பார்த்து, "நீ முட்டாளைப்போல நடந்து கொள்கிறாய்" என்று சொல்ல முடிகிறது. அப்படிச் சொல்லப் பெரும் துணிவு தேவை. அதை அலெக்ஸாண்டர் ஏற்றுக் கொண்டார். அவர் தன்னுள் பேராற்றல் கொண்டவராக இருந்தார். பேரறிவாளராக விளங்கினார். அவரை ஏற்றுக் கொண்டு தான் தீரவேண்டியிருந்தது. டயோஜெனஸ் போன்ற தகுதி படைத்த ஒருவரை அவர் இதுவரை சந்தித்ததில்லை.

ஆனால் கிரேக்கர்கள் அவரை நிராகரிக்கும் செயலில் ஈடுபட்டார்கள். எபிக்கியூரஸிடம் நடந்து கொண்டது போலவே இவரிடம் நடந்தார்கள். அது மிகவும் விநோதமான செயல். மனித சமூகம் தனது மண்ணின் மைந்தர்களிடம் நடந்துகொள்ளும் முறை அநேகமாக இது தான்போலும். நிராகரித்து, அவர்களைக் கண்டுகொள்ளாமல் இருப்பதே அவர்கள் செயலாக அமைந்திருந்தது.

ஆனால் அவர்களில் ஒருவராக இருந்த பிதாகோரஸ் ஒரு புத்தரை உருவாக்கும் முழுமையான முறையைத் தோற்றுவித்தார். அது கோட்பாடு ரீதியானதாக மட்டுமே இருக்கவில்லை. அவரும் ஞானமடைந்தவராக மாறினார். அவர் கிரேக்கம் திரும்பியபோது அங்கிருந்து சென்ற அதே பழைய பிதாகோரஸாக வரவில்லை. அதுதான் மிகப்பெரிய சிக்கல்களில் ஒன்றாகும். அவரது சொந்த நாடே அவரை அங்கீகரிக்க

வில்லை. உண்மையில் அவர்களிடம் ஞானம், விழிப்புணர்வு, புத்த நிலை போன்றவை பற்றிய வகைப்பாட்டுப் பட்டியல் இல்லை. எனவே பிதாகோரஸை எங்கே வைக்கமுடியும்? அந்த வகைப்பாட்டுப் பட்டியல் அவர்கள் மனதிலும் தோன்றியிருக்கவில்லை. ஆகவே அவர் பட்டியலிடப்படாது வைக்கப்பட்டார். இரண்டாயிரம் ஆண்டு காலம் அவரைப் பற்றி யாரும் ஆராய்ந்து விமர்சிக்கவில்லை.

அந்த உயர்ந்த மேதாவிலாசத்தையும், சிறந்த தனித்துவத்தையும் கண்டறிந்து விமர்சித்த முதல் மனிதன் நான்தான். இந்திய மறை நூல்களில் காணப்படும் அம்சங்களை மேலும் சிறப்பான வகையில் அவர் எடுத்து உரைத்திருப்பதை நீங்கள் காணலாம். ஏனென்றால் இந்திய மறைநூல்கள் பெரிதும் கவித்துவம் கொண்டவை. ஆனால் அவர் ஒரு கிரேக்கர். தர்க்கரீதியான ஆழ்ந்த சிந்தனை கொண்டவர். நிஜமான அறிவியல் பார்வை கொண்டவர்.

ஓஷோ
மனோதத்துவ சாஸ்திரத்துக்கு
அப்பாற்பட்டவர்.

## அத்தியாயம் - 1

பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்.

அதை உண்மையாகக் கடைப்பிடியுங்கள்.

புகழ்பெற்ற காவிய நாயகர்களை, ஆவிகளைச், சிறுதெய்வங் களை நினைவுகூர்ந்து வணங்குங்கள்.

நல்ல மகனாக இருங்கள். பொறுப்புள்ள சகோதராக, அன்பான இல்லறத் துணைவராக, நல்ல தந்தையாக இருங்கள்.

உங்கள் நண்பர்களில் ஒருவரைத் தேர்வு செய்யுங்கள். நற் பண்புள்ள அவரது அன்பான அறிவுரைகளுக்குச் செவி கொடுங்கள்.

அவர் வாழ்விலிருந்து ஆதாயம் பெறுங்கள். அற்பத் தவறு களுக்காக அவரை விட்டு விலாகதீர்கள்.

உங்களால் முடிந்ததை அவருக்குச் செய்யுங்கள்.

ஆற்றல் தேவையானால் இந்த கடுமையான விதிமுறை களுக்குக் கட்டுப்படுங்கள்.

நித்தியமான புனிதப் பயணம் என்ற நிலைத்து நிற்கும் வாழ்க்கைத் தத்துவத்தைப் பிதாகோரஸ் எடுத்துக் கூறுகிறார். சிறந்த உண்மைகளைத் தேடியலையும் ஆர்வம் கொண்டவராக அவர் இருந்தார். தனது தேடலுக்காக எதையும் பணயம் வைக்கத் தயாராக இருந்தார். நாலாபுறங்களிலும் பயணம் மேற்கொண்டார். அக்காலத்தில் மக்கள் அறிந்திருந்த பூமிப்பிரதேசம் முழுவதையும் சுற்றியலைந்தார். குருமார்களையும், விநோத மடாலயங்களையும், மறைவாக இருந்த ரகசியங்களையும் தேடினார். கிரீஸிலிருந்து அவர் எகிப்து சென்றார். மறைந்துபோன அட்லாண்டிஸ் தேசத்தையும், அதன் மர்மங்களையும் கண்டறிவதே அவர் நோக்கமாக இருந்தது.

அந்த சமயத்தில் எகிப்தின் சிறப்பான அலெக்ஸாண்ட்ரியா நூலகம் அழிவுபடாமல் இருந்தது. கடந்து சென்ற காலங்களின் ரகசியங்கள் எல்லாம் அங்கு பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன. உலகில் இருந்த நூலகங்களில் எல்லாம் மிகப்பெரியதாக அது அமைந்திருந்தது. பிற்காலத்தில் அது இஸ்லாமிய மதவாதிகளால் அழிக்கப்பட்டது. நெருப்பு வைத்து எரிக்கப்பட்டபோது அது மிகவும் பெரிய நூலகமாக இருந்தது. ஆறுமாதகாலம் நூலகம் தொடர்ந்து எரிந்தது.

பிதாகோரஸ் காலத்துக்கு இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் அட்லாண்டிஸ் என்ற மாபெரும் கண்டம் ஒன்று கடலுக்குள் மூழ்கிவிட்டது. அந்த கடலின் பெயர் அட்லாண்டிக். எனவே அக் கண்டம் அட்லாண்டிஸ் எனப்பட்டது.

அட்லாண்டிஸ் உலகின் மிகப்பழமையான கண்டமாகும். அங்கு நாகரீகம் உச்ச கட்டத்தை எட்டியிருந்தது. எப்போதெல்லாம் நாகரீகம் உச்சத்தை அடைகிறதோ அங்கு ஆபத்து தலைதூக்குகிறது. உச்சத்திலிருந்து சரிந்து விழுதல், தற்கொலை செய்துகொள்ளல் போன்றவை நடக்கின்றன.

மனித இனம் அதே ஆபத்தை இப்போதும் எதிர்கொண்டு வருகிறது. மனிதன் ஆற்றல் படைத்தவனாக மாறும்போது அந்த ஆற்றலை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் போகிறது. ஆற்றல் மிகப்பெரியதாகவும், புரிதல் சிறியதாகவும் இருக் கின்றன. ஆற்றல் எப்போதும் ஆபத்தானது என்பது நிரூபணமாகியிருக் கிறது. இயற்கைச் சீற்றங்களால் அட்லாண்டிஸ் கண்டம் கடலில் மூழ்க வில்லை. இன்று நடந்து கொண்டிருப்பது போலவே மனிதன் இயற் கையின் ஆற்றலை அன்றும் வெற்றி கொண்டான். அணுசக்திப் பிர யோகத்தால் அட்லாண்டிஸ் கடலில் மூழ்கியது. அது மனிதனின் தற் கொலையாகும். ஆனால் அட்லாண்டிஸில் இருந்த எல்லா மதநூல்

களும், ரகசியங்களும் அலெக்ஸாண்ட்ரியாவில் பாதுகாத்து வைக்கப் பட்டிருந்தன.

ஊழிப் பெருவெள்ளம் ஏற்பட்டது குறித்து குட்டிக் கதைகள் உலகம் முழுவதும் வழக்கில் இருந்து வருகின்றன. அட்லாண்டிஸ் கண்டம் கடலில் மூழ்கியதை வைத்தே இந்த கதைகள் எழுந்தன. கிறிஸ்தவ மதம், யூதமதம், இந்துமதம் போன்றவற்றில் காணப்படும். இந்த கதைகள் ஒரு மாபெரும் கடல் சீற்றம் ஏற்பட்டது பற்றிப் பேசு கின்றன. ஒரு சில முன்னோடிகளும், திறமைசாலிகளும் மட்டுமே தப்பிப் பிழைத்தார்கள். ஊழிப் பெருவெள்ளத்தில் கிட்டத்தட்ட மனித இனமே அழிந்து போய்விட்டது. நோவா ஒரு திறமைசாலி. மாபெரும் ஆசான். நோவாவின் கப்பல் என்பது ஒரு குறியீடாகும்.

அழிவிலிருந்து சில மக்கள் மட்டுமே தப்பி உயிர் பிழைத் தார்கள். அவர்கள் மூலம் அந்த உயர்ந்த நாகரீகமும், அதன் ரகசியங் களும் தப்பிப் பிழைத்து மீட்டெடுக்கப்பட்டன. அவை அலெக்ஸாண்ட் ரியாவில் பாதுகாத்து வைக்கப்பட்டன.

பல வருடகாலம் பிதாகோரஸ் அலெக்ஸாண்ட்ரியாவில் தங்கி னார். பலவற்றைக் கற்றுணர்ந்தார். எகிப்தியப் பாரம்பரிய மடாலயங் களில் பயின்றார். குறிப்பாக ஹெர்மஸ் பற்றி ஆர்வம் காட்டினார். அதன் பிறகு அவர் இந்தியா வந்தார். அவர் கண்டறிந்த பழங்கால இந்திய பிராமண மடாலயங்களில் சேர்ந்தார். மனிதனின் அக உலகம் குறித்த விஷயங்களில் இந்தியா புகழ்பெற்று விளங்கியது.

பல வருடகாலம் அவர் இந்தியாவில் இருந்தார். பின்னர் திபெத் துக்குப் பயணமானார். அப்புறம் சீனா சென்றார். உலகம் என்பது அன்றைய நாளில் அவ்வளவுதான். தனது வாழ்நாள் முழுவதும் அவர் தத்துவத்தைத் தேடி அலைந்த ஒரு புனிதப் பயணியாக இருந்தார். தத்துவம் என்ற சொல்லின் உண்மையான அர்த்தம் வெளிப்படும் விதமான தேடல் அவரிடம் இருந்தது. அவர் நேசம் கொண்டவராக ஒரு தத்துவவாதியாக விளங்கினார். அச்சொல்லின் தற்கால அர்த்தப் படியின்றி, அதன் புராதனப் பொருள் வெளிப்படும் வகையிலான மனிதராக அவர் திகழ்ந்தார். நேசமனோபாவம் கொண்டவர் வெறும் துணிவை மட்டும் மேற்கொள்ள இயலாது. அவர் உண்மைநிலை பற்றி மட்டும் சிந்தித்துவிட முடியாது. நேசமனமுள்ளவர் தேடியலைய வேண்டும். ஆபத்தை எதிர்கொள்ளவும், சாகஸப் பயணம் மேற் கொள்ளவும் வேண்டும்.

உண்மை என்பது விரும்பத்தக்கதாகும். வெறுமனே சிந்திப்பதால் மட்டும் என்ன செய்துவிட முடியும்? விருப்பமான அந்த ஒன்றுடன்

மனதின் வழியே இணையவேண்டும். தேடுதல் அறிவுசார்ந்ததாக மட்டும் இருக்கலாகாது. அது உள்ளுணர்வின் அடியாழத்திலிருந்து எழ வேண்டும். ஆரம்பம் மட்டும் அறிவுசார்ந்து இருக்கலாம். அது ஆரம்பமாக மட்டுமே இருக்கவேண்டும். ஆரம்பப் புள்ளி மட்டும் அறிவுசார்ந்ததாக இருந்திடலாம். ஆனால் கடைசியில் அது ஆன்மாவின் உள் மையத்தை எட்ட வேண்டும்.

அவர் உயர்ந்த தயாள குணத்துடன் திறந்த மனம் படைத்தவராக இருந்தார். பெருந்தன்மையுள்ளவராக ஏற்றத்தாழ்வு பார்க்காதவராக மக்கள் கருத்துக்கு மதிப்பளிப்பவராக விளங்கினார். உலகம் முழு வதும் உள்ளவர்களால் அவர் மதிக்கப்பட்டார். கிரீஸ் தொடங்கி சீனா வரையில் அவர் போற்றப்பட்டார். ஒவ்வொரு மதஸ்தாபனமும் அவரை ஏற்றுக் கொண்டது. எல்லா இடங்களிலும் அவர் பெருமகிழ் வுடன் வரவேற்கப்பட்டார். எல்லா தேசங்களிலும் அவர் பெயர் அறியப்பட்டிருந்தது. எங்கு சென்றாலும் அங்கே அவர் பெரும் களிப் புடன் வரவேற்கப்படுவது வழக்கம்.

அவர் ஞானம் பெற்றுவிட்ட பிறகும் மறைவாக உள்ள ரகசியங் களைத் தேடியலைந்தார். புதிய மதஸ்தாபனங்களைத் தொடங்கி வைக்க அழைக்கப்பட்டு வந்தபோதும் அந்த தேடல் அவரிடம் இருந்து வந்தது. தொகுப்பு ஒன்றை உருவாக்க அவர் முயன்றார். மனித சாத்தி யங்களின் பல்வேறு வாய்ப்புகளைப் பயன்படுத்தி உண்மையை அறிந்து உணரமுயன்றார். உண்மையை அதன் எல்லா அம்சங்களை யும், எல்லா பரிமாணங்களையும் அறியவிரும்பினார்.

குருவுக்குக் கீழ்படிந்து நடக்க அவர் எப்போதும் சித்தமாக இருந்தார். அவரைப் போன்ற ஒரு ஞானம் பெற்ற மனிதர் இப்படி நடந்து கொள்வது வெகு அபூர்வம். நீங்கள் ஞானம் அடைந்து விட்டால், தேடல் நின்றுவிடும். தேடும் வேட்கை மறைந்துவிடும். அதன் பிறகு எதுவும் இருக்காது.

புத்தர் ஞானம் பெற்றார். அதன் பிறகு அவர் எந்த குருவிடமும் செல்லவில்லை. ஏசு ஞானம் பெற்றார். அதன் பிறகு எந்த குருவிடமும் அவர் செல்லவில்லை. லாவோட்ஸூவும் செல்லவில்லை. ஜோராஸ்திரா செல்லவில்லை. மோசஸும் செல்லவில்லை. ஆனால் பிதாகோரஸ் சற்று வேறுபட்டவராக இருந்தார். அவருக்கு நிகரானவர்கள் இதுவரை யாருமில்லை. அவர் ஞானமடைந்த பிறகும் யாரிடமும் சீடராக இருக்கத் தயாராக இருந்தார். உண்மையின் ஒளிக்கீற்று சிறிது யாரிடமாவது தென்படுமானால் அவரிடம் சீடராக இருக்கத் தயாராக இருந்தார்.

யாரிடமும் சீடராக இருக்க ஆயத்தமான வகையில் அவர் தேடல் அமைந்திருந்தது. அவர் ஒரு முழுமையான சீடராக இருந்தார். இந்த முழு பிரபஞ்சத்திடமிருந்தும் அவர் கற்றுக்கொள்ளத் தயாராக இருந் தார். திறந்த மனதுடன் கடைசி வரையிலும் சீடராக இருக்க ஆயத்த மாக இருந்தார்.

கிரீஸிலிருந்து சீனா வரையில் செல்வது அந்நாளில் பெரிய சாதனை முயற்சியாகக் கருதப்பட்டது. அதில் நிறைய ஆபத்துகள் இருந்தன. பயணம் கடுமையானது. இன்றைய நாளைப்போல எளிய காரியமல்ல. இன்று விஷயங்கள் வெகு எளிதாகிவிட்டன. நீங்கள் காலை உணவை நியூயார்க்கில் அருந்தினால், பகல் உணவை லண்டனில் உண்ணலாம். பூனாவில் அஜீரணக் கோளாறினால் துன்புறலாம். விஷயங்கள் வெகு எளிமையாகிவிட்டன. அன்று அவ்விதம் எளிமை யாக இல்லை. அது பெரும் ஆபத்தான ஒன்று. ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் செல்லப் பல ஆண்டுகள் பிடிக்கும்.

பிதாகோரஸ் திரும்பி வந்தபோது வயதுமுதிர்ந்துபோனவராக இருந்தார். ஆனால் தேடலில் விருப்பம் உள்ளவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். ஒரு பெரிய மடாலயம் உருவாக்கப்பட்டது. எப்போதும் போலவே சமூகம் அவரைத் துன்புறுத்தியது. அவரது மடாலயத்தை யும், அவரது சீடர்களையும் துன்புறுத்தியது. தனது வாழ்நாள் முழு வதும் தேடி, என்றும் நிலைத்து நிற்கும் தத்துவத்தைக் கண்டறிந்தார். எல்லா நுணுக்குகளையும் அற்புத லயத்துடன் இணைத்து முழுமைப் படுத்தினார். ஆனால் அதை அவர் செயல்படுத்த யாரும் அனுமதிக்க வில்லை. மக்களை நெருங்கவிடவில்லை.

அவர் ஒவ்வொரு இடத்திலும் துன்புறுத்தப்பட்டார். அவரைக் கொல்ல பல தடவை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவர் சேகரித்ததை யாருக்கும் கற்றுக் கொடுக்க முடியாதுபோய்விட்டது. அவரிடம் இருந்த திரவியம் அளவற்றது. அவரிடம் இருப்பதைப்போல இதுவரை யாரிடமும் இருந்ததில்லை. இப்படித்தான் எப்போதும் முட்டாள் சமூகம் இருக்கிறது. இருந்து கொண்டிருக்கிறது. இந்த மனிதர் சாதிக்க முடியாத ஏதோ ஒன்றைச் சாதித்திருக்கிறார். கிழக்கிற்கும் மேற்கிற்கும் பாலம் அமைத்திருக்கிறார். அவர்தான் முதல் பாலமாக இருக்கிறார். மேற்கத்திய அறிவைப் போலவே அவர் கிழக்கு நாட்டு அறிவையும் ஆழமாக அறிந்துகொள்ள வந்திருந்தார்.

அவர் ஒரு கிரேக்கர். அவர் கிரேக்க நாட்டு தர்க்கம், கிரேக்க அறிவியல் அணுகுமுறைகளுடன் வளர்ந்தார். அதன் பின்னர் கிழக்கு நாடுகளுக்குச் சென்றார். உள்ளுணர்வு மூலம் அறிந்துகொள்ளும் வழி

முறைகளை அங்கு கற்றார். மறைஞானியாக மாறுவது எப்படியென்று கற்றுக் கொண்டார். அவர் ஒரு மாபெரும் கணித மேதையாகவும் விளங்கினார். கணிதமேதை மறைஞானியாக மாறுவது ஒரு புரட்சி தான். அவை இரண்டு வெவ்வேறு எதிர்முனைகள்.

மேற்கு நாடு ஆண் மனப்பாங்கு கொண்டது. அது ஆக்ரமிக்கும் குணம் கொண்ட அறிவு. கிழக்கு நாடு **பெண்மையைப்** பிரதிநித் துவப்படுத்துகிறது. அது எதையும் எளிதாக ஏற்றுக்கொள்ளும் மனம் கொண்டது. கிழக்கும் மேற்கும் மனம்போனபடி செல்பவை அல்ல. அந்த வேறுபாடுகள் மிகவும் அர்த்தம் செறிந்தவை. ஆழமானவை.

ருட்யார்டு கிப்ளிங் சொன்னதை நீங்கள் மறந்துவிடக்கூடாது. அவர் சொன்னது முக்கியத்துவம் பெற்ற, அர்த்தம் நிறைந்த ஒன்றாகும். "கிழக்கும் மேற்கும் ஒருபோதும் இணைய இயலாது" என்றார். அதில் சிறிதளவு உண்மைத் துணுக்கு இருக்கிறது. ஏனென்றால் அந்த இணைப்பு சாத்தியமில்லாத ஒன்று. அதற்கான அவர்களது முயற்சிகள் எல்லாம் எதிர் விளைவையே தரும்.

மேற்கு நாடு மூர்க்கமானது. அறிவியல் பார்வை கொண்டது. இயற்கையை வெற்றிகொள்ளத் தயாராக இருக்கிறது. கிழக்கு நாடு ஆக்கிரமிக்கும் குணம் அற்றது. நீக்குப்போக்கு உடையது. இயற்கை யிடம் சரணடையத் தயாராக இருந்தது. மேற்கு நாடு விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஆவல் கொண்டிருக்கிறது. கிழக்கு நாடு பொறுமை காக்கிறது. மேற்குநாடு வாழ்வின் ஒவ்வொரு விநோதத்தையும் தொட்டுப் பார்க்க விரும்புகிறது. அதன் கதவுகளைத் திறந்து பார்க்க முயல்கிறது. கிழக்குநாடு உறுதியான நம்பிக்கையுடன் காத்திருக்கிறது. "நான் எப்போதும் தகுதி படைத்தவனாகிறேனோ அப்போது உண்மை எனக்கு உணர்த்தப்படும்" என்று பொறுமையுடன் இருக்கிறது.

மேற்கு நாடு மனதின் மீது கவனம் செலுத்துகிறது. கிழக்கு நாடு மனதை நிலைப்படுத்த முயல்கிறது. மேற்கு நாடு சிந்திக்கிறது. கிழக்கு சிந்தனையற்று இருக்கிறது. மேற்கு, மனம் சார்ந்தது. கிழக்க மனமற்ற நிலை சார்ந்தது. எனவே கிப்ளிங்கின் கூற்று தர்க்கரீதியாக சரியாகவே இருக்கிறது. கிழக்கும் மேற்கும் இணைய முடியாது என்பது உண்மை தான் என்று தோன்றுகிறது.

கிழக்கும் மேற்கும் பூமியின் இரண்டு அரைக்கோளங்களாக இருப்பதைச் சார்ந்து மட்டும் அமையவில்லை. அவை உங்கள் மனம் சார்ந்தும் உள்ளன. மூளையைச் சார்ந்தும் இருக்கின்றன. மூளையும் இரண்டு அரைக் கோளங்களாக பூமிபோலவே இருக்கின்றன. உங்கள் மூளையிலும் கிழக்கும் மேற்கும் உள்ளன. இடதுபக்க அரைக்கோளம்

மேற்கிற்கு உரியது. அது வலது கரத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. உங்கள் மூளையின் வலதுபுறம் கிழக்கிற்கு உரியது. அது வலது கையுடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

மேற்கு வலதுசாரி சார்ந்தது. கிழக்கு இடதுசாரி சார்ந்தது. அந்த இரண்டின் செயல்பாடுகளும் முற்றிலும் வித்தியாசமானவை. இடது அரைக் கோளத்தின் கணக்கீடுகள், சிந்தனைகள் எல்லாம் தர்க்கம் எனப்படுகின்றன. எல்லா விதமான அறிவியலையும் அது தோற்றுவிக்கிறது. உங்கள் மூளையின் வலது அரைக்கோளம் கவித்துவம் பெற்றது. ஆன்மீகம் நிறைந்தது. அது உள்ளுணர்வை ஏற்படுத்துகிறது. உணர வைக்கிறது. அது தெளிவற்றது. பனி படர்ந்து கிடப்பது போன்றது. ஒளியற்று இருக்கிறது. எதுவும் தெளிவாக இல்லை. ஒவ்வொன்றும் ஒருவித குழப்பத்துடன் கூடியது. ஆனால் அந்த குழப்பம் தான் அழகு ஆகும். அக்குழப்பத்தில் பெரிய கவிதை உள்ளது. சிறந்த பாடல் அந்த குழப்பத்தில் உள்ளது. அது மிகவும் சாரம் நிறைந்தது.

கணக்குப் போடும் மனம் பாலைவனம் போன்ற ஒரு விந்தை. கணக்கீடு செய்வதில் இறங்காத மனம் பூந்தோட்டம் போன்றது. அங்கு பறவைகள் பாடுகின்றன. மலர்கள் மலர்கின்றன. அது முற்றிலும் புதிய ஒரு உலகம்.

முடியாத ஒன்றை முயன்று பார்த்த முதல் மனிதர் பிதாகோரஸ். அதில் அவர் வெற்றியடைந்தார். அவரிடம் கிழக்கும், மேற்கும் இணைந்தன. அவரிடம் ஆக்கமும், அழிவும் ஒன்றுசேர்ந்தன. அவரிடம் ஆண்மையும், பெண்மையும் ஒன்றுகலந்தன. அவர் ஒரு **அர்த்த நாரீஸ்வரர்.** எதிர் துருவங்களின் முழுமையான சங்கமம். அங்கு சிவனும், சக்தியும் ஒன்றிணைகிறார்கள். அறிவின் உயர்ந்த குண விசேஷமும், உள்ளுணர்வின் சிறந்த ஆழமான அம்சமும் அங்கு ஒன்று சேர்கின்றன. பிதாகோரஸ் ஒரு சிகரம். சூரிய ஒளியல் பிரகாசிக்கும் சிகரம். அதே சமயம் ஒரு இருண்ட ஆழமான பள்ளத்தாக்காகவும் அவர் விளங்குகிறார். அது ஒரு அபூர்வ கலவையாகும்.

ஆனால் மேலோட்டமான முட்டாள் ஜனங்களின் கூட்டம் அவர் வாழ்நாள் முழுவதும் முயன்று பெற்றதை அழித்துவிட்டது. மனித இனத்திற்கு வழங்குவதற்கு இங்குள்ள ஒரு சில வரிகள் மட்டுமே எஞ்சின. அவற்றை ஒரு தபால் அட்டையில் எழுதி அடக்கிவிடலாம். அந்த மாமனிதரின் பெருமுயற்சியில் கிடைத்தவைகளில் இவ்வளவு தான் தப்பிப் பிழைத்தது. ஆனால் அதுவும் அவரது கையால் சுயமாக எழுதி வைக்கப்படவில்லை. அவர் கைப்பட எழுதியவை எல்லாம் அழிந்துவிட்டதாகத் தெரிகிறது.

பிதாகோரஸ் இறந்துபோன அன்று அவரது ஆயிரக்கணக்கான சீடர்கள் சாகடிக்கப்பட்டார்கள், எரித்துக் கொல்லப்பட்டார்கள். மடால யத்திலிருந்து ஒரே சீடர்தான் தப்பினார். அவர் பெயர் லைசிஸ் என்ப தாகும். தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அவர் தப்பியோட வில்லை. தனது குருவின் போதனைகளில் சிலவற்றை பாதுகாக்கும் பொருட்டு தப்பியோடினார். தப்பிப் பிழைத்த ஒரே சீடரான அவர் எழுதி வைத்ததுதான் 'Golden Verses of Pythagoras' என்ற தொகுப்பாகும்.

மடாலயம் முழுமையாக எரிந்துவிட்டது. அவரது ஆயிரக்கணக் கான சீடர்கள் கொலை செய்யப்பட்டார்கள், வெட்டி எறியப்பட்டார்கள். தனது வாழ்நாள் முழுவதும் பயணித்து பிதாகோரஸ் சேகரித்து வைத் திருந்த அறிய பொக்கிஷங்கள், சீனா, இந்தியா, திபெத், எகிப்து தேசங் களில் இருந்து சேகரித்த மதநூல்கள், மற்றும் அவரது பல வருட கடுமையான உழைப்பில் விளைந்த படைப்புகள் எல்லாம் எரிந்து நாசமாயின.

சீடர் லைசிஸ் சில வரிகள் மட்டும் எழுதி வைத்திருந்தார். பழைய பாரம்பரியப்படி ஒரு உண்மையான சீடர் தனது குருவின் பெயரைத் தவிர வேறு யாருடைய பெயரையும் பெரிதாக எடுத்துக் கொள்வ தில்லை. எனவே அந்த வரிகள் லைசிஸ் வரிகள் என்று அழைக்கப்பட வில்லை. பிதாகோரஸின் தங்க வரிகள் (The Golden Verses of Pythagoras) என்று அழைக்கப்பட்டன. லைசிஸ் அதற்கு தனது பெயரை வைக்கவில்லை.

இதுபோன்ற சம்பவம் திரும்பத்திரும்ப நடக்கிறது. இந்தியாவில் வியாசருக்கு இப்படி நடந்தது. அவர் ஒரு பெரிய குரு. அவர் பெயரில் ஏராளமான மதநூல்கள் உள்ளன. அத்தனை நூல்களை ஒரு மனிதரால் எழுதிவிட இயலாது. அது மனிதரால் சாத்தியப்படாத ஒன்று. ஆயிரம் பேர் தங்கள் வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து முயன்றாலும் எழுதி முடித்துவிட முடியாது. பிறகு எப்படி அது நடந்தது? வியாசர் அவருக்கு அங்கிகாரம் தந்தார். அவற்றை எல்லாம் வியாசரே எழுத வில்லை. அவரது சீடர்கள் எழுதினார்கள். உண்மையான சீடர் தனது குருவின் பெயரைத் தவிர வேறு யாருடைய பெயரையும் மதிப்பமிக்க தாகக் கருதுவதில்லை. அவர் குருவினுள் கலந்து காணாமல் போய் விடுகிறார். அவர் எதை எழுதினாலும் குருவின் பெயரிலேயே எழுது கிறார். இது குறித்து பல்வேறு கோட்பாடுகள் வெளிப்பட்டன. பன் மொழிப் புலவர்கள், கல்வியாளர்கள், பேராசிரியர்கள் போன்ற பலரும் வியாசர் என்ற பெயரில் பலர் இருந்திருக்க வேண்டும் என்று கருதி னார்கள். வியாசர் என்ற பெயரில் பலர் இருந்திருக்கலாம் என்றும்

யூகித்தார்கள். அவை எல்லாம் அசட்டுத்தனமான முடிவுகள். வியாசர் என்று ஒருவர்தான் இருந்தார். பல நூற்றாண்டுக் காலம் வியாசரை மக்கள் போற்றி மகிழ்ந்தார்கள். அவர்கள் ஏதாவது எழுதினால், அவர் களுக்குள் இருந்துகொண்டு வியாசரே அதை எழுதியதாக ஒரு உணர்வை அடைந்தார்கள். தாங்கள் வெறும் வாகனமாக, கருவியாக மட்டுமே இருந்ததாக எண்ணி அவர் பெயரை அந்த படைப்புக்குச் சூட்டினார்கள்.

இவ்வாறே எகிப்தில் ஹெர்மஸுக்கும் நேர்ந்தது. நிறைய மத நூல்களை அவரது சீடர்கள் எழுதினர். கிரீஸில் இருந்த ஆர்பியஸுக்கும் இப்படியேதான் நடந்தது. சீனாவைச் சேர்ந்த லாவோ மற்றும் கன்ஃபூ ஸியஸ் போன்றவர்களுக்கும் இதே விதம்தான் நடந்தேறியது. சீடர் தனது தனித்துவத்தை இழக்கிறார். தனது குருவுடன் முழுமையாக இணைந்து போகிறார். ஆனால் சில மதிப்புமிக்க அம்சங்கள் முட்டாள் தனத்தினால் அழிந்து போகின்றன.

பிதாகோரஸ்தான் முதன்முதலில் இரண்டையும் ஒன்றுசேர்த்த சோதனையாளர். இருபத்தைந்து நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. இன்று வரை யாரும் அதை மீண்டும் முயன்று பார்க்கவில்லை. அவருக்கு முன்பும் யாரும் செய்யவில்லை. அவருக்குப் பிறகும் யாரும் செய்ய வில்லை. அதற்கு அறிவியலும், ஆன்மீகமும் ஒன்று கலந்த மனம் தேவை. அது ஒரு அரிய விந்தை. அது ஒரே ஒருமுறைதான் நிகழ்கிறது.

புத்தர், லாவோட்ஸு, ஜோராதஸ்திரர் போன்ற பெரும் மறை ஞானிகளும் இருக்கிறார்கள். நியூட்டன், எடிஸன், ஐன்ஸ்டீன் போன்ற பெரிய விஞ்ஞானிகளும் இருக்கிறார்கள். ஆனால் அகம், புறம் என்றும் இரு உலகங்களையும் தன்னுள் கொண்ட ஒரு மனிதரை தாயகத்தில் கண்டறிவது மிகவும் சிரமம். பிதாகோரஸ் அப்படிப்பட்ட மனிதர். அவர் தனித்துவமானவர். யாராலும் வகைப்படுத்த முடியாதவர்.

அவர் தொகுத்து இணைக்க முயன்றது அன்று தேவையானதாக இருந்தது. குறிப்பாக அந்த நாட்களில் இன்று போலவே தேவையாக இருந்தது. ஏனென்றால், உலகம் மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பி யிருக்கிறது. இந்த உலகம் ஒரு சக்கரம் போல் நகர்கிறது. உலகம் என்ற சொல்லை சமஸ்கிருத மொழியில் **சம்சாரா** என்கிறார்கள். சம்சாரா என்றால் சக்கரம் என்றுதான் பொருள். அந்த சக்கரம் பெரியது. ஒரு தடவை சுழன்று முடிக்க இருபத்தைந்து நூற்றாண்டுகள் பிடிக்கின்றன. இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் பிதாகோரஸ் இருந்தார். அட்லாண்டிஸ் தற்கொலை செய்து கொண்டது. மனிதனின் விஞ்ஞான வளர்ச்சியால் அது நடைபெற்றது. ஞானமற்ற விஞ்ஞான வளர்ச்சி ஆபத்தானது. அது குழந்தையின் கையில் கத்தியைக் கொடுப்பது போன்றதாகும்.

இப்போது பிதாகோரஸ் காலத்துக்குப் பிறகு இருபத்தைந்து நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. மறுபடியும் உலகம் குழப்பத்தின் பிடியில் இருக்கிறது. சக்கரம் மீண்டும் அதே புள்ளிக்குத் திரும்பி வந்திருக்கிறது. அது எப்போதும் பழைய இடத்திற்கே வந்து நிற்கிறது. அந்த இயக்கம் நடைபெற இருபத்தைந்து நூற்றாண்டுகள் பிடிக்கின்றன. ஒவ்வொரு இருபத்தைந்து நூற்றாண்டின்போதும் இந்த உலகம் பெரிய குழப்பத்தை எதிர்கொள்கிறது.

மனிதன் பிடிமானமற்றுப் போகிறான். வாழ்வு அர்த்தமற்றதாக மாறுகிறது. வாழ்வின் அனைத்து மதிப்பீடுகளும் மறைகின்றன. ஒரு பேரிருள் அவனைச் சூழ்கிறது. உணர்வின் சகல திசைகளும் காணாமல் போகின்றன. விபத்து நடந்துவிட்டதுபோல அவர் உணர்கிறார். எவ்வித நோக்கமும் இல்லை. எதுவும் முக்கியத்துவம் பெறவில்லை. தற்செயல் நிகழ்வின் துணைத் தயாரிப்பாக வாழ்க்கை எழுந்தது போலாகிவிட்டது. வாழ்க்கை உங்களை லட்சியம் செய்யவில்லை என்ற உணர்வு உங்களுக்கு ஏற்படுகிறது. மரணத்திற்குப் பின்னர் வாழ்வு இல்லை என்று தோன்றுகிறது. நீங்கள் எது செய்தாலும் பயனற்றதாக, வழக்கமான ஒன்றாக, யந்திரத்தனமானதாகத் தோன்றுகிறது. எல்லாம் அர்த்தமற்றவைகளாகத் தோன்றுகின்றன.

அப்படிப்பட்ட குழப்பமான, ஒழுங்கற்ற தருணங்களில், அட்லாண்டிஸில் நடந்தது போன்ற தருணங்களில், ஒரு பெரிய கெடுதல் நடக்கலாம் அல்லது மனித வளர்ச்சியில் துரிதமான ஒரு வேகப் பாய்ச்சல் நிகழலாம். அதை நாம் எப்படிப் பயன்படுத்திக் கொள்கிறோம் என்பதைப் பொறுத்தது. பெரும் குழப்பங்கள் நேரும் சமயங்களில் பெரிய நட்சத்திரங்கள் தோன்றுகின்றன.

பிதாகோரஸ் தனியாளாக இருக்கவில்லை. பிதாகோரஸ் போலவே ஹிராகிளிட்டஸும் தோன்றினார். இந்தியாவில் புத்தர், மகாவீரர் போன்ற இன்னும் பலர் பிறந்தார்கள். சீனாவில் லாவோட்ஸு, சாவங்ட்ஸு, கன்ஃபூஸியஸ், மென்ஸியஸ், லிச்ட்ஸு மற்றும் பலர் தோன்றினார்கள். ஈரானில் ஜோராதிஸ்திரர், பிராமணப் பாரம்பரியத்தில் சிறந்த உபநிஷத ஞானிகள், எழுந்தார்கள். யூத உலகில் மோஸஸ் பிறந்தார். இந்த சிறந்த குருமார்கள் எல்லாம் குறிப்பிட்ட ஒரு இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் மனித இனத்தில் தோன்றினார்கள்.

தற்போது நாம் மீண்டும் ஒரு பெரிய குழப்பத்தில் இருக்கிறோம். நாம் செய்யும் காரியங்களில்தான் மனிதர்களின் தலைவிதி அடங்கியிருக்கிறது. அட்லாண்டிஸில் மனித இனம் தன்னை அழித்துக் கொண்டதுபோல நாம் அழியலாம். முழு உலகமும் ஹிரோஷி

மாவாக மாறலாம். நமது சுய அறிவில் நாம் மூழ்கி அழியலாம். நமது அறிவியலால் எல்லோரும் ஒட்டுமொத்தமாக தற்கொலை செய்து கொள்ள நேரலாம். நோவா போன்ற சிலரும் அவரது சீடர்களும் அதில் தப்பிப் பிழைக்கலாம் அல்லது பிழைக்காமலும் போகலாம். அல்லது வேகமான முன்னேற்றப் பாய்ச்சலுக்கு வாய்ப்பு ஏற்படலாம்.

மனிதன் தற்கொலை செய்துகொள்ள நேரலாம் அல்லது அவன் மறுபிறப்பெடுக்கலாம். இரண்டுக்கும் கதவுகள் திறந்திருக்கின்றன.

இப்படிப்பட்ட நேரங்களில் ஹிராகிளிட்டஸ், லாவோட்ஸு, ஜோராதிஸ்திரர், பிதாகோரஸ் மற்றும் புத்தர், கன்ஃபூஸியஸ் தோன்றி னாலும் ஏன் ஒரு சிறந்த சமுதாயத்தை அவர்களால் உருவாக்க முடிய வில்லை? அவர்களால் உருவாக்க முடியும். ஆனால் நாம் அந்த வாய்ப்பை தவறவிட்டு விடுகிறோம்.

சாதாரண மக்கள் இதுபோன்ற சுயநினைவற்ற நிலையில்தான் வாழ்கிறார்கள். ஒரு சில தப்படிகளுக்கு அப்பால் அவர்களால் பார்க்க முடியாது. அப்படி குருடாக இருப்பவர்கள்தான் பெரும்பான்மையான வர்களாக இருந்து வருகிறார்கள். அடுத்து வரும் இருபத்தைந்து வருட காலம் இந்த நூற்றாண்டின் கடைசிப் பகுதியாகும். அது மிகவும் முக்கியத்துவம் பெற்ற ஒரு தருணம். நாம் மனிதனின் உள்முகப் பயணம் என்ற தியான உலகம் ஒரு வீச்சை உருவாக்கினால் சலனமற்ற நிலை, அமைதி, அன்பு, தெய்வீகம் போன்றவை தோன்றும். வரவிருக்கும் இருபத்தைந்து வருடங்களில் தெய்வீகத்திற்காக ஒரு இடத்தை உருவாக்கினால் மனித இனம் மறுபிறப்பெடுக்கும். புதிய மனிதன் தோன்றுவான்.

இந்த தருணங்களை நீங்கள் தவறவிட்டால் அடுத்து வரும் இருபத்தைந்து நூற்றாண்டுக்காலம் இதே பழைய நிலையில்தான் இருந்தாக வேண்டும். சிலர் மட்டும் ஞானம் பெறலாம். அது ஒரு சிலருக்கு மட்டுமே நிகழலாம். இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சிலர் விழிப்பும், விழிப்புணர்வும், தெய்வீக உணர்வும் பெறலாம். மனிதர்களில் பெரும்பான்மையானவர்கள் இருளில் உழன்று கொண் டிருக்கிறார்கள். முழுமையான துயரத்தில், பூரணமான இருளில் ஆழ்ந்து கிடக்கிறார்கள். மனித குலத்தின் பெரும்பான்மையான மக்கள் கூட்டம் நரகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

குழப்பம் நேரும் தருணங்களில் மனிதன் கடந்த காலத்தில் தனது வேர்களை இழந்து விடுகிறான். கடந்த காலத்திலிருந்து விடுபடும் நேரங்கள் மிகச்சிறந்த தருணங்களாக மாறுகின்றன. கடந்தகால வரலாற் றிலிருந்து நாம் சிலவற்றைக் கற்றுக்கொள்ள முடியுமானால், பிதா

கோரஸிடம் இருந்து சிலவற்றைக் கற்றுக்கொள்ள இயலும் என்றால்..... மனிதர்களின் பிதாகோரஸையும், அவர் புரிந்து கொண்டவைகளை யும் பயன்படுத்தவில்லை. அவரது சிறந்த தொகுப்பை உபயோகிக்க வில்லை. அவர் திறந்து வைத்த கதவுகளைப் பயன்படுத்தவில்லை. ஒரு தனிமனிதர் மிகப்பெரும் செயலைச் செய்திருக்கிறார். முடியாத ஒன்றை முடித்து வைத்திருக்கிறார். ஆனால் அது பயன்படுத்தப்பட வில்லை.

அதே காரியத்தை நான் மீண்டும் முயற்சி செய்கிறேன். எனக்கு பிதாகோரஸுக்கும் ஒரு தெய்வீக உறவு இருப்பதாக உணர்கிறேன். நானும் கிழக்கு மேற்கும் கலந்த ஒரு தொகுப்பை எடுத்து வருகிறேன். அறிவியலும் ஆன்மீகமும் கலந்த, அறிவும், உள்ளுணர்வும் இணைந்த, ஆண் மனமும் பெண் மனமும் ஒன்றுசேர்ந்த, அறிவும் இதயமும் இணைந்த, வலதும் இடதும் சேர்ந்த இணைப்பை எடுத்து வருகிறேன். சிறந்த நல்லிணக்கத்தை ஏற்படுத்த நானும் முடிந்த வழிகளில் எல்லாம் முயற்சி செய்கிறேன். அந்த நல்லிணக்கம் மட்டுமே உங்களைப் பாது காக்கும். அந்த நல்லிணக்கம் மட்டுமே உங்களுக்கு மறுபிறப்பை அளிக்கும்.

பிதாகோரஸுக்கு என்ன நடந்ததோ அது எனக்கும் நடக்க நிறையவே சாத்தியம் இருக்கிறது. பிதாகோரஸின் சீடர்களுக்கு என்ன நடந்ததோ அது என்னுடைய சன்னியாசிகளுக்கும் நடக்க வாய்ப்பு உள்ளது. அந்த சாத்தியத்தை அறிந்தும் இணைக்கும் முயற்சி நடக் கிறது. காரணம் இது ஒரு மதிப்புமிக்க நேரம். இருபத்தைந்து நூற் றாண்டுகளுக்கு ஒருமுறை சக்கரம் புதிய திசையில் நகரும்போது அது நிகழ்கிறது.

நீங்கள் ஆபத்தை எதிர்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். சந்தோஷத்துடன் ஆபத்தை எதிர்கொள்ளுங்கள். புதிய மனிதனைப் பிறக்க வைப்பதைவிடவும் மகிழ்ச்சியான விஷயம் வேறு என்ன இருக்க முடியும்? புதிய ஒரு மனித இனத்தை உருவாக்கும் கருவியாக இருப்பதைவிட ஆனந்தம் வேறென்ன இருக்க இயலும்?

ஒவ்வொரு பிறப்பு நிகழும்போது வலி இருப்பதுபோல இதுவும் துயரமானதுதான். ஆனால் அதன்மூலம் என்ன நடக்கப்போகிறது என்று புரிந்துகொண்டால் அந்த வலியும் வரவேற்கக்கூடிய ஒன்றாகி விடும். அதிலிருந்து குழந்தை வெளிப்படுவதைப் பார்க்கும்போது வலி அதன் பிறகு வலியாக இருக்காது. பிரசவ வலியைத் தாய் ஏற்றுக் கொள்வதுபோல நீங்களும் ஏற்றுக் கொள்வீர்கள். வலி என்பது பொறுத்தமற்ற ஒன்றாகிறது. அவள் மனம் மகிழ்ச்சியில் நடனமிடு கிறது. அவள் வாழ்வை பிரசவிக்கப் போகிறாள். அவள் படைப்பாற்ற

லுடன் இருக்கிறாள். அவள் இந்த உலகிற்கு கூடுதல் உயிர்ப்பைத் தருகிறாள். ஒரு புதிய குழந்தை அவள் மூலம் பிறக்கப் போகிறது. வாழ்க்கை அவளை ஒரு கருவியாக்கிக் கொண்டுவிட்டது. அவள் கருப்பை செழுமையானது என்று நிரூபணமாகிவிட்டது. அவள் மகிழ்ச்சியுடன் பேரானந்தமாக இருக்கிறார். வலி இருந்தாலும் அதை சுற்றிலும் மகிழ்ச்சி விரிந்து கிடக்கிறது. பேரின்பம் அங்கு இருக்கும் போது வலி வெறுமனே பின்புலத்தில் இருந்து செயல்படுகிறது. அது மகிழ்வை இன்னும் பலப்படுத்துகிறது. அதை நினைவில் கொள்ளுங்கள்!

எனது சன்னியாசிகள் ஒரு சக்திப்புலமாக, ஆற்றல் நிறைந்த கருப்பையாக மாறிட இயலும். ஒரு சிறந்த இணைப்பு இங்கு நடந்து கொண்டிருக்கிறது. கிழக்கும் மேற்கும் இங்கு சந்திக்கின்றன. முடியாததை நம்மால் முடிக்க இயலுமானால், எதிர்காலத்தில் மனிதன் முற்றிலும் வேறுபட்ட முறையில் வாழமுடியும். அவன் அந்த பழைய நரகத்தில் வாழவேண்டியதில்லை. அன்புடனும், அமைதியுடனும் மனிதன் வாழலாம். சிறந்த நட்புணர்வுடன் மனிதன் வாழலாம். கொண்டாட்டம் தவிர வேறு எதற்கும் இடமில்லாத வாழ்வை மேற் கொள்ளலாம். மனிதன் இந்த பூமியை தெய்வீகமானதாக மாற்றிட முடியும்.

ஆம், இந்த உலகம் சொர்க்கமாக மாற முடியும், மனிதன் புத்த னாக மாற முடியும்.

சூத்திரங்கள் ஒரு சில மட்டுமே உள்ளன. பிதாகோரஸின் சூத்திரங்கள் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை மூன்று புகழ்பெற்ற P-க்கள் என்று அழைக்கப்படுகின்றன. Preparation (ஆயத்தமாதல்), Purification (தூய்மைப்படுத்திக் கொள்ளல்), Perfection (பூரணத்துவம் பெறுதல்) என்பவையே அந்த மூன்று P-க்கள் ஆகும்.

ஆயத்தமாதல் என்பது, விஷயத்தை ஏற்றுக்கொள்ளும் நிலைக்கு மனதைத் தயார் செய்து கொள்வதாகும். திறந்த மனதுடன் இருப்ப தாகும். ஆயத்தமாதல் என்பது வேட்கையை ஏற்படுத்திக் கொண்டு உண்மையின் மீது நாட்டம் கொள்வதாகும். ஆயத்தமாதல் என்பது வெறுமனே ஆர்வம் கொள்வதல்ல. உண்மை என்பது என்ன என்று அறிவுபூர்வமாக ஆர்வம் காட்டுவதல்ல. அந்த தேடலில் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதாகும். வெறுமனே தள்ளி நின்று ஒரு பார்வை யாளராக இருப்பதல்ல. காரியத்தில் இறங்கி அதில் பங்கெடுத்துக் கொள்வதாகும்.

ஆயத்தமாதல் என்பது அறிமுகப்படலம். ஒரு பெருவேட்கையை உங்களுக்கு ஏற்படுத்தும் முயற்சியாகும். நீங்கள் ஒரு குருவை நெருங்கிச் செல்லும்போது அவர் செய்யும் முதல் காரியம் உங்களுக்குள் ஒரு தீவிர வேட்கையை ஏற்படுத்துவதே ஆகும். அவர் உங்களுக்கு அதீத நாட்டத்தை ஏற்படுத்துவார். விருப்பம் என்ற விதைகளை ஊன்றுவார். உண்மையில் அவர் உங்களிடம் ஒரு திருப்தியற்ற மனநிலையை ஏற்படுத்துவார்.

திருப்தியடைவது எப்படி என்ற தேடலுடன் நீங்கள் அவரிடம் சென்றிருக்கவும்கூடும். நீங்கள் அவரிடம் ஆறுதல் தேடிச் சென்றிருக்க லாம். ஆனால் அவர் உங்களிடம் ஒரு ஜுவாலையை, நெருப்பை ஏற்படுத்திவிடுவார். அந்த விருப்பம் குறித்து நீங்கள் அதுவரை கற்பனை செய்தும் பார்த்திருக்க மாட்டீர்கள். அது பற்றிய விழிப்புணர்வும் உங்க ளிடம் இருந்திருக்காது. ஆனால் அது உங்கள் மனதில் ஏதோ ஒரு மூலைமுடுக்கில் பதுங்கியிருந்திருக்கலாம். அடியாழத்தில் ஒருவேளை பதுங்கி இருந்திருக்கலாம். அதை அவர் வெளிச்சத்திற்குக் கொண்டு வருகிறார். அதை ஒரு பெருந்நெருப்பாகக் கிளறி விடுகிறார். தனது சக்தி முழுவதையும் உங்களுக்குள் வார்க்கிறார். நீங்கள் பெருவேட்கை கொள்ளவும், தீவிர அதிருப்தி அடையவும் வழி செய்கிறார். அது உங்களைத் தேடலில் இறக்கிவிடுகிறது. சகல ஆபத்துக்களையும் எதிர் கொள்ள நீங்கள் தயாராகிவிடுகிறீர்கள். உங்களுடைய மற்ற விருப் பங்கள் அனைத்தும் மறந்து போகின்றன. உங்களுடைய சகல வேட்கை களையும் ஒரே நீரோட்டத்தில் வைக்கிறீர்கள். இரவும் பகலும் உங்க ளுக்கு அந்த ஒரே விருப்பம்தான். உண்மையை அல்லது தெய்வீகத்தை அல்லது நிர்வாணத்தைக் கண்டறிவது என்பதே அந்த இச்சையாகும். அந்த விந்தையான பொருளுக்கு இப்படி பல பெயர்கள் உள்ளன.

ஆயத்தமாதல் என்பது சீடர் விழிப்புணர்வு பெறுதலாகும். நாம் இருளில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்ற உண்மையை உணர்வ தாகும். ஒளியை தேட வேண்டும், அதை அடைய வேண்டும் என்ப தாகும். அந்த விழிப்புணர்வு வருவதற்காக நாம் இவ்வளவு காலம் வாழ்வை வீணாக்கிக் கொண்டிருந்தோம். சரியான வாழும்முறை அதுவல்ல. ஒருவர் தெய்வீகம் நோக்கி, முன்னேறிச் செல்லாதபோது வாழ்க்கை வெறுமையாக, சக்தியற்றுப் போகிறது. சீடர் தனது கனவில் இருந்து உலுக்கி விழித்தெழ வைக்கப்பட வேண்டும். பணம், அதிகாரம், அரசியல், கௌரவம் குறித்தவை அக்கனவுகள். புதிய ஒரு கனவுக்காக அவற்றைத் துறந்துவிட வேண்டும். அந்த உன்னதமான கனவுக்காக மற்ற **அனைத்து** கனவுகளையும் விழுங்கிச் ஜீரணித்துவிட வேண்டும். உண்மையை உணர விரும்புவதே அந்த உன்னதமான கனவாகும்.

எது உண்மை என்பதை அறிய வேண்டும். நாம் எங்கிருந்து வந்தோம் என்று அறிய வேண்டும். அந்த மூலஸ்தானத்தை அறிய வேண்டும். நாம் எங்கே போக வேண்டும் என்ற இலக்கை அறிய வேண்டும்.

அடுத்த இரண்டாவது பகுதி, தூய்மைப்படுத்திக் கொள்ளல் ஆகும். மனதில் ஆசை எழும்போது நீங்கள் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். ஏனென்றால், உன்னதமான உண்மை நிலை அடைய வேண்டுமானால், தேவையற்ற எடைகளை உதறி விலக்கி விட வேண்டும். நீங்கள் எப்போதும் நிறையச் சுமைகளைச் சுமந்து திரிகிறீர்கள். அது மதிப்புள்ள பொருள் என்று கருதி அவற்றைச் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். பயணப் பாதையில் உங்கள் உடல் உறிஞ்சிக் கொண்ட சகலவித விஷங்களையும் உடலமைப்பில் இருந்து அகற்றி உடலைச் சுத்தப்படுத்த வேண்டும். பலவிதமான விஷங்களை நாம் அருந்திக் கொண்டிருக்கிறோம். ஒரு விஷம் இந்துமதம். அடுத்த விஷம் இஸ்லாம். மூன்றாம் விஷம் கிறிஸ்தவம். இவை எல்லாம் விஷங்கள். பாரபட்சம் காட்டுபவை. அவை சமூகத்துடன் உங்களைப் பிணைத்து வைக்கின்றன. சமூகச் சூழலுக்கு ஏற்ப உங்களை மாற்றிவிடுகின்றன.

தூய்மைப்படுத்திக் கொள்ளல் என்பதன் அர்த்தம் எல்லா துன்பங்களையும், எல்லா கோட்பாடுகளையும், எல்லா ஏற்றத்தாழ்வுகளையும், எல்லா கருத்துரைகளையும் உதறித் தள்ளுவதாகும். உங்களிடம் உள்ள தத்துவங்கள் எல்லாம் பிறரால் கற்றுக் கொடுக்கப்பட்டவை. எழுதும் எழுதப்படாத சுத்தமான கரும்பலகையாக ஒருவர் மாறவேண்டும். எதுவும் இல்லாத முழுமையான சுத்தம் பெறவேண்டும். அவ்வாறு சுத்தமாக இருந்தால்தான், உங்கள்மீது எதுவும் எழுதி வைக்கப்படாது இருந்தால்தான், வாழ்க்கை ஏதாவது ஒன்றை எழுதிட வாய்ப்பு வரும். நீங்கள் முழுமையான மௌனத்தைக் கடைப்பிடிக்கும்போதுதான் சமூகம் கற்பித்த சொற்கள் எல்லாம் மறைந்துபோகும். அதன் பிறகு தான் வாழ்க்கையின் பேச்சு உங்களுக்கு எட்டும். நீங்கள் பூரணமான வெறுமையில் இருக்கும்போதுதான் உண்மை மெள்ள முணுமுணுக்கும் விந்தைகள் உங்கள் செவிகளில் விழும்.

வெறுமையாக இருப்பதே தூய்மையாகும்.

தூய்மைப்படுத்துதல் என்பது அசுத்தங்களை அகற்றும் வேலை. மனிதன் பலவற்றை உதறித்தள்ளிவிட வேண்டியிருக்கிறது. சொல்லப் போனால், உண்மை வெகுதூரத்தில் இல்லை. நீங்கள் பலவற்றை உங்களைச் சுற்றி இழுத்துப் போட்டு வைத்திருக்கிறீர்கள். உங்களைச் சுற்றிப் பல அடுக்குகளை வளரவிட்டிருக்கிறீர்கள். பலவித குணாம்சங்கள் உங்களைச் சூழ்ந்துள்ளன. பல முகமூடிகளை நீங்கள் தரித்துக்

கொண்டிருக்கிறீர்கள். எனவே உங்கள் நிஜமான முகத்தை உங்களால் காணமுடியவில்லை. அந்த முகமூடிகள் எல்லாம் அகற்றப்பட வேண்டும். நீங்கள் உண்மையில் எப்படி இருக்கிறீர்களோ அப்படி நிஜமானவராக மாற வேண்டும். உங்களைப் போலவே ஒளிவுமறைவற்று இருக்க வேண்டும். தூய்மைப்படுத்துதல் என்பது மறைந்து கொள்வதை விலக்குவது ஆகும். பொய்யாக இருப்பதை நிறுத்துவதாகும். போலித் தனத்தை அகற்றுவதாகும்.

அடுத்து மூன்றாவதாக இருப்பது பூரணத்துவம் பெறுதல் ஆகும். போலித்தனத்தை நீங்கள் நிறுத்தும்போது, பயணப் பாதையில் நீங்கள் சேகரித்த எல்லா விஷயங்களையும் வீசிவிடும்போது கண்ணாடியில் உள்ள தூசு துடைக்கப்படும்போது, பூரணத்துவம் என்ற முழுமை சுயமாக தோன்ற ஆரம்பித்துவிடுகிறது. பூரணத்துவம் என்பது ஐக்கியப்படுத்தும் அங்கமாகும்.

முதலில் விருப்பம் தேவை. தீவிரமான முழுமையான விருப்பம் தேவை. உண்மையின் மீது உங்களுக்கு பூரணமான விருப்பம் இருக்கு மானால், தூய்மைப்படுத்திக் கொள்ளும் துன்பங்களில் நுழைய நீங்கள் தயாராக முடியும். அந்த விருப்பம் அரைமனதுடன் இருந்தால் நீங்கள் துயரங்களுக்குத் தயாராகவில்லை என்று பொருள்.

தூய்மைப்படுத்திக் கொள்ளல் துயரம் தரும் ஒன்றாகும். அது உங்கள் உடலில் உள்ள சீழை அகற்றுவது போன்றதாகும். அது வலி தருவதாக இருக்கும். ஆனால் நீண்டகாலம் நன்மை தரும். சீழ் அகற்றப் பட்டால், விஷம் வெளியேறும். நீங்கள் விரைவில் குணம் பெறுவீர்கள். ஆனால் அகற்றும்போது வலிக்கவே செய்யும். சீழை அகற்றுவது வலி தரும் செயல்தான். சீழை உள்ளே இருக்க அனுமதித்தால் அது பெருகி விடும். உடல் முழுவதும் அது பரவிவிடும்.

தேவைப்பட்டால் மரணத்தை எதிர்கொள்ளவும் ஒருவர் தயாராக இருந்தால், தூய்மைப்படுத்திக் கொள்ளும் முழுமையான விருப்பம் இருந்தால் மட்டுமே அது நடக்கும். அது ஒரு வகையான மரணம். உங்களுடைய குணாதிசயம் என்று நீங்கள் நம்பிக்கொண்டு இருப்பவை இறந்துபோக வேண்டியிருக்கிறது. உங்களை அடையாளப்படுத்தும் விஷயங்களை உதறிவிட வேண்டும். அவை உங்களுடைய அகந்தை சாந்தவையாகும். நீங்கள் இன்றுவரை உங்களுடையவை என்று உரிமை கொண்டாடும் விஷயங்களையும், பெருமைப்பட்டுக்கொள்ளும் அம்சங்களையும் விலகித் தள்ளிவிட வேண்டும். மதிப்புமிக்கவை என்று நீங்கள் கருதும் எதையும் குப்பை போல் ஒதுக்கிவிட வேண்டும். அது துன்பம் தருவதாக இருக்கும். அப்படிச் செய்யும்போது உங்கள் சாம்

ராஜ்ஜியத்தை இழந்து நீங்கள் பிச்சைக்காரனாகிவிட்டதுபோல் உணர்வீர்கள்.

காரியத்தில் இறங்க முழுமையான மனம் இல்லாது போனால் அதைச் செய்ய முடியாது. தேவையற்ற விஷயங்களை உதறும்போது தூய்மைப்படுத்துதல் நிகழ்கிறது. அவசியமானது தானே முழுமை நிலை அடைகிறது. நீங்கள் பூரணத்துவம் பெற்றவராக மாறவேண்டியதில்லை. பூரணத்துவம் நடைபெற இடம் அமைத்துக் கொடுத்தால் போதும். பூரணத்துவம் நடந்தேறுகிறது.

## முதல் சூத்திரம் : ஆயத்தமாதல்

### பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்

பேகன் பிரபு அறிவியல் மனப்பான்மை நிரம்பியவர். அவர் தனது புகழ்பெற்ற 'Novum Organum' என்ற புத்தகத்தில் பிதாகோரஸ் ஒரு தீவிர மதப்பற்றுக் கொண்டவர் என்று கூறியிருக்கிறார். இப்போது அது முழுமையான அபத்தமாகிவிட்டது. பேகனின் புத்தகம் மிகவும் சிறப்பானது. இந்த ஒரு குறிப்பைத் தவிர மற்றவை எல்லாம் பெரு மதிப்பு உள்ளவை.

மூன்று சிறந்த புத்தகங்கள் உலகில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. முதல் புத்தகம் அரிஸ்டாட்டிலின் Organum. ஆர்கானம் என்றால் கோட்பாடு என்று பொருள். இரண்டாவது புத்தகம் பேகனின் Novum Organum. இதற்கு புதிய கோட்பாடு என்று அர்த்தம். மூன்றாவது புத்தகம் அடஸ்பென்ஸ்கி எழுதிய Tertium Organum. இதற்கு மூன்றாவத கோட்பாடு என்று பொருள். இவை ஈடு இணையற்ற மூன்று புத்தகங்கள்.

பிதாகோரஸ் ஒரு தீவிர மதவெறியர் என்று பேகன் எவ்வாறு முடிவு செய்தார் என்பது வியப்பளிப்பதாக உள்ளது. ஏனென்றால், பிதாகோரஸ் மதவாதத்திற்கு முற்றிலும் எதிரானவர். அவர் மதவெறியராக இருந்தால் எப்படி பலவிதமான அந்நிய மடாலயங்களில் சேர்ந்து பயின்றிருக்க முடியும்? மறைபொருளாக உள்ள விஷயங்களைப் பயில விரும்பியிருக்க முடியும்? அவர் மதவாதியாக இருந்திருந்தால், கிடைக்கும் ஒவ்வொரு வாய்ப்பையும் திறந்த மனதுடன் ஏற்றுப் பயின்றிருக்க இயலாது. உண்மையில் மதவாதம் என்பது கிரேக்க மனதில் ஒரு அங்கமாக இருந்ததில்லை.

தத்துவார்த்தமான மனம் மதவாதம் கொண்டதாக இருக்காது. கோட்பாடு சார்ந்தும் இருக்காது. தத்துவத்திற்குத் தேவையான அடிப் படை அம்சமே அதுதான். நீங்கள் திறந்த மனதுடன் இருக்க வேண்டும். விசாரித்து அறிய வேண்டும். சந்தேகம் கொள்ள வேண்டும். வினா எழுப்ப வேண்டும். உண்மை எந்த வடிவில் வந்தாலும் அதை பெற்றுக் கொள்ள வேண்டும். எதையும் முன்னரே ஆயத்தப்படுத்தி முடிவு செய்து வைத்திருக்கலாகாது. அவ்வித கண்ணோட்டத்தின் பிடியில் நீங்கள் அகப்படக்கூடாது. தெரிந்து கொள்ளாமலே முடிவு செய்வது கூடாது. **முன்பே தீர்மானித்துக் கொள்ளும்** தவறான வாதத்திற்கு நீங்கள் பலியாகிவிடக்கூடாது. அப்படிச் செய்தால், நீங்கள் எதையும் விசாரித்து அறியாமல், எதையும் தெரிந்து கொள்ளாமல், எதையும் அனுபவப்பூர்வமாக உணராமல், முன்கூட்டியே ஒன்றை ஆரம்பத் திலேயே தீர்மானித்துக் கொண்டுவிட்டவராகி விடுகிறீர்கள்.

பேகன் ஏன் பிதாகோரஸை மதவெறியர் என்று குற்றம் சாட்டினார் என்று அறியச் சிரமப்பட்டு முயன்று பார்த்தேன். மதவாதம் என்பது யூத மனதில் இருந்து தோன்றிய ஒன்று. அது ஒருபோதும் இந்துவின் மனம் அல்லது கிறிஸ்தவ, கிரேக்க மனதின் அங்கமாக இருந்ததில்லை. அது யூதர்களிடமிருந்து வந்தது. பிறகு கிறிஸ்தவர்களிடமும், முகமதி யர்களிடமும் பரவியது. ஏனெனில் இருவரும் யூத மதத்தில் இருந்து கிளைவிட்டவர்கள்.

நாங்கள் கடவுளால் தேர்வு செய்யப்பட்ட மனிதர்கள் என்பது ஆபத்தான கருத்தாகும். அது மதவாதத்தைத் தோற்றுவிக்கிறது. நாங்களே உண்மையானவர்கள். பிறர் ஆபத்தானவர்கள் என்பதே அதன் பொருள். ஒரு கடவுள் தான் இருக்கிறார். மற்ற கடவுள்கள் எல்லாம் ஆபத்தான வர்கள் அந்த ஒரு கடவுள் **எனது** கடவுள்தான். அப்படியானால் **உங்கள்** கடவுளுக்கு என்ன ஆயிற்று. நீங்கள் தவறானவர் என்றால், நீங்கள் ஒரு பாவியாகிறீர்கள். அதை நம்பச் செய்ய வேண்டும். மதம் மாற்றப்பட வேண்டும். நீங்கள் அதை எளிதாக ஏற்றுக்கொண்டால் சிக்கல் இல்லை. இல்லாவிட்டால் நீங்கள் கட்டாயப்படுத்தப்படு கிறீர்கள். பலவந்தப்படுத்துகிறீர்கள். எனவே நீங்கள் தவறான கடவுளை உதற வேண்டியுள்ளது.

பிதாகோரஸ் பல தேசங்களில் வாழ்ந்தார். வாழ்வின் பல்வேறு பார்வைகள் அங்கிருந்தன. பலவித தத்துவக் கருத்துகள் இருந்தன. பல மதங்கள் அங்கு இருந்தன. எனவே அவர் ஒரு மதவாதியாக இருக்க முடியாது. பிதாகோரஸைப் பற்றி பேகனுக்கு எதுவும் தெரியாது என்பதையே இது காட்டுகிறது.

**பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்** என்று முதல் சூத்திரம் சொல்கிறது. அவர் கடவுள் என்ற வார்த்தையைப் பயன்படுத்தவில்லை. கடவுள்கள் என்று கூறுகிறார் என்பது முக்கியமான விஷயம். அதுவே மதவெறியற்ற மனநிலையாகும். கடவுள்கள் என்று ஏன் பன்மையில் சொல்கிறார்? கடவுள் என்று ஏன் சொல்லவில்லை. காரணம், கடவுள் என்று சொல்லும் சமயத்தில் நீங்கள் ஆபத்தான வலையில் அகப்பட்டுக் கொள்கிறீர்கள். பிறகு மற்றவர்களின் கடவுள் என்ன ஆவது?

பிதாகோரஸ் ஒரே கடவுள்தான் உண்டு என்ற கொள்கை உடையவரல்ல. ஒரே கடவுள் என்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை. "உலகிலுள்ள எல்லா மனிதர்களும், அவரது அணுகுமுறைகளும் நிஜமானவை" என்று அவர் கூறுகிறார். அது அவருக்குத் தெரியும். ஏனென்றால் அவர் பற்பல மார்க்கங்களைப் பின்பற்றினார். பிதாகோரஸ் கிட்டத்தட்ட உலகில் இருந்த சகல மார்க்கங்களையும் பின்பற்றினார். எப்போதும் ஒரே சிகரத்தையே சென்றடைந்தார்.

அந்த சிகரத்தை அடையப் பல பாதைகள் உள்ளன. மலையில் பல பாதைகள் இருக்கின்றன. அவை எல்லாம் ஒரே உச்சிக்குத்தான் சென்று சேர்கின்றன. நீங்கள் கிழக்கில் இருந்தோ, மேற்கில் இருந்தோ அல்லது வடக்கில் இருந்தோ, தெற்கில் இருந்தோ மலைமீது ஏறலாம். கடினமான பாறைகளினூடே பயணிக்கலாம். சிரமமான பாதையில் செல்ல நேரிடலாம். அங்கு பல மாற்றுப் பாதைகள் உள்ளன.

உண்மை என்பது ஒன்றுதான் என்பதை பிதாகோரஸ் அறிவார். ஆனால் அதைச் சொன்னதில்லை. உண்மை என்பது ஒன்று அது சொல்லப்படாதது. நீங்கள் அப்படிச் சொல்ல வேண்டியிருந்தால் ஒருமையில் சொல்லாதீர்கள். பன்மையைப் பயன்படுத்துவதே சிறப்பு. உண்மை என்பது ஒன்றுதான். ஆனால் அறிவுள்ள மனிதர்கள் அதைப் பலவிதங்களில் எடுத்துக் கூறியிருக்கிறார்கள் என்று வேதங்கள் கூறுகின்றன.

**பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்.** அவர் பல மனிதர்களிடம் கலந்து வாழ்ந்தார். விதவிதமான முறையில் வழிபாடுகள் மேற்கொள்ளும் மனிதர்களாக அவர்கள் இருந்தார்கள். அவர் அதை சீடர்களிடம், "நீங்கள் கோவிலுக்குச் சென்றால் கோவிலில் உள்ள தெய்வத்தை வணங்குங்கள். அங்குள்ள மக்கள் எப்படி வழிபடுகிறார்களோ அப்படியே நீங்களும் செய்யுங்கள். யார் பிரார்த்தனை, வழிபாடு செய்தாலும் அவர்களிடம் மதிப்புடன் நடந்துகொள்ளுங்கள். மசூதிக்குச் சென்றால் அங்க மக்கள் வழிபடுவது போலவே வழிபடுங்கள்.

தேவாலயம் அல்லது யூதக்கோவில் சென்றால் அங்கு மக்கள் வழிபடுவது போலவே நீங்களும் வழிபாடு செய்யுங்கள்" என்றார்.

எனது அணுகுமுறையும் இதுதான். எல்லா வழிபாட்டு முறைகளும் கடவுளுக்கு உரியவைதான். எல்லா வழிபாட்டு முறைகளும் ஒரே இடத்திற்கே செல்கின்றன. எல்லா பாதைகளும் இறுதியில் அங்குதான் சென்று சேர்கின்றன. விரோதத்தை வளர்த்துக்கொள்ள அவசியமில்லை. எனது சன்னியாசிகளுக்கு நான் கூறும் செய்தி இதுதான். உங்களுக்கு ஒரு அமைதியான தனியான இடம் தேவை என்றால் அருகில் கோவிலோ, மசூதியோ, தேவாலயமோ எது இருக்கிறதோ அங்கு செல்லுங்கள். எல்லா கோவில்களும், எல்லா தேவாலயங்களும், எல்லா மசூதிகளும் உங்களுடையவைதான். எந்த ஒரு இடம் வாழ்வுக்காக அர்ப்பணிக்கப்படுகிறதோ அந்த இடம் நம்முடையது ஜெருஸலாம், காபா, கைலாஷ், கிர்னார் போன்ற எல்லா இடங்களும் நம்முடையவையே. உலகில் உள்ள கோவில்கள் எல்லாம் உங்களுடையவை. உலகிலுள்ள மதநூல்கள் எல்லாம் உங்களுடையவை என்ற செய்தி நான் உங்களுக்குத் தருகிறேன்.

பிதாகோரஸ் தனது சீடர்களிடம், "நீங்கள் எங்கு இருந்தாலும் மக்களைக் கவனியுங்கள். அவர்கள் வழிபாடுகளுக்கு மதிப்பளியுங்கள். அவர்களின் உண்மையை மதியுங்கள். அவர்கள் கண்ணோட்டத்தை மதியுங்கள். அது ஒற்றை நிலை மட்டும் கொண்டதாக இருக்கலாம். ஆனால் அதில் உண்மையின் அம்சம் இருக்கலாம். அது ஒற்றை முகம் கொண்டதாக இருக்கலாம் – வாழ்க்கைக்கும் பல முகங்கள் உண்டு. ஆனால் எல்லா வெளிப்பாடுகளும் ஒன்றிலிருந்துதான் தோன்றுகின்றன. ஒருவகையில் அது கிருஷ்ணரிடமிருந்து வெளிப்படலாம். மறுபுறம் அது ஏசுவிடமிருந்து வெளிப்படலாம். மோஸஸிடம் இருந்தும் வெளிப்படலாம். எல்லா தீர்க்கதரிசிகளும், தூதர்களும் ஒரே ஆதார மையத்திலிருந்துதான் வெளிப்பட்டார்கள்" என்றார்.

**பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்.** உங்கள் நம்பிக்கை எதுவாக இருந்தாலும் வெறுமனே அதில் நம்பிக்கை வைக்காதீர்கள். அதை புனிதப்படுத்துங்கள். அதில் வாழ்ந்து அதைப் புனிதமானதாக மாற்றுங்கள். மூளையில் உள்ள சாதாரண அறிவாக இருக்க வைத்துவிடாதீர்கள். அது உயிர்ப்புடன் நிகழ வேண்டும். அதை புனிதப்படுத்த வேண்டும். அதை புனிதமானதாக, தெய்வீகமானதாக மாற்ற வேண்டும்.

நம்பிக்கைகள் வெறும் எண்ணங்களாக மட்டும் இருந்தால் அவை பயனற்றவை. அவை உங்களின் ரத்தமாக, எலும்பாக, மஜ்ஜை

யாக மாறி அதில் வாழாதவரை அவை பயனற்றவை. ஏதாவது ஒன்றை நீங்கள் உண்மை என்று நம்பினால் அதுவாகவே மாறி வாழுங்கள். உங்கள் உணர்வு உண்மையானது என்பதற்கு அதுதான் சான்று. அது தவிர வேறு சான்று இல்லை. உங்கள் நம்பிக்கைக்கு உங்கள் வாழ்வே சாட்சியாக அமைகிறது.

உங்கள் மீது ஏதாவது ஒரு நம்பிக்கையை வலிந்து திணித்துக் கொள்ள வேண்டும் என்று இதன் அர்த்தம் அல்ல. உங்கள் மீது ஒரு நம்பிக்கையையும், குணாதிசயத்தையும் பலவந்தமாக ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று பொருள் அல்ல. அப்படிச் செய்வது அதை புனிதப்படுத்தி விடாது. அது போலி வேடமாகும். போலி வேடம் எப்படி புனிதமானதாக முடியும்? நம்பிக்கையில் வாழுங்கள். நம்பிக்கை உள்ளே இல்லாது வெறும் வாழ்க்கை வாழாதீர்கள். அதற்கு எதிராக மாறுங்கள். நம்பிக்கை இல்லாமையிலிருந்து நம்பிக்கையை நோக்கிப் பயணியுங்கள். முதலில் உண்மையை அனுபவப்பூர்வமாக உணருங்கள்.

உதாரணத்துக்கு, நான் தியானத்தை அதற்கு சான்று காட்டுகிறேன். தியானம் செய்வது நல்லது என்ற எண்ணத்துடன் அதை நீங்கள் தொடங்கலாம். தியானத்தில் பேருண்மைகள் பொதிந்துள்ளன. நீங்கள் அதன் அழகு மற்றும் அதிசயங்கள் பற்றி மற்றவர்களுடன் விவாதிக் கலாம். நீங்கள் இதுவரை தியானம் செய்ததில்லை. விவாதிக்கவும், அது பற்றிச் சிந்திக்கவும், படிக்கவுமே நேரம் ஒதுக்கியதால் தியானம் செய்ய அவகாசம் இருந்ததில்லை. தியானத்தை உணர்ந்து சுவைக்க வேண்டும். அது பற்றி விவாதிக்கலாகாது என்பதை நீங்கள் மறந்து போனீர்கள்.

அல்லது ஏதாவது ஒரு ஆசன நிலையில் தீவிரமாக அமரலாம். புத்தர் போல் உட்காரலாம். ஆனால் புத்தநிலை உங்களுக்குள் இல்லை. உள்ளே அமைதி இல்லை. தூய்மை இல்லை. களங்கமற்ற நிலை இல்லை. உள்ளே சம்பாஷணைகள் தொடர்ந்து நடக்கின்றன. ஆனால் மேற்பரப்பு அமைதியாக உள்ளது. நீங்கள் கற்சிலை போல உட்கார்ந் திருக்கிறீர்கள். இதுவே பாசாங்கு. நீங்கள் நடித்துக் கொண்டிருக் கிறீர்கள். இது புனிதப்படுத்தும் வேலை அல்ல. பூஜிக்கத்தக்கதல்ல.

நீங்கள் நிஜமாகவே தியானத்தில் ஈடுபட வேண்டும். வெறுமனே நடிக்கக் கூடாது. நீங்கள் உண்மையாக வாழும்போது உண்மை புனித மானதாகி விடுகிறது.

**பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்...** உங்களுக்கு எது தெரிந் திருந்தாலும் அதை வாழ்க்கைக்கு அர்ப்பணியுங்கள். எது தெரிந்திருக்

தாலும் அர்ப்பணம் செய்து கொண்டிருங்கள். உண்மை, அன்பு, அழகு குறித்து எவ்வித அனுபவங்கள் நேரிட்டாலும் அதை வாழ்வுக்கு அர்ப் பணியுங்கள். ஆழ்ந்த நன்றியறிதலுடன் அர்ப்பணம் செய்யுங்கள்.

**அதை உண்மையாகக் கடைப்பிடியுங்கள்.** எதையும் அது குறித்து ஜனங்களிடம் கூறாதீர்கள். கடைப்பிடியுங்கள். வாழ்வுக்கு அர்ப்பணியுங்கள். பேச்சு எதுவும் வேண்டாம். அப்படிச் செய்தால் உங்களுக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும். மக்கள் கூட்டம் முட்டாள் தனம் நிறைந்தது. அதை அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. அது அவர் களின் அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயம். கடைப்பிடியுங்கள். அதை ரகசியமாகச் செய்யுங்கள். உங்கள் மனதின் ஆழத்தில் வைத்துக் கொள் ளுங்கள். வாழ்க்கைக்கு மனதைத் திறந்து காட்டுங்கள். குருவிடம் மனம் திறந்து காட்டுங்கள். அதே பாதையில் நடக்கும் உங்கள் நண்பர் களிடம் மனம் திறந்து பேசுங்கள். அதே தேடல் உள்ளவர்களிடமும், வழித்துணைவர்களிடம் மனம் திறந்து பேசுங்கள். ஆனால் சந்தைக் கடையில் மனம் திறந்து பேசாதீர்கள். நீங்கள் தவறாகப் புரிந்து கொள்ளப்படுவீர்கள்.

அவ்வாறு தவறாகப் புரிந்து கொள்ளப்படுதல் உங்களுக்கு இடையூறை ஏற்படுத்தும். உங்கள் தேடலை திசை திருப்பும். உங்கள் சக்தியை வீணடித்துவிடும். அது உங்களிடம் தடுமாற்றத்தை ஏற்படுத்தி விடும். புரிதல் உள்ளவர்களிடம் மட்டுமே உண்மை குறித்த தொடர்பு களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

**அதை உண்மையாகக் கடைப்பிடியுங்கள்....** எவ்விதமான நம்பிக்கை உங்களிடம் எழுந்தாலும், எவ்வகையான உண்மை அம்சம் உங்கள் மனதில் உதித்தாலும் அதை ரகசியமாக வைத்திருங்கள். அது ஒரு விதையாக உங்கள் மனதிற்குள் மறைந்திருக்க வேண்டும். அதை தரையில் நீங்கள் விட்டெறிந்தால் மரமாக வளராது. காரணம் அது திறந்த வெளியில் கிடக்கிறது. அது ஆழமாக மண்ணின் கர்ப்பத்தில் இருக்க வேண்டும். மண்ணின் இருளில் மறைந்து கிடக்க வேண்டும். அங்கே அது மறைந்து கரையும்போது மரமாகப் பிறவி எடுக்கும்.

எவ்வகையான நம்பிக்கை உங்களிடம் தோன்றினாலும் அதை ஒரு விதையாக மனதில் மறைத்து வையுங்கள். மனதின் மண்ணுக்குள் அது மறைந்து கரையட்டும் அங்கு அது பெரிய மரமாக வளரும். ஆம் ஒருநாள் அது நடக்கும். வெகுகாலம் அதை நீங்கள் விதையாக வைத்திருக்க முடியாது. ஆனால் என்ன செய்வது? உங்களால் முடிந்த வரை வைத்திருங்கள். ரகசியமாக வைத்திருக்கும் வரையில் வைத் திருங்கள். ஒரு குழந்தை தாயின் கர்ப்பத்தில் ஒன்பது மாதம் மறைந்

திருப்பதுபோல, நீங்களும் அதை சுமந்திருங்கள். இப்போது குழந்தை வளர்ந்துவிட்டது. அது பிறக்கத் தயாராகிவிட்டது. அப்படியானால், எல்லாம் சரியாகி விட்டதாக அர்த்தம்.

ஏன் இதை பிதாகோரஸ் சொன்னார்? முதல் சூத்திரத்தில் ஏன் சொன்னார்? அதற்கு காரணம் இருக்கிறது. எப்போது உங்களுக்கு உண்மையின் ஒளிக்கீற்று புலப்படுகிறதோ அப்போது மனம் அதைப் பற்றிப் பேசுவதை விரும்புகிறது. அதைப் பற்றிப் பேசும்போது உண்மையை நீங்கள் இழந்துவிடுகிறீர்கள். அது கருச்சிதைவு போன்றது. ஒன்பது மாதம் அதை ரகசியமாகப் பாதுகாத்து வைத்திருங்கள். உங்களுக்கு மட்டும் தெரிந்த ஒரு வினோதமாக அது இருக்கட்டும். அல்லது உங்கள் அன்பானவர், சில நண்பர்களுக்கு மட்டும் தெரியட்டும். பொது மக்களிடம் காட்ட வேண்டாம். அது தனிப்பட்ட ஒருவருக்குச் சொந்தமான விசித்திரம் ஆகும்.

> **புகழ்பெற்ற காவிய நாயகர்களை, ஆவிகளை, சிறு தெய்வங்களை நினைகூர்ந்து வணங்குங்கள்.**
>
> **முதல் சூத்திரம். பவித்திரமான விரதமுறைகளை நித்தியத்துவம் பெற்ற தெய்வங்களிடம் மேற்கொள்ளுங்கள்.**

இரண்டாவது சூத்திரம் கூறுவது என்னவென்றால், உங்களுக்கு முன்னர் ஞானம் பெற்றவர்களை நினைத்துக் கொள்ளுங்கள். மகிழ்ச்சியுடன் நினைத்துப் பாருங்கள். அப்பாதையில் செல்ல அது உங்களுக்கு உதவி செய்யும். சந்தேகம் எழவும் அவநம்பிக்கை தோன்றவும் பல வாய்ப்புகள் உள்ளன. அவை மனதின் நீண்ட இருள் இரவுகளாகி, நீங்கள் நம்பிக்கை இழப்பீர்கள். திரும்பிச் சென்றுவிடலாமா, பழைய மனிதராகவே மீண்டும் வாழலாமா என்று யோசிக்க ஆரம்பித்து விடுவீர்கள். அந்த தருணங்களில் புத்தர்களை நினைவு கூருங்கள். ஞானம் பெற்ற புகழ்பெற்ற காவிய நாயகர்களை மனதில் எண்ணிப் போற்றுங்கள்.

பிதாகோரஸின் மொழியில் சொல்வதென்றால், ஞானம் பெற்றவரே. புகழ் நாயகனாக இருக்க முடியும். உண்மையை உணர முயற்சிப்பதே வாழ்வில் பெரிய தீரச் செயலாகும். மற்றவை எல்லாம் சாதாரணமானவை.

நீங்களும் பெரும் புகழ் பெற முடியும். அது மிகவும் எளிது. நீங்கள் அரசியல் செல்வாக்கை அடையலாம். அதற்கு பெரிய அளவில் அறிவு தேவையில்லை. நீங்கள் பணம் சம்பாதிக்கலாம். உங்களிடம் கொஞ்சம் தந்திரமும், திட்டமிட்டுச் செயல்படும் குணமும் இருந்தால் போதும். அவை பெரிய விஷயங்கள் அல்ல.

வாழ்வைச் சிறப்பானதாகவும், புகழ்பெற்றதாகவும் மாற்றக் கூடிய உயர்ந்த விஷயம் உண்மையை அறிதலே ஆகும். தெய்வீகத்தை உணர்தலே ஆகும். அதற்கு உண்மையாகவும், ஆன்மீக உணர்வுடன் நடந்துகொள்ள வேண்டும். ஆனால் அந்த பயணத்தில் நீங்கள் தனித்து இருந்திட நேரும்.

**புகழ்பெற்ற காவிய நாயகர்களை நினைவுகூர்ந்து வணங் குங்கள்...** புத்தர், வால்வோட்ஸ், கிருஷ்ணர், ஏசு, மோஸஸ், முகமது நபி, மகாவீரர் போன்றவர்களை நினைவில் கொள்ளுங்கள்! அதனால் தான் நான் பல்வேறு குருமார்கள் பற்றிப் பேசுகிறேன். நீங்கள் அந்த பாதையில் தனியே இல்லை என்று ஞாபகத்தில் கொள்ளலாம். உங்க ளுக்கு முன்பே பலர் அதில் வெற்றியடைந்திருக்கிறார்கள். நீங்களும் வெற்றி பெறலாம். பலர் வெற்றியடைந்திருக்கும்போது உங்களால் ஏன் முடியாது? உங்களுக்கு முன்பே பலர் முயன்று அங்கு சென்று சேர்ந்திருக்கிறார்கள். நீங்கள் தனியே பயணம் செய்யவில்லை. உங்க ளுக்கு முன்னே பலர் இருக்கிறார்கள். அது உண்மையைத் தேடு வோரின் நீண்ட ஊர்வலம். நீண்ட சங்கிலியின் ஒரு கண்ணி நீங்கள். நீங்கள் ஒரு சிறு துளியாக இருக்கலாம். ஆனால் பெருநதியின் ஒரு அங்கம். உலகிலுள்ள ஞானம் பெற்ற மனிதர்களின், புத்தர்களின் நதியின் அங்கம்.

அதனால்தான் நான் ஞானம் அடைந்த பலர் பற்றிப் பேசு கிறேன். உங்களுக்கு தைரியம், தன்னம்பிக்கை தருவதற்காகப் பேசு கிறேன். ஒரு பெரிய சங்கிலியின் அங்கமாக ஒரு தங்கச் சங்கிலியின் அங்கமாக இருக்கிறீர்கள் என்ற உணர்வை ஊட்டுவதற்காகப் பேசு கிறேன். நீங்கள் தனியே இல்லை என்று உணர்த்தப் போகிறேன். பயப்பட அவசியம் இல்லை. நீங்கள் காணாமல் போய்விட மாட்டீர்கள்.

**புகழ்பெற்ற காவிய நாயகர்களை ஆவிகளை, சிறு தெய் வங்களை நினைவுகூர்ந்து வணங்குங்கள்.** ஒருவர் ஞானம் பெறும் போது சிறுதெய்வமாகிறார். அவர் கடவுளாகிறார். ஒன்றை உணரும் அவர் அதுவாகவே மாறுகிறார். அந்த நினைவைப் போற்றிப் பாராட் டுங்கள். அதை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். அதில் யாருடன் உறவு வைத்துக் கொள்ளலாம் என்று கண்டறியுங்கள். மோஸஸுடன் உறவு வைத்தால் நன்று என்று உணர்வு தோன்றுகிறதா? ஜோராஸ்டிர ருடன் உறவு வைப்பது நலம் என்று எண்ணுகிறீர்களா? ஏதாவது உறவு பற்றிய எண்ணம் தோன்றினால் அந்த ஜோராஸ்டிரர் அல்லது மோஸஸின் வாக்குகளின் மீது பற்றுக் கொள்ளுங்கள். அவர்கள் வாழ்க்கை குறித்துச் சிந்தியுங்கள், தியானியுங்கள். உங்களைச் சுற்றி

ஒரு சூழலை உருவாக்கிக் கொள்ளுங்கள். யாருடனாவது உறவாடும் எண்ணம் தோன்றினால் அதற்குக் காரணம் நீங்களும் அதே வகையைச் சேர்ந்தவராக இருப்பதே காரணம்.

உங்கள் தற்செயலான பிறப்பு ஒரு பெரிய விஷயமே அல்ல. நீங்கள் ஒரு முகமதியராக இருக்கலாம். ஆனால், நபிகள் நாயகத்துடன் எந்த உறவும் இருப்பதாக உணர்வு தோன்றாமல் போகலாம். அப்படி ஏற்பட வேண்டும் என்ற அவசியம் இல்லை. பிறப்பு என்பது தற்செயலானது. நீங்கள் இந்துவாக இருக்கலாம். ஆனால் கிருஷ்ணருடன் எந்த உறவும் இருப்பதாக எண்ணம் தோன்றாமல் போகலாம், அல்லது ஏதாவது ஒரு மதவாத உணர்வு ஏற்படலாம். நீங்கள் ஒரு வகைப் பாட்டில் சேராது போயிருக்கலாம்.

உங்கள் பிறப்புடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். நாலாபுறமும் சுற்றித் திரியுங்கள். கூடுதல் சுதந்திரம் பெறுங்கள். நாலாபுறமும் பாருங்கள். எந்த மலர் உங்களைக் கவர்கிறதோ அதைப் பின்தொடர்ந்து செல்லுங்கள். எந்த மணம் உங்களைக் கவர்கிறதோ அந்த வாசனை நோக்கி முன்னேறுங்கள். நீங்கள் பிறப்பால் ஒரு இந்துவாக இருக்கலாம். ஆனால் குரான் உங்கள் இதயத்தில் மணியோசை எழுப்பினால் அந்த குரான்தான் உங்கள் மதநூல். இந்துமதம் பற்றி சுத்தமாய் மறந்துவிடுங்கள். நபிகள் நாயகம்தான் உங்கள் மனிதர். கிருஷ்ணரை மறந்துவிடுங்கள்.

நீங்கள் முகமதியராகப் பிறந்திருக்கலாம். ஆனால் புத்தரின் சிலையைப் பார்க்கும்போது மனதில் ஏதோ ஒன்று உடனே நிலை பெறுமானால், அதன் மூலம் அமைதி, நிதானம், நிம்மதி தோன்றுமானால் அதன் பெயர்தான் புத்தர். முகம் தெரியாத அந்த விந்தை மாமனிதர்மீது அன்பு உங்களிடம் ஊற்றெடுத்திருக்கிறது. அதன் பிறகு முகமதிய மதம், குரான், முகமது நபி போன்றவற்றை எல்லாம் மறந்துவிடுங்கள். புத்தச் சூழலை உங்களைச் சுற்றி உருவாக்கிக் கொள்ளுங்கள். ஏனென்றால் அது உதவிகரமானதாக இருக்கும். அது உங்களுக்கு ஊட்டம் தரும். உங்களுக்கு பலமூட்டும்.

இரண்டாவது பகுதி, தூய்மைப்படுத்திக் கொள்ளல். முதல் பகுதி ஆயத்தமாதல். உலகிலுள்ள அனைத்து உண்மை நிலைகளையும் மரியாதைப்படுத்துங்கள். எல்லா கோவில், புனித இடங்களையும் மதித்து நடந்து கொள்ளுங்கள். எல்லா மதநூல்களுக்கு மதிப்பளியுங்கள். இது நீங்கள் மற்ற மனிதர்களுக்குச் செய்யும் மரியாதையாகும். ஞானப் பாதையில் நடந்து அதை எட்டியவர்களைப் பேரன்புடன் நினைவில் வைத்துப் போற்றுங்கள்.

இது உங்களுக்குள் ஒரு சூழலை உருவாக்கும். அது உங்களிடம் பேராவலை ஏற்படுத்தும். அது ஆசையாக மாறும். அந்த ஆசையின் பிடியில் நீங்கள் அகப்படுவீர்கள். ஆசைக்கு அடிமையாவீர்கள். புத்தர் உங்கள் மனதைத் தொட்டால் ஒரு பெருவிருப்பம் உங்களிடம் புறப் படும். எப்படி புத்தராவது என்று எண்ணுவீர்கள். உங்கள் மனதின் ஆழத்தில் ஏசு உணரப்பட்டால், எப்படி ஏசுவாக மாறுவது என்ற எண்ணம் தோன்றி அதற்காகப் பணியாற்றுவீர்கள், தேடுதலில் ஈடுபடு வீர்கள். கிறிஸ்துவ மனோபாவம் பெறுவது எப்படி? ஒரு தடவை அந்த உணர்வு தோன்றினால் அதன் பிறகு தூய்மைப்படுத்திக் கொள்ளல் சாத்தியப்பட்டுவிடும்.

இரண்டாவது பகுதி, தூய்மைப்படுத்திக் கொள்ளல்.

**நல்ல மகனாக இருங்கள். பொறுப்புள்ள சகோதரராக இல்லறத்துணைவராக, நல்ல தந்தையாக இருங்கள்.**

இந்த சூத்திரம் உங்களுக்கு ஆச்சரியமூட்டும். ஆனால் இது பெருமதிப்பு உடையதாகும்.

**நல்ல மகனாக இருங்கள். பொறுப்புள்ள சகோதரராக இல்லறத் துணைவராக, நல்ல தந்தையாக இருங்கள்.** நீங்கள் "தெய்வீகத்தை வைத்துக் கொண்டு என்ன செய்யலாம்?" என்று யோசிக்கலாம். தெய்வீகத்தை வைத்து நிறையவே செய்யலாம். அமைதி யான சூழலை ஏற்படுத்தினால்தான் உங்களால் தியானத்தில் ஈடுபட முடியும். நீங்கள் சக்திப் புலம் கொண்ட ஒரு சுற்றுச்சூழலை உருவாக் கினால்தான் உள்முகமாகச் செல்லமுடியும்.

ஃபாண்டன் பிளாவில் இருந்த குர்ட்ஜிஃப்பிஸ் மடாலயத்தின் வாயிற்கதவில் "உங்கள் தந்தையுடனான கணக்குவழக்குகளைச் சரி செய்யாது இருந்தால் தந்தையிடம் திரும்பிச் செல்லுங்கள். முதலில் தந்தையின் கணக்கைச் சரிசெய்யுங்கள். அதன் பிறகு வாருங்கள். உங்கள் தந்தையை நீங்கள் மதிக்காவிட்டால், உங்கள் வளர்ச்சிக்கு வாய்ப்பு இல்லை. வினோதமாக இருக்கிறதா? ஏன்? தேடல் மூலம் என்ன செய்யப் போகிறீர்கள்?

அங்கிருந்து சற்று தொலைவில் இன்னொரு மூலையில் மனோ வியல் ஆய்வு வாசகம் இருந்தது. அதில், "உங்கள் தாயின் கணக்கு வழக்கை சரி செய்யுங்கள்" என்று எழுதியிருந்தது. அதை சரிசெய்யும் வரை எதையும் சரிசெய்த உணர்வே ஏற்படாது. நீங்கள் பதட்டத்துடன் தான் இருப்பீர்கள். முழுமையான மனோவியல் ஆய்வின் சாரமே, உங்களுக்கும் உங்கள் தாய்க்கும் இடையே உள்ள கணக்குவழக்கை அன்பாக, பெருந்தன்மையாக எப்படி சரி செய்வது என்பது பற்றியதே ஆகும்.

பிதாகோரஸ்தான் இதை முதன் முதலில் மிகவும் சரியாகவும், எளிமையாகவும் சொன்னவர் என்று தோன்றுகிறது. **நல்ல மகனாக இருங்கள்** என்று கூறுகிறார். நல்ல மகனாக இருப்பது என்றால் என்ன பொருள்? அடிமையாக, முழுமையான கீழ்படித்தல் உள்ளவராக இருந்தால் நல்ல மகனாக நடந்து கொள்ள இயலாது. முழுமையான கீழ்படிதலுடன் இருந்தால் நீங்கள் ஒரு போலி வேடதாரி. அப்படியானால் நல்ல மகன் என்றால் என்ன பொருள்?

இது பற்றி ஜனங்களிடம் கேட்டால், தந்தை எது சொன்னாலும், அதன்படி நடப்பவனே நல்ல மகன்" என்று பதில் தருவார்கள். அது எளிமையானதல்ல. அவர் சொல்வதை வெளிப்புறம் நிறைவேற்றலாம். ஆனால் உள்ளே அதை எதிர்க்கவும் செய்யலாம். அதைத்தான் சிறுவர்கள் செய்கிறார்கள். அவர்கள் ஆதரவற்றவர்கள். பெற்றோர் எது சொன்னாலும் அதை அவர்கள் செய்தாக வேண்டும். வேறு வழியில்லை. விரும்பியோ, விரும்பாமலோ அல்லது தயக்கத்துடனோ அதைச் செய்தாக வேண்டியிருக்கிறது. அது அவர்களிடம் ஒரு பிளவை ஏற்படுத்துகிறது. அவர்கள் இரண்டாகப் பிரிகிறார்கள். அவர்கள் பொய்யாகவும், போலியாகவும் மாறுகிறார்கள்.

சாதாரணமான வகையில் யோசிக்க ஒரு வழி உள்ளது. தந்தையிடம் கீழ்படிதலுள்ள மகனாக இருப்பதே நல்ல மகனாக இருக்கும் முறையாகும். பிதாகோரஸ் சொன்னது இதை அல்ல. அப்படியானால் தந்தையை எதிர்த்து கிளர்ச்சி செய்யச் சொன்னாரா? அவருக்கு எதிராக நடந்துகொள்ளச் சொன்னாரா? அவர் எது சொன்னாலும் அதற்கு எதிராக நடக்கச் சொன்னாரா? ஹிப்பியாகவோ அல்லது யிப்பியாகவோ இருக்கச் சொன்னாரா? "தலைமுடியை குறுகலாக வெட்டு" என்று அவர் சொன்னால், முடியை நீளமாக வளர்ப்பீர்களா? "தினமும் குளிக்க வேண்டும்" என்று அவர் சொன்னால், வருடக்கணக்கில் குளிக்க மறந்து விடுவீர்களா? அவர் "சுத்தம் தெய்வீகத்துக்கு நிகரானது" என்று கூறினால் அழுக்குடன் இருப்பீர்களா, அழுக்கு தெய்வீகத்துக்கு நிகரானது என்று பேசுவீர்களா? இல்லை. இது நல்ல மகன் என்ற சொல்லுக்கு அர்த்தம் தருவதல்ல.

உண்மையில் இரண்டாவது விஷயம்தான் உலகில் நடக்கிறது. காரணம், முதல் விஷயம் நீண்ட காலமாக பிடிவாதமாகத் திணிக்கப்பட்டதேயாகும். பலவந்தப்படுத்தப்பட்ட கீழ்படிதல் எதிர்விளைவை உருவாக்கிவிட்டது. அப்படியானால் யார் நல்ல மகன்?

எச்சரிக்கையுடன் இருப்பவனே நல்ல மகன். புரிதலும், மரியாதையும் கொண்டவனாக தந்தையின் வார்த்தைகளுக்கு செவிமடுக்கிறான். காரணம், தந்தைக்கு அதிகம் தெரியும் என்று நம்புகிறான். அவர் நீண்ட

காலம் வாழ்ந்தவர். வாழ்க்கை அனுபவம் பெற்றவர். அவருக்கு நிறைய அனுபவம் உள்ளது. எனவே தந்தையின் பேச்சைக் கேட்கிறான். தந்தையைப் புரிந்துகொள்ள முயல்கிறான். அவன் திறந்த மனதுடன் இருக்கிறான். கீழ்ப்படியவோ அல்லது கீழ்ப்படியாது போகவே அவசரம் காட்டவில்லை.

ஒரு நல்ல மகன் செவி கொடுத்துக் கேட்கத் தயாராக, புரிந்து கொள்ளத் தயாராக, கற்றுக்கொள்ள ஆயத்தமாக இருத்தல் அவசியம். அதன் பிறகு நீங்கள் உங்கள் தந்தையுடன் இணங்கிச் செல்ல முடியும் என்று கருதினால், அதைச் செய்யுங்கள். தந்தையுடன் இணங்கிச் செல்ல இயலாது என்று கருதினால், அதைச் சொல்லி விடுங்கள். கேள்விக்கோ எதிர்வினைக்கோ இடமில்லை. நீங்கள் தந்தை கருத்தை அங்கீகரிக்கவில்லை என்றால் வெளிப்படையாகச் சொல்லிவிடுங்கள். அவர் சொன்னதை நீங்கள் செய்யலாம். ஆனால் அது வலுக்கட்டாய முயற்சியால் ஆனதாக இருக்கும். அது உங்களை கபடதாரியாக மாற்று கிறது. தந்தை விரும்பினால் அதைச் செய்து முடியுங்கள். ஆனால் அச்செயல் உங்களை கபடதாரியாக மாற்றுமானால் அது உங்களை பிளவுபடுத்திவிடும்.

தந்தைக்கும் மகனுக்கும் நல்ல இணக்கம் இருப்பது அவசியம். காரணம், தந்தை கடந்த காலத்தையும், மகன் எதிர்காலத்தையும் பிரதி நிதித்துவப்படுத்துகிறார்கள். ஒரு இணைப்புப் பாலம் தேவைப்படு கிறது. அது ஒரு பக்கம் மட்டும் உள்ளதாக இருக்கலாகாது. மகன் மட்டும் நல்ல மகனாக இருந்தால் போதாது. இறுதியான விஷயம், தந்தையும் நல்ல தந்தையாக இருக்க வேண்டும். அவர் குடும்பத்திற்கான இணக்கமான சூழலை உருவாக்குகிறார். அப்போதுதான் சிந்திக்கும் திறன் எளிதாக வளரும்.

ஒரு நல்ல மகன் விழிப்புடன் இருக்க வேண்டும். தந்தைக்கு கீழ்ப்படிய வேண்டும். தனது கருத்துதான் சரி என்று உணர்ந்தால் தந்தையைப் பார்த்து, "எனக்கு இதைச் செய்ய விருப்பம் இல்லை. இது போலியானது; பொய்யானது" என்று கூறலாம். தந்தையார் சொல்வது தவறு என்று உணர்ந்தாலும் அவர் சொற்படி நடக்க ஒருவர் சித்தமாக இருந்தால், சுயமாகச் செயல்பட முடியாதுபோனால், சரி தவறு என்பவை பற்றிய உணர்வு அவருக்கு இல்லாமல் போகிறது. தந்தையைப் பின்பற்றுவது நல்லது என்று நினைக்கிறார்.

தந்தை கடந்த காலத்தின் பிரதிநிதியாக இருக்கிறார். எல்லா தந்தைமார்களின் பிம்பமாகவும் அவர் இருக்கிறார். அவர்கள் எல்லோரும் உங்களைக் காட்டிலும் மூத்தவர்கள். தந்தை என்பவர்

உங்களை விடவும் நீண்டகாலம் வாழ்ந்த ஒருவரின் அடையாளச் சின்னம். உங்களை விடவும் அனுபவம் பெற்றவர். ஆசிரியர்களும், மூத்தவர்களும் அவ்வாறானவர்கள்தான். அவர்கள் வாழ்வுக்கு, அவர்கள் அனுபவத்திற்கு பெரிய அளவில் மரியாதை தரப்பட வேண்டியது அவசியமாகும்.

நீங்கள் அடிமையாக இருக்க வேண்டியது இல்லை. அவர்களுக்கு எதிராகச் செயல்படவும் வேண்டியதில்லை. கீழ்ப்படிதலும் வேண்டாம், எதிர்ப்பும் வேண்டாம். புரிந்து கொள்ளல் இருந்தால் போதும். புரிதலுடன் அமைந்த கீழ்ப்படிதல் தோன்றினால், அது அழகானது ஆகும். சில தருணங்களில் புரிதலில் இருந்து எதிர்ப்பு கிளம்பினால் அதுவும் அழகானதே. ஆனால் அது புரிதலில் இருந்து வெளிப்பட வேண்டும். எதிர்ப்பிலிருந்து கிளம்பக்கூடாது.

மனிதர்கள் சில குறிப்பிட்ட காரியங்களைச் செய்வதில்லை. காரணம், அவர்களின் தந்தை அதைச் செய்யச் சொல்லியிருந்தார். அவர்களால் எப்படிச் செய்ய முடியும்? தந்தை செய் என்றால், அவர்கள் அதைச் செய்வதில்லை. எதிரான செயலில் அவர்கள் ஈடுபடுகிறார்கள். அவர்கள் அகந்தை சச்சரவில் ஈடுபட்டுள்ளது. சிலருக்கு அது தவறு என்று தெரியும். ஆனாலும் செய்வார்கள். காரணம், தந்தை செய்யச் சொல்கிறார். இந்த இரண்டு செயல்களுமே தவறானவை.

ஒரு நல்ல மகன் தந்தை சொல்வதைக் கேட்கிறான். எல்லா தந்தை பிம்பங்களுக்கும் மரியாதை தருகிறான். திறந்த மனதுடன் இருக்கிறான். தீர்மானங்கள் எடுத்துக் கொள்வதில்லை. மனதில் என்ன எண்ணம் எழுந்தாலும் — அந்த காரியத்தைச் செய் அல்லது செய்யாதே என்று மனம் சொன்னால், அதன்படி அவன் நடக்கிறான். அது கீழ்ப்படிதலாக இருந்தாலும், எதிர்ப்பாக இருந்தாலும் அதில் புரிதலுடன் ஈடுபடுகிறான்.

**பொறுப்புள்ள சகோதரராக இருங்கள்...** உங்கள் வயதினர் யாராக இருந்தாலும் அவர்களிடம் மோசமாக நடந்து கொள்ளாதீர்கள். சுயநலமாகச் செயல்படாதீர்கள். நீங்கள் சுயநல எண்ணத்துடன் செயல்படும்போது உங்களைச் சுற்றி ஒரு இறுக்கமான சூழலை ஏற்படுத்திக் கொள்கிறீர்கள். உங்களைச் சுற்றி நட்பு வட்டத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். நட்புச் சூழல் இருந்தால் வளர்ச்சி எளிதாகிவிடும்.

**அன்பான இல்லறத் துணைவராக இருங்கள்.** உங்கள் கணவர், மனைவி போன்றவர்களிடம் அன்பாக நடந்து கொள்ளுங்கள். இனிமையாகப் பழகுங்கள். ஏனென்றால், அன்பின் மறுபக்கம் வெறுப்பு என்ற ஒரு விஷயமும் இருக்கிறது. அன்பாக இருப்பது எப்படி

என்பதை நீங்கள் புரிந்துகொள்ளாது போனால், அன்பு என்ற விஷயம் பெரிய அளவில் உங்களிடம் வெறுப்பைக் கொண்டுவந்து சேர்த்திடவும் சாத்தியம் உள்ளது.

மக்கள் ஒரு மனிதரை நேசிக்கிறார்கள். பிறகு அதே மனிதரை வெறுக்கவும் செய்கிறார்கள். அந்த வெறுப்பு எல்லா அன்பையும் அழித்துவிடுகிறது. அன்பின் சாத்தியக்கூறுகள் அனைத்தையும் விஷமாக மாற்றிவிடுகிறது. அன்பு என்பது மிகப்பெரிய ஒரு விசித்திரம். அன்பு என்றால் என்ன என்று புரிந்துகொள்ளாது தவறவிட்ட ஒருவர் தெய்வ வழிபாடு என்றால் என்ன என்பதையே அறிந்துகொள்ள முடியாதவராகி விடுவார். வழிபாடு செய்திடவே அவரால் இயலாது. தெய்வ வழிபாட்டிற்கு உங்களை தயார் செய்யும் அனுபவத்தை அன்பினால் மட்டுமே அளிக்க இயலும்.

**அன்பான இல்லறத் துணைவராக இருங்கள்.**

உங்களுக்குப் பிடித்த ஆண், பெண் யாராக இருந்தாலும் மிகவும் அன்பாகவும், கருணையுடனும் நடந்து கொள்ளுங்கள். இந்த நற்குணங்கள் உலகிலிருந்து மறைந்துவருகின்றன. மனிதர்களுக்கு இடையிலான உறவுமுறைகள் எல்லாம் தயவுதாட்சண்யமற்றுப் போய் விட்டன. அவர்கள் அன்பு என்ற மொழியை முழுமையாகத் தொலைத்து விட்டார்கள். அவர்களின் அன்பு வாழ்க்கையில் வெறுப்பும், கோபமும், ஆத்திரமும் நிறைந்து கிடக்கிறது.

கடவுள் இந்த நூற்றாண்டில் உணர்ச்சியற்று மந்தமாகிப் போனதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். அன்பு காணாமல் போய் விட்டது. அதை மீண்டும் விழித்தெழ வைத்திட இயலாது. அன்பு என்பது ஒரு மலர். வழிபாடு என்பது அதிலுள்ள சுகந்தம் போன்றது. மலர் அங்கு இல்லாதுபோனால் எவ்வித வாசனையும் அங்கே இருந்திட வழியில்லை.

**நல்ல தந்தையாக இருந்திடுங்கள்.** அப்போது உங்கள் வட்டம் முழுமைபெறும். நல்ல தகப்பனாக இருங்கள். நல்ல தந்தையாக இருப்பது என்றால் என்ன அர்த்தம்? உங்கள் மகன் மீது எதையும் திணிக்காதீர்கள். உங்கள் அன்பையும், புரிதலையும் அவனுக்குக் கொடுங்கள். ஆனால் முடிவு செய்யும் உரிமை எப்போதும் குழந்தையினுடையது என்பதைத் தெளிவுபடுத்திவிடுங்கள். உங்கள் கருத்தை அவன் பின்பற்ற விரும்பினால் பின்பற்றி நடக்கட்டும். ஆனாலும் அதை அவன் தனது சுயவிருப்பப்படியே செய்கிறான். உங்கள் கருத்தை அவன் ஏற்கவில்லை என்றால், அவன் சுதந்திரமானவனாக இருக்கிறான். மீண்டும் அவன் தனது சுயவிருப்பம்போலவே நடக்கிறான்

என்றாகிறது. எல்லாவற்றையும் குழந்தைக்குத் தெளிவுபடுத்தி விடுங்கள். நீங்கள் அவனை நேசிக்கிறீர்கள். எனவே உங்கள் அனுபவத்தை அவனுக்குத் தருகிறீர்கள். ஆனால் அதற்காக பலவந்தப்படுத்தாதீர்கள். உத்தரவு போடாதீர்கள். அவன் புரிந்துகொள்ள உதவுங்கள். ஒரு விதிமுறை மட்டுமே இருப்பதை புரிய வையுங்கள். தனது புரிதலுக்கு ஏற்றபடி நடந்துகொள்ள அவனை அனுமதியுங்கள்.

தந்தை என்பவர் வெறும் உதவியாளர் மட்டும்தான் என்பதை இப்போது உங்களால் புரிந்துகொள்ள முடியும். தான் விரும்பும் ஒரு வடிவத்தில் அவர் தனது மகனை வார்த்தெடுக்க முயலக்கூடாது. தனது அபிலாஷைகள் எதையும் குழந்தை மீது திணிக்கலாகாது. அவர் தனது குழந்தை மீது அன்பு செலுத்த வேண்டும். அவனை பலசாலியாக மாற்ற வேண்டும். கூடுதல் விழிப்புணர்வு பெற்றவனாக மாற்ற வேண்டும். அப்போதுதான் அவன் தனது வாழ்க்கைப் பாதையை சுயமாகத் தேடிக் கண்டறிய இயலும். மேலும் அவனைச் சுதந்திரமுள்ளவனாக அது மாற்றும்.

நல்ல தந்தை ஒரு மகனை முடமாக்கி முடக்கிவிடக்கூடாது. தகப்பனைச் சார்ந்து இருக்கும்படி அவனை வற்புறுத்தக் கூடாது. நல்ல தந்தை அமையும்போது இயல்பாகவே மகனும் நல்லவனாகி விடுவான். காரணம் அவன் அடிமைத்தனத்தில் திணிக்கப்படுவதில்லை. எந்த மாறுபட்ட நிலையிலும் செயல்பட அனுக்கு அவசியம் ஏற்படுவதில்லை.

நல்ல மகனாக இருக்கும் நீங்கள் ஒருநாள் உங்கள் முறை வரும்போது தகப்பனாகவும், நல்ல தந்தையாகவும் மாறுவீர்கள்.

இது போன்ற ஒரு குடும்பச் சூழ்நிலையில்தான் நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். நெருக்கமான உறவு, கருணை, அன்பு போன்றவை தேவைப்படுகின்றன. அதன் பின்னர் தியானமும், ஆன்மீக வளர்ச்சி யும் மேம்பட வழி ஏற்படும்.

உங்கள் நண்பர்களில் ஒருவரைத் தேர்வு செய்யுங்கள். நற்பண்புள்ள அவரது அன்பான அறிவுரைகளுக்குச் செவி கொடுங்கள்.

அவரது வாழ்விலிருந்து ஆதாயம் பெறுங்கள். அற்பத் தவறுகளுக்காக அவரைவிட்டு விலகாதீர்கள்.

நட்பு என்ற விஷயமும் உலகில் இருந்து மறையத் தொடங்கி விட்டது. நட்பு என்ற பழைய விஷயத்தை வைத்துக்கொண்டு எதுவும் செய்ய முடியாது என்று நீங்கள் கருதினால், உங்கள் நட்பு ஒரு விபத்து போன்றதுதான். நீங்கள் ஒரே அலுவலகத்தில் பணிபுரிகிறீர்கள்.

அதனால் நட்பாக இருக்க வேண்டியிருக்கிறது என்று கருதுகிறீர்கள். அல்லது ஒரே கல்லூரியில் படிப்பதால் நட்புக்கொள்ள வேண்டியிருக்கிறது என்று நினைக்கிறீர்கள். இது உண்மையான நட்பு அல்ல.

"உங்கள் நண்பரைத் தேர்வு செய்யுங்கள்" என்று பிதாகோரஸ் கூறுகிறார். உங்கள் தந்தையை உங்களால் தேர்வு செய்ய முடியாது. உங்கள் தாயாரை உங்களால் தேர்வு செய்ய முடியாது. உங்கள் குடும்பத்தை உங்களால் தேர்ந்தெடுக்க முடியாது. ஆனால் நண்பரை உங்களால் தேர்வு செய்ய முடியும். உங்களுக்குப் பிடித்த பெண்ணை நீங்கள் தேர்ந்தெடுக்கலாம். உங்களுக்குப் பிடித்த ஆணை நீங்கள் தேர்வு செய்யலாம். அதுவும் நட்பின் ஒரு விரிவாக்கம்தான்.

**நற்பண்புள்ள ஒரு நண்பரைத் தேர்வு செய்யுங்கள்.**

ஒருவரிடம் கருணையுள்ளம் இருக்கலாம். ஒருவரிடம் ஒருவித மலர்ச்சி இருக்கலாம். அவரைச் சுற்றி ஒரு தகுதி சூழ்ந்திருக்கலாம். நற்பண்புள்ள சக்திப் புலம் அவரைச் சூழ்ந்து இருக்கலாம். நற்பண்பு என்பது நேர்மையோ, உங்களைவிட புனிதம் நிறைந்தவராக அவர் இருப்பதாக அர்த்தமல்ல. நற்பண்பு உள்ள நண்பர் என்றால், அவருடன் நட்பில் இருக்கும்போது சிறந்த சுகானுபவம் பெறுவீர்கள். அவரது நட்பில், அவரது அதிர்வலைகளின் மூலம் ஏதோ ஒன்று உங்களுக்குள் நடனமிடத் தொடங்கும். அது உங்களை மேல்நோக்கி உயரே எழுப்பும்.

ஒரு நண்பரைத் தேர்வு செய்யுங்கள். அதன் மூலம் நீங்கள் ஒரு குருவைத் தேர்ந்தெடுக்க இயலும். காரணம் குரு என்பவரும் ஒரு சிறந்த நண்பர்தான். உங்களால் நண்பரைத் தேர்வு செய்ய முடியவில்லை என்றால், குருவையும் தேர்வு செய்திட இயலாது. நண்பரைத் தேர்வு செய்யுங்கள். ஒருநாள் உங்களால் குரு என்ற உன்னதமான நண்பரையும் தேர்வு செய்ய முடியும்.

**அவரது அன்பான அறிவுரைகளுக்குச் செவி கொடுங்கள். அவர் வாழ்விலிருந்து ஆதாயம் பெறுங்கள்.**

நீங்கள் ஒரு நண்பரைத் தேர்வு செய்யும்போது அவரது அறிவுரைகளையும் கவனத்தில் கொள்ளுங்கள். அவர் அவற்றை கட்டாயப்படுத்தி உங்கள் மீது திணிக்கமாட்டார். அவை மெல்லிய முணுமுணுப்பான குரலில்தான் எடுத்துக்கப்படும். உரத்த குரலில் அவர் சொல்ல மாட்டார். வாதம் செய்ய மாட்டார். கட்டளையிட மாட்டார். தனது அபிப்பிராயங்களை மட்டுமே கூறுவார். அவற்றை சூசகமாகச் சொல்வார். கட்டிக்காட்டிப் பேசமாட்டார். நல்ல நண்பர் மற்றும் குருவிடமும் இதே பண்புகள்தான் காணப்படும்.

"புத்தர்கள் பாதையை மட்டுமே காட்டுவார்கள்" என்று புத்தர் கூறுகிறார். அதை அவர்கள் உரத்த குரலில் சொல்லமாட்டார்கள். காரணம் அவர்களுக்கு பலவந்தப்படுத்துவது பிடிக்காது. அவர்கள் உங்களைத் தங்களுடன் பிடித்து இழுத்துச் செல்லமாட்டார்கள். உங்கள் மீது ஆதிக்கம் செலுத்தும் எண்ணம் அவர்களுக்குக் கிடையாது. தாங்கள் தெரிந்து கொண்டதையும், உணர்ந்ததையும் வெளிப்படுத்துவார்கள். அதை பின்பற்றுவதோ நிராகரிப்பதோ உங்கள் விருப்பம்.

நண்பரின் வாழ்விலிருந்து நிறையக் கற்றுக் கொள்ளுங்கள். அவர் வாழ்வின் அனுபவங்களில் இருந்து ஆதாயம் பெறுங்கள். அவரது வார்த்தைகளை மட்டுமின்றி, நண்பரின் வாழ்க்கை முறையை யும் கவனித்துப் பாருங்கள். அவரது இயல்பான வாழ்கை முறையை கவனியுங்கள். வாழ்விலிருந்து கற்றுக்கொள்ள இது ஒன்றுதான் வழி யாகும். மனிதர்கள் வேதப் புத்தகம் போன்றவர்கள். அந்த மொழியை எப்படி வாசிப்பது என்று நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். மனிதர்கள் நிறைய ரகசியங்களைத் தங்களிடம் வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு மனிதரிடமும் ஒரு பெரிய ரகசியம் இருக்கிறது. அதை எப்படி கவனிப்பது என்று கற்றுக்கொண்டால் நீங்கள் அதிலிருந்து பெரிய அளவு ஆதாயம் பெறலாம்.

> அற்பத் தவறுகளுக்காக அவரைவிட்டு விலகாதீர்கள்.
> உங்களால் முடிந்ததை அவருக்குச் செய்யுங்கள்.
> ஆற்றல் தேவையானால் இந்த கடுமையான விதிமுறை
> களுக்குக் கட்டுப்படுங்கள்.

இரண்டு விதிமுறைகள் இருப்பதாக பிதாகோரஸ் கூறுகிறார். ஒன்று, தேவைசார்ந்தது. அடுத்தது அதிகாரம் சார்ந்தது. தேவை என்ற இந்த விதி விழிப்புணர்வற்றவர்களுக்கும் பொருந்துகிறது. தேவை பற்றிய உணர்வின்றி யந்திரத்தனமாக வாழ்பவர்களுக்கும் அது பொருந்து கிறது. இன்னும் ஒரு விதிமுறை உள்ளது. தேவையை விடவும் உயர்ந்தது. அது அதிகாரம் ஆகும். நீங்கள் கூடுதல் விழிப்புணர்வு பெற்றால், நீங்கள் தேவைகளை விட்டு விலகிச் சென்றுவிடுவீர்கள். தேவைகளைக் கடந்து சென்றுவிடுவீர்கள். அதிகாரத்தின் தேவையின்றி வாழ்வதற்குத் தொடங்குவீர்கள். அதன் பிறகு உங்கள் வாழ்க்கை தேவைகள் சார்ந்து இருக்காது.

உதாரணமாக, ஒருவர் தேவைகள் பற்றிய கவலையின்றிப் பேசினால், வசீகரிக்கும் ஆசைகளைத் தடை செய்ய வேண்டியதில்லை. புத்தரும் பேசினார், ஆனால் தேவைகள் இல்லாதவராகப் பேசினார். அது அதிகாரத்திலிருந்து விலகியிருத்தலாகும். அவர்கள் அமைதியான

வர்கள். எனவே வசீகரிக்கும் ஆசைகள் இல்லை. பேசுவதற்கு கருத்தில் ஆவேசம் இல்லை. அவர்கள் எப்போதும் அமைதியானவர்கள். ஆனால் அவர்களால் பேச முடியும். அதிகார உணர்வின்றி பேச முடியும்.

அதிகாரம், பதவி போன்றவை தேவையில்லை என்ற எண்ணத்துடன் அன்பு செலுத்துங்கள். புத்தரும் அதிகார ஆசையின்றியே அன்பு செலுத்தினார். நிறைய ஆற்றல் அங்கு இருக்கிறது. அது பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும். நிறைய அதிகாரம் ஏற்படுகிறது. அது விலக்கப்பட வேண்டும். அதிகாரத் தேவைகள் ஏதுமின்றி நீங்கள் வாழலாம். அவர்களும் அதிகார ஆசையின்றி வாழ்ந்தார்கள். புத்தர்கள் வாழ்வில் மிகப்பெரிய சுகபோகிகள்.

ஒரு அடிப்படை விதியிலிருந்து இந்த இரண்டு விதிகள் வேரோடியிருக்கின்றன. அவை ஒரு விதிமுறையின் அங்கங்களாகும். ஒரு விதிமுறையின் இரண்டு அம்சங்களாக உள்ளன. சீனாவில் அந்த விதிமுறை தாவோ என்று அழைக்கப்படுகிறது. இந்தியாவில் அந்த விதிமுறை தர்மம் என்று கூறப்படுகிறது. கிரீஸ் நாட்டில் அந்த விதிமுறை லாகோஸ் எனப்படுகிறது. யூதர்கள் அதை தோரா என்றார்கள். பெயர்தான் வேறுபாடே தவிர விதிமுறை ஒன்றுதான்.

இந்த வாழ்க்கை முழுவதும் அந்த ஒரு விதிமுறையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஆனால் அந்த விதிமுறை இரண்டு அம்சங்களைத் தன்னுள் கொண்டிருக்கிறது. விழிப்புணர்வு இல்லாத நிலையில் இருப்பவர்கள் அடிமைகள் போலவும், இயந்திர மனிதர்கள் போலவும் வாழ்கிறார்கள். விதிமுறையின் இரண்டாவது அம்சம் சுதந்திரம், அதிகாரம், அளவற்ற ஆனந்தம் போன்றவைகளாகும். நீங்கள் விழிப்புணர்வும், ஞானமும் பெறும்போதுதான் அந்த அம்சம் நிகழ்வுக்கு வருகிறது. அந்த இரண்டு விதிமுறைகளும் இணக்கமான நிலையில் அனுசரித்து உங்கள் வாழ்வில் நடைபெறும்போது அது பிதாகோரஸ் தரும் அடிப்படை விதியாக அமைகிறது.

அந்த இரண்டு விதிமுறைகளும் இணக்கமாக இருக்கும்போது நீங்களும் இணக்கமான நிலையில் இருப்பீர்கள். அந்த இரண்டு விதிமுறைகளும் இணக்கமாக இருக்கும்போது உங்கள் உடல் தேவையின் விதிமுறையப் பின்பற்றுகிறது. உங்கள் மனம் அதிகாரத்தைப் பின்பற்றுகிறது. உங்கள் மனம் தேவை குறித்த விதியைப் பின்பற்றும்போது, உங்கள் இதயம் அதிகாரத்தைப் பின்தொடர்கிறது. நீங்கள் வானம் மற்றும் பூமியின் சந்திப்பில் இணைகிறீர்கள். மனமும், உடலும் இணைகிறது. புலப்படக் கூடியது, புலப்படாதது போன்றவைகளும் ஒன்று சேர்கின்றன. இதையே ஞானம் என்று புத்தநிலை கூறுகிறது.

இன்று இவ்வளவு போதும்.

முகம் பார்க்காமல்

அன்பு

வெளிப்படுகிறது

## அத்தியாயம் - 2

முதல் கேள்வி

ஓஷோ,

உங்கள் முகத்தை நினைவில் வைத்துக்கொள்ள முடிவதில்லை.
எனவே முகம் பார்க்காமல் அன்பு வருகிறது
அறிமுகமற்ற நிலை என்னுள் ஒரு அங்கமாகிறது
அது உங்கள் மீது அன்புகொள்ள வைக்கிறது

அவளுக்குப் பெயர் இல்லை
ஆனால் வருகிறாள், போகிறாள்
அவள் செல்லும்போது கண்ணீர்க் கறை படிந்த எனது
முகத்தைத் துடைத்துக் கொள்கிறேன்.

அது என்னுள் ஒரு ரகசியமான செயலாகத் தங்கியிருக்கிறது.

அன்பு என்பது ஒரு விந்தையான செயல். இருப்பதிலேயே மிகவும் விநோதமானது அதுதான். அன்பின் வழியில் வாழ்ந்து பார்க்கலாம். ஆனால் அதை அறிந்துகொண்டுவிட இயலாது. அதைச் சுவைத்துப் பார்க்கலாம். அனுபவப்பூர்வமாக அறியலாம். ஆனால்,

அதைப் புரிந்துகொள்ள முடியாது. அது புரிதலுக்கு அப்பாற்ப்பட்ட ஒன்றாக இருக்கிறது. எல்லா புரிதல்களையும் மிஞ்சிய ஒன்றாக அது அமைந்திருக்கிறது.

எனவே, அதற்குப் பெயரிட மனதால் முடியாதுபோகிறது. அது ஒருபோதும் ஞாபகமாக அமைவதில்லை. ஞாபகம் என்பது மனம் எழுதிவைக்கும் குறிப்புகள் தவிர வேறு ஒன்றுமில்லை. ஞாபகத்தின் சுவடுகள், காலடித்தடங்கள் வடிவில் மனதில் பதிகின்றன. அன்பிற்கு உடல் சார்ந்த உருவம் இல்லை. அது உடலற்றது. அது எந்த காலடிச் சுவடுகளையும் விட்டுச் செல்வதில்லை.

இந்தியப் புராண மரபுப்படி அன்புக்கான கடவுளை அனங் என்று அழைக்கிறார்கள். அதன் அர்த்தம் உடலற்றது என்பதாகும். அன்புக் கடவுள் தவிர மற்ற எல்லா கடவுள்களுக்கும் உருவம் உள்ளது. அன்புக் கடவுளுக்கு மட்டும் கிடையாது. அது வரும், போகும். அதை உங்களால் பார்த்தறிய முடியாது. அது நெருங்கி வருவதை உங்களால் கேட்க முடியாது. கண்ணால் எதையும் பார்த்தறிய இயலாது. ஆனால் அதை உணர முடியும். அது உயிர்த்தன்மை கொண்டது.

அன்பிற்கு முகம் கிடையாது. அது முழுமையாக வடிவமற்று இருக்கிறது. அன்பை ஒருபோதும் உங்களால் பார்க்க முடியாது. அதை தொட்டு உணர முடியாது. அது மிகவும் உயரமானதாகவும், பார்த்தறிய முடியாததாகவும் அமைந்திருக்கிறது. உயர்ந்த சிகரத்தின் உச்சியில் அது வெறுமையாக உள்ளது. கீழே இருந்து மேலே உயரத்திற்குச் செல்ல அன்பு ஒரு ஏணியாக உபயோகிக்கப்படுகிறது என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். பூமியில் இருந்து வானத்துக்கு அது ஏணியாக அமைகிறது.

லௌகீகம் சார்ந்த அன்புக்கு ஒரு குறிப்பிட்ட முகம் உண்டு. ஆனால் அது அன்பின் முகம் அல்ல. லௌகீகம் அதற்கு ஒரு முக வடிவம் தருகிறது. அதன் மூலம் நீங்கள் நினைவில் கொள்ள முடியும். தாழ்ந்த நிலைகளுக்கு வடிவம் உண்டு. தொட்டு உணர முடியும். அது லௌகீகத்தினால் பகிர்ந்து அளிக்கப்படுகிறது. நீங்கள் அன்பின் உயர்ந்த நிலையில் மேலே மேலே சென்றால், அந்த உன்னதநிலை பிரார்த்தனை என்பதாக மாறும். அப்போது தொட்டு உணர்தல் மறைந்துபோகும். அப்போது நீங்கள் முதல் முறையாக அன்பு என்பது வழிபாடு என்பதையும், அது வானம் போல நிர்மலமானது என்பதையும் எந்த வடிவத்தினாலும் மாசுபடாதது என்பதையும் உணரும்போது மற்ற அனுபவங்கள் தானே தலையெடுக்க ஆரம்பித்துவிடும். உங்களுக்குள் இருக்கும் புரிந்துகொள்ள முடியாத ஏதோ ஒன்றை உணரத் தொடங்குவீர்கள். அது உங்கள் ஆன்ம நிலை மூலம் உணரப்படுகிறது.

பாலுறவு உணர்வு என்பது விழிப்புணர்வு இல்லாத தரம் குறைந்த அன்பின் வடிவமாகும். அன்பு என்பது பாலுறவைக் காட்டிலும் உயர்ந்ததாகும். அது வானத்திற்கும் பூமிக்கும் இடையில் அமைந்த நடுநிலைப் பாதை போன்றது. அது கவித்துவமானது என்றாலும், கவிதையை விளக்கிச் சொல்லிவிட முடியும். அது வார்த்தைகளால் உருவானதாகும். உயர்ந்த அன்பு வழிபாட்டு நிலையாக அமைகிறது. அதில் எடுத்துச் சொல்ல ஏதுமில்லை. பெரிய விளக்கம் எதுவும் அதில் இல்லை. அதை வெளிப்படுத்த வார்த்தைகள் தேவையில்லை. அது சொற்களால் விளக்க முடியாத ஒன்று. அந்த உயர்ந்த நிலையை நீங்கள் உணரும்போது அதை நீங்கள் கண்ணீராலோ, சிரிப்பின் மூலமோ, நடனம் வாயிலாகவோ மறைமுகத்தான் உணர்த்த முடியும். அந்த உயர்ந்த நிலையை உணரும்போது, உங்களுக்குள் அது மேல்நிலையை தட்டியெழுப்புகிறது. அது பிறகு ஆன்ம நிலை மூலம் உணரப்படுகிறது.

விழிப்புணர்வற்ற நிலை, விழிப்புநிலை, ஆன்ம விழிப்பு நிலை என்ற மூன்றுதான் மனதின் மூன்று வகைப்பட்ட தன்மைகளாக உள்ளன. விழிப்புணர்வற்ற நிலை லௌகீகம் சார்ந்தது. ஆன்ம விழிப்பு நிலை தெய்வீகம் சார்ந்தது. விழிப்புநிலை என்பது நடுநிலையானது. நீங்கள் பின்னோக்கித் தவறிவிழுந்தால், அன்பு என்ற பெயரில் பாலுறவு இச்சைகளில் அகப்பட்டுக் கொள்வீர்கள். அது தொண்ணூற்று ஒன்பது சதவீதம் அன்பு சார்ந்தது அல்ல. வெறும் ஒரு சதவீதம் மட்டுமே அதில் அன்பு இருக்கிறது. நாம் அன்பு என்று சொல்லும் விஷயங்களில் வெறுமனே ஐம்பது சதவீதம்தான் அன்பு உள்ளது. மீதி ஐம்பது சதவீதம் வேறு எதுவோ கலந்திருக்கிறது. வழிபாடு என்று நாம் கூறும் விஷயத்தில் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் அன்பு இருக்கிறது. ஒரு சதவீதம் மட்டும் வேறு விஷயம் கலந்து கிடக்கிறது.

உயர்ந்த நிலையை எட்டும்போது அன்பு வழிபாடாக மாற்றம் அடைகிறது. பிறகு அது பரிபூரண அமைதி நிலையை எட்டுகிறது. அதன் பின்னர் அங்கே கண்ணீர் இல்லை. நடனம் இல்லை. பாடல் இல்லை. எல்லாம் மறைந்து போகின்றன. ஒருமைநிலை மட்டுமே எஞ்சி நிற்கிறது.

உங்களிடம் உள்ள அன்பு வளர்ச்சி அடையும்போது, உங்களுக்குள் இருந்த பல புரியாத விஷயங்கள் புரிய துவங்குகின்றன. உங்களை நீங்கள் வித்தியாசமாக உணரத் தொடங்குகிறீர்கள்.

உங்கள் செயல்முறை சரிதான். எனவே நீங்கள்,

உங்கள் முகத்தை நினைவில் வைத்துக்கொள்ள முடிவதில்லை.
எனவே முகம் பார்க்காமல் அன்பு வருகிறது
அறிமுகமற்ற நிலை என்னுள் ஒரு அங்கமாகிறது
அது உங்கள் மீது அன்புகொள்ள வைக்கிறது

அவளுக்குப் பெயர் இல்லை
ஆனால் வருகிறாள், போகிறாள்
அவள் செல்லும்போது கண்ணீர்க் கறை படிந்த எனது
முகத்தைத் துடைத்துக் கொள்கிறேன்.

அது என்னுள் ஒரு ரகசியமான செயலாகத் தங்கியிருக்கிறது.

என்று கூறுகிறீர்கள்.

உங்கள் அன்பு பிரார்த்தனை உலகிற்குள் நுழைகிறது. அது மிகவும் முக்கியத்துவம் பெற்றதாக உள்ளது. காரணம், பிரார்த்தனைக்கு அடுத்ததாக, தெய்வீக நிலை மட்டுமே எஞ்சி நிற்கிறது. அன்பு என்ற ஏணியின் கடைசிப் படியாக வழிபாடு அமைந்திருக்கிறது. ஒருமுறை அதைக் கடந்து அப்பால் சென்றுவிட்டால், அது நிர்வாணம் என்ற விடுதலை நிலையாக அமையும்.

## இரண்டாவது கேள்வி

ஓஷோ,

உங்களுக்குள் மரணிப்பது எனக்கு ஏன் மிகவும் வலி தருவதாக இருக்கிறது?

நீங்கள் தேவையில்லாமல் உங்களை ரணப்படுத்திக் கொள் கிறீர்கள். காரணம், மரணம் ஏற்கெனவே நிகழ்ந்துவிட்டது. அது எதிர் காலம் சம்பந்தப்பட்ட கேள்வியல்ல. அது ஏற்கெனவே கடந்த கால மாக மாறிவிட்டது.

நீங்கள் சந்நியாசியாக மாறும் நாளில் மரணமடைகிறீர்கள். உங்கள் பழைய அடையாளங்கள் இறந்துபோகின்றன. நீங்கள் சந்நி யாசியாகும்போது மறுபிறப்பு எடுக்கிறீர்கள். உங்கள் உயிரில் ஏதோ ஒன்று புதிதாக வந்து சேர்கிறது. நீங்கள் சுமந்து கொண்டிருப்பதாக நம்புவது பழைய கருத்து ஆகும். பயம் என்ற கேள்விக்கே இட மில்லை. நீங்கள் சாகப் போவதில்லை. காரணம் நீங்கள் இறந்து போயாயிற்று. அது ஏற்கெனவே நடந்துவிட்டது.

சந்நியாசம் என்பது மரணமாகவும், மறுபிறப்பு எடுக்கும் செய லாகவும் உள்ளது. உங்களிடம் இருந்தவை எல்லாம் மரித்துப் போய் விட்டன. உங்களிடம் இல்லாதவை எல்லாம் மறுபிறப்பெடுத்து

விட்டன. மரணம் கடந்த காலமாகி, நிகழ்காலத்திற்கு வழிதிறக்கப் பட்டுவிட்டது. உங்களுடைய அடையாளங்கள் என்று நீங்கள் சொல்லி வந்தவை எல்லாம் இறந்து போய்விட்டன. பெயர், வடிவம் போன்றவை எல்லாம் அழிந்து, பெயரற்ற, வடிவமற்ற, உலகில் நுழைந்தாகி விட்டது.

அது ஏற்கெனவே நடந்தேறிவிட்டது.

சந்நியாசம் என்பது மரணம். மரணம் நிகழ்ந்தால் மட்டுமே மறு பிறப்பு சாத்தியப்படும். உங்களை நீங்கள் பிடித்துக்கொண்டு தொங்கி னால், மறுபிறப்பு சாத்தியமில்லை. சந்நியாசம் ஒரு சிலுவை போன்றது. வெளியில் இருந்து பார்ப்பவர்களுக்கு அது வெறும் சிலுவையாக, மரணமாகத் தோன்றும். அவர்களால் மறுபிறப்பைக் கண்டறிய இயலாது. காரணம் மறுபிறப்பு உங்கள் உயிரின் அடி ஆழத்தில் மறை வாக நடக்கிறது. வெளிப்புறப் பார்வையாளர்கள் கண்களுக்கு அது தட்டுப்படாது. அதனுடன் கலந்து பங்கு கொள்பவர்களால் மட்டுமே அதைக் கண்டறிய முடியும்.

பார்வையாளர்களால் கண்டறியக்கூடிய வகையில் சில விஷயங்கள் உள்ளன. அவை மேலோட்டமானவை, அற்பமானவை. செயலில் பங்கு கொள்ளக் கூடியவர்களால் மட்டுமே அறிந்துகொள்ளக்கூடிய சில விஷயங்கள் உள்ளன. அவைதான் உண்மையானவை. ஏனென்றால், அவை உங்கள் உயிரின் அடியாழத்துடன் சம்பந்தப்பட்டவை.

உங்களைச் சுற்றி மேலோட்டமாக அலைவது பழைய ஒரு கருத்து. அதை எல்லாம் மறந்துவிடுங்கள். உங்களால் இனி இறக்க முடியாது. காரணம், அது ஏற்கெனவே நடந்துவிட்டது. நீங்கள் பழைய கருத்தை மறந்துவிட்டால் அது மறைந்துபோய் விடும். அந்த கருத்தைப் பிடித்துக்கொண்டு தொங்காமல் இருந்தால், அதற்குச் சக்தி கொடுக் காமல் இருந்தால், அது மறைந்து போய்விடும்.

உங்களுக்கு என்ன நேர்ந்தது என்று புரிந்துகொள்ளச் சிலசமயம் அதிக காலம் பிடிக்கிறது. நீங்கள் சந்நியாசத்தை ஏற்கும்போது அல்லது தியானத்தில் ஆழ்ந்து போகும்போது, ஏதாவது ஒரு ஆன்மீக குரு குலத்தில் சேரும்போது மரணம் நிகழ்கிறது. மரணம் என்பது முதல் சடங்கு, முதல் செயல்முறையாக ஆயத்தநிலையாக அமைகிறது. உங்களுடைய உணர்வு மனம் அதை கேட்டறியாத போதுதான் அது சாத்தியப்படுகிறது.

முதலில் அது உங்கள் மனதின் அடியாழத்தில் தோன்றுகிறது. உங்கள் மனதின் மையத்திலிருந்து நீங்கள் வெகுதூரம் விலகிச் செல் கிறீர்கள். நீண்ட நெடுந்தொலைவு விலகிச் செல்கிறீர்கள். மையம் என்ற

ஒன்று இருக்கிறது என்பதையே உங்களால் நினைத்துப் பார்க்க முடியாது. அதன் சுற்றுப் பரப்பிலிருந்து வெகுதூரம் அப்பால் சென்று விடுவதால், மையம் என்பது முழுமையாக மறந்துபோய் விடுகிறது. அது உங்களுக்குத் தெரியாத ஒன்றாக மாறிவிடுகிறது. சட்டென்று மையத்தின் அருகே நீங்கள் செல்ல நேர்ந்தால், அதுதான் உங்கள் மையம் என்பதை உங்களால் நினைவில் கொண்டிட இயலாது.

அதையே சாதனா தனது முதல் கேள்வியில் கேட்கிறார். "உங்கள் மீது அன்புகொள்ளும் இப்பகுதி எது?" அது பற்றி அவருக்குத் தெரிய வில்லை. முற்றிலும் அது புதிதாக அவருக்கு இருக்கிறது. அது அவருடைய சுய மையம். ஆனால் அது உங்களுக்குப் பரிச்சயமில்லாத ஒன்றுபோல் தோன்றுகிறது.

ஃப்ரிடரிக் நியாட்ஷேயின் ஒரு குட்டிக் கதையை இப்போது பார்க்கலாம்.

ஒரு பைத்தியம் கடைத்தெருவுக்கு வந்தான். அப்போது சூரிய ஒளி பிரகாசித்து கொண்டிருந்தது. கடைகள் திறந்திருந்தன. மக்கள் வந்து கொண்டும், சென்று கொண்டும் இருந்தார்கள். கடைவீதி மேலும் மேலும் உயிர்த்துடிப்புடன் திகழத் தொடங்கியது. மக்கள் பரபரப்புடன் நடமாடினார்கள். கடைக்காரர்கள், வாடிக்கையாளர்கள் என்று பலரும் அங்கு குழுமியிருந்தோர்கள். மலைப்பகுதி ஒன்றிலிருந்து வந்த அந்த பைத்தியக்காரன் ஒளிவீசும் அந்த பட்டப்பகலில் ஒரு விளக்கைப் பற்றவைத்துக் கையில் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் சுற்றும் முற்றும் பார்க்க ஆரம்பித்தான். மக்கள் அவனைப் பார்த்து நகைத்தார்கள். "நீ என்ன தேடுகிறாய்? சூரியஒளி வீசும்போது விளக்கைப் பற்ற வைத்திருப்பதன் கவனம் என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு அவன் நான் கடவுளைத் தேடுகிறேன். கடவுள் எங்கே?" என்று கேட்டான்.

மக்கள் அவனைப் பார்த்துச் சிரித்து எள்ளி நகையாடினார்கள். "தொலைந்து போய்விட கடவுள் என்ன சிறுகுழந்தையா? கடவுளை யாராவது மறைத்து வைத்துவிட்டார்களா?" இப்படிப் பல கேள்விகள் கேட்டுக் கிண்டல் செய்தார்கள். அந்த பைத்தியத்தைச் சுற்றி பெரிய கூட்டம் கூடிவிட்டது. திடீரென்று அந்த மனிதன், "நீங்கள் நான் என்று எல்லோரும் சேர்ந்துதான் கடவுளைக் கொன்றுவிட்டோம். அது தெரியுமா உங்களுக்கு? சுயஉணர்வற்ற நிலையில் நாம் அவரைக் கொன்றுவிட்டோம். அந்த செய்தி வந்து சேரச் சற்று கால அவகாசம் பிடிக்கும். நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். நீங்கள் என்ன செய்தீர்கள் என்பது குறித்த விழிப்புணர்வு உங்களிடம் இல்லை" என்று கூறினான்.

விழிப்புணர்வுக்கும், விழிப்பற்ற நிலைக்கும் இடையிலான தூரம் வெகு அதிகம். நீங்கள் சந்நியாசியாக இருந்தால், உங்கள் ஆழமான விழிப்புணர்வற்ற நிலையில் இருந்து நீங்கள் புறப்பட்டால் உங்கள் சந்நியாசம் அங்கீகாரம் பெற்றதாக அமைகிறது. ஆனால் என்ன நடக்கிறது என்ற விழிப்புணர்வு உங்களிடம் இல்லை. ஏதோ நடப்பதை என்னால் அறியமுடிகிறது. உங்கள் மனதில் முற்றிலும் பெரிய மாற்றத்தை என்னால் பார்க்க முடிகிறது. பழையது மறைவதை யும், புதியது தோன்றுவதையும் என்னால் காணமுடிகிறது. ஆனால் அது பற்றிய விழிப்புணர்வு உங்களிடம் இல்லை. விழிப்புணர்வற்ற மனதிலிருந்து சில முணுமுணுப்புகள் உங்களுக்குக் கேட்டால், நீங்கள் அதிர்ஷ்டசாலி. அதற்கு காலம் பிடிக்கும். பல வருடங்களும் ஆகலாம். ஆனால் அது ஏற்கெனவே நிகழ்ந்து விட்டது.

ஒரு குற்றவாளிக்குத் தலையைத் துண்டித்து மரணதண்டனை வழங்குவது என்று தீர்ப்பு அளிக்கப்பட்டது. திறமையான மரண தண்டனையை நிறைவேற்றும் மனிதன் ஒருவன் தேர்வு செய்யப் பட்டான். குறிப்பிட்ட அந்த நாளில் எல்லாம் தயாராக இருந்தன. மக்கள் கூட்டத்தின் நடுவே அந்த குற்றவாளி நிறுத்தப்பட்டான். தண்டனை நிறைவேற்றும் நபர் அங்கு வந்து தன்னைப் புகழத் தொடங் கினான். எத்தனை பேருடைய தலையை வெட்டியிருக்கிறேன், எத்தனை பிரபலங்களை வெட்டியிருக்கிறேன், அந்த வேலையைச் செய்யும்போது ஏற்படும் அபாரமான வேகம் பற்றியெல்லாம் புகழ்ந்து பேசலானான். ஒருவரின் தலை மீது கத்தியை அவன் வைத்தால் கத்தி இறங்கும் வேகத்தை யாராலும் பார்க்கமுடியாது.

இந்த புகழுரைகள் எல்லாம் குற்றவாளிக்கு அநாவசியமாகத் தெரிந்தன. "இது ரொம்ப அதிகம்! மனதின் இறுக்கத்தை என்னால் இனியும் தாங்கமுடியாது. உடனே காரியத்தில் இறங்கினால் என்ன?" என்று கத்தினான். தண்டனை நிறைவேற்றும் ஆள் கத்தியைத் தாழ்த்தி னான். தலையை மட்டும் கொஞ்சம் மேலும் கீழும் அசை போதும்" என்றான்.

நானும் அதையே உங்களிடம் கூறுகிறேன். சற்றே தலையை அசையுங்கள். தலை துண்டித்து விழுந்துவிடும். நீங்கள் ஏற்கெனவே கொல்லப்பட்டு விட்டீர்கள். ஆனால் அது வேகமான கத்தி. உங்களால் கத்தியைப் பார்க்கமுடியாது. உங்களால் உங்கள் தலை துண்டாகி விழு வதையும் பார்க்கமுடியாது. எனவே கவலைப்பட அவசியமில்லை. மிகவும் பயந்து போயிருந்தால் தலையை அசைக்க வேண்டாம்.

மூன்றாவது கேள்வி

**ஓஷோ,**

**கீழ்ப்படிதலுக்கும், சரணாகதிக்கும் இடையே உள்ள வேறுபாடு என்ன?**

இரண்டுக்கும் இடையே பெரிய வேறுபாடு இருக்கிறது. கீழ்ப் படியும்போது நீங்கள் தனித்துப் போகிறீர்கள். சரணாகதியின்போது நீங்கள் தனித்து இருப்பதில்லை. கீழ்ப்படிதல் நடக்கும்போது நீங்கள் ஆம் என்று கூறுகிறீர்கள். உள்ளே ஏதுமில்லை என்பதற்கான சாத்தியம் நிறைய இருக்கிறது. உள்ளே இல்லை என்பதற்கு எதிராக நீங்கள் நடக்கிறீர்கள். நீங்கள் ஆம் என்று கூறுகிறீர்கள். கீழ்ப்படியும்போது பிளவுபட்டிருக்க நிறைய வாய்ப்பு இருக்கிறது. உண்மையில், இல்லை என்பது இல்லாமல் ஆம் என்பது இல்லை. அதன் பின்னால் எங்கோ அது வாழ்ந்திருக்கிறது. ஆம், இல்லை என்ற இரண்டு அம்சங்களும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போன்றவை. நீங்கள் ஆம் என்று சொல்லும்போது, நீங்கள் ஏற்கெனவே இல்லை என்று சொல்லி விட்டீர்கள் என்றாகிறது. நீங்கள் இல்லை என்று சொல்லும்போது, நீங்கள் ஏற்கெனவே ஆம் என்று சொல்லி விட்ட தாக ஆகிறது. அவை ஜோடிகளாகவே செல்கின்றன.

உங்கள் சொந்த வாழ்விலும் அதை நீங்கள் கண்டறிய முடியும். எப்போதெல்லாம் நீங்கள் ஆம் என்று சொல்கிறீர்களோ அப்போ தெல்லாம் சுயநினைவில்லாது நீங்கள் இல்லை என்று கூறுகிறீர்கள். நீங்கள் உரக்க ஆம் என்று கூறும்போது இல்லை என்பதும் பலமாக எழுகிறது. அதனால்தான், ஒரு உரத்த ஆமாம் என்பது, இல்லை என்பதை அடக்க வேண்டியுள்ளது. இவ்விதமான கீழ்ப்படிதல் உங்களுக்கு இரட்டைநிலை ஏற்படுத்தி உங்கள் ஒருங்கிணைப்பை அழிக்கிறது. நீங்கள் இல்லை, ஆம் என்ற இரண்டு பிரிவுகளாகப் பிரி கிறீர்கள். இரண்டாவதாக, ஆமாம் என்பதன் மூலம் நசுக்கப்பட்ட இல்லை என்ற சொல் விரைவிலோ அல்லது மெதுவாகவோ தனது பழிவாங்கலை மேற்கொள்ளும். சரியான தருணம் அமையும்போது, இல்லை என்பது தானே வெளிக்கிளம்பும். பழிதீர்க்கும் எண்ணத்துடன் அது உறுதியாக இருக்கும். அது காயத்தையும், அவமானத்தையும், இழிவையும் சுமந்து கொண்டிருக்கிறது. அது உங்களின் இருண்ட பகுதியாக மாறிவிடும்.

மனதின் ஒரு பகுதி மட்டுமே விழிப்புடன் இருப்பதாக மனோ வியலாளர்கள் கூறுகிறார்கள். மற்ற ஒன்பது பகுதிகளும் சுயவிழிப் பற்றுக் கிடக்கின்றன. இந்த ஒன்பது பகுதிகள் எவ்விதம் உருவாயின? இந்த ஒன்பது விழிப்புணர்வற்ற பகுதிகளில் என்ன அடங்கியிருக்

கிறது" நீங்கள் சொல்லிக் கொண்டிருக்கும் 'இல்லைகள்' இவைகள் தான். ஆம் என்பது உங்கள் விழிப்புணர்வாக மாறுகிறது. ஆனால் அது பத்தில் ஒரு பாகம்தான்! இல்லைகள் பல்கிப் பெருகி நாள்தோறும் அதிகரித்து பெரிதாக மாற்றம் பெற்று உங்கள் உடலின் அடித்தளமாகி விடுகின்றன. தினமும் ஏதாவது ஒன்றை நீங்கள் அடக்குகிறீர்கள். ஒரு நாள் அவை பழிவாங்கும். ஒருவேளை நீங்கள் பைத்தியமாகவும் மாறலாம். நீங்கள் கீழ்ப்படிதலுள்ள மனிதராக இருந்தால், பைத்தியமா வீர்கள். நேர்மையான மனிதர்கள்தான் பைத்தியமாகிறார்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். வேஷதாரிகள் ஒருபோதும் பைத்தியமாவ தில்லை. நீங்கள் நேர்மையான மனிதராக இருந்தால் பைத்தியமாவீர்கள். உதாரணமாக, நீங்கள் நேர்மையற்றவராக இருந்தால், வேஷதாரியாக மாறுவீர்கள். நீங்கள் ஆம் என்று கூறுவீர்கள். ஆனால் இல்லை என்பதை பின்தொடர்ந்து செல்வீர்கள்.

ஏசு சம்பந்தப்பட்ட ஒரு குட்டிக்கதை ஒன்று உண்டு.

வயலில் வேலை இருந்ததால் தந்தையார் தனது இரண்டு மகன் களையும் அங்கு செல்லுமாறு கூறினார். மூத்த பையன் "நல்லது. நான் போகிறேன்" என்றான். ஆனால் அவன் வயலுக்குச் செல்லவில்லை. இளைய மகன் "நான் அங்கு போகமாட்டேன்" என்றான். அவனுக்குக் குற்ற உணர்வு ஏற்பட்டதால், வயலுக்குச் சென்றான்.

இப்போது ஏசு கேட்டார். "யார் உண்மையில் கீழ்ப்படிதலுள் ளவர்? போகிறேன என்று சொன்னவன் வயலுக்குப் போகவில்லை. போகமாட்டேன் என்றவன் போகிறான். இதில் யார் கீழ்ப்படிதலுள் ளவர்?"

வார்த்தைகளை மட்டும் வைத்து மதிப்பீடு செய்து தீர்ப்பளித் தால், முதல் பையன் கீழ்ப்படிதலுள்ளவன். ஆனால் அது எப்படிப்பட்ட கீழ்ப்படிதல்? நீங்கள் உண்மைகளை அடிப்படையாக வைத்துத் தீர்ப்பளித்தால் இரண்டாவது பையன் மிகவும் கீழ்ப்படிதலுள்ளவன். முடியாது என்று சொன்னாலும் அவன் கீழ்ப்படிதலுள்ளவன். ஆனால் நீங்கள் ஆம் என்று சொன்னாலும், இல்லை என்று சொன்னாலும் ஒரு பிளவை உண்டாக்குகிறீர்கள். முடியாது என்று சொல்லும்போது குற்றஉணர்வுக்கு ஆளாகிறீர்கள். சரி என்று சொல்லும்போது அது வேறொன்றை அடக்கி வைக்கிறது. அதனால்தான் குற்றம் மேலே எழு கிறது. ஆம் என்று நீங்கள் சொல்லும்போது இல்லை என்பது அங்கு இருக்கிறது. அதை வலியுறுத்தவில்லை. நீங்கள் சொல்வது ஒன்றாகவும், செய்வது வேறொன்றாகவும் இருக்கிறது. அதனால்தான் வேஷமிடுதல் பிறக்கிறது. இரண்டுமே அனுதாபத்திற்கு உரியவை.

சரணாகதி என்பது ஆம் அல்லது இல்லை என்ற இரண்டிலும் சேராதது. ஆம் அல்லது இல்லை என்று கூற நீங்கள் அங்கு இல்லை. சரணாகதி என்பது ஒரு முழுமையான செயல். ஆம் இல்லை என்பன பிளவுபட்ட அங்கங்கள். சரணாகதி என்றால் அதில் நீங்கள் கரைந்து போகிறீர்கள் என்று அர்த்தம். "நான் என்ற உணர்வு என்னிடம் இல்லை" என்று கூறுகிறீர்கள். அவ்வாறு சொல்வதுடன் மட்டும் நின்றுவிடாமல் அந்த உணர்வு உங்களிடம் இல்லை என்ற ஆழமான நேசத்துடன் உணர்கிறீர்கள்.

இரண்டு காதலர்கள் ஒன்றுபடுகிறார்கள். உடல்கள் இரண்டானாலும், மனம் ஒன்றாக இருக்கிறது. சீடரும் குருவும் ஒன்றாகிறார்கள். இரண்டு உடல்கள் என்றாலும் மனம் ஒன்றுதான். அதுவே சரணாகதியாகும். குருவிடம் சீடர் ஆம் என்று கூறுவதல்ல சரணாகதி. ஆம் என்றோ இல்லை என்றோ சொல்ல சீடர் அங்கே இல்லை. சீடர் அங்கே வாழ்ந்திருப்பதில்லை. மனம் என்ற எண்ணத்தை அவர் முழுமையாக உதறிவிடுகிறார். எனவே கீழ்ப்படித்தல், கீழ்ப்படியாமை என்பன போன்ற கேள்வியே எழுவதில்லை.

சீடர் என்பவர் கீழ்ப்படிதலுள்ளவர் அல்ல என்பதை நினைவில் கொள்ள வேண்டும். காரணம் அவரால் கீழ்ப்படியாது இருக்க இயலாது. சீடரால் முடியாது என்று சொல்ல இயலாது. அதை நீங்கள் நிஜமான கீழ்ப்படிதல் என்று கூறுவீர்கள். **கீழ்ப்படிதல்** என்ற வார்த்தையை நீங்கள் விரும்பினால், அதை நிஜமான கீழ்ப்படிதல் என்று கூற முடியும். ஆனால் அது கீழ்ப்படிதலும் அல்ல, கீழ்ப்படியாமையும் அல்ல என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும். வேண்டும், வேண்டாம் என்று சொல்ல அங்கு யாருமில்லை. சீடர் வெறுமையே வடிவானவர்.

நான் பெரிதும் சரணாகதியை ஆதரிக்கிறேன். அதுவே நிஜமான கீழ்ப்படிதலாகும். இருமை நிலை இல்லாத கீழ்ப்படிதலாக அது இருக்கிறது. நீங்கள் பிளவுபடாமல் இருக்கிறீர்கள். முழுமையுடன் காணப்படுகிறீர்கள்.

உங்களிடம் ஏதாவது பிரிவுபட்ட நிலை இருந்தால் அது நல்லதல்ல. நீண்ட ஓட்டத்தின்போது அந்த பிரிவு ஆபத்தானதாக மாறிவிடும். கீழ்ப்படிதல் என்ற பண்பை மனிதன் வளர்த்துக் கொண்டிருப்பதால் பெரிதும் துயரப்பட்டு வருகிறான். கீழ்ப்படிய வேண்டும் என்று நூற்றாண்டுக் காலங்களாக உங்களுக்கு போதிக்கப்பட்டு வருகிறது. கீழ்ப்படிதல் மிகவும் மதிப்புமிக்க விஷயமாக பாராட்டப்பட்டு வருகிறது. உண்மையில் கிறிஸ்தவமதம் அதற்கு உயர்ந்த மதிப்பைத் தருகிறது.

அதனால்தான் ஆதாமும், ஏவாளும் அறிவு என்ற மரத்தின் கனியை உண்டு நிஜமான பாவத்தைச் செய்ய நேர்ந்தது. ஏன் அது

நிஜமான பாவமாயிற்று? அவர்கள் தவறான எதையும் செய்துவிட வில்லை. ஒரு காரியத்தை மட்டுமே செய்தார்கள். கீழ்ப்படிதல் இல்லாது நடந்து கொண்டார்கள். கடவுள் தின்ன வேண்டாம் என்று கூறிய கனியை அவர்கள் தின்றார்கள். அது ஒரு சிறிய கீழ்ப்படியாமை. அது நிஜமான பாவமாக மாறி அவர்களைச் சொர்க்கத்திலிருந்து வெளி யேற்றிவிட்டது.

இம்மாதிரியான தத்துவம் மிகவும் ஆபத்தானது. காலங்காலமாக அது பலவகையான மோசமான சூழ்நிலைகளை உருவாக்கி வைத்து விட்டது. குறைவான கீழ்ப்படிதலும், நிறைய விழிப்புணர்வும் தோன் றினால்தான் உலகில் இருந்து சண்டைகள் ஒழியும். ஆனால் ராணுவத் தில் உங்களுக்கு விழிப்புணர்வு கற்றுத்தரப்படுவதில்லை. அதற்குப் பதிலாகத் திட்டமிட்ட வகையில் உங்கள் விழிப்புணர்வு முழுமையாக அழிக்கப்படுகிறது. நீங்கள் இயந்திர மனிதராகி விடுகிறீர்கள். சொன்னதும் கீழ்ப்படிந்து நடக்கிறீர்கள். உத்தரவு எதுவாக இருந்தாலும், தவறாக சரியாக எப்படி இருந்தாலும், இயந்திரம்போல் அதை நீங்கள் கடைப்பிடித்து நடந்தாக வேண்டியுள்ளது.

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு அது தெளிவாக உறுதிப் படுத்தப்பட்டுவிட்டது. அது குறித்து தாமஸ் மெர்டன் இப்படி எழுது கிறார்: இஷ்மான் விசாரணையின்போது கிடைத்த தடுமாறவைக்கும் செய்தி என்ன என்றால், அவர் தெளிவான மனநிலையில் இருக்கிறார் என்ற அறிக்கையாகும். எனக்கும் அதில் சந்தேகம் இல்லை என்பதால் தடுமாறினேன். எல்லா நாஜிப் படையினரும் மனநோயாளிகள் என்று வைத்துக் கொண்டால், சில படைத்தலைவர்களும் அதில் அடக்கம் என்றால், அவர்களிடம் தென்படும் குரூரத்தைப் புரிந்துகொள்வது ஒருவகையில் எளிதானதுதான். இந்த "மனதின் சமநிலைத்தன்மை" உள்ள, அலுவலகப் பணியில் அக்கறை கொண்ட அவரது எழுத்துப் பணி, நிர்வாகப் பணி போன்றவை கூட்டம் கூட்டமாக மக்கள் கொல்லப்படுவதைக் கண்காணிப்பதாகும். அவர் முழுமையான முறை யில் கீழ்ப்படிந்து செயல்பட்டார். அது கற்பனைக்கு அப்பாற்பட்டது. அவர் நிர்வாக அமைப்பு மீது ஆழ்ந்த மதிப்பு வைத்திருந்தார். சட்டம், ஒழுங்குக்கு அடிபணிந்தார். ஒரு பெரிய தேசத்தின் விசுவாசமான, கீழ்ப் படிதலுள்ள, நேர்மையான அதிகாரியாக இருந்தார். தனது அரசுக்கு நல்ல முறையில் சேவை செய்தார். குற்றஉணர்வால் அவர் பாதிக்கப் படவில்லை. எந்த மனநிலை சார்ந்த நோயும் அவரிடம் இருந்ததாக நான் அறியவில்லை. அவர் இரவில் நன்கு உறங்கினார். வேளா வேளைக்கு நன்கு பசியெடுத்து உணவருந்தி ஆரோக்கியத்துடன் காணப்பட்டார்.

தெளிவான மனநிலை என்பது மதிப்புள்ள விஷயம் அல்ல என்றும், அதைவிட சிறந்தது இல்லை என்பதும் சரியான கருத்தாக இருக்காது என்று உணர்ந்துகொள்ளத் தொடங்கினேன். நவீன மனிதனின் மனத்தெளிவு என்பது ஒரு டைனாசர் மிருகம் தனது பருத்த உடலை, தசைகளையும் பயன்படுத்தும் வகைக்கு ஒப்பானது என்று கூறலாம். குறைவான மனத்தெளிவுடன் ஒருவேளை அவர் இருந்தால் சந்தேக உணர்வு ஏற்பட்டிருந்தால், தனது அசட்டுத்தனம் முரண்பாடுகள் பற்றிய கொஞ்சம் விழிப்புணர்வு அவரிடம் இருந்திருந்தால், அவர் பிழைத்திருக்க சாத்தியங்கள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அவர் மிகவும் மனத்தெளிவு பெற்றிருந்தார். நம்மைப் போன்றவர்கள் வாழும் இந்த சமூகத்தில் மோசமான மனத்தெளிவற்ற நிலையையே நாம் சற்றும் வருத்தமின்றி பூரணமான மனத்தெளிவு என்று கூறுகிறோம்.

மெர்டன் சொன்னது சரிதான். காலங்காலமாகக் கீழ்ப்படிதலின் மகிமை பற்றி நமக்கு எடுத்துச் சொல்லப்பட்டு வருகிறது. அதன் அர்த்தம் என்னவென்றால், அனைத்து விழிப்புணர்வையும் இழந்து விட்டு, என்ன சொல்லப்பட்டதோ, என்ன உத்தரவிடப்பட்டதோ அதைப் பின்பற்ற வேண்டும் என்பதாகும். சந்தேகம் கொள்ளாமல், ஆழ்ந்து எதையும் யோசிக்காமல் சொன்னதைச் செய்யவேண்டும். இது மனித சமூகம் முழுவதையும் இயந்திரமாக மாற்றிவிட்டது. மனிதர்கள் காணாமல் போய்விட்டார்கள். திறமையான இயந்திரங்கள் மட்டுமே காணப்படுகின்றன. இது மிகவும் முட்டாள்தனமான சமூகத்தை உரு வாக்கி வைத்துவிட்டது.

நான் கீழ்ப்படித்தலுக்கு அதிகம் மதிப்பு தருவதில்லை. அது ராணுவத்துக்கு ஏற்றது. நான் சரணாகதிக்கு ஆதரவு தருகிறேன். சரணா கதி என்பது அன்பு சார்ந்தது. கீழ்ப்படிதல் ஒரு சமூக விந்தை. அன்பு தனித்துவமானது. நீங்கள் ஒரு பெண்ணை நேசிக்கலாம், ஒரு ஆணைக் காதலிக்கலாம். அது சரணாகதியாகும். நீங்கள் சரணாகதி செய்யும் போது ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். சரணாகதி என்பது ஒரு ஆண் அல்லது பெண்ணைச் சார்ந்தது அல்ல. சரணாகதி உருவமற்ற அன்பு என்ற விந்தை சார்ந்தது. நீங்கள் இருவரும் அன்புக்காக சரணா கதி செய்கிறீர்கள். எனவே ஆதிக்கம் செய்தல் என்ற கேள்வியே எழுவ தில்லை. உண்மையான அன்பில் ஆதிக்கம் செலுத்துதல் என்பது இல்லை. ஒரு பெண் அன்புக்காக சரணாகதி செய்கிறார். ஒரு ஆண் அன்புக்காக சரணாகதி செய்கிறான். இப்போது அன்பு அவர்கள் உயிரில் கலந்திருக்கிறது. குரு ஏற்கெனவே வாழ்வுடன் சரணாகதி செய்து விட்டார். சீடரும் வாழ்வுடன் சரணாகதி செய்கிறார். இப்போது அன்பு அல்லது தெய்வீகம் அவர்கள் உயிரில் கலந்திருக்கிறது.

இது சாதாரணக் கீழ்ப்படிதல் அல்ல. நமக்குச் சொல்லப்பட்ட, கற்றுக்கொடுக்கப்பட்ட, சம்பந்தப்பட்ட வகையான கீழ்ப்படிதல் அல்ல. அது முழுமையான, வியப்பான ஒன்றாகும். இரண்டு பேர் அன்பு மூலம் சரணாகதி செய்யும்போது அன்பு அவர்களிடம் இடம் பிடிக்கிறது. யாரும் அதிகாரம் செய்வதில்லை. யாரும் அதிகாரத்திற்கு ஆட்படுவதில்லை. ஒருவரைவிட ஒருவர் உயர்ந்த மனிதராக இருப்பதில்லை. உண்மையில், இருவருமே இல்லாது போகிறார்கள். அதிகம் முக்கியத்துவம் பெற்ற ஏதோ ஒன்று நடைபெறத் துவங்குகிறது. தெய்வீகம் உருவாக ஆரம்பிக்கிறது. இருவரும் ஒரே மொழி பேசுகிறார்கள். ஏனென்றால், இருவரும் ஒரேவித அலைவீச்சில் இருக்கிறார்கள்.

வெளியில் இருந்து பார்த்தால் அது மற்றவர்களுக்கு கீழ்ப்படிதல் போல் தெரியும். உண்மையில் அப்படியல்ல. நீங்கள் பிதாகோரஸ் பற்றிச் சிந்திக்கும்போது அவர் சொன்னதை நன்கு கவனத்தில் கொள்ளுங்கள். அவர் நல்ல மகனாக இருங்கள் என்று சொன்னார். கீழ்ப் படிதலுள்ள மகனாக இருங்கள் என்று சொல்லவில்லை. சரணாகதி செய்யும் எளிய மகனாக இருங்கள் என்றார். நல்ல வாழ்க்கைத் துணை வராக இருங்கள். நல்ல கணவராகவோ, நல்ல மனைவியாகவோ இருங்கள் என்று சொல்லவில்லை. அன்புக்குச் சரணாகதி செய்யுங்கள் என்றுதான் கூறினார். நல்ல தந்தையாக இருங்கள். நல்ல சகோதரராக இருங்கள். நீங்கள் அதிகாரம் செய்யும் தகுதியில் இருங்கள் என்று கூற வில்லை.

அன்பு உங்கள் வாழ்வின் முழுமையான அங்கமாக இருக்கட்டும். நீங்கள் ஒரு மகனாக இருந்தால், தந்தையுடன் அன்பாக இருங்கள். அன்பின் வாகனமாகத் தந்தை இருக்கட்டும். நீங்கள் தந்தையாக மாறும் போது மகன் உங்கள் அன்பின் வாகனமாக இருக்கட்டும்.

சரணாகதிக்கு இவை விதிவிலக்குகள் போன்று உள்ளன. மகன், தந்தை, கணவன், மனைவி, நண்பன், குரு ஆகியோர் விதிவிலக்குகள். நம்மால் முகமற்ற வாழ்வுடன் சரணாகதி செய்துகொள்ள இயலாது. அந்த அளவு நாம் தகுதி படைத்தவர்களாக இருக்கவில்லை. அதற்கு சில விதிவிலக்குகள் - கதவுகளை நாம் கண்டறிய வேண்டும். குரு கண்ணால் பார்க்கவல்லவர். சீடர் குருவிடம் சரணடைய முடியும். ஆனால் சரணாகதி உண்மையில் கடவுளுடனானதாக அமைந்திருக்கிறது. சீடர் தனது குருவிடம் தெய்வீகத்தைக் காணும்போதுதான் சரணாகதி நிகழ்கிறது. தனது அன்பிற்கு உரியவரிடம் ஒருவர் சரணடைய முடியும். இன்புரியாத ஏதோ ஒன்றை நேசிக்கும்போதுதான் சரணாகதி சாத்தியம். அன்புக்குரியவர், நேசிப்பவர் போன்றவர்களின் வடிவில் தான் கடவுள்நிலை அருகில் வருகிறது.

சரணாகதி என்பது ஆன்மீக மதிப்பு உள்ளது. கீழ்ப்படிதல் அரசியல் மதிப்புக் கொண்டது. எல்லாவிதமான அரசியல்களிடத்திலும் எச்சரிக்கையாக இருங்கள்.

**நான்காவது கேள்வி**

**ஓஷோ,**

**பிதாகோரஸின் அமரத்துவப் புனிதப் பயணை விருப்பம் பற்றியும், மறை பொருளாக உள்ள வாழ்வின் ரகசியங்கள் பற்றியும் அறிய ஆசைப்பட்டு, பல்வேறு மதங்களின் வேறுபட்ட ஆன்மீக முறைகளைப் பரிசோதிக்க அவர் விரும்பியது குறித்து நீங்கள் என்னுள் பேசுவதைக் கேட்டபோது எனக்குள் எழுந்த முழுமைப்படுத்துதல் மற்றும் ஆற்றல் குறித்த உணர்வுகள் எவ்விதமானவை?**

அமரத்துவத்தை விரும்பும் மனிதர்கள் எல்லா இடங்களிலும் வாழ்கிறார்கள். பிதாகோரஸ் நம் ஒவ்வொருவரிடமும் உறைந்திருக்கிறார். அவரை நாம் கவனிக்காது இருந்திருக்கலாம். உண்மையைத் தேடும் ஆர்வம் உள்ளே ஏற்கெனவே உருவாக்கி வைக்கப்பட்டிருக்கிறது. மனிதன் தேடும் ஆர்வம் கொண்டவன். உணர்வுபூர்வமாக அதை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லாது போனால் நீங்கள் ஒரு மனிதர் என்ற சொல்லுக்கே அர்த்தம் இல்லாது போய்விடும்.

மனிதனுக்கும் மிருகங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு இதுதான். மனிதன் மட்டுமே உண்மையைத் தேடுகிறான். வாழ்வின் விசித்திரங்களைக் கடந்து உள்ளே சென்று பார்க்க ஆசைப்படுகிறான். அவை எல்லாம் எப்படிப்பட்டவை என்று வியந்தவன் மனிதன் மட்டும்தான். அவன் மட்டும்தான் இது குறித்து யோசித்தான்.

***மனன்*** என்ற சமஸ்கிருத வார்த்தையை அடிப்படையாகக் கொண்டுதான் மனிதன் என்று பொருள் தரும் **MAN** என்ற ஆங்கிலச் சொல் உருவாயிற்று என்பதை நீங்கள் அறியாமல் இருக்கலாம். மனிதன் சிந்திக்கும் திறமை பெற்றவன். நான் பிதாகோரஸ் பற்றிப் பேசுவது உங்களுக்குக் கேட்கிறது என்றால், உங்கள் இதயத்தில் ஏதோ சுழல்கிறது. பிதாகோரஸ் உங்களுக்குள் உறங்கிக் கொண்டிருக்கிறார். கொஞ்சம் விழிப்புடனும், எச்சரிக்கையாகவும் இருக்கிறார். உங்கள் உறக்கம் ஆழமானது அல்ல. உங்கள் கனவுகள் ஒரு கணம் நிற்கின்றன. உங்களுக்குள் எதுவோ தட்டி எழுப்பப்படுகிறது.

பிதாகோரஸ் சரியான ஒரு உதாரண புருஷர் என்று கூறலாம். நிஜமாகவே அவர் உண்மையின் மீது நாட்டம் கொண்டிருந்தார். **நிலைத்து நிற்கும் வாழ்க்கைத் தத்துவங்கள்** பற்றிக் கண்டறிய தனது

முழு வாழ்வையும் அர்ப்பணித்தார். இதுபோன்ற வாய்ப்பு எல்லா இடங்களிலும் அமைந்திருக்கிறது. அது நிஜப்படுத்தப்பட வேண்டும். ஆனால் நாம் பயனற்ற விளையாட்டுகளில் நம்மை நிறையத் தொலைத்துவிட்டோம். அவை தேவையற்ற விளையாட்டுகள். சிறு பிள்ளைத்தனமான பயனற்ற பொம்மைகளைச் சேகரிப்பதில் நம்மை இழந்துபோய்விட்டோம். வாழ்வைத் தொலைக்கிறோம். சக்தியைத் தொலைக்கிறோம். நேரத்தைத் தொலைக்கிறோம். வாழ்வின் காலம் மிகவும் குறுகியது. வாழ்க்கை விரைந்து நழுவிக் கொண்டிருக்கிறது. நமது கையில் இருந்து நேரம் வேகமாகத் தொடர்ந்து நழுவி வருகிறது.

மரணம் வந்து சேர்வதற்குள் தாயகத்தை அடைந்துவிட வேண்டும் என்பதை ஒரு கருத்தாக, தீவிரம் கொண்ட தகிக்கும் வெறியாக மனதில் உருவாக்கிக் கொள்ள வேண்டும். வேகம் நிறைந்த தேடலை ஏற்படுத்திக் கொள்ளும் சமயத்தில் உங்கள் உடலின் ஒவ்வொரு திசுவும் துடிக்கும். நீங்கள் உறங்கிக் கொண்டிருக்கும்போது அந்த துடிப்பு காணப்படும். அடி நீரோட்டமாய் அந்த தேடல் நடந்து கொண்டே இருக்கும். நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தாலும் அது மேலோட்டமானதாகவே இருக்கும். உண்மையை தேடும் நிஜமான தேடல், இடைவிடாத அந்த தாகம் உங்களுக்குள் ஆழமாக மையம் கொண்டிருக்கும். உங்களுக்குப் பிடித்த விருப்பமான செயலாக அதை அமைத்துக் கொள்ளுங்கள்.

"பிதாகோரஸின் அமரத்துவம் புனிதப் பயணம் பற்றியும், மறை பொருளாக உள்ள வாழ்வின் ரகசியங்கள் பற்றியும் அறிய ஆசைப் பட்டு, பல்வேறு மதங்களின் வேறுபட்ட ஆன்மீக முறைகளைப் பரி சோதிக்க அவர் விரும்பியது குறித்து நீங்கள் பேசியதை நான் என்னுள் கேட்டபோது எனக்குள் எழுந்த முழுமைப்படுத்துதல் மற்றும் ஆற்றல் குறித்த உணர்வுகள் எவ்விதமானவை?" என்று கேட்டீர்கள்.

ஆம்! உண்மையை அறிந்துகொள்ளும் ஆசை உங்களிடம் எழுந்தால் முழுமைப்படுத்துதல் தானே வந்து சேர்ந்துவிடுகிறது. காரணம் உண்மையை அறிந்து கொள்ள விரும்பும் ஆசை மிகவும் வலிமையானது. அது சாதாரண இச்சை அல்ல. அந்த நல்ல வீடு, அல்லது நல்ல கார் அல்லது நிறையப் பணம் வேண்டும் என்று ஆசைப் படுவது போன்றதல்ல. புகழ், வெற்றி, பதவி, கௌரவம் போன்ற வற்றிற்கு ஆசைப்படுவது போன்றதும் அல்ல. அவை எல்லாம் சாதாரண ஆசைகள். அவை உங்களை ஒருங்கிணைத்து முழுமைப் படுத்தாது. உண்மையில் அவை உங்களை பிரிவுபடுத்தவே செய்யும். ஏன் என்றால், அந்த ஆசைகள் பலவகைப்பட்டவைகளாக உள்ளன. ஒரு ஆசை உங்களை வடதிசையில் இழுக்கும். ஒரு ஆசை தென் திசை

யில் இழுக்கும். அந்த ஆசைகள் பலவகைப்பட்டவை. அவை கும்பலாக நிறைந்து கிடக்கின்றன. ஒவ்வொரு ஆசையும் உங்களைக் கவர நினைக்கிறது. உங்கள் கவனத்தைப் பெற்றிட எண்ணுகிறது. அவை உங்களைச் சுற்றி நின்றுகொண்டு கூச்சலிடுகின்றன.

பணம் குறித்த ஆசை பேசும்போது, "சகலத்தையும் உதறி விடுங்கள். எவ்வளவு முடியுமோ அவ்வளவு பணத்தைப் பெற்றிடுங்கள்" என்று கூறுகிறது. வெற்றி குறித்த ஆசை பேசும்போது, "பணம் தொலைந்து போய்விடலாம். அது பற்றி அலட்டிக் கொள்ளாதீர்கள். நீங்கள் முதலில் வெற்றியாளராக வேண்டும். புகழ் பெற்றவராக மாற வேண்டும். வரலாற்றில் உங்கள் அடையாளத்தைப் பதிக்க வேண்டும். பணம் பற்றி சகலத்தையும் கவலைப்படாமல் துணிந்து செயலில் இறங்குங்கள்" என்கிறது. பாலுறவு பற்றிய ஆசை பேசும்போது, "பணம், பதவி, கௌரவம் போன்றவை உங்களுக்கு என்ன கொடுத்து விடப் போகின்றன? காலம் இருக்கும்போது வாழ்வை அனுபவியுங்கள். ஒவ்வொரு கணத்தையும் கசக்கிப் பிழிந்து உணர்வு இன்பங்களில் திளைத்திடுங்கள்" என்கிறது.

பலவிதமான ஆசைகள் உங்களைப் பல திசைகளில் இழுக்கின்றன. அதனால்தான் நீங்கள் எப்போதும் தடுமாறி அப்பால் விழுந்து விட்டதுபோன்ற உணர்வுக்கு ஆளாகிறீர்கள். உண்மையைத் தேடும் ஆசை தனிப்பட்ட ஒற்றை விருப்பமாக இருக்கிறது. அது மிகவும் பெரியது. மிகப் பிரும்மாண்டமானது. மற்ற ஆசைகள் எல்லாம் அதனுள் மறைந்து போய்விடுகின்றன. அவை எல்லாம் சிறிய நீரோடைகள் போன்றவை. உண்மையைத் தேடுதல் என்ற பெரிய நதி வழிந்தோடும்போது அது சிறிய நீரோடைகளை உள்வாங்கிக் கொள்கிறது. ஒரு ஆசைக்குள் எல்லாம் மறைந்துபோய் விடுகின்றன. அது தகிக்கும் ஆசையாக மாறும்போது அதனுடன் சேர்ந்து நீங்களும் எரிகிறீர்கள். அந்த ஒருமைநிலை ஆசை அனைத்தையும் இணைக்கிறது.

அது ஒரு அழகான அனுபவம். அதை மறந்துவிடாதீர்கள்! அதை பலப்படுத்தவேண்டும். தீவிரப்படுத்தவேண்டும். அதை முழுமைப் படுத்தவேண்டும். தெய்வீக நிலையை எட்டிப் பிடித்துச் சாதிக்க வேண்டும் என்றால், அதற்கு முழுமையான தெய்வீகத் தேடல் தேவைப் படுகிறது. உங்களிடம் நூறு சதவீதம் ஆசை இருந்தால் எதுவும் பிடித்து நிறுத்திவிட இயலாது. உங்களிடம் உள்ள கருவிகள் அனைத்தையும் பயன்படுத்தும்போது உடனே தெய்வீகம் நிகழ்ந்தேறத் தொடங்கிவிடுகிறது. நீங்கள் எங்கும் செல்லத் தேவையில்லை. நீங்கள் தகிக்கும் ஆர்வத்துடன் இருந்தால் வாழ்க்கை தனது கருணையை முழுமையாகப் பொழியத் தொடங்கும்.

முழுமைப்படுத்துதல் உண்மையைக் கொண்டுவருகிறது. உண்மையைத் தேடும் விருப்பம் ஒருங்கிணைப்பை அளிக்கிறது.

**ஐந்தாவது கேள்வி**

**ஓஷோ,**

**கிட்டத்தட்ட நான் ஞானமடைந்து விட்டதாக எண்ணுகிறேன்.**

இந்த ஒரு எளிய வாக்கியத்தில் எல்லா வார்த்தைகளும் தவறாக இருப்பது எனக்கு வியப்பூட்டுகிறது. நீங்கள் எப்படிச் சமாளிக்கிறீர்கள்? நான் என்ற வார்த்தையுடன் அது துவங்குகிறது. நான் என்ற உணர்வு இருந்தால் ஒருபோதும் ஞானம் அடையமுடியாது. நான் என்ற உணர்வு ஒரு தடையாக உள்ளது. அதனால் நான் என்ற உணர்வு தடை செய்யப் படுகிறது. நீங்கள் ஞானம் பெற்ற பிறகு, நீங்கள் என்ற உணர்வு உங்களிடம் இருக்காது. நான் என்ற உரிமை கொண்டாட யாரும் இருக்க மாட்டார்கள். உபநிஷதம், ஜோராஸ்திரர், லாவோ, ஏசு போன்ற எல்லோரும் இதை வெவ்வேறு விதமாகச் சொல்லியிருக்கிறார்கள். உப நிஷதங்கள் மிகவும் தெளிவாக விளங்குகின்றன. "நான் ஞானம் அடைந்துவிட்டேன் என்று யாராவது சொன்னால், அவர் ஞானம் பெற வில்லை என்பதைத் தெரிந்துகொள்" என்கிறது. ஞானம் பெறுவது உரிமை கொண்டாட முடியாத விஷயம். காரணம் ஞானம் பெறுவதற்கு முன்னர் உரிமை கோருபவர் மறைந்து போயாக வேண்டும். அவர் அங்கு இல்லாதபோதுதான் ஞானம் அடைய இயலும்.

"நான் நினைக்கிறேன்" என்ற வாசகத்தைப் பயன்படுத்தியிருக் கிறீர்கள். இரண்டாவது வார்த்தை நினைக்கிறேன் என்று உள்ளது. ஞானம் அடையும் விஷயத்தில் நினைக்கிறேன் என்பது என்ன பலன் தரப்போகிறது? சிந்திப்பது ஞானத்திலிருந்து வெகுதொலைவில் உள்ளது. சிந்தனை என்ற செயல்பாடு உங்களை சுயசகதியில் அமிழ்த்தி வைக்கிறது. தொடர்ச்சியான சிந்தனை உங்கள் கண்களை கட்டி வைத்து விடுகிறது. அது உங்களைக் குருடாக்கி வைக்கிறது. பார்க்க அனுமதிப்ப தில்லை. ஏனென்றால் சிந்தனை அனைத்து விஷயங்களையும் திரித்து மாற்றிவிடுகிறது. சிந்தனை என்பது திரித்து மாற்றும் ஒரு இயக்கமாகும். ஆனால் நாம் அதற்குப் பழகிப் போய்விட்டோம்.

ஜனங்கள் என்னிடம் வந்து, "ஓஷோ! நான் காதல் வயப்பட்டு விட்டதாக நினைக்கிறேன்" என்று கூறுகிறார்கள். சிந்தனை அன்பின் ஒரு அங்கமாக இருந்தால் "நான் காதல் வயப்பட்டுவிட்டதாக நினைக் கிறேன்" என்று சொல்லமாட்டீர்கள். நான் காதலிப்பதாக நினைக் கிறேன்" என்றுதான் கூறுவார்கள். காதலும் ஒரு சிந்தனையாக அவர்

களுக்கு இருந்துவருகிறது. அப்புறம் எப்படி எண்ணமாக இயலும்? காதல் என்பது ஒரு உணர்வாகவே இருக்க இயலும்.

அதில் மூன்று அடுக்குகள் உள்ளன. முதல் அடுக்கு எண்ணம். இரண்டாவது, உணர்வு. மூன்றாவது உணர்ந்து அதுவாகவே மாறுவது. நீங்கள் உலகம் பற்றிச் சிந்திக்கலாம். நீங்கள் உலகப் பொருட்கள் பற்றிச் சிந்தனை செய்யலாம். ஆனால் காதல் பற்றி யோசிக்க முடியாது. அன்பு சிந்தனையைக் காட்டிலும் மேலானது. சிந்தனை மூலம் கைப்பற்று வதைவிடவும் மேலானது. அன்பை நீங்கள் உணர மட்டுமே முடியும். சிந்திக்க இயலாது.

உங்களால் ஞானமடைவது பற்றியும் உணர இயலாது. அது உணர்வுகளுக்கு அப்பாற்பட்டது. அன்பு சிந்தனைக்கு அப்பாற்பட்டு இருப்பதுபோல, ஞானம் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டதாக அமைந் திருக்கிறது. நீங்கள் ஞானமடைய மட்டுமே இயலும். அதை உணர இயலாது. அது அங்குதான் இருக்கிறது. எப்போதும் இருந்துவருகிறது.

"கிட்டத்தட்ட நான் ஞானமடைந்துவிட்டதாக எண்ணுகிறேன்" என்று நீங்கள் கூறுகிறீர்கள். கிட்டத்தட்ட என்பதன் அர்த்தம் என்ன? அது பற்றி இதற்கு முன்னர் கேள்விப்பட்டதில்லை. ஒருவர் ஞான மடைந்தாரா இல்லையா என்பது மட்டும்தான் கேள்வியாக இருந்து வருகிறது. கிட்டத்தட்ட என்பது எப்படி? ஏறக்குறைய ஒரு வட்டம் போன்றது என்று சொல்கிறார்களே, அது போன்றதா? வட்டம் என்பது கச்சிதமானதாக இருக்க வேண்டும். அப்படி இல்லாதுபோனால் அது வட்டமல்ல. அது வேறுவிதமான வடிவமாக இருக்கலாம். உங்களால் அது கிட்டத்தட்ட வட்டம் என்று கூறமுடியாது. "கிட்டத்தட்ட நான் நேசிக்கிறேன்" என்று உங்களால் கூறஇயலாது. **கிட்டத்தட்ட** என்ற வார்த்தை இல்லை என்ற பொருளையே தருகிறது.

**கடற்கரைப் பகுதியிலிருந்து வந்த ஒரு இளைஞன்**
**ஒரு பேயுடன் காதல் புரியத்துவங்கினான்**
**இன்பத்தின் உச்சகட்டத்தில்**
**அந்த பெண் உருவில் இருந்தவள்**
**"கிட்டத்தட்ட நான். அந்த உணர்ச்சியை எட்டிவிட்டதாக**
**எண்ணுகிறேன்" என்றாள்.**

நீங்கள் பேயுடன் காதல் லீலை நடத்தியபடி கனவு கண்டுகொண்டு இருந்திருக்கிறீர்கள். அதனால்தான் **கிட்டத்தட்ட** என்ற வார்த்தை வரு கிறது. அதுபோன்ற எல்லா மூடத்தனங்களையும் உதறி எறியுங்கள். அவ்வாறு உதறித் தள்ளிவிட்டால் நீங்கள் ஞானம் பெறவேண்டிய தில்லை. நீங்கள் ஞானமடைந்தவராகவே இருக்கிறீர்கள். யாரும்

ஞானம் பெற்றவராக மாறவேண்டியதில்லை. ஞானம் பெறுதல் என்பது உங்களிடம் நிகழக்கூடிய ஒரு சம்பவம் அல்ல. அது ஏற்கெனவே உங்களிடம் இருந்துவருகிறது. அது நடந்தேறிவிட்டது. அதுதான் உங்கள் நிஜ இயல்பு. உங்களைச் சுற்றி நீங்கள் சேகரித்து வைத்திருக்கும் குப்பைகளை எல்லாம் எறிந்துவிடுங்கள்.

**ஆறாவது கேள்வி**

**ஓஷோ,**

**வாழ்க்கை தன்னளவில் முழுமை பெற்ற ஒன்று என்று எனக்குத் தெரியும். ஆனால் நாம் எளிய பிறவிகள். முழுமை என்பது அறிவு நிறைந்தது என்றால், அதன் அங்கங்களில் அது இல்லை. நீங்கள் எப்போதும் நீங்களாகவே இருக்க வேண்டும் என்று கடவுள் விரும்புகிறார் என்று கூறு கிறீர்கள். அவ்வாறு இல்லாது போனால் உங்களைப் படைத்திருக்கவே மாட்டார் என்கிறீர்கள். ஆனால் ஒரு கடுமையான நோய் எனக்கு இளம் வயதில் ஏற்பட்டால், அந்த இயற்கைத் தவறு என்னைத் தொடர்ந்து துன்புறுத்துகிறது. அது யாருடைய துயரம்? அது கடவுளுடையது என்று கூறாதீர்கள். சம்பந்தப்பட்ட மனிதருக்கு அது சித்திரவதையாக அமைகிறது. அதன் பிறகு வாழ்வை எப்படி அனுபவிக்க முடியும்? நோய்க்குறிகளைக் கண்டறியும் உடற்கூறு வல்லுனராக உள்ள எனது பேராசிரியர், "இயற்கை ஒரு முட்டாள்! இல்லாதுபோனால் அது தனது ஒவ்வொரு அங்கத்தையும் மற்றொரு அங்கத்தின் துணையுடன் எதிர்த் திருக்காது. இயற்கை நம்மை துன்புறுத்துகிறது" என்கிறார். கடவுள் ஏன் துயரத்தை விரும்புகிறார்? இது ஏன் ஓஷோ?**

இந்த கேள்வி முக்கியத்துவம் நிறைந்த ஒன்று. ஆனால் நீங்கள் சாதாரண வாழ்க்கைத் தர்க்க நிலையில் இருந்து மேலே சற்று உயரத் தயாராக இருந்தால்மட்டுமே பதில் அளிப்பது சாத்தியப்படும். நீங்கள் உங்கள் கண்களை உயர் கணிதத்தின் பக்கம் திருப்பத் தயாராக இருக்க வேண்டும்.

தாழ்ந்த நிலை கணிதத்தில் சில விதிமுறைகள் உள்ளன. உயர் நிலைக் கணிதம் இதற்கு எதிரானது. இரண்டு வகையான விதிமுறைகள் இருப்பதாகப் பிதாகோரஸ் கூறுகிறார். தேவை மற்றும் பதவி என்பவை அந்த விதிமுறைகள். தாழ்ந்த கணித முறைகள் தேவை சார்ந்தவை. உயர் கணிதமுறைகள் அதிகாரம் பதவி சார்ந்தவை. இந்த இரண்டின் செயல்பாட்டு முறைகளும் முற்றிலும் வெவ்வேறானவை. ஆனால் அவை ஒரு பெரிய முழுமையின் அங்கங்களாக அமைந்திருக்கின்றன. அவை தொன்றுதொட்டு இருந்து வருபவை. அவற்றையே லாகோஸ், தாவோ, தர்மா என்றெல்லாம் அழைக்கிறோம்.

முதல் விஷயம். தாழ்ந்த நிலை கணிதத்தின் அங்கம் முழுமைக்கு நிகரானது அல்ல என்பது வெளிப்படை. ஒரு சிறிய பகுதி எப்படி முழுமைக்குச் சமமாக இருக்க முடியும்? ஆனால் உயர் கணிதமுறையில் அதன் அங்கம் முழுமைக்குச் சமமாக இருக்கிறது. உதாரணம் பார்க்கலாம். தாழ்ந்த நிலை கணிதம் பனித்துளி போன்றது. அது எப்படி கடலாக மாறமுடியும்? பனித்துளி மிகவும் சிறியது. கடலோ பரந்து விரிந்தது. ஆனால் வித்தியாசம் அளவில்தான் இருக்கிறது. தாழ்ந்த நிலை கணிதம் அளவைக் கவனிக்கிறது. உயர்நிலை கணிதம் தரத்தைப் பார்க்கிறது. பனித்துளியும் நிஜமாகவே ஒரு கடல்தான். எல்லா கடல்களும் அதில் அமைந்துள்ளன. ஒரு சிறிய பனித்துளியை உங்களால் புரிந்துகொள்ள முடியுமானால் பூமியில் உள்ள எல்லா கடல்களையும், வானத்திலுள்ள எல்லா நட்சத்திரங்களையும் பால்வெளி மண்டலங்களையும் புரிந்துகொள்ள இயலும். ஒற்றைப் பனித்துளி $H_2O$ என்ற நீரின் சூத்திரத்தை உங்களுக்கு உணர்த்த இயலும். அதுவே எல்லா கடல்களுக்கும் பொருந்திவரும் சூத்திரமாகும். ரகசியம் ஒரு சிறிய பனித்துளியில் மறைந்திருக்கிறது. பெரிய கடலைப்போல் அது உள்ளது. அளவு வித்தியாசமானது. ஆனால் தரம் வேறுபட்டதல்ல. பனியின் சிறிய துளியில் உள்ள தரம் கடலைப் போலவே பெரியதாகும். ஏனென்றால் அது கடலைப்போல் நிறைய உண்மைகளைக் கொண்டிருக்கிறது.

ஒரு சிறிய செடியின் பூ, வேர் போன்ற அங்கங்களை நம்மால் அறிந்துகொள்ள முடிந்தால், பிரபஞ்சம் முழுவதையும் நம்மால் அறிய முடியும் என்று டென்னிஸன் கூறுகிறார். அவர் கூற்று சரிதான். அவர் உயர்நிலை கணிதம் பற்றிப் பேசுகிறார்.

சில நாட்களுக்கு முன்னர் நான் சிறந்த மூன்று புத்தகங்கள் பற்றிக் கூறினேன். முதல் புத்தகம் அரிஸ்டாட்டிலின் Organum. இரண்டாவதாக, பேகன் எழுதிய Novum Organum. மூன்றாவதாக, பி.டி. அபென்ஸ்கி எழுதிய Tertium Organum. அபென்ஸ்கி Tertium Organum உயர்நிலை கணிதம் பற்றியது. அவர் ஒரு கணிதவியலாளராக இருந்தவர். இதுவரை தோன்றிய கணிதமேதைகளில் மிகச் சிறந்த ஒருவர். புத்தகத்தின் துவக்கத்தில் அவர், "எனது புத்தகம் Tertium Organum மூன்றாவது இடத்தில் உள்ளது. ஆனால் மூன்றாவது இடம் முதலிடத்தை தாண்டியதாகும்" என்றார். இப்போது அபென்ஸ்கி மற்றும் அரிஸ்டாட்டில் ஆகியோரின் இரண்டாயிரம் வருட காலகட்டத்தில் பெரிய மாறுதல் ஏற்பட்டுள்ளது. அபென்ஸ்கி "மூன்றாவது இடம் முதலிடத்தைத் தாண்டியதாகும்" என்கிறார். இது உயர்நிலை கணிதத்தின் துவக்கமாகும். இந்த அறிவிப்பில் இருந்து உயர்நிலை கணிதம் தோன்றுகிறது.

ஒருவர் ஏசுவைப் பார்த்து, "ஆபிரஹாம் பற்றி என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அவர், "ஆபிரஹாமை விடவும் நான் முந்தியவன்" என்றார்.

இது கொஞ்சம் வித்தியாசமாக இருக்கிறது. மேலோட்டமாகப் பார்த்தால் அசட்டுத்தனமாகவும் தோன்றுகிறது. எப்படி ஏசு ஆபிரஹாமுக்கு முந்தியவராக இயலும்? கிறிஸ்தவ உணர்வின் பிரதானப் பண்பு, அழிவற்ற நித்தியம் என்பதாகும். ஆபிரஹாமுக்கு முன்னர் ஏசு என்ற உடல் இருந்திருக்காது. ஆனால் ஏசு என்ற பிரதான உணர்வு நிச்சயம் அவருக்கு முன்பு இருந்திருக்கும். உயர்நிலை கணிதம் விஷயங்களைத் தலைகீழாகப் புரட்டிப் போடுகிறது. காரணம், விஷயங்கள் ஏற்கெனவே தாறுமாறாகத்தான் உள்ளன.

"வாழ்க்கை தன்னளவில் முழுமை பெற்றதாக இருப்பதை நான் அறிவேன்" என்று என்னிடம் நீங்கள் கூறுகிறீர்கள்.

நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியவில்லை. வாழ்க்கை தன்னளவில் முழுமை பெற்றதாக இருந்தால், ஒவ்வொரு அங்கமும் முழுமை பெற்றே திகழும். அவ்வாறு இல்லாவிட்டால் முழுமைநிலை எப்படி சாத்தியப்படும்? முழுமையின் அங்கங்களாக உள்ளவை எல்லாம் முழுமை பெறாது இருந்தால், அந்த அங்கங்களின் மொத்த மதிப்பு எப்படி முழுமைபெறும்? அது சாத்தியமற்றுப் போய் விடும். விழும் ஒவ்வொரு துளி நீரும் ஒரு சமுத்திரத்தை உருவாக்கி விடுகிறது என்றால், முழு சமுத்திரம் எப்படி முழுமை பெறும்? அது எளிமையானது. சமுத்திரம் முழுமையானது என்றால், தர்க்கப்படி ஒவ்வொரு துளியும் முழுமையானவைகளாகவே உள்ளன.

உபநிஷதங்கள் - அவை மீண்டும் உயர்நிலை கணிதம் பற்றிப் பேசுகின்றன. கடவுள் முழுமை பெற்றவர். அவரிடமுள்ள அனைத்தையும் நீங்கள் அகற்றிவிட்ட பிறகும் அங்கு முழுமைநிலை இருந்து கொண்டிருக்கும். முழுமையில் இருந்து சகலத்தையும் வெளியே எடுத்துவிடுங்கள். ஆனாலும் முழுமை கலைந்துபோகாமல் அப்படியே இருக்கும். முழுமை நிலையைக் கூட்டவோ, குறைக்கவோ உங்களால் முடியாது. அதிலிருந்து ஏதோ ஒன்றை எடுக்கிறீர்கள். அதிலிருந்துதான் எடுக்கிறீர்கள். நீங்கள் ஏதோ ஒன்றை அதில் சேர்த்தால், அதில்தான் சேர்க்கிறீர்கள்.

ஆனால் நீங்கள், "வாழ்க்கை தன்னளவில் முழுமை பெற்ற ஒன்று என்று எனக்குத் தெரியும். நாம் எளிய பிறவிகள். முழுமை என்பது அறிவு நிறைந்தது என்றால் அதன் அங்கங்களில் அது இல்லை" என்று கூறுகிறீர்கள். அங்கங்கள் அறிவுடன் இல்லை என்றால்,

முழுமை எப்படி அறிவுள்ளதாக அமைய இயலும்? எனவே உங்களுக்கு இரண்டு சாத்தியங்கள் மட்டுமே உள்ளன. ஒன்று, நீங்கள் முட்டாள் என்றால் அந்த வாழ்க்கையும் முட்டாள்தனமானது. ஏனென்றால், எல்லா முட்டாள் அங்கங்களும் ஒன்றுசேரும்போது அங்க முட்டாள்தனம் அதிகரிக்கவே செய்யும். வாழ்க்கை பைத்தியக் காரத்தனமானதாகிவிடும்.

வாழ்க்கை அறிவானது என்று நீங்கள் கூறினால், எல்லா அங்கங் களும் அறிவுடன் உள்ளன. அப்போதுதான் வாழ்க்கை அறிவுடன் நிகழ முடியும். மற்ற அங்கங்களைவிட வாழ்க்கை முழுமைபெற்றது என்றால், மற்ற அங்கங்களும் முழுமையை எட்ட வேண்டும். அப்போது தான் வாழ்க்கை முழுமை பெறும். இதை நீங்கள் புரிந்துகொள்ள முயன்றால் எல்லாம் தெளிவாகி விடும்.

எந்த அங்கமும் முழுமை நிலைக்கு குறைந்தது அல்ல. முழுமை யின் எல்லா அம்சங்களும் அவற்றிடம் உள்ளன. அளவில் சிறிது குறைவு இருக்கலாம். அது ஒரு பெரிய விஷயமல்ல. தரம்தான் கவனத்தில் கொள்ள வேண்டியதாகும். அளவிலும் நீங்கள் முழுமை யாகவே இருக்கிறீர்கள்.

எல்லா காலங்களிலும் இறைநேசர்கள் விடுத்த அறிக்கை இவ் விதம்தான் இருந்து வந்திருக்கிறது. நான் மீண்டும் அறிவிக்கிறேன். நீங்கள் முழுமை பெற்றவராகவே இருக்கிறீர்கள். நீங்கள் கடவுள் நிலைக்கு நிகரானவர்.

அடுத்து நீங்கள் சொல்லும் இரண்டாவது விஷயம். நீங்கள் நீங்க ளாகவே இருக்க வேண்டும் என்று வாழ்க்கை விரும்புகிறது. அவ்வாறு இல்லாமல் இருப்பதற்காக உங்களைப் படைக்கவில்லை" என்று கூறு கிறீர்கள்.

நீங்கள் சொன்னபடி வாழ்க்கை அறிவுள்ளதாக இருந்தால், நீங்கள் தேவையற்றவராக இருக்கும்போது உங்களை ஏன் படைக்க வேண்டும்? தேவையானதை மட்டும்தான் அறிவு படைக்கிறது. அறிவுடன் இருத்தல் என்பதன் அர்த்தமே அதுதான். காரணமின்றி நீங்கள் உருவாக்கப்பட்டிருந்தால், எவ்வித நோக்கமும் இல்லாமல் உருவாக்கப்பட்டிருந்தால், தேவையின்றி உருவாக்கப்பட்டிருந்தால் வாழ்க்கை அறிவுள்ளதாக இருக்கமுடியாது.

வாழ்க்கை முழுமையாக அறிவுபூர்வமானதுதான். வாழ்க்கை அறிவானது என்ற சொல்ல அவசியமே இல்லை. அறிவே வாழ்க்கை என்பதுதான் சரியான கூற்றாக இருக்கும். முழுமையான வாழ்க்கை அறிவு நிறைந்தது.

ஆனாலும் உங்கள் பிரச்சினையை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. நீங்கள், "எனக்கு ஒரு கடுமையான நோய் இளம்வயதில் ஏற்பட்டால், அந்த இயற்கைத் தவறு என்னைத் தொடர்ந்து துன்புறுத்து கிறது. அது யாருடைய துயரம்?" என்று கேட்கிறீர்கள்.

அந்த துயரம் உங்களுடைய கருத்தின் மூலம் ஏற்பட்டதாகும். அதனுடன் பெரிய அளவில் நீங்கள் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறார்கள். அது உங்கள் முடிவு. நீங்கள் அதை அடையாளப் படுத்துவதை நிறுத்துங்கள். துயரம் தானே மறைந்து போய்விடும். உங்கள் துயரம் ஒரு இரவுக் கனவு போன்றது. கனவில் உங்கள் மார்பு மீது பெரிய பாறை விழுவதுபோல் உணர்கிறீர்கள். அது உங்களை நசுக்கிக் கொல்கிறது. பயம் காரணமாக நீங்கள் விழித்தெழுகிறீர்கள். அப்படி எல்லாம் எதுவும் நடக்கவில்லை. உங்கள் கைகள்தான் மார்பின் மேல் இருக்கின்றன என்பதை அறிகிறீர்கள். அந்த கைகளின் கனத்தை கற்பனை அதிகரிக்கச் செய்துவிட்டது. அது பாறையாக மாறிவிட்டது. நீங்கள் மிகவும் பயப்படத் தொடங்கிவிட்டீர்கள். பயந்து தூக்கம் கலைந்து எழுந்த நீங்கள் இப்போது சிரிக்கிறீர்கள். புத்தர்களிடமும், விழிப்புணர்வு பெற்றவர்களிடம் கேட்டுப் பாருங்கள். உலகில் துயரம் என்பதே கிடையாது என்று அவர்கள் கூறுவார்கள். மனிதர்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்துகொண்டு சகலவிதமான துயரங்கள் பற்றியும் கனவு காண்கிறார்கள்.

உங்கள் சிரமத்தை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. உங்களுக்கு உடல் சார்ந்த பிரச்சினை இருந்தால், நீங்கள் குருடாக இருந்தால், இது ஒரு கனவு என்று எப்படி நம்புவீர்கள்? நீங்கள் கவனித்ததில்லையா? ஒவ்வொரு இரவும் கனவு காண்கிறீர்கள். ஒவ்வொரு நாளும் காலையில் அது கனவு என்று அறிகிறீர்கள். அவை எல்லாம் முட்டாள்தனம் என்று உணர்கிறீர்கள். மீண்டும் நீங்கள் கனவு காண்கிறீர்கள். அந்த கனவில் அதை வழக்கம்போல் உண்மை என்று நம்புகிறீர்கள். உங்கள் வாழ்வில் எத்தனை கனவு கண்டீர்கள்? அவை மில்லியன் கணக்கில் இருக்கும்! ஒவ்வொரு இரவும் குறுக்கீடு இல்லாமல் கனவு காண்கிறீர்கள். சில நிமிடங்களில் கனவு நின்றுபோகிறது. பிறகு அந்த கனவு வட்டம் ஆரம்பமாகிறது.

நீங்கள் பல லட்சம் கனவுகள் காண்கிறீர்கள். ஒவ்வொரு நாள் காலையிலும் நீங்கள் சிரிக்கிறீர்கள். அது நிஜமல்ல என்று கூறுகிறீர்கள். ஆனாலும் அதிலிருந்து பெரிய பாடம் கற்றுக் கொள்வதில்லை. இன்று இரவிலும் நீங்கள் கனவிலும் அந்த தவறு தலைதூக்கும். அதை உண்மை யென்று நம்புவீர்கள். கனவில் நடப்பது உண்மைபோல் தோன்றுகிறது. கனவு காணும்போதே அது கனவு என்ற உணர்வு என்று ஏற்படுகிறதோ

அன்று உடனே கனவு மறைந்துவிடும். காரணம் நீங்கள் வாழ்வில் விழிப்புணர்வு பெற்றுவிட்டீர்கள்.

உங்களுடைய துயரங்கள் எல்லாம் நீங்கள் ஏற்படுத்திக்கொண்ட கனவு போன்றவை என்று நம்புவது மிகவும் சிரமமாகத் தோன்றுகிறது. ஆனால் உண்மை அதுதான். விழிப்புணர்வு பெற்ற எந்த ஒருவரும் அவ்வாறுதான் கூறுவார். வேறுவிதமாக விழிப்புணர்வு பெற்ற மனிதரால் கூற முடியாது. விழிப்புணர்வுடன் மனம் தெளிவாக உள்ள தருணங்களில் உங்களுக்கும் அதே உணர்வுதான் ஏற்படும்.

உங்களுக்கு நான் கூறும் அபிப்பிராயம் இதுதான். அறிவுசார்ந்த விவாதங்களால் மட்டும் உங்கள் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டுவிட இயலாது. உங்கள் பிரச்சினை கரைந்து மறையவேண்டும். தீர்வு காணப் படக்கூடாது. கூடுதல் விழிப்புணர்வு பெறுவதன் மூலம் உங்கள் பிரச்சினை கரைந்து போக வேண்டும்.

வயதான எனது நண்பர்களில் ஒருவர் மாடிப் படியிலிருந்து தவறிவிழுந்து தனது இரண்டு கால்களையும் முறித்துக்கொண்டார். நான் அவரைப் பார்க்கச் சென்றேன். அவர் மிகுந்த வேதனையுடன் இருந்தார். வயதானவராக அவர் இருந்தாலும் சுறுசுறுப்பாக நடமாடியவர். வயது எழுபத்தைந்து என்றாலும் இளைஞர்போல் ஓடியாடித் திரிந்தவர். எனவே படுக்கையில் கிடப்பது அவருக்கு முடியாத செயலாக இருந்தது. குறைந்தபட்சம் மூன்று மாதம் படுக்கையில் இருக்க வேண்டும் என்று மருத்துவர்கள் கூறிவிட்டனர். இரண்டு கால்கள் முறிந்ததைவிடவும் அவருக்கு இது துன்பமானதாக மாறி விட்டது. என்னைப் பார்த்ததும் அவர் அழத்தொடங்கினார். இதுவரை அவர் அழுது நான் பார்த்ததில்லை. அவர் வஜ்ரம் போன்ற திடகார்த்திர மான மனிதர். வாழ்வில் பலவற்றைக் கண்டவர். "ஏன் அழுகிறீர்கள்? என்ன ஆயிற்று?" என்று கேட்டேன்.

அவர் என்னைப் பார்த்து, "நான் இறந்து போகவேண்டும் என்று ஆசீர்வாதம் செய்யுங்கள். இனிநான் உயிர்வாழ விரும்பவில்லை. மூன்று மாதம் படுக்கையில் கிடக்க வேண்டுமாம். அதை உங்களால் கற்பனை செய்து பார்க்க முடிகிறதா? அது ஒரு சித்திரவதை. மூன்று நாட்கள் கழிந்து இருக்கின்றன. மூன்று வருடம் படுக்கையில் கிடந்த உணர்வு எனக்கு ஏற்படுகிறது. என்னைப் பற்றி உங்களுக்குத் தெரியும். என்னால் ஓய்ந்து கிடக்க முடியாது. நான் சீக்கிரம் இறந்துவிட வேண்டும் என்று ஆசீர்வதியுங்கள். இனி வாழவிரும்பவில்லை. இந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு எனது வாழ்நாள் முழுவதும் நான் முடமாகவே இருக்கவேண்டியிருக்கும் என்று மருத்துவர்கள் கூறு வார்கள். அப்புறம் என்ன இருக்கிறது?" என்றார்.

நான் அவரிடம், "தயவுசெய்து தியானம் செய்யுங்கள். நான் உங்கள் அருகில் உட்கார்ந்து கொள்கிறேன். ஒரு எளிய தியானம் செய் யுங்கள். நீங்கள் வெறும் உடலால் மட்டும் உருவானவர் அல்ல."

அவருக்கு சந்தேகம் ஏற்பட்டது. "அதனால் எனக்கு என்ன பயன்? நீங்கள் தியானம் பற்றிச் சொன்னதை எல்லாம் நான் கேட்டிருக் கிறேன். என்னால் அமைதியாக இருக்கமுடியாது. அதனால் என்னால் தியானம் செய்ய முடியாது."

நான் அவரிடம், "அமைதியாக இருப்பது பற்றிப் பேச்சே இல்லை. நீங்கள் ஏற்கெனவே படுக்கையில் இருக்கிறீர்கள். அது ஒரு ஆசீர்வாதம். வெறுமனே கண்களை மூடிக்கொள்ளுங்கள். நான் உங்க ளுக்கு ஒரு தியானம் சொல்லித் தருகிறேன். நீங்கள் இறந்துபோக நான் ஆசீர்வதிக்கிறேன். நீங்கள் இறந்துபோக விரும்பினால் அது நிச்சயம் நல்லது. எனது ஆசீர்வாதம் வேலை செய்யலாம், செய்யாமல் போக லாம். நீங்கள் தியானம் செய்யுங்கள்."

எனது கருத்தை அவர் புரிந்துகொண்டார். செய்வதற்கு வேறு எதுவுமில்லை. எனவே ஏன் தியானம் செய்யக்கூடாது? அவருக்கு ஒரு எளிய தியானம் சொல்லிக் கொடுத்தேன். "மெதுவாக உள்ளே செல் லுங்கள். உள்ளே இருந்தபடி உடலைப் பாருங்கள். "இது நான் அல்ல. உடல் தொலைவில் இருக்கிறது. தூரம் அதிகமாகி, அதிகமாகிக் கொண்டே போகிறது. நான் குன்றின் மீதிருந்து பார்க்கிறேன். உடல் கீழே இருட்டுப் பள்ளத்தாக்கில் இருக்கிறது. தொலைவு மிகவும் அதிகமாக இருக்கிறது என்று கூறுங்கள்" என்றேன்.

அரைமணி நேரம் கடந்துவிட்டது. நான் புறப்பட்டாக வேண்டும். அவர் ஆழ்ந்த தியானத்தில் இருந்தார். நான் இடையூறு செய்ய விரும்ப வில்லை. அதே சமயம் அங்கிருந்து செல்லவும் விரும்பவில்லை. என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று அறிய நான் எண்ணினேன். அவர் என்ன சொல்லப் போகிறார்? நான் அவரை உசுப்பினேன். "எனக்கு இடையூறு செய்யாதீர்கள்" என்றார் அவர்.

நான் அவரிடம், "நான் கிளம்ப வேண்டுமே?" என்றேன்.

அவர், "நீங்கள் போங்கள். ஆனால் எனக்கு இடைஞ்சல் செய்யா தீர்கள். இது அழகாக இருக்கிறது. உடல் நிஜமாகவே வெகுதூரத்தில் இருக்கிறது. பல மைல்களுக்கு அப்பால் இருக்கிறது. நான் உடலைப் பள்ளத்தாக்கில் வைத்துவிட்டுக் குன்றில் உச்சியில் உட்கார்ந்திருக் கிறேன். சூரியஒளி பிரகாசிக்கும் குன்று அது. அது வெகு அழகாக இருக்கிறது. எனக்கு இப்போது எந்த வலியும் தெரியவில்லை" என்றார்.

அந்த மூன்று மாதங்கள் அவருக்கு மிகவும் மதிப்புமிக்க கால மாகத் தோன்றியது. அந்த மூன்று மாதங்கள் அவரை முற்றிலும் புதிய மனிதராக மாற்றிவிட்டது. அவர் இப்போதும் ஊனத்துடன்தான் இருக் கிறார். அவரால் நடக்க முடியாது. பெரும்பாலான நேரம் படுக்கையில் இருக்கிறார். ஆனால் அவரைப் போல ஆசீர்வதிக்கப்பட்ட ஒருவரை உங்களால் காணமுடியாது. ஆனந்த அலைகளைப் பரவவிடுகிறார்.

இப்போது அவர் ஊனம் ஒரு துயரமல்ல, அது ஒரு ஆசீர்வாதம் என்கிறார்.

**து**யரத்தை ஆசீர்வாதமாக மாற்றிக்கொள்ள இயலும். உங்கள் ஆசீர்வாதத்தை நீங்கள் துயரமாக மாற்றிக் கொண்டுவிட்டீர்களோ என்னவோ? யாருக்குத் தெரியும்?

"ஒரு கடுமையான நோய் எனக்கு இளம் வயதில் ஏற்பட்டால், அந்த இயற்கைத் தவறு என்னைத் தொடர்ந்து துன்புறுத்துகிறது. அது யாருடைய துயரம்? அது கடவுளுடையது என்று கூறாதீர்கள்" என்கிறீர்கள்.

நான் ஒருபோதும் அப்படிச் சொல்லமாட்டேன். எனக்கு அதை நினைவூட்ட வேண்டியதில்லை. கடவுள் எப்படி துயரப்படுவார்? கடவுள் ஆசீர்வாதங்கள் தவிர வேறு எதையும் தன்னிடம் கொண்டிரா தவர். பேரானந்தம், இன்பநிலை போன்றவற்றைக் கொண்டிருப்பவர். கடவுள் துயரப்படமாட்டார். கடவுள் **சத்சித்தானந்த** வடிவம் கொண்டவர். உண்மை, விழிப்புணர்வு, பேரானந்தம் போன்றவற்றைக் கொண்டவர்.

நீங்கள் துயரப்படுகிறீர்கள் என்றும் நான் கூறமாட்டேன். ஏனெனில் நீங்கள் வாழ்வின் ஒரு அங்கம். அது முழுமைக்கு நிகரானது. ஒரு அங்கம் துயரப்பட்டால், முழுமையும் துயரப்படுகிறது என்று பொருள். அப்போது யார் துயரப்படுகிறார்கள்? யாரும் துயரம் கொள்வ தில்லை. நீங்கள் கனவு கண்டுகொண்டிருக்கிறீர்கள். தவறான முறை யில் நீங்கள் அர்த்தப்படுத்திக் கொள்கிறீர்கள். அது இயற்கையின் தவறு அல்ல. உங்கள் புரிந்துகொள்ளலின் தவறாகும்.

துன்பத்தில் இருக்கும் ஒருவர் சரியாகப் புரிந்துகொள்வது மிகவும் சிரமம் என்று எனக்குத் தெரியும். ஆனால் என்னால் என்ன முடியும்? அதுதான் உண்மை. அந்த உண்மையை நான் சொல்லியாக வேண்டும். அது துன்புறுத்துவதாக இருந்தாலும் சொல்லியாக வேண்டும். உள்ளதை உள்ளபடி நான் சொல்லியாக வேண்டும்.

நோய்க்குறிகளைக் கண்டறியும் உடற்கூறு வல்லுனராக உள்ள எனது பேராசிரியர் "இயற்கை ஒரு முட்டாள்! இல்லாதுபோனால் அது

தனது ஒவ்வொரு அங்கத்தையும் மற்றொரு அங்கத்தின் துணையுடன் எதிர்த்திருக்காது" என்று கூறுவதாகச் சொல்கிறீர்கள்.

"இயற்கை ஒரு முட்டாள்" என்கிறீர்கள்.

இயற்கை ஒரு முட்டாளாக இருந்தால் நீங்கள் எப்படி அறிவாளி யாக இருந்திட இயலும்? நீங்கள் இயற்கையின் ஒரு அங்கம். இயற்கை ஒரு முட்டாள் அல்ல. இயற்கை முற்றிலும் அறிவுபூர்வமானது. அதனால்தான் மனிதன் மிகவும் அகந்தை கொண்டவனாக மாறுகிறான். பெருமை பேசுகிறான்.

இவ்விதமான மனிதர்களால் முழு இயற்கையும் கெடுக்கப்படு கிறது. சூழல் மாசுபடுகிறது. பேராசிரியர் போன்றவர்களால்தான் இது நடக்கிறது. அப்படிப்பட்ட மனிதர்களைத் தவிர்த்துவிடுங்கள். தொழு நோயாளிகளைப் போல அவர்களை நீங்கள் தவிர்த்துவிடுங்கள். தொழு நோயாளிகளைத் தவிர்க்க வேண்டாம். ஆனால் பேராசிரியர்களைத் தவிர்த்து விடுங்கள்.

இயற்கை ஒரு முட்டாள் என்பது எப்படிப்பட்ட அர்த்தமற்ற அறிக்கை என்பதை அறிந்து கொள்ளுங்கள். நீங்கள் யார்? எங்கிருந்து வந்தீர்கள் என்று யோசித்துப் பாருங்கள். "கடல் ஒரு முட்டாள்" என்று அலை சொல்கிறது. அதிலுள்ள முட்டாள்தனத்தை உங்களால் காண முடியும்.

"இயற்கை ஒரு முட்டாள். இல்லாதுபோனால் அது தனது ஒவ்வொரு அங்கத்தையும் மற்றொரு அங்கத்தின் துணையுடன் எதிர்த் திருக்காது" என்கிறார் பேராசிரியர்.

ஒரு பகுதிக்கு எதிராக மற்றொன்றை இயங்க வைப்பது எவ்வளவு அறிவான செயல்! அறிவு என்பது இடம் பொருள் சார்ந்த ஒரு செயல். அவ்வாறு இல்லாது போனால் எதுவும் உயிருடன் பிழைத்திருக்க இயலாது. மரணம் இல்லை என்றால், பிறப்பும் இல்லை. மரணம் பிறப்பை எதிர்க்க வேண்டும். ஆனால் இந்த எதிர்ப்பு மேலோட்ட மானது. அடியாழத்தில் அவை ஒன்றையொன்று சார்ந்து ஒற்றை விதி யாக, அடிப்படை விதியாக, லாகோஸாக இருக்கிறது.

ஒளி இருளுக்கு எதிரானதாக இருக்க வேண்டியுள்ளது. இல்லா விட்டால் ஒளி இல்லை. அன்பு வெறுப்பை எதிர்க்க வேண்டும். இல்லாவிட்டால் அன்பும் இருக்க இயலாது. ஆண் பெண்ணை எதிர்க்க வேண்டும். இதுபோலவே ஒவ்வொன்றும் அமைந்துள்ளன.

எதிர் துருவமும், நேர் துருவமும் இல்லாவிட்டால் எப்படி மின்சாரம் ஏற்பட முடியும் என்று உங்கள் பேராசிரியரிடம் கேளுங்கள்.

நேர், எதிர் துருவங்கள் இல்லாமல் அவரால் மின்சாரத்தை உருவாக்க முடியுமா?" ஆனால் இயற்கை ஒரு முட்டாள் என்று அவர் நினைக்கிறார்.

இரண்டு கரைகள் இல்லாமல் நதி உயிரோட்டத்துடன் இருந்திட இயலுமா? எதிர்நிலை ஒன்றுதான் வழி. இரண்டு எதிர்கரைகள் இல்லாமல் நதி கிடையாது. அந்த இரண்டு கரைகள் உருவாக்கும் இடைவெளியில்தான் நதி பாய்கிறது.

வாழ்வுக்கும் எதிர்நிலைகள் தேவை. கோடை - குளிர் காலம்; பிறப்பு - இறப்பு; ஆக்கம் - அழிவு; சிவம் - சக்தி; நேர் துருவம் - எதிர் துருவம் என்று தேவைப்படுகின்றன.

உங்கள் பேராசிரியர் கொஞ்சம் கிறுக்குப் பிடித்தவர் போலும். பொதுவாகப் பேராசிரியர்களே அப்படித்தான். எதிர்நிலை இடம் பொருள், சாராத ஒன்றை ஏற்படுத்த உங்கள் பேராசிரியரால் முடியுமா என்று கேளுங்கள். இயற்கை இடம், பொருள் சார்ந்து இருக்கிறது. விஷயம் எப்படி இருக்க வேண்டும் என்று இயற்கைக்குத் தெரியும். அதைத் தவிர, வேறு எவ்விதமாகவும் இயற்கையால் இருந்திட இயலாது.

எதிர்நிலை, இடம், பொருள் சார்ந்து எங்கும் இருப்பதைப் புரிந்துகொள்ள முயலுங்கள். நோயும் ஆரோக்கியமும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன. அழகும் அவலட்சணமும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. வெற்றி - தோல்வி, வேதனை - மகிழ்ச்சி, துயரம் - ஆனந்தம் போன்ற இவை எல்லாம் இயற்கையின் அங்கங்கள். ஒருமுறை நீங்கள் இதைப் புரிந்துகொண்டு விட்டால் தெளிவு ஏற்பட்டுவிடும்.

தேவை மற்றும் பதவி என்று இரண்டு வகை விதிமுறைகள் உள்ளன என்கிறார் பிதாகோரஸ். தேவை சார்ந்த விதிமுறை உங்களைக் கீழ்நோக்கி இழுக்கிறது. இயந்திரத்தனமாக மாற்றுகிறது. பதவி சார்ந்த விதிமுறை உங்களை சுதந்திர உலகம் நோக்கி உயர்த்துகிறது. நான் இந்த இரண்டு விதிமுறைகளையும் புவியீர்ப்பு மற்றும் அருள் சார்ந்த விதிமுறைகள் என்று அழைக்கிறேன். ஒன்று கீழே இழுக்கிறது. ஒன்று மேலே உயர்த்துகிறது.

"எதிர்நிலைகள் ஏன் ஏற்படுகின்றன?" என்று தர்க்கரீதியான மனம் கேட்கிறது. தர்க்கரீதியான மனம் நிஜமாகவே புரிதல் உள்ள மனமல்ல. தர்க்கம் என்பது நிஜமான வாழ்க்கைச் செயல்முறை அல்ல. தர்க்கம் என்பது குறுகலானது. இடம் பொருள் சார்ந்த அமைப்பு அவ்வாறானது அல்ல. அது கோட்பாடு, கணிதம், தொகுப்பு போன்றவை சேர்ந்தது. அந்த தொகுப்பு மீண்டும் ஒரு கோட்பாடாக மாறுகிறது.

கணிதம், தொகுப்பு, கோட்பாடு என்று அது தொடர்ந்து கொண்டே செல்கிறது. உயர்நிலை நோக்கி அது செல்கிறது. தர்க்கம் மாறுதலே இல்லாதது. வாழ்க்கை தர்க்கம் போன்றதாக இருந்தால், உங்கள் நோய்க் கூறு கண்டறியும் பேராசிரியர் சொல்வதுபோல் அமைந்திருந்தால், அது ஆணை மட்டுமே உருவாக்கியிருக்கும். பெண்ணை உருவாக்கி யிருக்காது. அல்லது பெண்ணை மட்டும் உருவாக்கி இருக்கும். அதன் அர்த்தம் என்ன? ஆணை உலகில் உருவாக்கி ஏன் சிரமத்தை எதற்கு ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்று தர்க்கம் யோசித்திருக்கும். இது உங்கள் பேராசிரியரைப் பொறுத்தவரை ஓரினக் கலவி (Homo sexuality) போன்ற ஒன்றாகும். இது ஓரினக் கலவி போன்றதல்ல. உலகமே ஓரினக் கலவி சார்ந்தது என்ற எண்ணத்துடன் எழுந்ததாகும். இது உண்மையில் அசிங்கமானது. எப்போதாவது ஓரினக் கலவியாள ரைச் சந்திப்பது தவறல்ல. அது ஒருவித மகிழ்வுதான். ஆனால் இந்த முழு உலகமும் ஓரினக் கலவி சார்ந்திருப்பதும், ஆண்கள் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு, "டார்லிங்" என்று கூப்பிடுவதும், மோசமான நோய்க்குறிகளை விடவும் கெடுதலானது.

இது ஒரு அழகான உலகம். எதிர் துருவங்களின் எதிர்ப்பு மூலம் அது வாழ்கிறது. அந்த துருவங்கள் ஒன்றுக்கொன்று துணை நிற் கின்றன. அது வாழ்வைச் செழுமைப்படுத்துகிறது. அது வாழ்வுக்கு ஒரு இறுக்கம் தருகிறது. இல்லாதுபோனால் வாழ்க்கை தளர்ந்து சலிப் பூட்டுவதாக அமைந்துவிடும். மகிழ்ச்சி இருக்காது. இறுக்கத்தில் இருந்துதான் மகிழ்வு பிறக்கிறது.

இறுக்கம் எங்கு உள்ளதோ அங்கு மகிழ்ச்சி ஏற்படவும் சாத்தியம் உள்ளது. இறுக்கம் தளரும்போது ஆனந்தம் வருகிறது. நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறீர்கள். அது சந்தோஷம் அளிக்கிறது. ஆனால் அவளை நீங்கள் இருபத்து நான்கு மணிநேரமும் காதலித்துக்கொண்டு, "சர்க்கரையே, சர்க்கரையே, சர்க்கரையே!" என்று கூறிக்கொண்டிருந் தால் உங்களுக்குச் சர்க்கரை வியாதி வந்துவிடும். ஒரு சிறிய சண்டை, தலையணையால் வீசி அடித்தல் போன்றவை மிகவும் அவசியம். அது மீண்டும் காதலிக்க இடம் ஏற்படுத்திக் கொடுக்கிறது.

உங்கள் அன்புக்குரிய பெண்ணிடம் நீங்கள் சண்டையிட்டால் அது சிறிய மணவிலக்காகும். நீங்கள் பிரிந்து போகிறீர்கள். ஒருகணம் நீங்கள், "எல்லாம் முடிந்துவிட்டது. அவளுடன் இனி எந்த உறவும் வேண்டாம். பட்டதே போதும்" என்று எண்ணுகிறீர்கள். அவளும் அவ்வாறே சொல்கிறாள். நீங்கள் அவளிடம் காதல் வயப்படுவதற்கு முன்பு இருந்ததைவிடவும் தூரமாக விலகிச் செல்கிறீர்கள். தூரமாக விலகும் சமயத்தில் மீண்டும் காதல் எழுகிறது. அந்த பெண்ணைத்

தவறவிட்டுக்கொண்டிருப்பதாய் காதல் நினைத்திருக்கிறது. அந்த பெண்ணும் உங்களை தவறவிட்டுவிட்டதாக நினைக்கிறாள். நீங்கள் அந்த பெண்ணை நெருங்கிச் செல்கிறீர்கள். நீங்கள் நெருங்கிச் செல்லும்போது ஒரு சிறிய தேக்கநிலை மீண்டும் ஏற்படுகிறது. இப்படித்தான் அது நடந்துகொண்டிருக்கிறது. காலையில் நீங்கள் சண்டையிடுகிறீர்கள். மாலையில் நீங்கள் ஒன்று சேர்கிறீர்கள். இரவில் நீங்கள் சண்டை போடுகிறீர்கள். காலையில் மீண்டும் ஒன்றிணைகிறீர்கள். இது ஒரு சுருதியைப் போன்றது. இதுவே இடம், காலம் சார்ந்த செயலாகும்.

இரண்டு காதலர்கள் தங்கள் கைகளை எப்போதும் பற்றிக்கொண்டே இருப்பதாகக் கற்பனை செய்து பாருங்கள். ஒரு போதும் சண்டை போடுவதே இல்லை என்றால் அது சலிப்பூட்டிவிடும். அவர்களால் தூரமாக விலகிச் செல்ல இயலாது. ஒன்று சேருவதில் ஏற்படும் ஆனந்தத்தை அடைய முடியாது. ஒருவரை ஒருவர் விலகிச் செல்வதைச் சார்ந்தே நெருங்கி வரும் ஆனந்தம் உருவாகிறது. சில தருணங்களில் ஒவ்வொருவரும் தனித்திருக்க எண்ணுகிறார்கள். அப்போது அன்புக்குரியவரைத் தவறவிட்டுவிட்ட எண்ணம் உருவாகிறது. அதனால் தேடல் துவங்குகிறது. நீங்கள் ஒன்றாக இருக்கும்போது ஒருவர் மீது ஒருவர் சலிப்புக் கொள்கிறீர்கள். தனிமை என்ற விலகல் ஏற்படுவதற்கான தேடலில் இறங்குகிறீர்கள். வாழ்க்கை என்ற கடிகார ஊசல் இப்படித்தான் அசைகிறது. இடதும், வலதுமாக மாறி மாறி அசைகிறது. வலதும் இடதுமாக அசைகிறது. அதனால்தான் வாழ்க்கை முன்னோக்கிச் செல்கிறது.

வாழ்க்கை எப்படி இருக்க வேண்டுமோ அந்த அளவு முழுமை பெற்றுத்தான் இருக்கிறது.

## ஏழாவது கேள்வி

**ஓஷோ,**

**ஆசிரமத்தில் உள்ள விதிமுறைகள் மற்றும் கட்டுப்பாடுகளின் கருத்து அல்லது நோக்கம் என்ன ?**

பார்வையாளராக இருந்து நீங்கள் அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் பல உள்ளன. அத்துடன் பங்குகொள்பவராக இருந்தால் மட்டுமே தெரிந்துகொள்ளக் கூடியவையும் இருக்கின்றன. வெளியில் இருந்து தவறாகப் புரிந்துகொள்ளக் கூடிய விஷயங்களும் இருக்கின்றன. உள்ளே இருந்தால் மட்டுமே புரிந்துகொள்ளக் கூடியவையும் இருக்கின்றன. அந்த விதிமுறைகளும், சட்டதிட்டங்களும் தங்களுக்கென சுயமான அர்த்தங்கள் கொண்டிருக்கின்றன. அவை கருவிகள். நீங்கள்

நிஜமாகவே ஏன் என்று தெரிந்துகொள்ள விரும்பினால், அதன் நோக்கம் என்ன என்று அறிய ஆசைப்பட்டால் துள்ளியெழுங்கள் - அந்த அமைப்பில் ஒரு அங்கமாகச் சேருங்கள்.

சரியான தருணம் வரும்போது அதன் நோக்கம் என்ன என்று நீங்கள் அறிந்து கொள்வீர்கள். முன்பே அதைச் சொல்லிவிட முடியாது. வாழ்க்கை அனுபவங்கள் மட்டுமே விழிப்புணர்வை ஏற்படுத்தும். இது ஒரு சூட்சுமமான பள்ளி. பிதாகோரஸின் பள்ளி. இங்கே நடப்பவை எல்லாம் தெளிவாகத் தீர்மானிக்கப்பட்டவை. தற்செயலாக எதுவும் நடக்கவில்லை. இங்கு நான் அனைத்திற்கும் மையமாக இருக்கிறேன். ஏதாவது ஒன்று அபத்தமாக இருந்தால் பொறுமையுடன் காத்திருங்கள். ஒருநாள் அதன் கருத்தை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். உங்கள் சுய அனுபவத்தின் ஒரு அங்கமாக மாறும்போதுதான் அதை நீங்கள் அறிந்துகொள்ள முடியும்.

நான் ஒரு கதை சொல்கிறேன்.

நியூயார்க் நகரில் ஆண்கள் அணியும் ஆடைகள் விற்பனை செய்து கார்ஃபீல்டு கோல்டுவாட்டர் நிறையப் பணம் சம்பாதித்தார். அறப்பணிகளுக்கு நிறைய நன்கொடை தந்தார். ஆடம்பர விருந்துகளில் கலந்துகொண்டார். குறைந்தது இருமுறையாவது பத்திரிகைகளில் அவர் பெயர் அடிபட்டது. ஆனாலும் அவர் மகிழ்ச்சியுடன் இல்லை. உற்சாகமற்றுச் சோர்ந்து காணப்பட்டார். மனநலமருத்துவரைப் பார்க்கும்படி அவரது நண்பரக்ளில் ஒருவர் ஆலோசனை சொன்னார்.

அவரைப் பரிசோதித்த மனநல மருத்துவர், "இங்கே பாருங்கள் மிஸ்டர், கோல்டுவாட்டர்! வேண்டிய அளவு நீங்கள் பணம் சம்பாதித்து விட்டீர்கள். ஆனாலும் உங்கள் வெற்றி அர்த்தமற்றது. மனமகிழ்வு அடைய நீங்கள் எதுவும் செய்யவில்லை. சிறுவயதில் உங்களுக்கு ஏதாவது விருப்பம் இருந்ததுண்டா? அதன் மீது ஆர்வம் கொண்டிருந்தீர்களா?" என்று கேட்டார்.

அதற்கு கோல்டுவாட்டர் சற்று தயக்கத்துடன் நான் சிறுவனாக இருந்தபோது காட்டு வீரன் டார்ஜான் போல வனங்களில் சாகஸப் பயணம் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டதுண்டு" என்றார்.

"அப்படிச் செய்ய நீங்கள் விரும்பியிருந்தால் இப்போது அதைச் செய்து பாருங்கள். மனித வாழ்நாள் மிகவும் குறைவானது. புதைகுழிகள் ஆழமானவை. செய்துபார்க்க ஆசைப்பட்டதை இப்போதே செய்துவிடுங்கள்" என்று மனநல மருத்துவர் கூறினார்.

அவரது ஆலோசனையைச் செயல்படுத்திப் பார்க்க முடிவு செய்தார் கார்ஃபீல்டு. இரண்டு நாட்களுக்கும் பிறகு விமானத்தில் ஆப்பிரிக்கா சென்று இறங்கினார். அங்கு இருந்த உலகப் புகழ்பெற்ற கொரில்லா சஃபாரி வேட்டைக்காரரைச் சந்தித்தார்.

அந்த வேட்டைக்காரர் தனது தொழிலில் இருந்து ஓய்வு பெற்று விட்டதாகக் கூறினார். ஆயினும் கார்ஃபீல்டு அவரை விடுவதாக இல்லை. "வேட்டைக்காரரே! தயவுசெய்து எனக்காக இந்த ஒரு தடவை வேட்டைக்கு வாருங்கள். நீங்கள் என்ன கேட்டாலும் தருகிறேன். பணம் ஒரு பெரிய விஷயமே அல்ல" என்றார்.

வேட்டையாடி சற்று இறங்கிவந்தார். "உங்களைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். உங்கள் நிறுவனம் தயாரித்து விற்பனை செய்யும் சூட்களைத்தான் நான் எப்போதும் அணிகிறேன்" என்று சொன்ன அவர் சற்று யோசித்துவிட்டுத் தொடர்ந்தார். "பணம் ஒரு பெரிய விஷயமே அல்ல என்று சொன்னீர்கள் அல்லவா?"

"நிச்சயமாக" என்று உறுதி கூறினால் கார்ஃபீல்டு.

"நல்லது. ஒரு ஒப்பந்தம் செய்து கொள்வோம். அத்துடன் கூடுதலாக ஒரு ஜுலு இனத்து ஆப்பிரிக்க மனிதன், ஒரு நாய்க்குட்டி, துப்பாக்கி ஏந்திய பிக்மி என்ற ஒரு குள்ள மனிதன் போன்ற வசதிகளும் தேவை. அதற்குக் கூடுதலாக உங்களுக்குப் பத்தாயிரம் டாலர்கள் செலவாகும்" என்றார் வேட்டையாடி.

ஆச்சரியத்துடன் கார்ஃபீல்டு விசிலடித்தார் "பத்தாயிரம் டாலர்கள்! இதற்குப் பத்தாயிரம் மிக அதிகம்!

"நீங்களே ஏற்பாடு செய்து கொள்ள முடியாது என்றால்தான் செலவு ஏற்படும்" என்று வேட்டையாடி நினைவூட்டினார். வேறுவழியின்றி கார்ஃபீல்டு சம்மதித்தார்.

குழு ஒருங்கிணைக்கப்பட்டது. மறுநாள் பிற்பகலில் குழு தங்கள் முதல் பயணத்தைத் துவங்கியது. ஒரு மணி நேரத்தில் வேட்டைக்காரர் மரத்தின் மீது இருந்த கொரில்லா ஒன்றைக் கண்டறிந்தார். எல்லோரும் தயாரானார்கள். ஜுலு இனத்து ஆள் வேகமாக மரத்தில் ஏறினான். கொரில்லா தனது பிடியை இழந்து தரையில் விழும்வரை அவன் மரக்கிளையை பலமாக உலுக்கினான். கொரில்லா குரங்கு கீழே விழுந்ததும் நாய் பாய்ந்து சென்று குரங்கின் விதைகளைக் கௌவிப் பிடித்துக் கொண்டது. கொரில்லா மயங்கிவிழுந்துவிட்டது. வலையை வீசிக் குரங்கைப் பிடித்தார்கள். முதல் கொரில்லா கார்ஃபீல்டின் வசமாயிற்று.

அவர் சந்தோஷப்பட்டுப் போனார். ஆனால் இரவில் தனது கூடாரத்தில் இருந்தபோது கார்ஃபீல்டு கோல்டு வாட்டர் வேட்டை யாடல் கட்டணம் பற்றி மீண்டும் யோசித்தார். வேட்டையாடியின் கூடாரத்திற்குச் சென்று அவரை எழுப்பினார். "இந்த நேரத்தில் உங்களை எழுப்பச் சிரமமாகத்தான் இருக்கிறது. முதல் விஷயம், காரியத்தைக் கச்சிதமாக முடித்துவிட்டீர்கள். இரண்டாவதாக, கொரில்லா கிடைத்தது எனக்கு மகிழ்ச்சி தருகிறது. ஆனால் மூன்றாவது விஷயம், அதைச் சாதகமாக நீங்கள் எடுத்துக் கொண்டுவிட்டீர்கள். பத்தாயிரம் டாலர் என்பது...."

வேட்டைக்காரர், "மிஸ்டர் கோல்டுவாட்டர், ஒப்பந்தம் ஒப்பந்தம்தான்" என்று அலட்சியமாகத் தோளைக் குலுக்கினார்.

அதற்கு கார்ஃபீல்டு, "ஜுலு இனத்து ஆள், நாய் போன்றவை எதற்குத் தேவை என்று என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் துப்பாக்கியுடன் ஒரு பிக்மி எதற்கு என்று புரியவில்லை" வேட்டைக் கட்டணத்தைச் சிறிது அதிகமாகவே என்மீது திணித்துவிட்டீர்கள் என்று நினைக்கிறேன் முதியவரே!" என்றார். அதற்குப் பதில் கிடைக்கவில்லை. வேட்டைக்காரர் தூங்க ஆரம்பித்து விட்டார்.

அவர்கள் மறுநாள் பிற்பகலில் மீண்டும் வேட்டைக்குச் சென்று ஒரு பெரிய கொரில்லாவை மரத்தின் மீது பார்த்தார்கள். ஜுலு இனத்தவன் மரத்தில் ஏறிக் கொரில்லா நிலத்தில் தவறி விழும்வரை கிளைகளைப் பிடித்து உலுக்கினான். நாய் கொரில்லா மீது பாய்ந்து அதன் விதைகளைக் கௌவியது. கொரில்லா மயங்கியது. வேட்டைக் காரர் அதை வலைபோட்டுக் கட்டினார்.

கார்ஃபீல்டுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டாலும் கட்டணம் அதிகம் என்று கவலைப்பட்டார். வேட்டைக்காரரின் கூடாரத்திற்குச் சென்று, "நான் ஒரு காரியம் செய்யப் போகிறேன். துப்பாக்கியுடன் இருக்கும் பிக்மி இனத்தவனை விரட்டியடித்துவிட்டுச் செலவைச் சற்று குறைக்கப் போகிறேன்" என்று சொன்னார்.

அதற்கு வேட்டைக்காரர், "மிஸ்டர். கோல்டுவாட்டர்! நீங்கள் ஒப்பந்தம் செய்திருக்கிறீர்கள்" என்று நினைவுபடுத்தினார்.

குழப்பத்துடன் கார்ஃபீல்டு கோல்டுவாட்டர் தனது கூடாரத் திற்குத் திரும்பினார். ரோமைச் சேர்ந்த ஆஞ்சலியோ தயாரித்த சூட் பற்றியெல்லாம் கனவு காணமுயன்றார். ஆனால் அவர் மனம் பத்தாயிரம் டாலர்கள் மற்றும் அந்த துப்பாக்கி ஏந்திய பிக்மி ஆப்பிரிக்கன் பற்றி யோசித்தது.

மறுநாள் வேட்டைக்குழு காட்டுக்குச் சென்றது. அன்று கார்ஃபீல்டு ஒரு கொரில்லாவை மரத்தில் கண்டறிந்தார். அது மிகப் பெரிய உருவத்துடன் இருந்தது. ஜுலு இனத்தவன் மரத்தில் ஏறிக் கிளைகளை உலுக்கினான். ஜுலுவும், கொரில்லாவும், ஒருவரை ஒருவர் நெருங்கிச் சண்டையிடத் துவங்கினார்கள். சட்டென்று கொரில்லா அந்த மனிதனைத் தூக்கிக் கீழே எறிந்துவிட்டது.

அவன் நிலத்தில் வந்து விழுந்ததும் பிக்மியைப் பார்த்து, "நாயைச் சுட்டுவிடு. நாயைச் சுட்டுவிடு" என்று கத்தினான்.

இன்று இவ்வளவு போதும்.

## அத்தியாயம் - 3

### முதல் கேள்வி

**ஓஷோ,**

**நேர்த்தியான ஒருங்கிணைப்புக்கு நன்றி. வாழ்வின் நோக்கமற்ற நிலை பற்றிய விழிப்புணர்வு ஏற்படும்போது பேரானந்தம் எழுகிறது.**

உண்மை எப்போதும் உங்களுக்குள் ஒரு செயல்முறையைத் தூண்டியெழுப்புகிறது. உண்மை உங்களுடையது அல்ல என்றாலும் அது அவ்விதம்தான் செயல்படும். அது பற்றி முதலில் கேட்டறியும் போது நேர்கோட்டில் அமைந்த ஒரு செயல்முறை உங்களுக்குள் உருவாகிறது. அது கேட்டதால் ஏற்பட்டதல்ல. செயல் மற்றும் விளைவைப் பின்தொடர்ந்தும் அது ஏற்படவில்லை. அது ஒத்திசைவு விதிமூலம்தான் உருவாகிறது.

சிறந்த இசையைக் கேட்கும்போது அந்த இசை உங்களுக்குள் எழுகிறது. இசை உள்ளே எழலாம். எழாமல் போகலாம். அது முக்கிய மல்ல. அது தவிர்க்கமுடியாத ஒன்றல்ல. நீங்கள் திறந்த மனதுடன் இருந்தால் இசை உங்களுக்குள் எழும். நீங்கள் ஆயத்தமாக இருந்தால்

புனிதப் புத்தகத்தை நான் ஒப்பீடு செய்துவிட்டதாக இந்து கோபம் கொள்கிறார். தங்கள் மனம் காயம்பட்டுவிட்டதாக இருபிரிவினரும் நினைக்கிறார்கள்.

பிதாகோரஸுக்கு என்ன நேர்ந்திருக்கும் என்பதை உங்களால் புரிந்து கொண்டிருக்க இயலும். ஏன் என்றால் அதுவே எனக்கு நேர்கிறது. உங்களுக்கும் நேர்கிறது. இந்துக்கள் எதிர்க்கிறார்கள். முகமதியர்கள் எதிர்ப்பு காட்டுகிறார்கள். ஜைனர்கள் எதிர்ப்பு காட்டுகிறார்கள். பௌத்தர்களும் எதிர்க்கிறார்கள். கிறிஸ்தவர்களும் எதிர்ப்பு உணர்வு கொள்கிறார்கள். இது ஏன்? நான் ஏசுவையும், புத்தரையும், மகாவீரரையும், ஜோராஸ்திரரையும், லாவோட்ஸுவையும், கிருஷ்ணரையும் சாத்தியமான உயர்ந்த சமநிலையில் பார்க்கிறேன். எனவே அவர்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள்.

தங்களுக்குள் அவர்கள் வேறுபட்டுக் கிடக்கிறார்கள் என்பது தான் அதற்குக் காரணம். தாங்கள் எதைச் சார்ந்து இருக்கிறோம் என்பதை மட்டுமே அவர்களால் புரிந்துகொள்ள முடிகிறது. உங்கள் அறிவுக்கு அப்பாற்பட்ட எதையும் உங்களால் ஒருபோதும் புரிந்து கொண்டுவிட இயலாது. நீங்கள் பிளவுபட்டுக் கிடந்தால், பிளவுபட்ட உலகத்தை மட்டுமே உங்களால் புரிந்துகொள்ள முடியும். உங்கள் உள்ளே ஒரு சூட்சுமமான ஒருங்கிணைப்பு இருந்தால் அப்போதுதான் வெளியே ஏற்படும் நெருங்கிய இணைப்பைப் பற்றி புரிந்துகொள்ள முடியும். நேர்த்தியான ஒருங்கிணைப்பு பற்றி அறியும்போது உங்களிடம் பெரிய அளவில் நன்றியுணர்வு தோன்றுவது சிறந்த விஷயமாகும். ஏதோ ஒன்று உங்களுக்குள் தலையெடுத்து ஒன்றிணைக்கும் பணியைத் துவங்கிவிட்டது என்பதையே இது காட்டுகிறது. ஏதோ ஒன்று உங்களை ஒன்று சேர்க்கிறது. உங்கள் மூளையின் வலது, இடது அரைக்கோளங்களை ஒருவித இணைப்பு நிலைக்குக் கொண்டுவரும் முயற்சியாக அது உள்ளது.

அந்த இரண்டு அரைக் கோளங்கள் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அதை ஆழமாக அறிந்துகொள்வது நல்லது. ஏனென்றால், நிறைய விஷயங்கள் அதைச் சார்ந்திருக்கின்றன. பழங்காலத்து மறை நூல் செய்திகளுடன் தற்போது அறிவியலாளர்களும் நல்ல இணக்கம் கொண்டிருக்கிறார்கள். சரியானபடி அந்த இரண்டு கோளங்களும் இயங்கி ஒரு பாலமாக அமையாதுபோனால் மனிதன் மனத்தெளிவற்றவனாகவே இருப்பான் என்பதை அவர்கள் புரிந்துகொண்டிருக்கிறார்கள். அந்த கோளங்கள் பாலமாக அமைந்து இணைப்பு பெற்றுள்ளன. அது சிறிய அளவில்தான் உள்ளது. சிறிய நூல் இழை தான் பாலமாக இருக்கிறது. நூல் அறுந்து போய்விடலாம்.

சிலசமயம் விபத்துகள் மூலம் அது நடந்துவிடுகிறது. உதாரண மாக, கார் விபத்து காரணமாக நூல் அறுந்துவிடலாம். அது மிகவும் நுட்பமான பாலம். நூலால் ஆனது. ஒரு தடவை அது அறுந்து போனால் அந்த மனிதன் இரண்டு மனிதன் போலாகி விடுகிறான். ஒரு மனிதன் இரண்டு மனிதனாகிவிடுகிறான். இரண்டு மனிதர்கள் போல் அவன் நடந்துகொள்ளத் தலைப்படுகிறான். அதனால் விசித்திர மான காரியங்கள் நடக்கின்றன.

உதாரணமாக, மூளையின் இடதுபக்கம் படிக்கவும், படித்ததை நினைவு வைக்கவும் பயன்படுகிறது. வலதுபக்க மூளையால் அதைப் படிக்க இயலாது. எனவே வேறுபட்ட நிகழ்வுகள் தலையெடுக்கின்றன. ஒருவரிடம் நீங்கள் ஏதாவது ஒன்றைப் படிக்கக் கொடுத்தால் அவர் படிக்கிறார். மூளையின் ஒரு பகுதி மட்டுமே அதை நினைவில் கொள்கிறது. நீங்கள் இடது மூளையை மயக்கமடையச் செய்தால் அவர் படித்த எதையும் நினைவில் வைத்துக்கொள்ள முடியாது. ஏதோ ஒன்றைப் படிக்கிறார். ஆனால் நினைவில் கொள்ள முடியவில்லை.

அவரது ஒரு கரம் ஏதோ ஒரு வேலையில் ஈடுபடுகிறது. ஆனால் மற்றொரு கரம் அதனுடன் ஒத்துழைக்க மறுக்கிறது. காரணம் இரண்டு கைகளும் வெவ்வேறு மூளை அரைக்கோளத்தின் கட்டுப்பாட்டைச் சார்ந்தவை. வலது கை இடது அரைக்கோளம் சார்ந்தது. அதனால்தான் வலது கை முக்கியத்துவம் பெற்றுள்ளது. வலது கை முறையான கை யாகவும், இடது கை முறையற்றதாகவும் மாறிவிட்டது. அது ஏன்? ஒருவித குறியீட்டு முறையாக அது அமைந்துள்ளது.

இடதுகை வலது அரைக்கோளத்துடன் தொடர்பு கொண்டிருக் கிறது. வலது அரைக்கோளம் உள்ளுணர்வு, மனோசக்தி, சிந்தனை, அன்பு, கவிதை போன்றவைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. அவை எல்லாம் உபயோகமற்றவை என்று தூஷிக்கப்படுவதால் இடதுகை ஒதுக்கி வைக்கப்படுகிறது. வலது கை தர்க்கம், மதப்பீடு, கணிதம், அறிவியல் போன்றவை சார்ந்தது என்பதால் அவை பாராட்டப்படு கின்றன. வலதுகை பாராட்டப்படுகிறது.

பத்து சதவீதம் குழந்தைகள் இடக்கை பழக்கம் உள்ளவர் களாகவே பிறக்கிறார்கள். பத்தில் ஒரு சதவீதம்தான் இடக்கை பழக்க முள்ளவர்கள். இடக்கை பழக்கம் உள்ளவர்களை அதிகமாக உங்களால் பார்க்க இயலாது. ஏனென்றால், ஆரம்பம் முதலே நாம் குழந்தைகளை வலது கையால் எழுது, வலது கையால் வேலைகள் செய் என்று வற்புறுத்த ஆரம்பித்து விடுகிறோம். அது அந்த சிறுபான்மை இனத்தை அழித்துவிடுகிறது. அது முறையற்ற கொடுஞ்செயல். நியாய

மாக இடது கை பழக்கம் கொண்டவராகப் பிறக்கும் ஒருவரை வலது கை பழக்கம் பெற்றிட வற்புறுத்தல் செய்கிறோம். அவர் போலியான வராக மாறுகிறார். வலது கையைப் பயன்படுத்துமாறு நீங்கள் அவரை நிர்பந்தம் செய்கிறீர்கள். காரணம், எல்லோரும் வலதுகை பழக்கம் உள்ளவர்களாக இருப்பதே ஆகும். ஆசிரியர்கள், பெற்றோர், மற்ற மாணவர்கள் போன்ற எல்லோரும் வலதுகையைப் பயன்படுத்தும் போது அந்த மாணவன் இடதுகையை உபயோகிப்பது அவனுக்குக் குற்ற உணர்வைத் தருகிறது. தவறான காரியம் செய்வதாக எண்ணு கிறான்.

அவன் எந்த தவறும் செய்யவில்லை. அவன் இயல்பாகவே ஒரு இடக்கை பழக்கமுள்ள சிறுவன். ஒரு கவிஞனாக வரும் தகுதி அவனிடம் உள்ளது. உள்ளுணர்வு நிறைந்த மனிதனாக வரும் திறன் அவனிடம் இருக்கிறது. தீர்க்க தரிசனம் சொல்லும் திறமை அவனிடம் இருக்கலாம். அதை அவன் வளர்த்துக் கொள்ளவும் முடியும். மற்றவர் களின் மனதை படித்தறிய அவனால் முடியலாம். ஒருநாள் அவன் பெரிய ஹிப்னாடிஸ மீடியமாகவும் மாறலாம். பொருட்களின் மீது மனதைச் செலுத்தி அவற்றின் இயல்பை மாற்றும் திறன் பெற்றவ னாகவும் மாறக்கூடும். அவனிடம் அளவற்ற திறமைகள் இருந்த போதும் அவை நசுக்கப்பட்டுவிட்டன.

சமூகம் அவனைக் கட்டாயப்படுத்தி வலக்கை பழக்கத்திற்கு மாற்றிவிட்டது. வலது கை பலவீனமானது. பலவீனமான வாழ்க் கையை அவன் வாழ்வான். செழிப்பற்ற, படைப்பாற்றல் இல்லாத வாழ்க்கை அது. அவன் எதிர்காலம் உரைக்கும் ஒரு திறமையாளனாக இருந்திருக்கலாம். ஆனால் அவன் இப்போது மூன்றாம்தர கணித மேதையாக இருக்கிறான். அந்த மனிதன் முதல் தமான கவிஞனாக, இசை மேதையாக, ஓவியராக வாய்ப்பு இருந்தது. ஆனால் இப்போது மூன்றாம்தர குமாஸ்தாவாக இருக்கிறான். ஒரு ஸ்டேஷன் மாஸ்ட ராகவோ, டெபுடி கலெக்டராகவோ, அல்லது அரசியல்வாதியாகவோ மூன்றாம்தர மனிதராக இருக்கிறார். நீங்கள் அவனிடம் மிகமிக முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறீர்கள்.

அந்த இரண்டு அரைக்கோளங்களும் மிக லேசாகப் பாலமிடப் பட்டுள்ளன. சாதாரணமாக ஒரு எளிய தொடர்பு ஏற்படுகிறது. கூடுதலாக ஒன்று ஆழமான தொடர்பை, உருவாக்கும்போது இரண்டு கோளங்களும் பலமாக இணைகின்றன. ஒரு புத்தரிடம் இரண்டு கோளங்களும் ஒன்றுபடுகின்றன. அவர் தர்க்கவாதிபோல் தர்க்கவாதி யாகவும், அன்பானவர்போல் அன்பு நிறைந்தவராகவும் இருக்கிறார்.

இடது அரைக்கோளம் வலது கையுடன் தொடர்பு உள்ளது. அது தேவை சார்ந்த விதிமுறையுடன் சம்பந்தம் கொண்டது. வலது அரைக் கோளம் இடது கையுடன் தொடர்புள்ளது. அது பதவி சார்ந்த விதி முறையுடன் சம்பந்தம் கொண்டது. அந்த இரண்டு விதிமுறைகளும் ஒன்று சேரும்போது லாகோஸ் எழுகிறது. தர்மம் எழுகிறது. தாவோ, தோரா எழுகிறது. அது விதிகளின் தலைவனான உன்னத விதிமுறை யாகும். அதன் பிறகு மனிதன் இணையற்ற அழகும், அருளும் பெறு கிறான். அவன் பூமி வானத்துடன் இணைகிறான். ஆண், பெண் இரண்டுமாக இருக்கிறான். வாழ்வில் பிளவுபட்ட அனைத்தின் இணைப்புமாக அவன் விளங்குகிறான். அந்த இணைப்பே தெய்வீகம் எனப்படுகிறது.

அனைத்து மடாலயங்களின் ரகசிய செயல்முறைகளும் அந்த இரண்டு கோளங்களுக்கும் ஒரு பாலம் அமைக்கும் ரசவாதச் செயல்பாடு தவிர வேறல்ல. அவை இரண்டையும் மிக நெருக்கமாகக் கொண்டு வரும்போது ஒன்றாகிவிடுகின்றன. தர்க்கச் செயல்பாடுகள் அன்புகாட்டல் போலவும், அன்புகாட்டுதல் தர்க்கம் போலவும் அமைகின்றன. அப்போது நீங்கள் உயர்ந்த சிகரத்தை எட்டுகிறீர்கள். அந்த உச்சியில் பேரின்பம் எளிதாக நிகழ்கிறது. வசந்தம் வந்ததும் மலர்கள் மலர்வதுபோல் அது நிகழ்கிறது. அந்த இணைப்பின்போது வசந்தம் உங்கள் அகஉலகில் தோன்றுகிறது. நீங்கள் உங்கள் இல்லம் வந்து சேர்ந்துவிட்டீர்கள். ஒருமைநிலை பெற்றுவிட்டீர்கள். புனிதம் பெற்று விட்டீர்கள்.

உங்களிடம் ஏதோ நடந்து கொண்டிருக்கிறது. எனது சந்நியாசி களுக்கு நடப்பதுபோலவே அது அமைந்திருக்கிறது. அவர்களில் யார் எனக்கு நெருக்கமாக இருக்கிறார்களோ - அவர்கள் வழக்கமான சந்நியாசிகள் போன்றவர்கள் அல்ல - அவர்கள் என்னிடம் நிஜமான அன்பு கொண்டவர்கள். அவர்கள் என்னிடம் சரி என்று சொல்லும் போது அதில் இல்லை என்ற வார்த்தை மறைந்து இருப்பதில்லை. அந்த இணைப்பு அதில் இருக்கிறது. கிழக்கும் மேற்கும் சந்திக் கின்றன. வானமும், பூமியும் சந்திக்கின்றன. ஸ்தூலமும், சூட்சுமமும் இணைகின்றன.

பிதாகோரஸ் உருவாக்கிய அனைத்தும் அழிக்கப்பட்டன. அவரது கல்விக்கூடம், மடாலயம் முழுமையாக எரிக்கப்பட்டது. நூற்றுக்கணக்கான அவரது சீடர்கள் கொல்லப்பட்டார்கள். அதை நாம் மீண்டும் செய்ய முயல்கிறோம். மறுபடியும் சிரமப்பட்டுப் பார்க்க முடிவு செய்துவிட்டோம். ஆபத்து காத்திருக்கிறது. முன்பு நடந்ததே மீண்டும் நமது தலைவிதியாகப் போகிறது. ஆனால் அப்படியிருக்க

வேண்டும் என்ற அவசியமில்லை. நாம் பிதாகோரஸின் பரிசோதனையிலிருந்து சிலவற்றைக் கற்றுக்கொள்ள முடியும். அவர் முதல் முன்னோடியாக இருந்தவர். வாழ்வில் அவர் வெற்றி அடைந்தார். தனது பல சீடர்களுடன் அவர் வெற்றி பெற்றார். அவர் விரைவில் வரவும்கூடும். ஆனால் அதற்கு இந்த உலகம் தயாராகவில்லை.

இப்போது உலகம் அறிவியல்ரீதியாகத் தயாராக இருக்கிறது. உலகம் அறிவியல்பூர்வமாகத் தயாராக இல்லாத நேரமாக அது இருந்தது. மேற்கு மேற்காக இருந்தது. கிழக்கு கிழக்காக இருந்தது. பாலம் அமைப்பது முடியாத செயலாக இருந்தது. இப்போது அறிவியல் மனிதர்களை மிகவும் நெருக்கமாகக் கொண்டு வந்து விட்டது. தெய்வீகம் உட்பட எல்லாம் ஒருங்கிணையும் சூழல் ஏற்பட்டுள்ளது. அந்த காலத்தில் மனிதர்கள் தனித்து இருந்தார்கள். எப்போதாவது ஒரு பார்வையாளர் மேற்கு நாட்டிலிருந்து கிழக்கு நாட்டிற்கு வருவார். நினைவில் வையுங்கள். பார்வையாளர் எப்போதும் மேற்கில் இருந்துதான் கிழக்கு நோக்கி வருகிறார். எந்த ஒரு பார்வையாளரும் கிழக்கில் இருந்து மேற்கே செல்வதில்லை. ஏன் செல்வதில்லை?

மேற்கு நாடு ஆண்தன்மை கொண்ட மனதின் பிரதிநிதி போல் அமைந்திருக்கிறது. அது துவக்கி வைக்கிறது. கிழக்கு நாடு பெண் தன்மையுள்ள மனம் போன்றது. அது பொறுமையாகக் காத்திருக்கிறது. அது முன்னெடுத்துச் செல்வதில்லை. அது ஒரு ஆண், "நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்று பெண்ணிடம் கூறுவதுபோன்றது. பெண்கள் எப்போதும் தங்கள் விருப்பத்தை முதலில் தெரிவிப்பதில்லை. அப்படி ஒரு பெண் தனது விருப்பத்தை உங்களிடம் வெளியிட்டால், நீங்கள் உடனே அவளிடமிருந்து தப்பியோடிவிட விரும்புவீர்கள். காரணம் அவள் பெண்ணே அல்ல என்பது உங்கள் கருத்து. அவள் அதிகமான அளவு ஆண்தன்மையுள்ள மனம் கொண்டவளாக இருக்கிறாள். நீங்கள் அதனால் பயந்து போகிறீர்கள். நீங்கள் அவமதிக்கப்படுகிறீர்கள். அதை எளிதானதாக ஏற்றுக்கொள்ள நீங்கள் தயாராக இல்லை. பெண் என்பவள் காத்திருக்க வேண்டும்.

அதனால்தான் மேற்குநாடு உணர்ந்து கொள்பவர்களை கிழக்கு நாடுகளுக்கு எப்போதும் அனுப்புகிறது. கிழக்கு நாடு அமைதியுடன் காத்திருக்கிறது. எங்கும் போவதில்லை. எப்போதாவது ஒரு பார்வையாளர் வரலாம். அவர் தன்னுடன் மேற்கு நாட்டைக் கொண்டு வருகிறார். கிழக்கு நாட்டின் ஞானத்தை எப்போதும் அவர் தவறாகப் புரிந்துகொள்கிறார். அந்த நிலை பிதாகோரஸுக்கு ஏற்பட்டது. ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகு ஏசுவுக்கும் ஏற்பட்டது.

ஏசுவும் கிழக்கு நாட்டிற்கு ஒரு பார்வையாளராக வந்தார். கிழக்கில் அவர் அறிந்ததை எல்லாம் கற்றுக் கொண்டார். தாயகம் திரும்பிச் சென்றார். அவரையும் மக்கள் புரிந்து கொள்ளாது போனார்கள் அது மிகவும் அந்நியமாக இருந்தது. அதே நிலை எல்லா சந்நியாசிகளுக்கும் ஏற்படுகிறது. நீங்கள் வேற்று நாடுகளுக்குச் சென்றால் தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறீர்கள். ஆனாலும் நீங்கள் உயர்ந்த நிலையில் இருக்கிறீர்கள். உங்களுடன் பலர் இருக்கிறார்கள். பிதாகோரஸ் தனியாக வந்தார். தனியாகத் திரும்பிச் சென்றார். ஏசு தனியாக வந்தார். தனியாகத் திரும்பிச் சென்றார். அவர்கள் பெரும் துணிச்சல்காரர்கள்.

ஏசு கொல்லப்பட்டார். பிதாகோரஸின் கல்விக்கூடம் எரிக்கப்பட்டது. அவரது சீடர்கள் கொன்று குவிக்கப்பட்டார்கள். இன்று இருப்பதுபோல் அன்று உலகம் இவ்வளவு நெருக்கமாகத் தொடர்பு கொண்டிருக்கவில்லை. அறிவியலும், தொழில் நுட்பமும் மக்களை மிகவும் நெருக்கமாக்கிவிட்டன. எல்லா தடைகளும், குறைந்தபட்சம் உடல்ரீதியான தடைகள் அகற்றப்பட்டன. இப்போது இரண்டாவது நடவடிக்கை எடுக்க வேண்டியுள்ளது. மனோரீதியான தடைகள் அகற்றப்பட வேண்டும். அதையே நாம் இப்போது செய்து கொண்டிருக்கிறோம்.

பிதாகோரஸின் தொகுப்பு உங்கள் உள்ளத்தில் ஒரு நரம்பைச் சுரண்டினால் அது நல்லது. எனது பணியும் அதுதான்.

“நோக்கமற்ற வாழ்க்கை பற்றி உணரும்போது பெருமகிழ்ச்சி எழுகிறது” என்று கூறுகிறீர்கள். இது இரண்டாவது அம்சம். உங்கள் செயல்கள் முழுவதிலும் எந்த நோக்கமும் இல்லை என்னும்போது மகிழ்ச்சி எழுகிறது. அங்கங்கள் நோக்கம் கொண்டிருக்கலாம். முழுமை அம்சம் எந்த நோக்கமும் கொண்டிருக்கிறது.

உங்கள் வீட்டிற்கு ஒரு நோக்கம் உள்ளது. அது உங்களுக்குப் புகலிடமாக, பாதுகாவலாக இருக்கிறது. உணவு உண்பதற்கு ஒரு நோக்கம் இருக்கிறது. அது உங்களுக்குப் போஷாக்கு தருகிறது. அது உங்களை உயிருடன் வைத்திருக்கிறது. உங்கள் ஆடைகள் நோக்கம் கொண்டவை. உங்கள் இயந்திரங்களும், நீங்கள் உருவாக்கிய அனைத்தும் நோக்கம் கொண்டவை. ஆனால் உங்களுக்கு என்ன நோக்கம் உள்ளது?

நோக்கமற்ற உலகில் நீங்கள் அலைந்துகொண்டு இருக்கிறீர்கள். மேலும் சில பொருட்களை நீங்கள் பெற முடியும். “என்னால் இங்கு மகிழ்ச்சியாக வாழமுடியும்” என்று கூற இயலும். ஆனால் மகிழ்வுடன்

வாழ்வதில் என்ன நோக்கம் இருக்கிறது? மகிழ்வு பெறுவதில் என்ன நோக்கம் இருக்கிறது? "அன்பு செலுத்த நான் இங்கு பிறந்திருக்கிறேன்" என்று நீங்கள் கூறலாம். ஆனால் அன்பும் தன்னளவில் நோக்கமற்றதுதான். ஒரு ரோஜா மலர் போலவும், காலை நேரத்தில் சூரிய ஒளியில் தாமரை மலரின் இலையிலிருந்து வழியும் பனித்துளி போலவும் அதுவும் ஒரு நோக்கமற்றதுதான். முழுமைநிலை போன்று அதுவும் நோக்கமற்றதுதான்.

நீங்கள் முழுமை நிலைக்கு அருகில் நெருங்கி வந்துவிட்டீர்கள். இனி நோக்கமற்று இருத்தல் ஒரு விதிமுறையாக மாறுகிறது. நோக்கம் தேவை சார்ந்த ஒன்று. நோக்கமின்மை ஆற்றல் சார்ந்த ஒன்று. முழுமையின் நோக்கம் என்ன? அதற்கென்று எந்த நோக்கமும் இல்லை. ஆனந்த மகிழ்ச்சி அது. அதனால்தான் இந்துக்கள் அதை **லீலை** என்கிறார்கள். அதன் அர்த்தம் விளையாட்டுத்தனமானது என்பதாகும். அது விளையாட்டானதுதான்.

விளையாட்டுக்கு நோக்கமில்லை. விளையாட்டு போட்டியாக மாறும் தருணத்தில் அதற்கு நோக்கம் ஏற்பட்டுவிடுகிறது. விளையாட்டிற்கும், போட்டிக்கும் இடையே உள்ள வித்தியாசம் அதுதான் என்பதை உணருங்கள். நீங்கள் பந்தயம் கட்டாமல், பணம் வைக்காமல் சீட்டு ஆடினால் அது விளையாட்டு. எப்போது நீங்கள் பந்தயம் கட்டிப் பணம் வைக்கிறீர்களோ அப்போது அது விளையாட்டு அல்ல. அது வியாபாரமாகி விடுகிறது. அங்கு நோக்கம் வந்து விடுகிறது. அது போட்டியாகிவிடுகிறது. இப்போது நீங்கள் சூதாடுகிறீர்கள். சில கணங்களுக்கு முன்பு நீங்கள் விளையாடிக் கொண்டிருந்தீர்கள். இப்போது விளையாட்டு இரண்டாந்தமான விஷயமாகி விட்டது. வெற்றி பெற்றுப் பணம் சம்பாதிப்பது எப்படி என்பதே இப்போது கேள்வியாகி விட்டது. விஷயம் தீவிரமாகிவிட்டது. அது முன்பு போல் கனமற்று இல்லை. அது அருள் உலகிலிருந்து நழுவி புவியீர்ப்பு உலகினுள் விழுந்துவிட்டது. அது ஆற்றல் உலகிலிருந்து தேவை சார்ந்த உலகில் விழுந்துவிட்டது.

அந்த இரண்டு விதிமுறைகளும் அபாரமான அழகுடன் இருக்கின்றன. தேவை சார்ந்த விதிமுறை சக்தி, பதவி சார்ந்த விதிமுறைக்கு நிகரானது. புவியீர்ப்பு விசையை அறிவியல் அங்கீகரித்துவிட்டது. தேவை சார்ந்த விதி அது. ஆனால் அறிவியல் அருள் என்ற உயர் விதிமுறையை அங்கீகரிக்கவில்லை. அதனால்தான் அறிவியல் செயலும், விளைவும் குறித்த எல்லைகள் ஏற்படுத்தியிருக்கிறது. அது இன்னும் உயர்நிலை பற்றிய விழிப்புணர்வு இல்லாது இருக்கிறது.

ஆன்மீகம் உயர்நிலை விதிமுறையைக் கண்டறிந்தது. ஆனால் புவியீர்ப்பு விசை உங்களைக் கீழே இழுக்கிறது. இப்போது அது குறித்து யோசிக்க வேண்டும். பிறப்பு இருக்குமானால், இறப்பும் உண்டு. அப்போதுதான் சமநிலை உருவாகும். அன்பு இருந்தால், வெறுப்பும் இருக்கும். எதிர்முனை மின்சாரம் இருந்தால் நேர்முனை மின்சாரமும் இருக்கும். ஒரு விசை பொருட்களை கீழ்நோக்கி இழுக்கு மானால், மேலே உயர்த்தும் விதிமுறையும் இருக்கும்.

அது எளிய தர்க்கமுறை. அதற்கு நிருபணம் தேவையில்லை. அது எளிமையானது. வாழ்விலுள்ள ஒவ்வொன்றும் எதிர்முனையால் சமநிலைப்படுத்தப்பட்டுள்ளது. எங்கே அந்த புவியீர்ப்பு எதிர்முனை உள்ளது என்று நான் கேட்கலாமா? அப்படி ஒன்று இருக்கிறது. நியூட்டனுக்கு முன்பு அது யாருக்கும் தெரியவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். சுமார் முன்னூறு வருடங்களாக மட்டுமே அதை நாம் அறிந்திருக்கிறோம். நியூட்டனுக்குப் பிறகுதான் புவியீர்ப்பு விசை செயல்பட ஆரம்பித்தது என்று சொல்லமுடியாது. அது என்றும் இருந்து வருகிறது. நியூட்டன் அதை புதிதாகக் கண்டுபிடித்து உருவாக்க வில்லை. இருப்பதை எடுத்துச் சொன்னார். அந்த கண்டுபிடிப்பு இன்று சாதாரண விஷயமாகி விட்டது.

நியூட்டன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறார். ஒரு ஆப்பிள் பழம் மரத்திலிருந்து கீழே விழுகிறது. அது பற்றி அவர் யோசிக்கிறார். "ஏன் பழம் எப்போதும் கீழேயே விழுகிறது? ஏன் ஒருபோதும் மேல் நோக்கியோ அல்லது இடது வலது பக்கமாகவோ போவதில்லை? ஏன் எப்போதும் கீழ் நோக்கியே விழுகிறது?" உடனே ஒன்று அவர் மனதில் பொறிதட்டியது. ஏதோ ஒரு சக்தி அதை பூமி நோக்கி இழுக்கிறது என்று யோசித்தார். நியூட்டன் காலத்துக்கு முன்பும் பழம் கீழே விழுந்து கொண்டுதான் இருந்தது. நியூடடன் அந்த விதியைக் கண்டறிந்தாரா இல்லையா என்பது குறித்து ஆப்பிள் பழம் கவலைப் படவில்லை. வழக்கமாக அது கீழே விழுந்து கொண்டிருக்கிறது. விழுதல் குறித்த எந்த அறிவியல் விதியைப் பற்றியும் அறியாமல் விழுகிறது.

அது மாதிரியே அருள் சார்ந்த விஷயத்திலும் நடக்கிறது. மேல் நோக்கி விழும் மனிதர்கள் இருக்கிறார்கள். புத்தர், ஏசு, பிதாகோரஸ் போன்றவர்கள் மேல்நோக்கி விழுந்தார்கள். நீங்கள் அனுமதித்தால் ஏதோ ஒன்று உங்களை மேல்நோக்கி இழுக்கும் என்று அவர்களுக்குத் தெரியும். எந்த முயற்சியும் நீங்கள் செய்யாது இருந்தால், சரணாகதி செய்தால், நீங்கள் விசுவாசம் கொண்டிருந்தால் ஏதோ ஒன்று உங்களை மேலே உயர்த்தும் மாயாஜாலம் போல காற்றிலே உயர்ந்து வானில்

மிதிப்பீர்கள். உடல்ரீதியாக அல்ல, ஆன்மீக மனோரீதியாக இது நடக்கும். உங்களுக்குள் ஏதோ ஒன்று உயரே, உயரே, உயரே என்று மேலே எழுந்து ஆன்மநிலையின் உச்சத்தை எட்டும். ஆப்பிள் கீழே விழுந்ததுபோல நீங்கள் மேல்நோக்கி விழத்தொடங்கி விடுவீர்கள்.

பிரசித்திப்பெற்ற சூஃபி கதை ஒன்று உண்டு.

ஒரு சூஃபி துறவி இருந்தார். அவரை எல்லோரும் பைத்தியம் என்று கருதினார்கள்...

பல மறைஞானிகள் பைத்தியமென்றுதான் கூறப்பட்டார்கள். வேறு வகையில் சிந்திக்கும் உலகம் அவர்கள் பைத்தியம் என்று எண்ணுகிறது. உலகின் கண்களுக்கு அவர்கள் அற்பமான விஷயங் களைப் பின்பற்றுவதாகத் தோன்றுகிறது. உலகம் பணத்தைச் சேர்க்கிறது. அதிகாரத்தையும், கௌரவத்தையும் தேடியலைகிறது. அவர்கள் 'பெரிய' விஷயங்கள் பற்றி சிந்திப்பதில்லை. உலகம் மேலும் மேலும் வேண்டும் என்று வசப்படுத்துகிறது. மேலும் மேலும் வேண்டும் என்று விரும்பாத மனிதர்களும் இருக்கிறார்கள். நிச்சயம் அவர்கள் பைத்தியம்போல் தோன்றுகிறார்கள். தங்களுக்கென்று எதையும் அவர்கள் ஆசைப்பட்டதில்லை. டயோஜெனஸை நினைத்து பாருங்கள். தனக்கென்று எதையும் வைத்திருக்கவில்லை. ஆனால் மகா அலெக்ஸாண்டரை விடவும் பேரின்பத்துடன் அவர் இருந்தார். அலெக்ஸாண்டரே அவர் மீது பொறாமை கொண்டார்.

டயோஜெனஸிடம் அவர் இப்படிச் சொன்னதாகக் கூறப்படு கிறது. "ஒருவேளை நான் மீண்டும் உலகில் பிறக்க நேர்ந்தால் கடவுளிடம் "என்னை டயோஜெனஸாகப் படைத்துவிடு. பேரரசன் அலெக்ஸாண்டராக இருக்க நான் விரும்பவில்லை."

நிர்வாணப் பைத்தியக்காரன் டயோஜெனஸ் மீது அவர் மிகவும் பொறாமை கொண்டார்.

ஆனால் டயோஜெனஸ் என்ன சொன்னார்? அவர் சிரித்து விட்டு, "உனக்கு இந்த உலகில் மீண்டும் பிறக்க ஒரு வாய்ப்பு கிடைத்தால் மறுபடியும் பேரரசன் அலெக்ஸாண்டராக மாறிவிடு என்று சொல்ல நான் முட்டாள் அல்ல. இன்னொரு பிறவி எடுக்கும் வரை ஏன் காத்திருக்க வேண்டும்? இப்போதே டயோஜெனஸாக நீ மாற முடியும். மகா அலெக்ஸாண்டராவதற்கு பெருமுயற்சி தேவைப் பட்டது. டயோஜெனஸாக மாறுவதற்கு முயற்சி எதுவும் தேவை யில்லை. உடனே மாறிவிடலாம். உனது ஆடைகளை வீசி விடு. என் அருகே வந்து படு. நான் சூரியக் குளியல் எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

நீயும் அப்படிச் செய்யலாம்! உலகை வெல்ல வேண்டும் என்பதை மறந்துவிடு. இக்கணமே நீ டயோஜெனஸாகி விடுவாய்."

அந்த மனிதர்கள் பைத்தியங்கள் போலிருக்கிறார்கள். தன்னை அவர் பைத்தியம்போல் காட்டிக் கொண்டார்.

பகல்வேளையில் டயோஜெனஸ் ஒரு விளக்கை ஏந்திக்கொண்டு சென்றார். எந்த மனிதர் அவர் எதிரில் வந்தாலும் விளக்கை மேலே உயர்த்தி வந்தவரின் முகத்தைப் பார்க்க ஆரம்பித்தார். பட்டப் பகலில் இவ்வாறு செய்தார். "நீ என்ன செய்கிறாய்?" என்று மக்கள் அவரிடம் கேட்டனர். "நான் மனிதனைத் தேடுகிறேன். இதுவரை அப்படிப்பட்ட யாரையும் பார்க்கவில்லை" என்று அவர் பதில் சொன்னார்.

அவர் இறக்கும்போது என்ன நடந்தது என்று உங்களுக்குத் தெரியுமா? யாரோ ஒருவர் டயோஜெனஸைப் பார்த்து, "நீங்கள் காலமெல்லாம் பட்டப்பகலில் விளக்குடன் மனிதனைத் தேடியலைந் தீர்களே, அவன் அகப்பட்டானா?" என்று கேட்டார்.

கண் திறந்து பார்த்த டயோஜெனஸ் "இல்லை. மகிழ்ச்சியுடன் சாகிறேன். என் விளக்கை யாரும் திருடாது விட்டார்களே அது போதும்" என்றார்.

அந்த மனிதர்கள் பைத்தியங்கள் போலிருந்தார்கள்.

சூஃபி கதை இப்படிச் சொல்கிறது.

ஒரு பைத்தியக்கார சூஃபி தனது சீடரின் வீட்டில் தங்கியிருந்தார். மனிதர் வித்தியாசமான காரியங்களில் ஈடுபடக் கூடியவர் என்பதால் சீடர் கவலையுடன் இருந்தார். "அவர் ஏதாவது செய்வார். தொந்தரவு ஏற்படப் போகிறது" என்று பயந்தார். பக்கத்து வீட்டுக்காரரும், அக்கம் பக்கத்தவரும் என்ன நினைப்பார்கள் என்று தடுமாறினார். நானும் ஒரு பைத்தியம்தான் என்று நினைத்து விடுவார்களே?

சந்தோஷ மிகுதியால் அவர் நடு இரவில் பாடுவார், கூச்ச லிடுவார், நடனமாடுவார். "எனவே அவரை கீழ்தளத்து அறையில் அடைத்து வைப்பதுதான் நல்லது. அப்போதுதான் இரவில் தொந்தரவு செய்யாது இருப்பார் என்று எண்ணினார். அவ்வாறே கீழ்தளத்தில் பூட்டி வைத்தார்.

நடு இரவானதும் அவருக்கு மகிழ்ச்சி பொங்கியது. கூப்பாடும் நடனமும் ஆரம்பமாகிவிட்டது. சீடர் குழப்பிப் போனார். அவர் நடமிடும் சப்தம் கூரை மீதிருந்து கேட்டது. மேலே ஓடினார். "எப்படி மேலே வந்தீர்கள்? இது எப்படி முடிந்தது?" என்று சூஃபியிடம் கேட்டார்.

சூஃபி சொன்னார், "நான் என்ன செய்யட்டும்? நான் கண்ணைத் திறந்ததும் மேல்நோக்கி விழத்தொடங்கி விட்டேன்" என்றார்.

இது ஒரு அழகான கதை. மேல்நோக்கி விழுதல். மேல்நோக்கி விழுவதற்கும் விதிமுறை உதவுகிறது. சிலசமயம் தியானிக்கும்போது நீங்கள் நடனமிடுவீர்கள், பாடுவீர்கள், அதை உணரவும் செய்வீர்கள். மேலே ஏதோ உயர்ந்த நிலைக்கு போவதை உணர்வீர்கள். இதுவரை உங்களுக்குத் தெரியாத ஒரு பூரண நிலையை எட்டுவீர்கள். அதுவே அருளின் விதிமுறையாகும். ஆற்றலின் விதியாகும்.

நீங்கள் இந்த இரண்டு உலகங்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒன்று அறிவியல் சார்ந்த உலகம். மற்றது ஆன்மீகம் சார்ந்தது. பொருட்களைப் புதிய வழியில் பார்க்க உலகம் காத்திருக் கிறது. அதில் ஆன்மீகமும், அறிவியலும் ஒன்றாகிவிடும். அதை ஆன்மீக - அறிவியல் என்று அழைக்கலாம் அல்லது அறிவியல் ஆன்மீகம் எனலாம். பெரும் இணைப்புடன் அந்த இரண்டு விதி களும் ஒன்று சேர்வதற்கு உலகம் காத்திருக்கிறது.

அதனால்தான் நான் எனது சந்நியாசிகளை கிரேக்க நாட்டு ஜோர்பா கௌதம புத்தர் போல இருவரும் ஒன்று சேரவேண்டும் என்று விரும்புகிறேன். ஜோர்பா புத்தரை உருவாக்குவதே எனது முயற்சியாகும்.

**இரண்டாவது கேள்வி**

> **ஓஷோ,**
>
> **எங்களிடம் நீங்கள் பேசும்போது உங்கள் கைகள் அசைந்து நடனமிடும் முறையை நான் விரும்புகிறேன். உங்களது உணர் வூட்டும் அசைவுகள் மற்றும் கரங்கள் எனக்கு மயக்கத்தை ஏற்படுத்துகின்றன. உங்கள் கைகளில் ஒளிந்திருக்கும் ரகசியம் என்ன?**

அதில் எந்த ரகசியமும் இல்லை. நான் பழங்காலத்து யூதன் போன்றவன். பழைய பக்கங்கள் விலக மறுக்கின்றன.

அது ஒரு டிசம்பர் மாதத்துக் காலை நேரம். காற்றில் குளிர் பரவிக் கிடந்தது. சாலையோரமாக இரண்டு யூதர்கள் நடந்து சென் றார்கள். அவர்களில் ஒருவர் பலவித அபிநயங்களுடன் பேசிக் கொண்டே சென்றார். குளிர் காரணமாக வாயிலிருந்து புகை வெளிப் பட்டது. அடுத்த மனிதர் அமைதியுடன் காணப்பட்டார். கடைசியாக முதல் யூதர் தான் பேசியது போதும் என்று முடிவுக்கு வந்தார். "நல்லது மோ. நான் சொன்னதை நீ ஏற்றுக் கொள்கிறாயா?" என்று கேட்டார்.

இதற்கு மோ, "இக்கி, நீ விரும்பியதை எல்லாம் பேசலாம். நான் எனது கைகளைப் பாக்கெட்டுக்குள் வைத்திருப்பேன்" என்றார்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**தேவை சார்ந்த விதிமுறையை நிறுத்தி வைக்கவும், ஆற்றல் சார்ந்த விதி முறையை இயக்கவும் வழிவகைகள் என்ன?**

தேவை சார்ந்த விதிமுறை என்பது நீங்கள் சுயஉணர்வற்று இருப்பதாகும். நீங்கள் இயந்திர மனிதன் போலச் செயல்படுகிறீர்கள். அப்போதுதான் தேவை சார்ந்த விதிமுறையைச் செயல்படுத்த இயலும். நீங்கள் தேவை சார்ந்த விதிமுறையை நிறுத்த விரும்பினால் அதற்கு ஒரே வழி கூடுதல் விழிப்புணர்வும், எச்சரிக்கையும் பெறுவதே ஆகும்.

உங்கள் செயல்கள் இயந்திரத்தனமாக இருப்பதை நிறுத்துங்கள். நடக்கும்போது விழிப்புணர்வுடன் நடந்து செல்லுங்கள். சாப்பிடும் போது விழிப்புணர்வுடன் சாப்பிடுங்கள். முதலில் அது சிரமமான செயலாகத்தான் இருக்கும். ஏனென்றால் நீங்கள் எப்போதும் விழிப் புணர்வற்று வாழ்ந்து கொண்டிருந்தீர்கள். நீங்கள் இயந்திரம் போல் நடந்து சென்றீர்கள். நடந்து செல்வதில் விழிப்புணர்வை உருவாக் குங்கள். நடக்கும்போது விழிப்புணர்வை கொண்டுவர சில விஷயங்கள் அவசியப்படுகின்றன.

ஒன்று. வழக்கமான வகையில் நடக்காதீர்கள். மெதுவாக நடந்து செல்லுங்கள். உங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு மெதுவாக நடந்து செல்லுங்கள். வழக்கத்தைவிட மெதுவாக நீங்கள் நடந்து சென்றால் உங்கள் பழைய பழக்கங்கள் பிடிவாதமாய் தங்கியிருக்க இயலாது. அங்கு நீங்கள் புதிதாய் எதையோ கொண்டு வந்துவிட்டீர்கள். உடல் அதற்கு ஏற்றபடி சரிசெய்து கொள்கிறது. அதற்குச் சிறிது அவகாசம் தேவை. அந்த நேரத்தை விழிப்புணர்வு பெறும் நேரமாக மாற்றிக் கொண்டே விடலாம்.

நீங்கள் புகை பிடிப்பதாக இருந்தால் மிகவும் மெதுவாக, நேரம் எடுத்துக்கொண்டு செயல்படுங்கள். மிகவும் மெதுவாகப் பையிலிருந்து சிகரெட் பாக்கெட்டை எடுங்கள். எவ்வளவு முடியுமோ அவ்வளவு மெதுவாக எடுங்கள். மெதுவாக ஒரு சிகரெட்டை வெளியே எடுங்கள். உடலில் சக்தியற்றவர்போல எடுக்கும்போது விழிப்புணர்வு தோன்றும். சிகரெட் பெட்டி மீது எவ்வளவு முடியுமோ அவ்வளவு மெதுவாகத் தட்டுங்கள். உயிரற்று இருப்பவர்போல அதைச் செய்ய நிறைய நேரம் எடுத்துக் கொள்ளுங்கள். மிகவும் மெதுவாக சிகரெட்டை வாயில்

வையுங்கள், பிறகு காத்திருங்கள்! அவசரப்பட வேண்டாம். பிறகு லைட்டரை எடுத்து வழக்கம்போல மெதுவாகப் பற்ற வையுங்கள். நிறைய அவகாசம் எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு சிகரெட் புகைக்கு ஒரு மணிநேரம் எடுத்துக் கொள்ளுங்கள். உங்களிடம் எவ்வளவு விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது என்று அறிந்து வியந்து போவீர்கள். விழிப்புணர்வை இழக்கும் தருணங்களில் பழைய வேகமான இயக்கத்திற்குப் போவதை அறிந்து வியக்கவும் செய்வீர்கள். வேகத்தைக் குறையுங்கள்.

விபாசனா என்ற தியானத்தில் முழுமையான செயல்பாட்டு முறை இதுதான். விபாசனாவில் இரண்டு வகையான தியானங்களை நீங்கள் செய்ய வேண்டும். ஒன்று உட்காருதல். அடுத்தது நடத்தல். மெதுவாக நடந்து செல்லுங்கள். அதை எந்த முறையில் வேண்டுமானாலும் செய்யலாம். மெதுவாகச் சுவாசித்தபடி இருங்கள். சுவாசமும் ஒரு தியானம்தான். உங்கள் கையை ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் மிக மெதுவாக அசையுங்கள். அப்போது நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பீர்கள்.

உங்கள் செயல்கள் இயந்திரத்தனமாக இல்லாதபடி பார்த்துக் கொள்ளுங்கள். கூடுதல் விழிப்புணர்வுடன் இருங்கள். அதிக அளவு தேவை சார்ந்த விதிமுறை மறைகிறது. தேவை சார்ந்த விதிமுறை செயல்படாதபோது மற்ற விதிமுறைதானே சுயமாகச் செயல்பட ஆரம்பித்துவிடும். அதுதான் அருள் சார்ந்த விதிமுறையாகும்.

ஒரு கதை உண்டு.

காசி நகரிலிருந்து ஒரு புகழ்பெற்ற ஜோதிடர் திரும்பி வந்தார். காசியில் தங்கியிருந்து அவர் இருபது வருடம் ஜோதிடம் கற்றுக் கொண்டவர். அவர் மிகவும் பிரசித்தி பெற்றவராகி விட்டார். இப்போது சொந்த ஊருக்குத் திரும்புகிறார்.

நதி ஒன்றைக் கடந்தபோது ஈரமான அதன் மிருதுவான தரையில் சில காலடித் தடங்கள் தென்பட்டன. தனது கண்களை அவரால் நம்ப முடியவில்லை. அந்த காலடிச் சுவடுகள் உலகை ஆளும் ஒரு மன்னரின் சுவடுகளாகவே இருக்க வேண்டும். இருபது ஆண்டுகள் அவர் பயின்ற ஜோதிட சாஸ்திர நூல்கள் அந்த காலடியின் அங்கலட்சணத்தை அவ்விதம்தான் கூறின. உலகை ஆளும் மன்னருக்கு இந்தியாவில் ஒரு சிறப்புப் பெயர் உண்டு. அவர் **சக்ரவர்த்தி** என்று அழைக்கப்படுவார். அவரது அதிகாரம் ஆறு கண்டங்களிலும் செல்லுபடியாகும். அப்படிப்பட்ட ஒரு சக்ரவர்த்தி இந்த சிறிய கிராமத்தில் என்ன செய்கிறார்? நிர்வாணமாக, வெறும் காலுடன், சிறிய அந்த அழுக்கான கிராமத்து

நதிக்கரையில் அவர் இருக்கிறாரா? அது சாத்தியமே இல்லை என்று தோன்றியது!

ஜோதிடருக்கு ஒரு பெரிய சந்தேகம் எழுந்தது. "எனது ஜோதிட சாஸ்திரம் தவறா?" காலடிச் சுவடுகளை நன்கு ஆராய்ந்தார். அந்த சுவடுகளைப் பின்தொடர்ந்தார். ஒரு மரத்தடியில் புத்த துறவி அமர்ந்துள்ள இடத்தை அவர் சென்று சேர்ந்தார்.

நிலைமை இப்போது இன்னும் சிக்கலாகிவிட்டது. அந்த மனிதர் ஒரு பேரரசர் போலிருந்தார். அருள், அழகு, அமைதி போன்ற கொண்டாட்டங்கள் அவரைச் சூழ்ந்திருந்தன. அவரது நெருக்கம் காரணமாக மரம் ஜொலித்தது. அவர் அமர்ந்திருந்த பாறை மின்னியது. அவர் ஒரு **சக்ரவர்த்தி!** ஆனால் பிச்சைப் பாத்திரத்துடன் பிச்சைக் காரன் போல் இருந்தார்.

புத்தரின் காலடியில் அவர் விழுந்து வணங்கினார். "நீங்கள் என்னைப் பெரிதும் குழப்பி விட்டீர்கள். எனது ஜோதிட சாஸ்திர நூல்களை நான் எறிந்துவிடட்டுமா? நான் இருபது வருடங்களை அதில் வீணடித்து விட்டேனா? உங்கள் பாதங்களை நான் பார்க்க லாமா?" என்று கேட்டார்.

புத்தரின் பாதங்களைப் பார்த்த அவர் இப்போது எல்லாம் நிச்சய மாகிவிட்டது. நீங்கள் **சக்ரவர்த்தியாகவே** இருக்க வேண்டும். உலகின் மிகப்பெரிய அரசர் பேரரசர்களின் பேரரசர். நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? அருகில் எந்த ஒரு ஊழியரையும் காண வில்லை. எதற்குத் திருவோடு? ஏன் பழைய ஆடைகள் அணிந்திருக் கிறீர்கள்? நீங்கள் பிச்சைக்காரரா?" என்றார்.

புத்தர் சிரித்தபடியே சொன்னார், "உனது புத்தகங்களை எறிய வேண்டாம். அவை சரியானவைதான். தேவை சார்ந்த விதிமுறைகளில் வாழ்பவர்களுக்கு மட்டுமே அவை ஏற்புடையவை. ஒரு மனிதர் விழிப்புணர்வு பெற்றுவிட்டால் அவர் ஜோதிடம், ஜோதிட யூகங் களுக்கு எல்லாம் அப்பால் சென்று விடுகிறார். தேவை சார்ந்த விதி முறை அவருக்குப் பொருந்தி வருவதில்லை. அதன் பிறகு அவர் முடிவற்ற ஆற்றலின் ஒரு அங்கமாக மாறுகிறார். வாழ்வின் ஒரு அங்க மாகிறார். அவர் கடவுளாகிறார். முற்றிலும் மாறுபட்ட வகையில் அவர் வாழ்கிறார். அவர் பற்றி எதுவும் ஜோதிடம் கூறிட இயலாது. அவர் யூகங்களுக்கு அப்பாற்பட்டவர்.

"உனது புத்தகங்களை எறிய வேண்டாம். என் போன்ற ஒரு மனிதனை உன்னால் இனி உனது வாழ்வில் மீண்டும் சந்திக்க முடியாது. கவலைப்படாதே! இது அரிதாக நடக்கும் செயல். ஒரு மனிதன்

சக்ரவர்த்தியாகப் பிறந்து, புத்தராக மாறுவது வெகு அரிதாக நடக்கும் ஒரு காரியம். சக்ரவர்த்தியாக இருப்பார், புத்தராக மாறுவது நிச்சயமாக ஒரு அரிய செயல். சக்ரவர்த்தியாக இருப்பதே அரிது. புத்தராக ஒருவர் இருப்பதும் அரிது. சக்ரவர்த்தியாக இருப்பவர் புத்தராக மாறும் ஒரு கூட்டிணைவு **மிகவும் அரிது.** இப்பிறவியில் மீண்டும் இதுபோன்ற ஒருவரை உன்னால் சந்திக்க இயலாது. பல பிறவிகள் எடுத்தாலும் பார்க்க முடியாது. எனவே கவலைப்படாதே! நான் விதிவிலக்கு. விதி விலக்கு விதியை நிரூபணம் செய்கிறது. நீ உனது ஜோதிட நூலைப் பயன்படுத்தலாம். உனது புத்தகங்களை எடு. உன் கணிப்பு எப்போதும் சரியே. இந்த ஒரு தடவை மட்டுமே உன் கணிப்பு தவறிவிட்டது."

விழிப்புணர்வுடன் இருங்கள்! கூடுதல் விழிப்புணர்வுடன் இருக்கும் அளவுக்கு நீங்கள் யூகங்களுக்கு அப்பாற்பட்டவராக மாறு வீர்கள். அதன் பிறகு ஒவ்வொரு கணமும் விடுதலையில் வாழ்வீர்கள். பதவி அதிகாரம் என்பது விடுதலையாகும். அதிகாரம் என்பது கடந்த காலத்து கர்மாவிலிருந்து விடுபடுவதாகும். பதவி என்பது கடந்த காலத் தால் நீங்கள் ஆதிக்கம் செய்யப்படமாட்டீர்கள். கடந்த காலம் உங்கள் மீது அதிகாரம் செலுத்தும் சக்தியை இழந்து விடுகிறது. ஒவ்வொரு கணமும் கடந்த காலத்திலிருந்து விடுபட்ட கணமாக மாறுகிறது. ஒவ்வொரு கணமும் புதிதாக, இளமையாக, கன்னித் தன்மையுடன் இருக்கிறது. நீங்கள் முழுமையான விடுதலையில் வாழ்கிறீர்கள். ஆனால் அதைப் பின்பற்றும்போது அதனுடன் நீங்கள் பந்தப்படுவது கிடையாது. ஒவ்வொரு கணமும் அழுக்குப்படாமல், தூய்மையாக - பளிங்கு போன்ற தெளிவுடன் இருக்கிறது.

தேவை சார்ந்த விதிமுறையை ஒட்டி வாழ்வது பந்தங்களில் வாழ்வதாகும். அது சம்சாரம் எனப்படுகிறது. அதற்கு பந்தம் சிறை என்று பொருள். கர்மா என்ற சொல்லின் முழு அர்த்தம் அதுதான். தேவை சார்ந்த விதிமுறை என்ற கருத்தை பிதாகோரஸ் கர்மவிதிமுறை என்ற கருத்திலிருந்து பெற்றுள்ளார். அவர் விளக்கும் வழிமுறை அது தான். கர்ம விதி இப்படிச் சொல்கிறது: நீங்கள் கடந்த காலத்தில் செய்தவை இன்னும் உங்கள் மீது ஆதிக்கம் செலுத்துகிறது. முடிந்து போன கடந்த காலத்திடம் பிடிபட்டிருக்கிறீர்கள். நீங்கள் கடந்த காலத்தால் திறமையாக கையாளப்படுகிறீர்கள். நேற்று நீங்கள் செய்தது எதுவாக இருந்தாலும் அது ஒரு குணாதிசயமாக கட்டமைப்பாக மாறு கிறது. அதை மீண்டும் இன்று திரும்பச் செய்கிறீர்கள். திரும்பச் செய்வது மூலம் கட்டாயப்படுத்துகிறீர்கள். நாளை அது பலமுள்ளதாகி விடும். அடுத்த நாள் மேலும் சக்திபெற்று விடும். ஒவ்வொரு பிறவி யிலும் ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்து கொண்டே இருக்கிறீர்கள்.

அது உங்கள் மனதில் தடம் பதித்து விடுகிறது. அதன் பிறகு அது முற்றிலும் தேவையான ஒன்றாக மாறுகிறது. ஒரு இயந்திர மனிதன் போல வாழ்கிறீர்கள்.

குர்ட்ஜிஃப் மனிதன் ஒரு இயந்திரம் என்று கூறுகிறார். நீங்கள் ஒரு புத்தராக மாறாதவரையில் ஒரு இயந்திரம்தான். **புத்தர்** என்ற சொல்லின் அர்த்தம் என்ன? விழிப்புணர்வு பெற்றவர் என்பதே **புத்தர்** என்பதன் பொருள்.

விழிப்புணர்வுடன் இருங்கள், விழிப்புணர்வு பெற்ற மனிதருக்கு குணாதிசயம் கிடையாது. விழிப்புணர்வு பெற்றவர் குணாதிசயம் இல்லாது இருப்பார் என்று நான் சொல்வது உங்களுக்கு வியப்பூட்ட லாம். **குணாதிசயம் இல்லாதவர்** என்ற சொல்லை நீங்கள் பயன் படுத்தும் பொருளில் எடுத்துக்கொள்ள வேண்டாம். அவர் முற்றிலும் மாறுபட்ட விதமாக குணாதிசயமற்று இருக்கிறார். ஆதிக்கம் செலுத்த கடந்தகாலம் அவருக்குக் கிடையாது. கட்டமைப்பு கிடையாது. அவர் பூரணமான விடுதலையுடன் இருக்கிறார். அவர் களங்கமற்றவர். முன்னேற்பாடாக உள்ள செயல்பாடுகளுக்கு அவர் உடன்படமாட்டார். அப்படி அவர் உடன்பட்டால் அது உடன்பாடாக இருக்காது. அது எதிர்வினையாக இருக்கும். இருக்கும் கணங்களை அவர் பிரதிபலிக் கிறார். செயலைப் பிரதிபலிக்கிறார்.

விழிப்புணர்வற்ற மனிதர் எதிர்ச்செயலில் ஈடுபடுவார். விழிப் புணர்வு கொண்டவர் செயல்படுவார். நீங்கள் விழிப்புடன் செயல் பட்டால், அந்த கணத்தில் முழுமையாக இருந்தால் நீங்கள் கர்மாவை உருவாக்கிக் கொள்ள மாட்டீர்கள். எந்த கட்டமைப்பையும் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. எப்போதும் நீங்கள் சுதந்திரமாக இருக்கிறீர்கள். கடந்த காலத்துக்கு அப்பால் நகர்ந்து கொண்டிருக்கிறீர்கள். பாம்பு பழைய தோலை உரித்துவிட்டு நழுவிச் செல்வதுபோல நீங்கள் கடந்த காலத்திலிருந்து விலகிச் செல்கிறீர்கள்.

அதன் பிறகு வாழ்க்கை இணையற்ற அழகு பெற்றுவிடுகிறது. ஏனென்றால் அங்கு ஆற்றல் இருக்கிறது. அது உங்கள் ஆற்றல் அல்ல என்பதால் அகந்தைப் பயணம் பற்றிக் கேள்வியே இல்லை. அகந்தை கடந்த காலத்திலிருந்து வெளிப்படுகிறது. தேவை சார்ந்த விதிமுறை யில் ஒரு அங்கமாக அகந்தை இருக்கிறது. அகந்தை உங்கள் குணாதி சயம். நல்லது கெட்டது எப்படியிருந்தாலும் பந்தம் என்ற சிறையில் அது உங்களை வைக்கிறது. முழுமையான உங்கள் கடந்த காலத்தி லிருந்து அகந்தை எழுகிறது.

ஒரு கணம் எண்ணிப் பாருங்கள். கடந்தகாலம் இல்லை என்றால் நீங்கள் யார்? சட்டென்று அகந்தைக் கட்டிடம் உடைந்துபோகிறது.

பதவியுள்ள மனிதர் சுயமாக சக்தி பெற்றவர் அல்ல. அவர் வாழ்க்கை என்ற ஆற்றலின் ஒரு வாகனமாகிறார். அவருக்கு எந்த உரிமையும் இல்லை. முழுமையின் ஒரு பிரதிநிதியாக மட்டும் செயல்படுகிறார். அவர் முழுமையான விடுதலையுடன் இருக்கிறார். முழுமையான மகிழ்வுடன் இருக்கிறார். தடைகள் இல்லை என்று அவர் அறிகிறார். அவர் முடிவற்றவர். நேரமும், காலமும் அவரைச் சார்ந்திருக்கவில்லை. காலம் நேரத்துக்கு அப்பாற்பட்டவர்.

ஞானமடைதல் என்பதன் அர்த்தம் இதுதான். குணாதிசயம் மறைவதுபோல் மறைதலாகும். மனிதன் மறைவது போல, அகந்தை அகல்வதுபோல, முழுமையுடன் ஒன்று சேர்வதுபோல நடக்கும் இச் செயல் நுட்பமான ஆன்மீக இணைப்பாகும். நீங்கள் இனி அங்கு இல்லை என்றாலும் வாழ்க்கை இருக்கிறது. வாழ்வே பதவியாகும்.

தேவை சார்ந்த விதிமுறையிலிருந்து ஆற்றலுக்குப் பாலம் அமைப்பது விழிப்புணர்வாகும். நீங்கள் எது செய்தாலும் அதில் கூடுதல் விழிப்புணர்வு இருக்கும். ஆற்றல் உலகில் நுழைவது உங்கள் பிறப்புரிமை. அது பிரகாசிக்கும், ஒளிவீசும் உலகமாகும்.

நான்காவது கேள்வி

**ஓஷோ,**

**நான் சந்நியாசியாவதற்கான நேரம் வந்துவிட்டதா? எது சரியான நேரம் என்று நான் கேட்கலாமா?**

ஒரு கப்பல் பயணத்தின்போது நடந்த சம்பவம் அது. கப்பலில் இருந்த கிளி மிகவும் சலிப்புற்றுப் போயிருந்த சமயத்தில் அங்கு ஒரு குரங்கும் இருப்பதைக் கண்டு சந்தோஷப்பட்டது. பொழுதைப் போக்கும் எண்ணத்துடன் குரங்கிடம், "ஒளிந்து விளையாடும் விளை யாட்டில் ஈடுபடலாமா?" என்று கிளி கேட்டது.

அதற்கு குரங்கு "அந்த ஆட்டம் பற்றி எனக்கு எதுவும் தெரியாது எப்படி விளையாடுவது?" என்றது.

கிளி விளக்கிச் சொன்னது. "மிகவும் எளிய விஷயம் அது. கண் களை மூடிக்கொண்டு சுவரைப் பார்த்தபடி நின்று நூறுவரை எண்ண வேண்டும். அந்த நேரத்தில் நான் எங்காவது சென்று ஒளிந்து கொள் வேன். எண்ணி முடித்த பிறகு நீ என்னைத் தேடிப்பிடிக்க வேண்டும்.

அவர்கள் விளையாட்டில் ஈடுபட்ட சமயம் கப்பல் வெடித்து விட்டது. குரங்கு நூறு என்று எண்ணி முடித்தபோது கப்பல் வெடித்தது. கடலில் மிதந்த ஒரு மரப்பலகையில் சென்று கிளி அமர்ந்து கொண்டது.

குரங்கு அந்த பலகையை நோக்கி நீந்தி வருவதற்கு முயன்று சோர்ந்து போனதைக் கிளி கவனித்தது. பலகை மீது ஏறிய குரங்கு கிளியைப் பார்த்து, "என்ன முட்டாள்தனமான விளையாட்டு இது?" என்று சீறியது.

எப்போது வாழ்க்கை ஒரு முட்டாள்தனமான விளையாட்டு என்று நீங்கள் உணர்கிறீர்களோ அந்த நேரமே சந்நியாசம் பெறுவதற்கு ஏற்ற தருணமாகும்.

**ஐந்தாவது கேள்வி**

**ஓஷோ,**

**கீழ்ப்படிதல் பற்றி கூடுதலாக நீங்கள் ஏதாவது சொல்ல முடியுமா? நல்ல காரியம் ஒன்றுக்காக கீழ்ப்படிந்து நடப்பது சரியானதா?**

என்னிடமுள்ள நற்குணம் விழிப்புணர்வு மட்டும்தான் என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் செயல்பட்டால் அது நல்லது. விழிப்புணர்வு இல்லாது செயல்பட்டால் அது தவறு. நற்செயல் என்பதெல்லாம் ஒரு பொருட்டே அல்ல. நீங்கள் விழிப் புணர்வு இல்லாது இருந்தால் நற்செயலும் மோசமான செயலாக மாறி விடும். விழிப்புணர்வுதான் எந்த ஒன்றுக்கும் அர்த்தம் தருகிறது.

வரலாற்றுப் புத்தகங்களைப் புரட்டிப் பாருங்கள். உலகில் எல்லா தீமைகளும் கொள்கை என்ற பெயரில்தான் நடந்திருக்கின்றன. கொள்கை என்ற பெயரில் கிறிஸ்தவர்களும், முகமதியர்களும், இந்துக் களும் ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டு அழித்துக் கொள்கிறார்கள். கொள்கை என்ற பெயரில் கம்யூனிஸ்டுகளும், சோசலிஸ்டுகளும், ஃபாஸிஸவாதிகளும் உலகில் மேலும் மேலும் வன்முறையை ஏற்படுத்திக் கொலைகள் செய்கிறார்கள்.

அடால்ஃப் ஹிட்லரின் செயல் கொள்கை ஏதுமற்றது என்றா நீங்கள் நினைக்கிறீர்கள்? அது கொள்கை அற்றதாக இருந்திருந்தால், ஜெர்மானியர்கள் போன்ற அறிவுள்ள ஒரு இனம் அவரை எப்படிப் பின்பற்றி நடந்திருக்கும்? உலக வரைபடத்தில் உள்ள அறிவுள்ள இனங்களில் ஒன்று ஜெர்மன் இனம் என்பதை நினைவில் கொள் ளுங்கள். அந்த இனத்தைச் சேர்ந்த நான்கு அறிவாளிகள் என்று புகழப் பட்ட ஃப்ரெடரிக் நியாட்ஷே, சிக்மெண்ட் ஃப்ராய்டு, காரல் மார்க்ஸ், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ஆகியோர் உலகிலேயே செல்வாக்குள்ளவர்களாக விளங்கினார்கள். நமது காலகட்டத்தைச் சேர்ந்த நான்கு பெரிய மனிதர் களாக இவர்கள் திகழ்கிறார்கள். இவர்கள் அனைவரும் ஜெர்மானிய உணர்விலிருந்து, மூலத்திலிருந்து தோன்றியவர்கள்.

இப்படிப்பட்ட அறிவுள்ள இனத்தைச் சேர்ந்தவர்கள் எப்படி ஹிட்லர் என்ற முட்டாள்தனமான அதிகார வெறியனைப் பின்பற்றி நடந்தார்கள்? கொள்கை என்ற பெயரில் அது நடந்தேறியது. இந்த உலகம் துன்பத்தில் உழல்கிறது. உலகை உயர்குல மக்களாகிய ஆரிய இனத்தவர் மட்டுமே ஆளவேண்டும் என்றார் ஹிட்லர். **ஆரியர்** என்ற சொல் உயர்குலம் என்று பொருளுடையது என்று உங்களுக்குத் தெரியுமா? உயர்குலத்தின் உயர்குலத்தவர்களால் உலகம் கட்டுப் படுத்தப்பட வேண்டும், ஆளப்பட வேண்டும்.

**ஆரியன்** என்பது சமஸ்கிருத வார்த்தை. அதன் பொருள் சிறந்த உயர்குலத்தோன் என்பதாகும். அந்த ஆரியன் சொல்லுக்குப் பின்னால் ஹிட்லர் எல்லாவிதமான அசிங்கங்களையும் மறைத்துவிட்டான். லட்சக்கணக்கான மக்கள் அவனைக் கீழ்ப்படிந்து நடந்தார்கள். காரணம் கொள்கை சிறப்பானதாக இருந்தது. நற்கொள்கை என்ற பெயரில் லட்சக்கணக்கான யூதர்கள் எரித்துக் கொல்லப்பட்டார்கள். லட்சக்கணக் கானவர்கள் சித்திரவதை முகாம்களில் சீரழிந்து போனார்கள். அவர் களைச் சித்திரவதை செய்தவர்கள் அறிவில்லாத மனிதர்கள் அல்ல. அவர்கள் திறமையும், அறிவும் நிரம்பியவர்கள். சிறந்த ஒரு கொள்கைக் காக அவர்கள் கீழ்ப்படிந்து நடந்து கொண்டார்கள்.

ரஷ்யாவில் என்ன நடந்தது? அடால்ஃப் ஹிட்லரைப் போலவே இருந்த மற்றொரு மனிதராக ஜோஸப் ஸ்டாலின் பல லட்சம் மனிதர் களை மீண்டும் அதே கொள்கை என்ற பெயரில் கொன்று குவித்தார். கம்யூனிஸம் நிலை நிறுத்தப்பட வேண்டும் என்றால், எந்த தியாகமும் பெரிய விஷயமல்ல என்றார் அவர். வர்க்க பேதமற்ற கம்யூனிஸம் என்ற சொர்க்கம் பூமிக்கு வருமானால் எந்த தியாகமும் பெரியது அல்ல.

இதுபோலவே காலங்காலமாக நடந்து கொண்டிருக்கிறது. கிறிஸ்தவ மதத் தீவிரவாதிகள், முகமதியப் புனிதப் போர்வீரர்கள் போன்றோர் மதத்தைக் காப்பாற்றப் போர்புரிந்தார்கள். இஸ்லாம் ஆபத்தில் இருக்கும்போது அதைப் பாதுகாத்திட வேண்டும். கொள்கை என்ற பெயரில் அது நடக்கவேண்டும். கிறிஸ்தவம் ஆபத்தில் இருக்கும் போது எல்லா விதிமுறையும் அனுமதிக்கப்படுகிறது. ஆனால் இஸ்லாம் ஆபத்தில் இருக்கிறது என்று யார் தீர்மானிப்பது? கிறிஸ்தவம் ஆபத்தில் இருக்கிறது என்று யார் முடிவு செய்வது? ஒருவர் ஆரியனா இல்லையா என்று யார் தீர்மானிப்பது?

தாங்கள் மட்டுமே கடவுளால் தேர்வு செய்யப்பட்டவர்கள் என்று யூதர்கள் நம்புகிறார்கள். நார்டிக் இனத்தவர்தான் தூய்மையான

ஆரியர்கள் என்று ஹிட்லர் கருதினான். அவர்களே கடவுளால் தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் என்று நம்பினார். இரண்டு பேர் ஒரு இடத்தில் இருக்க முடியாது. ஒருவர் அழிக்கப்பட வேண்டும். போட்டியாளர் அழிக்கப்பட்டாக வேண்டும். மனித இனத்தின் மனிதத்தன்மையற்ற வரலாற்றைப் புரட்டிப் பாருங்கள். சிறந்த கொள்கைகளுக்குக் கீழ்ப் படிதல் என்ற பெயரில் பெரிய அளவில் துயரங்கள் ஏற்பட்டு அது மனித இனத்தை வருத்தியிருப்பதை உணரலாம்.

"நல்ல கொள்கைக்குக் கீழ்ப்படிவது சரியல்ல என்று கூறு கிறீர்களா?" என்று நீங்கள் கேட்கலாம். அப்படியில்லை. விழிப்புடன் இருந்து செயல்படுங்கள். விழிப்புடன் இருந்து கீழ்ப்படிந்து நடங்கள். கீழ்ப்படிதல் வெளிப்புற விஷயங்கள் சார்ந்ததாக இருக்கலாகாது. அது அகம் சார்ந்து அமைய வேண்டும். எது பணயமாக வைக்கப்படுகிறது என்று புரிந்துகொள்ள வேண்டும். உங்கள் சுயவிழிப்புணர்வின் துணை யுடன் ஆம் அல்லது இல்லை என்று சொல்லலாம். அதன் பின்னரே இந்த உலகம் கூடுதல் மனிதத்தன்மை பெறும். சிறப்படையும்.

ஹிரோஷிமா, நாகசாகி நகரங்கள்மீது அணுகுண்டு வீசிய மக்களில் இருவர் மட்டும் அதை வேண்டாம் என்று கூறினார்கள். ஒரு லட்சம் பேர் வசித்த ஹிரோஷிமா நகரில் இருந்தவர்கள் எல்லோரும் ஏதுமறியாதவர்கள். சிறிய குழந்தைகள், பெண்கள், முதியவர்கள் என்று பலரும் அங்கு வசித்தார்கள். சில விநாடிகளில் அவர்களைக் கொல்லும் அணுகுண்டை ஏன் போட வேண்டும்? பத்து விநாடிகளில் ஹிரோஷிமா நகரம் பிணக்காடாகி விட்டது. பத்து நிமிடங்களுக்கு முன்பு அது உயிர்ப்புடன் திகழ்ந்தது. பெண்கள் உணவு அருந்தும், ஆடிப்பாடும், சகலகாரியங்களிலும் ஈடுபடும் நேரம் அது. சில விநாடிகளுக்கு முன்னர் எல்லாம் உயிர்ப்புடன் இருந்தது. சில கணங்களுக்குப் பிறகு ஹிரோஷிமா கல்லறையாக மாறிவிட்டது. எல்லா மனிதர்களும் இறந்து விட்டார்கள்.

குண்டைப் போட்ட மனிதர் வேண்டாம் என்று சொல்லியிருக்க லாம். ஆனால் ஒரு நல்ல கொள்கையின் பொருட்டு அதற்கு உடன் பட்டார். என்ன அந்த கொள்கை? ஜனநாயகம் என்பதுதான் அது! அந்த பெரிய சொற்கள் மிகவும் ஆபத்தானவை. அதன் பின்னால் நீங்கள் எதையும் மறைத்து வைத்துவிடலாம். இப்போது ஜனநாய கத்தின் பின்னால் முதலாளித்துவம் ஒளிந்து கொண்டிருக்கிறது. சமத் துவம் என்ற பெயரில் பின்னால் கம்யூனிஸம் ஒளிந்திருக்கிறது. பெரிய சொற்களைக் கவனியுங்கள். அரசியல்வாதிகள் கூறும் பெரிய சொற்கள்" விஷயத்தில் கவனமாக இருங்கள். அதில் ஏதாவது ஆபத்து மறைந்து கிடக்கலாம்.

எனவே பின்பற்றிச் செல்லாதீர்கள். அதைவிட செத்துப் போவது நல்லது. அணுகுண்டைப் போடும் மனிதர் வேண்டாம் என்கிறார். அவரை நீதிமன்றத்தில் நிறுத்திக் குற்றம் சாட்டவும் வாய்ப்பு உள்ளது. ஏன்? 'என்னைக் கொல்லுங்கள். அது சிறிய குற்றம்தான். நான் சாக ஆசைப்படுகிறேன்' என்று அவர் கூறலாம். அது ஒரு நல்ல கொள்கையாக இருக்க முடியும். "என்னைச் சுட்டுக் கொல்லுங்கள். ஆனாலும் நான் குண்டு போடவேண்டாம் என்றுதான் கூறுவேன். அப்பாவி மக்கள் மீது குண்டைப் போட மாட்டேன்" என்பார்.

ஏழை வியட்நாமியர்களை அழித்த மனிதர்களைப் பார்த்து பலர் "வேண்டாம்!" என்று கூறினார்கள். அது தொடர்ச்சியாக எல்லா இடத்திலும் திரும்பத் திரும்ப உலகம் முழுவதும் சொல்லப்பட்டது. நாம் கூடுதல் விழிப்புணர்வு பெற வேண்டிய நேரம் இது.

கீழ்ப்படிதல் என்ற பண்பு என்பது சுயநலத்திற்காக பயன்படுத்தப் படுகிறது. கீழ்ப்படிதல் என்பது ஒரு சூட்சுமமான தந்திரமாக அரசியல் வாதி, பாதிரியார்களால் பயன்படுத்தப்படுகிறது. அது உங்கள் விழிப் புணர்வில் இருந்து வெளிப்பட்டால், அது நல்லது என்று தோன்றி னால், உங்கள் தலைவர்கள், உங்கள் அரசியல்வாதிகள், உங்கள் பாதிரியார்கள் நல்லதில்லை என்றால் அதை நல்ல விஷயம் என்று கூறுங்கள். நீங்கள் அதை நல்ல ஒன்று என்று கருதினால் அது உங்கள் பொறுப்பு. உங்கள் தனிப்பட்ட உணர்வுதான் அதை தீர்மானிக்க வேண்டும். ஒவ்வொரு மனிதரும் தனது சுயவிழிப்புணர்வை உரு வாக்கிக் கொள்ளவேண்டும். அப்போதுதான் சிறந்த உலகைப் படைக்க முடியும். இல்லாதுபோனால், இருபத்தைந்து ஆண்டுகளில் இந்த உலகம் தற்கொலை செய்து கொண்டுவிடும்.

இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் கொள்கைக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்ற முட்டாள்தனமான கருத்து முழுமையாக மனித சமுதாயத்தை அழித்துவிடப் போகிறது. மனித இனத்தை மட்டுமல்ல, பூமியில் உள்ள எல்லா உயிர்களையும், மரங்கள், பறவைகள், மிருகங்கள் போன்ற அனைத்தையும் அழித்துவிடும். பல லட்சம் உயிரினங்கள் இந்த உலகில் உள்ளன. இது ஒரு கொண்டாட்டம்.

காலங்காலமாக உங்கள் மனதில் விதைத்து வைக்கப்பட்டுள்ள இந்த முட்டாள் கருத்தை நீங்கள் சுமந்துகொண்டு இருந்தால், தாய்ப் பாலுடன் ஒரு விஷயம் உங்களுக்குப் புகட்டப்பட்டிருக்கிறது. கீழ்ப் படிந்து நடக்க வேண்டும் என்பதே அந்த புகட்டலாகும். நான் உங்க ளுக்கு விழிப்புணர்வைக் கற்றுத் தருகிறேன். விழிப்புணர்வு இல்லாத நிலையில் முற்றிலும் வேறுபட்ட ஒரு கீழ்ப்படிதல் உருவாகிறது.

அப்போது நீங்கள் ஆம் என்று கூறுவீர்கள். காரணம், உங்கள் இதயம் ஆம் என்று சொல்கிறது. உங்கள் இதயம் இல்லை என்று கூறினால், இல்லை என்று சொல்லுங்கள். இல்லை என்பதற்காக எந்த துன்பத்தை யும் ஏற்கத் தயாராக இருங்கள். அது மனித இனத்தின் பெருந்தன்மை யாகும்.

ஆர்தர் கோஸ்லர் ஒரு அனுபவம் பற்றிக் கூறுகிறார். அதை யோசித்துப் பாருங்கள்.

டாக்டர் ஸ்டான்லி மில்கிராம் என்பவர் உயர்ந்த தனித்துவமான பரிசோதனைகளை நடத்தினார். சிறந்த ஒரு கொள்கைக்காக ஒரு சாசரி மனிதன் சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து கடுமையான வலியை எவ்வளவு தூரம் தாங்கிக்கொள்ள முடியும் என்று கண்டறிய ஆய்வுகள் நடத்தினார்.

கல்வி ஒரு சிறந்த கொள்கை. மூன்று மனிதர்கள் அதில் சம்பந்தப் பட்டிருந்தார்கள். பேராசிரியர் ஒருவர் அதிகாரப்பூர்வமான மனிதர். கற்பவர் அல்லது பலியிடப்பட்டவர் என்பவர் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டவர். பேராசிரியரை, ஆசிரியர்போல் நடந்து தவறான விடை வரும் போதெல்லாம் கடும் தண்டனை தரும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். பேராசிரியர் உத்தரவுப்படி மின்சார அதிர்ச்சி தரப் படும். கற்றுக் கொள்பவர் ஒருவகை மின்சார நாற்காலியில் கட்டப் பட்டார். ஆசிரியர் மின் அதிர்ச்சி தரும் கருவி முன்னர் அமர்ந்திருந்தார். அதில் முப்பது பொத்தான்கள் இருந்தன. பதினைந்து வோல்ட் முதல் ஐம்பது வோல்ட் வரையில் மின் அதிர்ச்சி தரக்கூடிய பொத்தான்கள் அவை. அதில் 'லேசான மின் அதிர்ச்சி', 'தீவிரமான அதிர்ச்சி", 'ஆபத்தான அதிர்ச்சி', 'மோசமான அதிர்ச்சி' என்று குறிப்புகள் எழுதப் பட்டிருந்தன.

உண்மையில் அந்த அமைப்பு நம்பிக்கை ஏற்படுத்த உருவாக் கப்பட்ட ஒன்றாகும். துன்புறுத்தக் கட்டி வைக்கப்பட்டவன் ஒரு நடிகர். அதிர்ச்சி தரும் மின் இயந்திரம் போலியானது. பரிசோதனையை ஏற்பாடு செய்த ஆசிரியர் உத்தரவிட்டதும் மின் அதிர்வுகளின் மூலம் வலிகள், கூச்சல்கள் தோன்றியதாக நடிகர் கத்தியதை அவன் நிஜமென்று நம்பிவிட்டார்.

கற்றுக் கொள்பவரிடம் நீளமான இரட்டைச் சொற்கள் தரப் பட்டன. நீலப்பெட்டி, நல்ல நாள், காட்டு வாத்து என்று பலவிதமாக அவை இருந்தன. பரிசோதனை நடக்கும்போது ஏதாவது ஒரு வார்த்தை சொல்லப்படும். உதாரணமாக நீலம் என்று சொல்லிவிட்டு அதற்கு நான்கு மாற்று பதில்களும் தரப்படும். நீலநிற மை, நீலவானம், நீல விளக்கு என்று அவை இருக்கும். அதில் எது சரியான வார்த்தை என்று

கண்டுபிடிக்க வேண்டும். கற்றுக் கொள்பவர் தவறான பதில் தரும் போது மின்அதிர்ச்சி தரும்படி ஆசிரியரிடம் பேராசிரியர் உத்தர விட்டார். ஒவ்வொரு தவறான பதிலுக்கும் மின்அதிர்ச்சி கூடுதல் ஆகும். பதினைந்து வோல்ட் மின் அதிர்வு அதிகரிக்கப்படும்.

என்ன நடக்கிறது என்ற விழிப்புணர்வு ஆசிரியருக்கு ஏற்பட வேண்டும் என்பதற்காக கற்றுக் கொள்பவராக நடித்த நடிகர் நன்கு ஒத்துழைத்தார். எழுபத்தைந்து வோல்ட் மின்சாரம் பாய்ச்சப்பட்ட போது மெதுவான முனகினார். அதிகமாக நூற்றைம்பது வோல்ட் மின்சாரம் பாய்ச்சப்பட்டபோது, "என்னை இங்கிருந்து வெளியே கொண்டு போய்விடுங்கள்! என்னால் பரிசோதனையில் கலந்துகொள்ள முடியாது. "தொடர்ந்து பணிபுரிய மறுக்கிறேன்" என்று கத்தினார். அவர் தன்னார்வத் தொண்டர் என்று ஆசிரியர் கருதிவிட்டார்.

நூற்றைம்பது வோல்ட் மின் அதிர்வின்போது பலமான கூச்ச லுடன் அவர் தொடர்ந்து பங்களிப்பாளராக இல்லை என்று உறுதிப் படுத்தினார். அவர் பதில் தரவில்லை. மின்அதிர்ச்சி தரப்பட்டபோது பலமாகக் கத்தினார். முன்னூற்று ஐம்பது வோல்ட் மின் அதிர்வுக்குப் பிறகு பேராசிரியர் பதில் சரியா தவறா என்று கவலைப்படாமல் திட்ட மிட்டபடி மின்அதிர்ச்சி அளவை அதிகரிக்கச் சொன்னார். நானூற்று ஐம்பது வோல்ட் மின்சாரத்தை மூன்று முறை அளித்த பிறகு பரி சோதனையை நிறுத்திவிடச் சொன்னார்.

சராசரி மனிதர்களில் எத்தனை பேர நானூற்று ஐம்பது வோல்ட் மின்சாரத்தை உடலில் தாங்கிச் சித்ரவதையை ஏற்றுக்கொள்ள சம்மதித்துக் கீழ்ப்படிவார்கள்? ஆயிரத்தில் ஒருவர் சம்மதிக்கலாம் என்பதே விடையாக அமையலாம். உடலை வதைத்துக் கொள்வதில் இன்பம் காணும் மனிதராக அவர் இருக்கலாம்.

ஆராய்ச்சியைத் துவங்கும் முன்னர் மில்கிராம் மனோதத்துவம் சிகிச்சையளிக்கும் ஒரு குழுவினிடம் ஆய்வின் முடிவு எப்படியிருக்கும் என்று கலந்து பேசினார். பரிசோதனையில் பங்கேற்றுக் கீழ்ப்படிய யாரும் விரும்பமாட்டார்கள் என்று அவர்கள் யூகம் தெரிவித்தார்கள். மனோதத்துவச் சிகிச்சையாளர்கள் நூற்றைம்பது வோல்ட் அதிர்ச்சிக்கு அதிகமாக யாரும் ஏற்றுக்கொள்ள சம்மதிக்கமாட்டார்கள் என்று ஒட்டு மொத்தமாக கருத்துத் தெரிவித்தார்கள். முன்னூறு வோல்ட் மின் சாரத்தை ஏற்றுக்கொள்ள நான்கு சதவீதம் பேர்தான் சம்மதிப்பார்கள். ஆயிரத்தில் ஒருவராக உள்ள உடலைச் சித்திரவதை செய்துகொள்ளும் மனிதர் மட்டும் அதிபட்ச அதிர்ச்சிக்கு உடன்படுவார் என்றார்.

உண்மை என்னவென்றால், அறுபது சதவீதம் பேர் கடைசிவரை பரிசோதனையில் பங்கெடுத்து கீழ்ப்படிந்தார்கள். நானூற்று ஐம்பது வோல்ட் மின்சாரத்தை ஏற்றார்கள். அவர்கள் எண்ணிக்கை அறுபது சதவீதம் என்பது நினைவிருக்கட்டும்!

இந்த பரிசோதனை இத்தாலி, தென்னாப்பிரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற இடங்களில் நடத்தப்பட்டபோது கீழ்ப்படிந்து நடந்தவர்கள் எண்ணிக்கை அதிகரித்துக் காணப்பட்டது. மியூனிச் நகரில் அது எண்பத் தைந்து சதவீதமாக இருந்தது.

சம்பந்தப்பட்டவரை அதிர்ச்சியுற வைக்கும் செயல் துன்புறுத்தும் விருப்பம் காரணமாக எழவில்லை. அவர்கள் ஒருவித சமூக அமைப்பின் அடிப்படையில் கீழ்ப்படிதலுடன் இணைந்தார்கள். இக்கருத்தை நிரூபிக்க விரும்பிய மில்கிராம் மேலும் சில பரிசோதனைகள் நடத்தி னார். கற்றுக் கொள்பவர் பதில் அளிக்கும்போது ஆசிரியர் தனது இஷ்டம்போல மின்சார அளவை உயர்த்திக் கொள்ளலாம் என்று அனுமதி தரப்பட்டது. முழு சுதந்திரம் தரப்பட்டபோதிலும் எல்லோ ருக்கும் குறைவான அளவில்தான் மின்அதிர்ச்சிகள் தரப்பட்டன. மின் அதிர்ச்சியின் அளவு ஐம்பத்தைந்து வோல்ட்டாக இருந்தது. எழுபத் தைந்து வோல்ட் மின் அதிர்வின் போதுதான் சிறிய அளவில் முறை யீடுகள் தலைதூக்கின என்பது கவனத்திற்குரியது.

உண்மையாகவே பரிசோதனை நடந்தபோது கட்டளைப்படி ஆசிரியர்கள் நடந்தார்கள். நாற்பது பேரில் இருபத்தைந்து பேருக்கு நானூற்று ஐம்பது வோல்ட் மின்அதிர்ச்சி தரப்பட்டது. சுதந்திரமாக முடிவெடுக்கும் உரிமை அளிக்கப்பட்ட பரிசோதனையின்போது நாற்பது பேரில் முப்பத்தெட்டு பேருக்கு நூற்றைம்பது வோல்ட்டுக்கும் அதிகமாக மின் அதிர்ச்சி தரப்படவில்லை. முறையே முன்னூற்று இருபத்தைந்து, நானூற்று ஐம்பது என்று உயர்மின் அதிர்ச்சி தரப்பட்ட போது மட்டும் இருவர் பலமாக எதிர்ப்புக் காட்டினார்கள்.

பரிசோதனையின்போது கூடுதல் மின்அதிர்ச்சி தருவதில் யாரும் மகிழ்ச்சியடையவில்லை. பலவிதமான உணர்ச்சித் துடிப்பையும், வருத்தத்தையும் வெளிப்படுத்தினார்கள். சிலருக்கு வியர்த்துக் கொட்டியது. வேறு சிலர் பேராசிரியரிடம் இந்த பரிசோதனையை நிறுத்திவிடுமாறு கோரினார்கள். அல்லது பரிசோதனை குரூரமானது என்று எதிர்ப்புத் தெரிவித்தார்கள். ஆனாலும் மூன்றில் இருவர் கசப்பின் எல்லைக்குச் சென்றனர்.

நூற்றாண்டுக் காலமாக நமக்குக் கீழ்ப்படிதல் பற்றிக் கற்பிக்கப் பட்டு வந்திருக்கிறது. கொள்கைக்காக கீழ்ப்படிந்து நடப்பது புனித

மானது. கீழ்ப்படியாது இருப்பது பாவம் என்று கூறப்பட்டுள்ளது. கொள்கைக்காக கீழ்ப்படியாது போகும்போது உங்களுக்கு குற்றஉணர்வு தோன்றுகிறது. கீழ்ப்படியும்போது மகிழ்வு ஏற்படுகிறது. நீங்கள் சுய விருப்பம் காரணமாகவும் கீழ்ப்படியலாம். அதில் உள்ள முட்டாள் தனம், பயனற்ற தன்மை, குரூரம் போன்றவற்றை நீங்கள் அறிய இயலும்.

ஹிரோஷிமா நகரின் மீது குண்டு வீசிய அந்த மனிதர் அன்று இரவு நிம்மதியாகத் தூங்கினார். மறுநாள் காலையில் அவரது மன நிலை இரவில் எப்படியிருந்தது என்று கேட்டபோது, "நன்றாக இருந்தது" என்று அவர் பதில் தந்தார். ஜனங்களால் அதை நம்ப முடிய வில்லை. நீங்கள் இரவில் தூங்கினீர்களா?" என்று கேட்டனர் மக்கள். லட்சம் பேர் உங்களால் எரித்துக் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இரவில் உங்களால் தூங்க முடிந்ததா?" அதற்கு அவர், "நான் நன்றாகத் தூங்கி னேன். ஏனென்றால், நான் எனது கடமையைச் செய்தேன். ஒருவர் தனது கடமையைச் சரியாகச் செய்யும்போது அவர் நிம்மதியாக உறங்க முடியும்" என்றார்.

அமெரிக்க அதிபராக ட்ரூடன் இருந்த சமயத்தில்தான் அணு குண்டு வீசப்பட்டது. "நீங்கள் இது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று அவரிடம் கேட்டபோது, எனக்குப் பெருமையாக இருக்கிறது. ஒரு கொள்கை நிறைவேற்றப்பட்டுவிட்டது. ஃபாசிஸ சக்திகளை எதிர்த்து நின்று ஜனநாயகம் வென்றுவிட்டது" என்றார்.

பெரிய வார்த்தைகள் எப்போதும் ஆபத்து நிறைந்தவை என்பதை நினைவில் கொள்ளுங்கள். பெரிய வார்த்தைகள் தம்முள் மயக்கும் சக்தி பெற்றிருக்கின்றன. கடவுள், மதம், பைபிள் போன்றவை பெரிய வார்த்தைகள். பெரிய வார்த்தைகள் உங்களை மயங்கிவிடுகின்றன. அதிக விழிப்புணர்வற்ற நிலையை அவை உங்களிடம் ஏற்படுத்திவிடு கின்றன. இந்த வார்த்தைகள் துணை இல்லாதுபோனால், அவற்றில் இறங்குவது பற்றிக் கற்பனை செய்திருக்க முடியாத காரியங்களை நீங்கள் செய்து விடுவீர்கள்.

சிறந்த கொள்கை என்பது மிகவும் ஆபத்தான ஒரு விளையாட்டு என்பதை நினைவில் கொள்ளுங்கள். சிறந்தது என்று யார் முடிவு செய் தார்கள்? நாம் ஒவ்வொருவரும் சுயஉணர்வின் அடிப்படையில் முடிவு எடுக்கிறோம்.

மியூனிச் நகரில் கீழ்ப்படிதலின் சதவீதம் ஏன் அதிகமாக இருந்தது? அது எண்பத்து ஐந்து சதவீதம்! காரணம் ஜெர்மானியர்கள் மிகவும் கீழ்ப்படிதல் உள்ளவர்கள்! அப்படி அவர்களுக்குப் பயிற்சி

தரப்பட்டுள்ளது. அது அவர்களின் குணாதிசயம். அது பாராட்டப்படு கிறது. அது அவர்களின் உள்முக இயக்கத்தின் ஒரு அங்கமாகவும், பொதியாகவும் இருக்கிறது. சட்டத்திற்குக் கீழ்ப்படியாது போவது என்பது நடக்க இயலாத ஒரு செயலாகும்.

உங்கள் பொறுப்பை உதறித்தள்ளுவது எளிதாக இருக்கிறது. "நான் என்ன செய்யட்டும்? எனக்கு உத்தரவு போட்டுவிட்டார்கள்!" என்று எப்போதும் சாக்குச் சொல்கிறீர்கள். பெரிய மனிதர்கள் சொல்லும் பெரிய உயர்மட்டத்திலிருந்து உத்தரவு வடிவில் வருகிறது. அங்கிருந்து படிப்படியாகத் தொடர்ந்து செல்கிறது. "ராணுவ நிபுணர்கள் எனக்கு ஆலோசனை கூறினார்கள்" என்று ஜனாதிபதி சொல்வார். இப்படி பலரும் பேசுவார்கள். இவ்வாறு அது சுற்றிச்சுற்றிச் செல்கிறது. உண்மையில் யாரும் பொறுப்பேற்பதில்லை. யாரோ ஒருவர் தோளில் பொறுப்பைச் சுமத்தி விடுகிறார்கள்.

நிஜமான ஆன்மீகவாதிதான் பொறுப்புள்ள மனிதர். அவர் "இதற்கு நானே பொறுப்பு. நான் ஏதாவது செய்தால் அதற்கு நான் பொறுப்பு. அதைச் செய்யலாமா அல்லது வேண்டாமா என்று நான் யோசிக்க வேண்டும். எனது சுய விழிப்புணர்வு அனுமதித்தால் அதைச் செய்யலாம். இல்லாதுபோனால் தொடர்நிகழ்வுகள் எதுவாக இருந் தாலும் நான் கீழ்ப்படிய மாட்டேன்" என்று கூறுகிறார்.

எனவே கீழ்ப்படிதல் என்பது ஒரு மதிப்பு உள்ள விஷயமாக எனக்குத் தோன்றுவதே இல்லை. அதுபோலவே கீழ்ப்படியாமையும் ஒரு மதிப்பற்ற காரியமாகத் தெரிவதில்லை. நீங்கள் சுயமாகப் புரிந்து நடப்பதுதான் மதிப்பிற்கு உரியது. அதிலிருந்து கீழ்ப்படிதல் தோன்றி னால் நல்லது. அதிலிருந்து கீழ்ப்படியாமை தோன்றினாலும் நல்லது தான்.

நல்லொழுக்க விதிமுறைகள் மறைவதில்லை. ஆனால் அவை முற்றிலும் புதிய அர்த்தம் பெற்றுவிடுகின்றன. ஒருவருக்குக் கீழே பணியாற்றும் நபர் தமது செயல் மூலம் அவமானமோ அல்லது பெருமையோ கொள்வது அதிகார மேலிடம் இடும் கட்டளைக்கு அவர் எவ்வாறு கீழ்ப்படிந்து செயல்படுகிறார் என்பதைப் பொறுத்து அமைகிறது. விசுவாசம், கடமை, கட்டுப்பாடு, கீழ்ப்படிதல் என்று மொழி பல்வேறு வார்த்தைகள் மூலம் அந்த நல்லொழுக்கத்திற்குத் துல்லியமான விளக்கம் தருகிறது.

சிறந்த சொற்கள்! அவற்றிடம் கவனமாக இருங்கள்! எப்போதும் சிறந்த சொற்களிடம் கவனம் தேவை. **எனது தேசம், தாய்நாடு, தந்தையர் தேசம், தேவாலயம், கோவில்** போன்ற சொற்களிடம்

எச்சரிக்கை அவசியம்! அவை உங்களை சுயஉணர்வற்றவர்களாக, இயந்திர மனிதர்கள் போல மாற்றிவிடும்.

மனித இனம் தப்பிப் பிழைக்க வேண்டிய பெரிய ஆபத்தாக இது இப்போது அமைந்திருக்கிறது. மனிதன் ஒரு ஸ்தாபனக் கட்டமைப்பில் தன்னுடைய தனிப்பட்ட குணாதிசயத்தை இணைத்துக் கொள்வது தவிர்க்கமுடியாத ஒன்றாக மாறும்போது, தனது மனிதாபிமானத்தைக் கைவிட்டுவிட வேண்டியுள்ளது. அது ஆபத்தான கோபம், வன்முறை, அழிவுச் செயல் என்ற பெயரில் நடப்பதில்லை. ஆனால் மதிப்புள்ள கீழ்ப்படிதல் என்ற கருத்தை வைத்துக்கொண்டு நடந்தேறுகிறது.

விசுவாசம், கட்டுப்பாடு, தியாகம் போன்ற தனிமனித நற்பண்புகள் யுத்தம் என்ற அழிவு ஏற்படுத்தும் ஸ்தாபனக் கட்டமைப்புச் சக்தியின் வசப்படும்போது, தீமை செய்யும் அந்த அதிகார அமைப்பு மனிதர்களைக் குருடாக்கி மேற்படிச் சொற்களுக்கு எதிரிடையான பொருளைத் தந்துவிடுகிறது.

புதிய மனித சமுதாயத்தை உருவாக்க விரும்பினால் மனிதர்களின் முழுமையான மனஇயல்பு பற்றி மறுஆய்வு செய்யவேண்டும். கடந்த காலம் ஒரு மோசமான மனத்தை உருவாக்கி வைத்துவிட்டது. அவை அழகான பெயர் பட்டைகளுடனும் அழகாக வரையப்பட்ட புன்னகைகளுடன் இருக்கின்றன. ஆனால் அவற்றின் பின்னால் மோசமான மிருகத்தனம் உள்ளது.

தனிமனிதர்களுக்கு நான் வற்புறுத்திச் சொல்ல விரும்புவது என்னவென்றால், சமூகத்தையோ, நாட்டையோ, மதத்தையோ சார்ந்து இருக்காதீர்கள். நான் தனிமனிதர்களிடம்தான் வற்புறுத்துகிறேன். மனிதர்கள்தான் சகலவிதமான சமூக பந்தங்களில் இருந்தும் அடிமைத் தனத்தில் விடுபட இயலும். இதையே சந்நியாசிகள் செய்கிறார்கள். விழிப்புணர்வு கொள்ளுங்கள். விழிப்புணர்வு பெற்ற பின்னர் கீழ்ப் படிதலும் நல்லது. கீழ்ப்படியாமையும் நல்லது. ஆனால் அது உங்கள் விழிப்புணர்வில் வேறூன்றி இருக்கவேண்டும். அதன் பிறகு எல்லாமே நல்லதுதான். விழிப்புணர்வு இல்லாவிட்டால் கீழ்ப்படிதலும் கெட்டது. கீழ்ப்படியாமையும் கெட்டது.

மீண்டும் நான் நினைவுபடுத்த விரும்புகிறேன். கீழ்ப்படியாது இருங்கள் என்று நான் சொல்லவில்லை. அது விழிப்புணர்விலிருந்து வெளிப்பட்டால் நீங்கள் 'முடியாது' என்று கூறுவீர்கள். சரி என்று சொல்வதைப் போலவே அதுவும் கெடுதல்தான். நான் உங்களுக்குக் கீழ்ப்படியாமை, ஒழுங்கீனம், கட்டுப்பாடின்மை பற்றிக் கற்றுக்

கொடுக்க எண்ணவில்லை. நான் தவறாகப் புரிந்து கொள்ளப்படு கிறேன். நான் சொல்வது என்னவென்றால், உங்களைப் பொறுப்புள்ள வராக இருங்கள் என்பதே ஆகும்.

தனிமனிதர் எது செய்தாலும் அதற்கு அவர் முழுவதும் பொறுப் பானவர். எனவே நீங்கள் சிந்திக்க வேண்டும், பரிசீலிக்க வேண்டும். உங்கள் செயல்கள் சிந்தனையிலிருந்து வெளிப்பட வேண்டும். நீங்கள் செய்யும் எதுவும் பண்புள்ளதாக இருக்க வேண்டும். நீங்கள் செய்யும் எதுவும் நியாயமானதாக இருக்க வேண்டும். அது முற்றிலும் மாறு பட்ட நீதிமுறையாக அமைய வேண்டும்.

**கடைசி கேள்வி**

ஓஷோ,

தங்களுக்குத் திருமணம் நடந்த அன்று இரவில் நடைபெற்ற சம்பவங்கள் பற்றி என்பத்து இரண்டு வயது முதியவர்கள் இருவர் பேசிக்கொண்டது பற்றிய கதையை இன்று காலையில் நீங்கள் சொன்னபோது, அந்த குறிப்பிட்ட ஒரு இடத்தில் நான் வாய்விட்டுச் சிரித்துவிட்டேன். நான் நிதானமிழந்து விட்டதை உணர்ந்து வாய்மீது கையை வைத்துக் கட்டுப்படுத்திக் கொண்டேன். என்னால் கட்டுப்படுத்த முடிவதில்லை. நீங்கள் கதை சொல்லும் விதம் என்னைக் கவர்ந்துவிடுகிறது. அடுத்த சொற்பொழிவிலும் இன்னொரு கதையை எதிர்பார்க்கத் தொடங்கி விடுகிறேன். நான் அற்ப விஷயங்களில் கவனம் செலுத்துகிறேனா? நான் தீவிரமானவனாக மாற வேண்டுமா?

தீவிரம் என்பது ஒரு நோய். தீவிரம் என்பது உடல்சார்ந்தது. நேர்மையானவராக இருங்கள். தீவிரமானவராக ஒருபோதும் இருக்கா தீர்கள். நேர்மை என்பது முற்றிலும் மாறுபட்ட ஒன்று. தீவிரம் என்பது ஒரு பாவனையான நடிப்பு சார்ந்த வியப்பு. நேர்மை இதயம் சார்ந்தது. நேர்மை என்பது நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலிலும் ஊக்கம் கலந்திருப்பதாகும்.

நீங்கள் வாய்விட்டுச் சிரித்தது நல்லதுதான். இப்போது உங்கள் கைகளைப் பொய்மையின் பின்னால் மறைத்துக் கொள்கிறீர்கள். அது அங்கேயே இருக்கட்டும். சிரிப்பு நல்லது. எல்லா வகையிலும் நல்லது. உடல், மனம், ஆன்மீகம் என்று எல்லா விதத்திலும் நல்லது.

உங்கள் செயல் அற்ப விஷயங்களில் கவனம் செலுத்தும் வகையைச் சேர்ந்தது அல்ல. நமக்குத் தவறான விஷயங்கள் கற்றுத் தரப்பட்டுள்ளன. அதனால்தான் மனிதர்கள் உலகில் தொங்கிய முகங் களுடன் அலைகிறார்கள். நமக்கு முற்றிலும் தவறான விஷயங்கள்

சுற்றுத் தாப்பட்டிருக்கின்றன. ஏசு சிரித்ததே இல்லை என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். அது ஏன்? அவர் சிரித்தார் என்று எனக்குத் தெரியும். அவரைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் கிறிஸ்தவர்கள் பயப்படுகிறார்கள். ஏசுவின் சிரிப்பு மதிப்பற்ற ஒரு விஷயம் போல் அவர்களுக்குத் தெரிகிறது. ஒரு துறவியால் எப்படி சிரிக்க இயலும்? துறவி கவலை தோய்ந்த முகத்துடன் காணப்பட வேண்டும். கவலை கலந்த முகத்துடன் மட்டுமே துறவிகள் இருக்க வேண்டும். உண்மையில், கவலையுடன் தொங்கிய முகமாக இருப்பவர்கள் எல்லாம் துறவிகள் அல்ல.

சிரிப்பு என்பது ஒரு வகையான சிறப்பு தகுதி பெற்ற விஷயம். மனிதனைத் தவிர வேறு எந்த மிருகமும் சிரிப்பதில்லை. சட்டென்று வீதியில் ஒரு எருமை சிரிப்பதை நீங்கள் பார்த்தால் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். நீங்கள் மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பமாட்டீர்கள். மனிதனைத் தவிர வேறு எந்த மிருகத்தாலும் சிரிக்க முடியாது. சிரிக்க முடியும் என்பது மனிதனுக்கே உரித்தான ஒரு கௌரவமாகும். அது மனிதனின் கௌரவம், பெருமையாகும்.

சிரிப்பு ஒருவகை ஆன்மீகம் கலந்தது. உயர்ந்த அறிவு நிலை பெற்றவர்களிடமே அது காணப்படும். அதிகம் அறிவுள்ள மனிதனாக நீங்கள் இருந்தால், பலவற்றைப் பார்த்து நீங்கள் சிரிக்க முடியும், பொருட்களை மட்டுமின்றி உங்களைப் பார்த்தும் உங்களால் சிரிக்க முடியும். வாழ்வின் அற்பமான விஷயங்களை உங்களால் கண்டுணர இயலும். வாழ்வின் கோமாளித்தனத்தைக் கண்டறிய முடியும்

கிறிஸ்தவர்கள் ஏசுவை சோகமானவராக மாற்றிவிட்டார்கள். அதனால்தான் ஓவியங்களிலும், சிற்பங்களிலும் ஏசு கொஞ்சம் அசிங்கமாகத் தென்படுகிறார். தனது நடனம், புல்லாங்குழல் மூலம் ஆனந்தத்தை அளித்த கிருஷ்ணர் பற்றி அவர்களுக்குத் தெரியாது. போதி தர்மா, லாவோ படங்களில் உள்ள சிரிப்பு பற்றி அவர்களுக்குத் தெரியாது. அற்ப விஷயங்கள் பலவற்றை எடுத்துக்காட்டிய சுவாங் சூ பற்றித் தெரியாது.

ஏசு நிச்சயம் சிரித்திருப்பார். அவர் பெரிதும் வாழ்வியல் சார்ந்த மனிதர். நல்ல உணவை அவர் விரும்பினார். நல்ல நட்பை விரும்பினார். மக்களை அவர் நேசித்தார். அவர் நன்கு சாப்பிட்டார். நன்றாகக் குடிக்கவும் செய்தார். குடிப்பவர் சிரிக்காமல் இருப்பது சாத்தியம் இல்லை. அவர் வேடிக்கை கதைகள் பேசியிருக்க வேண்டும். என்னை நம்புங்கள். நீதிபோதனைகளை எழுதிய எழுத்தாளர்கள் அதை அகற்றி விட்டார்கள். எனது புத்தகங்களைப் பதிப்பிக்கும் ஆசிரியர் குழுவிலும்

இக்கூற்றை ஏற்க மறுக்கிறார்கள். அது அச்சிடத்தக்கது அல்ல என்கிறார்கள். ஆனால் நான் எதையும் அகற்ற ஒப்புக்கொள்வதில்லை.

ஏசுவின் நீதிபோதனைகள் எல்லாம் அவர் இறந்த பின்னர் எழுதப்பட்டவை. முன்னூறு ஆண்டுகள் கழித்து எழுதப்பட்டவை. தொகுப்பாளர்களுக்கு எதையும் செய்ய அதிகாரம் இருந்தது. ஏசுவின் அற்புதமான ஹாஸ்யப் பேச்சுகள் ஒதுக்கப்பட்டுவிட்டன என்று எனக்குத் தெரியும். ஏசு ஒரு யூதர். யூதர்களிடம் உலகின் தலைசிறந்த ஹாஸ்யக் கதைகள் இருக்கின்றன.

அற்பமானது என்று எதைப் பற்றியும் கவலை கொள்ளாதீர்கள். அப்படி மேலோட்டமாக இருப்பதும் சிலசமயம் அழகான விஷயம் தான். அப்படி இருப்பது பற்றி சில தருணங்களில் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். சுவையற்ற, அழகான, கருணை நிறைந்த காரியம் அது. வாழ்வின் எல்லா நிறங்களையும் அதன் முழுமையான வானவில் வர்ணங்களை நான் ஏற்றுக் கொள்கிறேன். மேலோட்டம் முதல் தீவிரம் வரை சகலத்தையும் ஏற்கிறேன்.

உங்களுக்கு நான் இரண்டு ஹாஸ்யக் கதைகள் சொல்கிறேன்.

ஃபின்கல்ஸ்டனின் தந்தை மகிழ்ச்சியற்று இருந்தார். அவர் மகன் வழக்கமாக இரண்டு காரியங்கள் செய்துவந்தான். அவை யூதர்கள் செய்யக்கூடாதவை. அவன் பன்றி இறைச்சி சாப்பிட்டான். யூத இனத்தைச் சாராத பெண்களுடன் பழகினான். கடைசியாக அவர் யூதர் களின் மதகுருவிடம் சென்று மகனைப் பற்றி முறையிட்டார்.

"ராபி அவர்களே! எனக்கு என்ன செய்வது என்றே தெரிய வில்லை. என் மகன் எஸ்ரா பன்றி இறைச்சியை கண்ணால் கண்டதும் அதை கடித்துச் சுவைக்கத் தொடங்கிவிடுகிறான். யூத இனத்தைச் சார்ந்திராத பெண்ணைப் பார்த்ததும் கட்டிப் பிடித்து முத்தம் கொடுக்க ஆரம்பித்து விடுகிறான்."

ராபியிடம் எஸ்ரா போகவேண்டியதாயிற்று. "உன் தகப்பனார் ஏதோ சொல்கிறாரே, என்ன விஷயம்?" என்று ராபி உரத்த குரலில் அதட்டினார். "பன்றி இறைச்சி தின்கிறாயா? கிறிஸ்தவப் பெண்ணை முத்தமிடுகிறாயா? இதெல்லாம் என்ன வேலை?"

எலிஸா மன்னிப்பு கேட்கும் குரலில், "ராபி, நான் என்ன செய்ய முடியும்? எனக்கு புத்தி பிசகிப் போய்விடுகிறது."

"அபத்தமாய் பேசாதே! பெண்ணிடம் பந்தயம் வைத்துவிட்டுப் பன்றி இறைச்சியை நீ தின்னவில்லை. அப்படி செய்தால்தான் நீ புத்தி பிசகியவன். ஆனால் எல்லா காரியமும் சரியாக நடக்கிறது. எனவே

நீ தெளிவான மனநிலை பெற்றிருக்கிறாய். இனி அதுபோல எதுவும் செய்யாதே" என்றார் ராபி.

இனி, இரண்டாவது ஹாஸ்யத்தைப் பார்க்கலாம்.

ஒரு மதுச்சாலையின் உரிமையாளராகவும், அதை நடத்து பவருமாக இருந்தவரிடம் ஆண் வாடிக்கையாளர்கள் சூழ்ந்துகொண்டு, அங்கு வரும் விபசாரிகளின் பெயர் மற்றும் இருப்பிடம் பற்றி சதா விசாரிப்பது வழக்கமாக இருந்தது.

பணவரவுக்கான வழியைத் தடைசெய்வது முட்டாள்தனம் என்று ஒருநாள் தீர்மானித்த அவர் இரண்டு பெண்களை அழைத்து வந்து மதுச் சாலையின் மாடியில் இரண்டு அறைகளில் தங்க வைத்தார். பெண் வேண்டும் என்று வாடிக்கையாளர் கேட்டால் அவர்களை மாடிக்கு அனுப்பி வைப்பார்.

புதிய தொழில் ஆரம்பித்த சில நாட்களுக்குப் பிறகு ஒரு வாடிக் கையாளர் சந்தோஷமற்றவராக மாடியிலிருந்து திரும்பி வந்தார். தங்கள் நாக்கு, உதடுகளை ஆண்குறி மீது பயன்படுத்தி அந்த பெண்கள் அளித்த இன்பம் நன்றாக இல்லை என்று குறை கூறினார்.

அந்த வாடிக்கையாளரை மீண்டும் தன்னுடன் மாடிக்கு வருமாறு அவர் அழைத்துச் சென்றார். படுக்கையறையில் ஒன்றாக இருந்த அந்த மூன்று பெண்களையும் அழைத்தார். அந்த மனிதரைப் படுக்கையில் படுக்கும்படி சொன்னார். பிறகு பெண்கள் பக்கம் திரும்பி, "நல்லது பெண்களே! நான் இன்னொருமுறை செய்து காட்டுகிறேன். முட்டாள் களே! அதைப் பார்த்துச் சரியாக இனி நடந்து கொள்ளுங்கள்" என்றார்.

அசட்டுத்தனம் பற்றிக் கவலைப்படாதீர்கள். அது வாழ்வின் ஒரு அங்கம். நிஜவாழ்வில் எல்லாம் கலந்திருக்கிறது. அதில் பல நுண்ணிய வேறுபாடுகள், சுருதிகள், வர்ணங்கள் உள்ளன. எனவே நீங்கள் நன்றாகச் சிரிக்க முடியும். அதை மறைக்கவேண்டிய அவசியமில்லை. சிரிப்பு, ஆனந்தம், கொண்டாட்டம் நிறைந்த இடத்தில் நான் தங்கி யிருக்க விரும்புகிறேன். அது உங்களுக்கு ஒரு திருவிழாவாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

இன்று இவ்வளவு போதும்.

# வியாபாரம்
# என்றே கருதுகிறேன்

## அத்தியாயம் - 4

### முதல் கேள்வி

ஓஷோ,

புத்தர், மகாவீரர், நபிகள் நாயகம், ஏசு ஆகியோர் ஞானம் அடைந்த மனிதர்கள். ஞானம் பெறுவது எப்படி என்று அவர்கள் தங்களுடைய சீடர்களுக்குக் கற்பிக்க முயன்றார்கள். முடிவற்ற சங்கிலியாய் ஞானம் பெற்ற மனிதர்கள் கூட்டம் இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள். ஞானம் பெறுவதற்குப் பதிலாகக் கிட்டத்தட்ட எல்லோருமே பொதுமக்களை ஏமாற்றி னார்கள். அந்த உயர்ந்த மனிதர்கள் தங்களுக்குப் பின்னால் ஒரு பெரிய வியாபார அமைப்பை ஏற்படுத்திக் கொள்ளத் தந்திரம் மேற்கொண்டார்கள். அதற்கான காரணத்தை நீங்கள் விளக்க முடியுமா? இந்த ஆசிரமம் அது போன்ற ஒரு புதிய வியாபாரத்தின் தலைமை அலுவலகமாக இருக்கிறதா?

பிறந்த ஒவ்வொன்றும் இறந்து போகிறது. மலர் காலையில் தேன் ததும்பும் உயிர்ப்புடன் இருக்கிறது. மாலையில் அது மறைந்து போகிறது. அது ஒரு இயற்கை விதி. இங்கு எதுவும் நிரந்தரமாக நிலைத்திருக்காது. நேரம் வரும்போது பொருட்கள் தோன்றும்,

மறையும். சமயம் வரும்போது பொருட்கள் சோப்புக் குமிழ்போல காணாமல் போய்விடும். மாலையில் இதழ்கள் உதிர்ந்து போவதற்காகக் காலை நேரத்து மலரை நீங்கள் குற்றம் சொல்ல முடியாது. உங்களால் சொல்ல முடியுமா? சூரிய உதயம் ஏற்பட்டால் விரைவில் அஸ்தமனம் என்பதற்காகச் சூரியனை நீங்கள் குற்றம் சொல்ல முடியாது.

ஒரு புத்தர் தோன்றும்போது ஒரு மலர் மலர்கிறது. ஆனால் அது நிரந்தரமாக நிலைத்திருக்காது. அது காலத்தின் பாதையல்ல. மலர் மறைந்துபோகும். மனிதன் தந்திரசாலி. கணக்குப் பார்ப்பவன். சில தந்திரசாலியான, கணக்குப் பார்க்கும் மனிதர்கள் ஒன்று சேர்வார்கள். அங்கு ஒரு வியாபாரம் தொடங்குவார்கள். அது இயல்பு. ஒரு புத்தர் அங்கு இல்லாதுபோனால் அவர் ஏற்படுத்திய காரியங்கள் எல்லாம் வியாபாரமாக மாறிவிடும். தான் செய்து கொண்டிருப்பதை ஒரு புத்தர் நிறுத்த வேண்டிய அவசியமில்லை. விஷயம் சீரழிக்கப்படுகிறது என்பதை நன்றாக அறிந்த பின்னரும் புத்தர் மனப்பூர்வமாக முயல்கிறார். தனது ஒளியில் அவர் வாழ்கிறார். தனது பிரகாசத்தைப் பகிர்ந்து கொள்கிறார். தனது அன்பில் வாழ்கிறார். தனது நேசத்தைப் பகிர்ந்து கொள்கிறார். அதைப் பெற்றுக் கொள்வோர் ஞானம் பெறுகிறார்கள். அந்த அறிவாளிகள் புத்தரின் ஆற்றலை உள்வாங்கிக் கொள்கிறார்கள். அதன் வழியே மாற்றம் பெறுகிறார்கள். பின்னர் என்ன நடக்கப் போகிறது என்று அவர்கள் கவலைப்படுவதில்லை. கவலைப்படுதல் என்ற கேள்வியே எழுவதில்லை.

நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். பின்னர் என்ன நடக்கும் என்று சந்நியாசிகளை விடவும் அதிகம் கவலை கொள்கிறீர்கள். இந்த ஆசிரமம் புதிய வியாபாரத்தின் தலைமை அலுவலகமா என்று கேட்கிறார்கள்.

அவ்விதம் அது ஆகலாம். எப்போதும் அப்படித்தான் நடக்கிறது. அது அவ்வாறு மாறுவதற்கு முன்னர் நீங்கள் சந்நியாசியாகி விடுவீர்கள். நான் இங்கே இருக்கும் சமயத்தில் நான் உங்களை மாற்றியமைக்க அனுமதியுங்கள். அந்த எதிர்கால நிகழ்வு பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? எதிர்காலத்திலும் புத்தர்கள் தோன்றலாம். எப்போதும் அவர்கள் நிகழ்த்திக் கொண்டுதத் இருக்கிறார்கள்.

ஞானம் பெற்றிட விரும்புவோர் வாழும் புத்தர் ஒருவரை தேவை என்று தேடியலைகிறார்கள். அவர்கள் எப்போதும் நாலாபுறமும் இருக்கிறார்கள். பூமியில் அவர்களுக்குப் பஞ்சம் இல்லை. சில சமயம் ஒரு ஏசு, சிலசமயம் ஒரு மகாவீரர், சிலசமயம் ஒரு நபிகள் நாயகம், சிலசமயம் ஒரு பிதாகோரஸ் என்று எப்போதும் தோன்று

கிறார்கள். தாகத்துடன் இருப்பவர்கள் அவர்களைக் கண்டறியலாம். ஆனால் லட்சக்கணக்கான மக்கள் அந்த தாகமில்லாமல் இருக்கிறார்கள்.

தாகமில்லாது இருக்கும் அந்த லட்சக்கணக்கான மனிதர்களும் தாங்கள் தாகத்துடன் இருப்பதுபோல் பாவனை செய்கிறார்கள். அந்த லட்சக்கணக்கானவர்களில் தாகமற்று இருந்தாலும் அப்படி இருப்பதாக நடிப்பவர்கள் ஆன்மீகவாதிகள். உண்மையின் மீது நாட்டம் கொண்டவர்கள்.... அவர்கள் தந்திரசாலிகளாக உள்ள பாதிரியார்களிடம் பலியாகிவிட்டார்கள்.

ஏமாற்றுவதில் பாதிரியார்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள். ஏனென்றால், ஏமாற்றப்படுவதை விரும்பும் மனிதர்கள் இருந்து வருகிறார்கள். அது ஒரு கச்சிதமான ஏற்பாடு. தேடல் ஆர்வம் இல்லாவிட்டால் ஆன்மீகத்தை வைத்துக்கொண்டு பாதிரியார்களால் வியாபாரம் செய்ய இயலாது. அவர்கள் அதனூடே பார்வையைச் செலுத்துகிறார்கள். லட்சக்கணக்கான மக்கள் உண்மையை அறிந்து கொள்வதில் ஆசையற்றவர்களாக இருக்கிறார்கள். தங்களுக்கு உண்மையை அறியும் விருப்பம் இல்லை என்பதை ஏற்றுக்கொள்ளவும் அவர்கள் தயாராக இல்லை. அது வலியை ஏற்படுத்துகிறது. அந்த மனிதர்களுக்கு நீக்குப் போக்கான உண்மைகள் மட்டுமே தேவைப்படுகின்றன. அந்த மனிதர்களுக்குச் செயற்கை மலர்கள்தான் தேவைப்படுகின்றன. அந்த செயற்கை மலர்களிடம் ஒரு அம்சம் இருக்கிறது. அது எப்போதும் வாடுவதில்லை.

பொய்மை உண்மையைக் காட்டிலும் நீண்ட காலம் வாழ்கிறது. அது செயல்படும் காலத்துக்கு ஏற்ப தன்னை அனுசரித்துக் கொள்கிறது. அச்செயல் அதன் ஒரு அங்கமாக இருக்கிறது. அதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். உண்மை அப்பாலிலிருந்து வருகிறது. அது காலத்தின் ஒரு அங்கம் அல்ல. அது நித்தியத்துவத்தின் ஒரு அங்கம். அது காலத்துடன் சேர்ந்தது அல்ல. அது காலத்துடன் சேர்கிறது. ஆனாலும் அது அந்நியமானதுதான். அதை காலம் உள்வாங்கிக் கொள்ளாது. காலத்துடன் அது அனுசரித்தும் போவதில்லை. நீங்கள் புத்தரிடம் ஒரு பிரகாசத்தைக் கண்ட அந்த கணம் முடிந்ததும் அது மறைந்து போய்விடுகிறது. அந்த நித்தியத்துவம் ஒரு அரிய கணமாகும். உலகின் நேரத்துக்கு அது ஒரு கணநேர தரிசனம் மட்டுமே தருகிறது.

பொய்கள் ஆயிரக்கணக்கான வருடங்கள் விடாப்பிடியாகத் தங்கியிருக்கின்றன. தங்கியிருக்க அந்த பொய்கள் தங்களின் சுயமான வழிமுறைகளைப் பயன்படுத்துகின்றன. ஏனென்றால் அவை நேரத்துக்குத் தகுந்தபடி தங்களை மாற்றிக் கொள்கின்றன. அவை காலத்தின்

ஒரு அங்கமாக இருக்கின்றன. ஆனால் உண்மை என்பது உலகியல் காலத்திலிருந்து வேறுபட்டது. அது காலமற்றது. காலத்தின் பரிமாணத்தில் அது தன்னை எப்போதாவது அது தன்னை வெளிப் படுத்தினால் அது வியப்பான விஷயம். புத்தரும், ஏசுவும் வியப்பான மனிதர்கள். தேவை சார்ந்த விதிமுறைகளுக்கு எதிராகவும், ஆற்றல் சார்ந்த அருள் விதிமுறையைப் பின்பற்றும் வகையிலும் அவர்கள் வருகை அமைகிறது. அந்த ஒளிக்கீற்று வந்து மறைந்து விடுகிறது.

லட்சக்கணக்கான மக்கள் ஆன்மீகவாதிகளாய் இருப்பதுபோல நடிக்க விரும்புகிறார்கள். அந்த மனிதர்கள்தான் தேவாலயம், மசூதி, கோவில், குருத்துவாரா போன்றவற்றிற்குச் செல்கிறார்கள். அவர்கள் தான் ஆன்மீகம் மலிவான விஷயமாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். அவர்கள் ஞாயிற்றுக்கிழமை பிரார்த்தனை நடத்தும் வழக்கமான ஆன்மீகத்தை விரும்புகிறார்கள். ஆன்மீகத்துடன் இணைத்துக்கொள்ள விரும்புவதில்லை. அவர்கள் விளையாட்டு போல் அதில் ஈடுபடுகிறார்கள். அவரகளின் மேலோட்டமான உலகில் அந்த விளையாட்டுக்கு ஒரு விலை தரப்படுகிறது. தேவாலயம் போகிறவர் மதிப்பிடுகிறார். மதிக்கப்படும் மனிதர் வேறு எவரையும் விட வேகமாக மற்றவர்களை ஏமாற்றமுடியும். தேவாலயம் செல்பவர் ஆன்மீகவாதி என்று கருதப்படுகிறார். அவர் ஏமாற்றக்கூடியவர் என்று யாரும் நினைப்பதில்லை. எனவே அவர் மிகவும் எளிதாக ஏமாற்ற லாம். சந்தைக்கடையுடன் தேவாலயம் மிகவும் கச்சிதமாகப் பொருந்து கிறது. அது சந்தையின் ஒரு அங்கமாகும்.

ஏசு எப்போதும் பொருத்தமற்றவராகவே இருந்தார். இல்லாது போனால் அவரை ஏன் மக்கள் சிலுவையில் அறைந்தார்கள்? மக்கள் ஒருபோதும் பாதிரியார்களைச் சிலுவையில் அறைந்ததில்லை. அவர்கள் எப்போதும் புத்தர்களையே சிலுவையில் அறைந்தார்கள். ஒரு சாக்ரட்டீஸ் ஆபத்தானவர், இடையூறு செய்பவர், அதிர்ச்சி தருபவர். ஆனால் பாதிரியார் முழுமையாக நல்லவர். ஆறுதல் அளிப்பவர், தனது பொய்கள் மூலம் உங்கள் வாழ்வை எளிமைப் படுத்துபவர். அவரது பொய்கள் அதிர்வைத் தாங்கும் கருவிகளாகச் செயல்படுகின்றன. அவர் சாத்தியமான வழியில் எல்லாம் பொய்யான, வேஷதாரி உலகில் வாழ்வதற்கு உதவி செய்கிறார். உண்மைகளை அறிந்து உதவி செய்கிறார். கடவுள் அப்படி எளிதாக கிடைக்கிறார் என்பதால் அதிகம் சிரமப்பட வேண்டாம் என்கிறார்.

கிறிஸ்துவராக இருக்கும் நீங்கள் அதிகம் சிரமப்பட வேண்டாம். இந்துவாக இருக்கும் நீங்கள் அதிகம் சிரமப்பட வேண்டாம். ஏசுவின் வழி நடப்பவராக உள்ள நீங்கள் சிரமப்படுத்திக் கொள்கிறீர்கள்.

என்னுடன் இருப்பது சிரமப்படுத்திக் கொள்வதாக இருக்கிறது. சங்கராச்சாரியாராக இருப்பது சிரமமான செயல் அல்ல. என்னுடன் இருப்பது செலவு பிடிக்கும் செயலாகும். அது ஆயிரத்தொரு பிரச்சினைகளை உங்களிடம் ஏற்படுத்துகிறது. உண்மையுடன் சம்பந்தப்படாதவரையில், பொறுப்பேற்காதவரையில், தாகம் கொள்ளாதவரையில் என்னருகில் இருக்க இயலாது.

லட்சக்கணக்கான மக்கள் செயற்கை மலர்களை விரும்புகிறார்கள். செயற்கை மலர்கள் வசதியானவை. அவற்றை வளர்க்க வேண்டியதில்லை. வளர்ப்பதற்குச் சிரமம் எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. நிஜமான மலர்களை வளர்ப்பது சிரமம் தரும் செயல். மண்வளம் பற்றி யோசிக்க வேண்டும், நிலத்தைத் தயார் செய்ய வேண்டும், எருவிட வேண்டும், உரம்போட வேண்டும், தண்ணீர் பாய்ச்ச வேண்டும், பின்னர் செடிகளைப் பாதுகாத்து வைத்திருக்க வேண்டும். ஆனாலும் என்ன நடக்கும் என்று யாராலும் யூகிக்க இயலாது.

செயற்கை மலர்கள் மிகவும் வசதியானவை. தயார்நிலையில் உள்ள அவைகளை நீங்கள் வாங்கலாம். மண்தேவையில்லை, முன்னேற்பாடுகள் தேவையில்லை, தோட்ட வேலை அவசியமில்லை. இதுபோன்ற எதுவும் தேவையில்லை. அவை வாடிப்போவதும் இல்லை. எப்போதாவது ஒருதடவை அவற்றை நன்கு கழுவினால் போதும். அவை மீண்டும் மலர்ச்சியுடன் தோற்றமளிக்கும். அவற்றில் தூசு மட்டுமே படியும். அதைக் கழுவிக் களைந்து விடலாம்.

நம்பிக்கைகளும் அப்படி செயற்கை மலர்கள் போலவே இருக்கின்றன. லட்சக்கணக்கான மனிதர்கள் செயற்கை மலர்களையே விரும்புகிறார்கள். எனவே பாதிரியார் உங்களை ஏமாற்றுகிறார். பொருளாதாரத்தின் அடிப்படை விதி ஒன்றை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். எந்த அளவுக்குத் தேவை உள்ளதோ அந்த அளவுக்கே வினியோகம் இருக்கும். ஏனென்றால் பொய்மை கேட்டுப் பெறப்படுகிறது. ஏமாற்றுபவர் இருக்கிறார்கள்.

இது ஒரு இயல்பான செயல்முறை. எனது பணி வியாபாரமாகி விடாது என்று என்னால் கூற முடியாது. நான் அப்படிச் சொல்லவில்லை. அப்படிச் சொல்லவும் முடியாது. அப்படித்தான் அது நடக்கிறது. தாமஸ், உங்களுக்கு நிஜமான ஆர்வம் இருந்தால், எனது இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். மற்ற விஷயங்கள் பற்றிக் கவலைப்படாதீர்கள். ஏசுவின் அருகில் நீங்கள் இருக்கலாம். அங்கு ஒரு தாமஸ் இருந்தார். சந்தேகப்படும் தாமஸை அவர் அறிவார். அந்த பெயர் சந்தேகத்தின் குறியீடாக மாறிவிட்டது. நீங்கள் புத்தரைச்

சுற்றி இருக்கலாம். அதே கேள்வியை நீங்கள் கேட்கிறீர்கள். மீண்டும் அதே கேள்வியைக் கேட்கிறீர்கள்.

உங்கள் கவலை என்ன? சிலர் ஏமாற்றப்படுவதை விரும்புகிறார்கள். சிலர் ஏமாற்ற விரும்புகிறார்கள். அது இரண்டும் சரிதான். அதில் என்ன தவறு இருக்கிறது? உங்களை ஏமாற்ற யாரும் இல்லை என்றால் ஏமாற்றப்பட விரும்புவோர் என்ன செய்வார்கள்? அவர்கள் வருத்தம் தரும் உணர்வுக்கு ஆளாவார்கள். அவர்கள் வாழ விரும்பிய வாழ்வை அவர்களால் வாழமுடியாது போய்விடும். எனவே எதுவும் தவறில்லை. அவர்கள் ஒளிந்து மறையும் விளையாட்டு விளையாடு கிறார்கள். அந்த விளையாட்டை நீங்கள் விளையாட விரும்பினால், சுற்றிலும் பலவித வியாபாரங்கள் இருக்கின்றன. தேவாலயத்தின் ஒரு அங்கமாக ஆன்மீகத்தின் அங்கமாக, பேராசையின் அங்கமாக மாறலாம்.

எந்த ஒரு உண்மையும் விரைவிலோ அல்லது மெதுவாகவோ ஒருங்கிணைக்கப்படும். அவ்வாறு ஒருங்கிணைக்கப்படும்போது அது உயிரற்றுப் போகும்.

பிரசித்தமான ஒரு கதை உண்டு.

சாத்தானின் சீடன் ஒருவன் வேகமாக அதனிடம் ஓடிவந்தான். "இங்கே நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? கீழே பூமியைப் பார். மனிதன் ஒருவன் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவன் ஞானம் பெற்றுவிட்டான். அவன் மெய்நிலையைக் கண்டறிந்து விட்டான். நமது தொழிலே இப்போது ஆபத்தில் இருக்கிறது. நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உடனே நாம் ஏதாவது செய்தாக வேண்டும்!"

யாராவது ஒருவர் உண்மைநிலையை கண்டறிந்து விட்டால் சாத்தானின் முழு வாழ்வும் ஆபத்துக்குள்ளாகிவிடுகிறது. அது பொய்மையில் வாழ்கிறது. அந்த சீடன் புதிய சீடனாக, கற்றுக் கொள்ளத் தொடங்கும் நிலையில் இருப்பவனாக இருந்திருக்கலாம்.

வயதான அந்த சாத்தான் சிரித்தது. "கவலைப்படாதே! உண்மையை அவன் கண்டறியட்டும். நாம் அதை ஒருங்கிணைப்போம். ஒருங்கிணைக்கும் சமயத்தில் உண்மை உயிரற்றுப் போய்விடும்."

எல்லா உண்மைகளும் ஒருங்கிணைக்கப்படும். அவற்றைப் பாதுகாக்க வழியில்லை. தற்காப்பு அளிக்க வழி கிடையாது. அதற்கான சாத்தியமில்லை. ஒவ்வொரு உண்மையும் ஒருங்கிணைப்பு பெறும். ஒவ்வொரு உண்மையும் ஆன்மீகமாக மாறும்.

எனவே அதை புரிந்து உணர்ந்துகொள்ள ஒரே வழி, புத்தர் இங்கு இருக்கும்போது முடிந்தவரை அவரை தாகத்துடன் பருகுங்கள்.

அதன் பிறகு என்ன நடக்கிறது என்பதை மறந்து விடுங்கள். அது ஒன்றுதான் புத்திசாலித்தனமான மார்க்கம்.

இரண்டாவது கேள்வி

ஓஷோ,

உங்கள் சந்நியாசம் பற்றி என்னால் புரிந்துகொள்ள முடியாத பல விஷயங்கள் இருக்கின்றன. நான் அதில் குதித்து சந்நியாசியாக விரும்புகிறேன். நான் அதில் குதிப்பதற்கு முன்னர் அதுபற்றி அனைத்தும் தெரிந்து கொள்ள விரும்பு கிறேன்.

நீங்கள் அதில் குதிக்க விரும்பவில்லை என்பதுதான் அர்த்தம். அதில் குதிப்பதற்கு முன்னர் நீங்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டால் அது குதிப்பதாக இருக்காது. அது நீங்கள் எடுக்கும் ஒரு தீர்மானமாகவே இருக்கும். உங்கள் மனம் அதற்கு அனுசரித்துப் போய் விட்டது. ஒரு தர்க்கரீதியான செயல்முறை வாயிலாக நீங்கள் அதை அடைந்திருக்கிறீர்கள்.

குதித்தல் என்பது முறையற்ற ஒன்றாகும். குதித்தல் என்றால் நான் காதலில் விழுந்தவிட்டேன் என்பது போன்றது. அது தர்க்கரீதி யானது அல்ல. தர்க்கரீதியான செயல்பாடு ஒரு அகந்தைச் செயல் பாடாகும். நீங்கள் முடிவு செய்கிறீர்கள். பிறகு தீர்மானத்துடன் உங்கள் முடிவைப் பின்பற்றுகிறீர்கள். அது குதித்தல் அல்ல. குதித்தல் என்பது இருளில் செல்வதாகும். குதித்தல் என்பது திக்குத் தெரியாது செல்வ தாகும். தெரிந்ததை உதறிவிட்டுத் தெரியாததை நோக்கிப் போவதாகும். அதுதான் குதித்தல் என்று பொருள்படுகிறது. அச்செயல் பெரியதாக இருந்தால் அது நல்லது. அந்த நிஜமான பாய்ச்சலில் நீங்கள் மறுபிறப் பெடுப்பீர்கள். அந்த குதித்தலில் பழைமை மறைகிறது. புதியது உரு வாகிறது. குதித்தல் ஒரு சிலுவையில் அறைதல் போன்றதாக அமைய வேண்டும். அதன் பிறகு அது உயிர்த்தெழுதல் மூலம் பின்தொடரப் படும்.

ஒரு தர்க்கரீதியான தீர்மானம் தொடர்ச்சி கொண்டது. அதில் இடைவெளி இருக்காது. ஒன்று மற்றொன்றைக் கொண்டு வருகிறது. ஒரு சங்கிலியாக அவை ஒன்று சேர்கின்றன. தர்க்கம் ஒரு சங்கிலி. நீங்கள் சந்நியாசம் பற்றி சகலத்தையும் தெரிந்துகொண்டு குதிப்பதாக இருந்தால் அது குதித்தல் அல்ல. உங்கள் மனதைக் கடந்து ஒருபோதும் உங்களால் வெளியே வரமுடியாது. உங்கள் மனம் முடிவு செய்கிறது. உங்கள் மனம் செயல்படுகிறது. அந்த செயல்பாடுகளின் மூலமே அது மேலும் பலம் பெறுகிறது.

குதித்தல் என்பது உங்கள் மனதின் மீது முயற்சி செய்வதாக அர்த்தம். நீங்கள் முழுமையாகத் தளர்ந்துவிட்டீர்கள். நீங்கள் உங்கள் மனதின் முட்டாள் விளையாட்டுகள் எல்லாவற்றையும் பார்த்து விட்டீர்கள். நீங்கள் அதை உதறிவிட விரும்புகிறீர்கள். அன்பு ஒரு தீர்மானமல்ல. அது மனதை உதறுவதாகும். அதனால்தான் மக்கள் 'காதலில் விழுவதாகச் சொல்கிறார்கள்' ஏன் விழுகிறார்கள்? மனம் அதை ஒரு வீழ்ச்சி என்று நினைக்கிறது. மனதிலிருந்து வரும் ஒரு கண்டனமாகும். நீங்கள் இதயத்திடம் கேட்டால் அது 'காதலில் எழுச்சி' பெறுவது பற்றி பேசும். காதலில் விழுவது பற்றிக் கூறாது. ஒருவர் விழக் கூடாது. மனம், அதை வீழ்ச்சி என்று கூறுவதால் கண்டிக்கிறது. உங்கள் தர்க்கரீதியான தெளிவில் இருந்து விழுந்துவிட்டீர்கள். தர்க்க ரீதியான திறமையிலிருந்து விழுந்துவிட்டீர்கள். நீங்கள் உணர்வுக் கொந்தளிப்புக்கு ஆளாகிறீர்கள். நீங்கள் பின்னோக்கி விழுகிறீர்கள்.

தர்க்கம் என்பது அடிப்படையில் எல்லா அன்பையும் நிந்திப்பதாகும். சந்நியாசி அன்பு காட்டும் செயலில் ஈடுபட வேண்டும். அது குருவின் மீது அன்பு காட்டும் செயலில் ஈடுபட வேண்டும். அது குருவின் மீது அன்பு கொள்வதாகும். அது அன்பு சார்ந்த உறவுமுறை.

இரண்டாவதாக, சந்நியாசி ஒரு தத்துவம் அல்ல. உங்களால் அவரைப் புரிந்துகொள்ள முடியாது. அது உங்களுக்குத் தனிப்பட்ட முறையில் கிடைக்க மதசாஸ்திரமல்ல. அது ஒரு அனுபவமாகும். ஒரு அனுபவத்தை உணர வேண்டும் என்றால் நீங்கள் அதில் நுழைய வேண்டும். "நான் முதலில் புரிந்து கொள்கிறேன் பிறகு உள்ளே நுழைகிறேன்" என்று நிபந்தனை விதிக்க முடியாது. "நான் இனிப்புச் சுவையைப் புரிந்து கொண்ட பிறகுதான் அதைச் சுவைப்பேன். அதன் சுவையை அறிந்த பிறகுதான் உண்பேன்" என்று ஒருவர் கூறும் அசட்டுப் பேச்சு போன்றது அது. இனிப்பின் சுவையை எப்படி உங்களால் உணர முடியும்? "நான் முதலில் அதன் சுவையை அறிய வேண்டும். அதன் பின்னர்தான் சாப்பிடுவேன்" என்று கூறுவது உங்கள் நிபந்தனையாக இருந்தால் உங்களால் அதைச் சாப்பிட இயலாது. ஏனென்றால், சுவைத்துப் பார்க்க வேண்டும் என்றால் அதைச் சாப்பிட்டால்தான் முடியும்.

சந்நியாசம் ஒரு சுவை, ஒரு அனுபவம். நீங்கள் அதில் பங்கு கொள்பவராக மாறவேண்டும். வெளியில் இருந்துகொண்டு கண்டறிந்து விட முடியாது. சந்நியாசம் என்பது ஒரு புறப்பொருள் அல்ல. அது முழுமையாக அகம் சார்ந்தது. அது பூரணமாக மனம் சார்ந்தது.

அது அறிவியல் போன்றதல்ல. ரோஜா செடி அருகில் விஞ்ஞானி செல்கிறார். அவர் புரிந்துகொள்கிறார். புரிந்துகொள்ள முயல்கிறார்.

கணக்கீடு செய்கிறார். பரிசோதனை செய்கிறார். ரோஜாவைக் கூறு போடுகிறார். பல விஷயங்களைக் கண்டறிகிறார். ஆனால் ரோஜாவை யும், அதன் அழகையும் அவர் கண்டறியவில்லை. மற்ற அம்சங் களையே அவர் கண்டுபிடித்தார். அதில் எந்த அளவு மண்ணின் குணம் இருக்கிறது, எவ்வளவு தண்ணீர் இருக்கிறது, எவ்வளவு காற்று இருக்கிறது, எவ்வளவு கதிரொளி இருக்கிறது என்றெல்லாம் கண்டறி கிறார். அவை எல்லாவற்றையும் கண்டுபிடிக்கிறார். ரோஜா மட்டும் மறைந்துபோய் விடுகிறது.

மிகமிக முக்கியமான ஒன்றை அவர் கண்டறிவது இல்லை. அது ரோஜாவில் முக்கியத்துவமான விஷயமாகும். அதன் எந்த அழகையும் அவர் கண்டறியவில்லை. எந்த ஒரு விஞ்ஞானியும் ரோஜாவின் எந்த அழகையும் கண்டறியவில்லை. நீங்கள் ரோஜாவின் அழகு பற்றிப் பேசினால் அவர் சிரிப்பார். நீங்கள் அர்த்தமற்றுப் பேசுவதாக அவர் எண்ணுவார். ரோஜாவின் அம்சமாக அழகு அதில் இல்லை என்று அவர் கருதுகிறார். ஆனால் அழகு அங்கு இருக்கிறது என்று உங்களுக்குத் தெரியும். ஆனாலும் அதை அறிவியல் பரிசோதனைக் கூடத்தில் வைத்து நிருபணம் செய்ய இயலாது. பிறகு உங்களுக்கு எப்படி அந்த அழகு தெரியும்?

மலரைச் சிதைப்பதால் அல்ல, மலர் பற்றி படிப்பதால் அல்ல, அந்த மலருடன் பங்கு கொள்வதால் மட்டுமே அதனுடன் ஒன்றுசேர இயலும். நீங்கள் அந்த மலருடன் ஒன்று சேரும் கணங்கள் உள்ளன. அப்போது பார்வையாளர் பார்ப்பதினுள் மறைகிறார். அந்த பார்வை யாளர் பார்வையாளராகவும் இருக்கிறார். அந்த பார்வையாளர் பார்க்கும் விஷயத்துடனும் இணைகிறார். அப்போது நெருக்கமான உறவு ஏற்படும் கணங்கள் தோன்றுகின்றன. கவிஞர் மலருக்கு வெளியே நிற்பதில்லை. அவர் உள்ளே நுழைகிறார். அங்கு ரோஜா ஒரு பொருளாக இல்லை. அது கவிஞரின் ஆன்மாவுக்குள் ஊடுருவி விடுகிறது. அந்த சந்திப்பில் புரிதல் எழுகிறது.

அந்த புரிதல் அறிவியல் அறிவு போன்றதல்ல. அரு ஒரு கவித் துவமான அனுபவம். சந்நியாசம் ஒரு கவித்துவமான அனுபவம். அது அறிவியல் அறிவல்ல. எனவே நீங்கள் ஒரு நிபந்தனை விதித்தால் ஒருபோதும் சந்நியாசியாக மாறமுடியாது. அந்த கவிதை அனுபவத்தை இங்கே பெறமுடியும். உங்களால் அறிந்துகொள்ள முடியாது. அந்த வாய்ப்பை நீங்கள் தவறவிடுவீர்கள். முடியாத ஒன்றை நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அந்த ஆசை நிறைவேறாது.

அமெரிக்காவின் மன்ஹாட்டன் பகுதியின் இரண்டாவது நிழற் சாலையில் உள்ள ஈலியன் உணவு விடுதியில் கூட்டம் நிறைந்த ஒரு

சனிக்கிழமை இரவில் நடந்த சம்பவம் அது. ஒரு அந்நியன் தெருவிலிருந்து உள்ளே வந்தான். தனது கண்களைக் கட்டிவிட்டாலும், எந்த ஒரு ஒயினையும தன்னால் இனம் கண்டறிய முடியும் என்று செருக்குடன் கூறினான். அந்த சவால் உடனே ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஒன்று மாற்றி ஒன்றாகப் பலவகை ஒயின்கள் அவனிடம் தரப்பட்டன.

"இது லாஃபைட் - ரோத்ஸ்சைல்ட் 1958" என்றோ, "இது பெர்ன் காஸ்டலர் பட்ஸ்டிபூப் 1951" என்றோ கூறுவான். அது சரியாக இருந்தது கண்டு எல்லோரும் வியந்தார்கள்.

கடைசியாக யாரோ ஒருவர் அவனிடம் ஒரு மதுக்கோப்பையைக் கொடுத்தார். அதை அவனால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. பல தடவை சுவைத்துப் பார்த்தான். சட்டென்று இனம் கண்டறிந்துவிட்டு, வேகமாகத் தனது கண்கட்டை அவிழ்த்தான். "நாசமாய் போக! இது சிறுநீர்! சுத்தமான சிறுநீர்" என்று கூவினான்.

"ஆம்! ஆனால் யாருடையது என்று சொல் பார்க்கலாம்" என்று ஒரு சிறிய குரல் கூட்டத்தின் பின்னால் இருந்து கேட்டது.

எனவே இதுபோன்ற முடியாத வேண்டுகோள் எதையும் வைக்காதீர்கள். சந்நியாசம் என்பது அனுபவித்துப் பார்க்க வேண்டிய ஒன்று. தனிப்பட்ட முறையில் புரிந்துகொள்ளக் கூடியதல்ல. முடியாத ஒரு வேண்டுகோளை நீங்கள் வைக்கிறீர்கள். மேலோட்டமாக அந்த வேண்டுகோள் தர்க்கரீதியானதாகவும் இருப்பதுபோல் தென்படுகிறது. காதல் காரியத்தில் இறங்குவதற்கு முன்னர் அதுகுறித்து நீங்கள் ஏதாவது நிபந்தனை விதித்தால், காதல் என்றால் என்ன என்று முதலில் தெரிந்து கொள்வது நல்லது. இல்லாதுபோனால் நீங்கள் காதல் பற்றிச் சகலமும் தெரிந்து கொள்ளலாம். ஆனால் காதலில் இறங்க முடியுமா? என்சைக்ளோபிடியா பிரிட்டானிகாவை புரட்டுவதாலும், விஷயம் தெரிந்தவர்கள் எழுதிய கட்டுரைகளைப் படிப்பதாலும், காதல் குறித்த ஆய்வேடுகளை ஆராய்வதாலும், சிறந்த காதலர்களையும், அவர்களது கவிதைகளையும் கவனிப்பதாலும் காதல் குறித்து எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? காதல் பற்றி **நிறையச் செய்திகளை** உங்களால் சேகரித்துவிட முடியும். காதல் பற்றித் தெரிந்துகொள்வது காதலிப்பதாகாது. காதல் பற்றித் தெரிந்து கொள்வதும், காதலைத் தெரிந்து கொள்வதும் முற்றிலும் மாறுபட்ட வெவ்வேறு விஷயங்கள். உண்மையில், காதல் குறித்து நிறைய அறிந்துகொள்ளும் மனிதர் காதலைத் தவறவிட்டுவிடுகிறார். காரணம் தனது அறிவின் மூலம் ஏமாற்றப்படுகிறார்கள். "எனக்கு ஏற்கெனவே தெரியும்" என்று அவர் கருதுகிறார். தனக்கு ஏற்கெனவே அது பற்றித் தெரியும் என்று நினைப்பதால்,

அறிவுத் தேடலுக்கான மற்றொரு பாதை பற்றிய கேள்வி எழுவ தில்லை.

தெரிந்துகொள்ள இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று, பார்வை யாளராக வெளியே இருப்பது, சம்பந்தப்படாது விலகிநிற்பது அவ்வழி. அது அறிவியல்பூர்வமானது. மற்றொன்று ஆன்மீகப்பூர்வமானது. நேசத்துடன் அதனுடன் இணைவதாகும். தள்ளி நிற்காமல் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்வதாகும். பாதுகாவலன் போல் ஒதுங்கி நிற்காமல் உள்ளே குதிப்பதாகும். அது ஒரு வேகமான பாய்ச்சல். அதற்குத் துணிவு, ஊக்கமும் தேவை.

உலகின் மிகப்பெரிய துணிவு என்பது தெரியாததைத் தெரிந்து கொள்ள, அறிந்து வைத்திருப்பதை உதறிவிட்டுக் காரியத்தில் இறங்கு வதாகும். சாகஸத் துணிவுள்ள மனிதர்களுக்கு மட்டுமே அது உரியது. சந்நியாசம் எல்லோருக்கும் ஏற்றதல்ல. அவ்வாறு அதில் ஈடுபட முடியாது. ஆட்டுமந்தை மனோபாவம் கொண்ட மனிதர்களுக்கு அது ஏற்றதல்ல. தெரிந்ததை உதறிவிட்டுத் தெரியாத ஒன்றை நோக்கிக் கர்ஜனையுடன் பாயும் சிங்கம் போன்ற ஒரு சிலருக்கானது.

லட்சக்கணக்கான வழியில் நீங்கள் மேற்கொள்ளும் கோழைத் தனத்தைப் பகுத்தறிவால் உங்களால் உணரமுடியும். உங்கள் பேடித் தனத்தை பகுத்தறியும் மிகவும் அழகான வழிகளில் அதுவும் ஒன்றாகும். என்னால் எப்படி தாவிக் குதிக்க முடியும்? ஏனென்றால், நான் அது பற்றி அறிந்து கொள்ளாதவரையில் அது சட்டவிரோதமானது. ஒருவர் எப்போதும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்" என்று நீங்கள் கூறுகிறீர்கள். நீங்கள் தர்க்கரீதியான சிந்தனை கொண்டவராக இருந்தால் உங்கள் முழுவாழ்வும் உள்ளீடற்றுக் காணப்படும். தர்க்கம் உங்களுக்கு ஆழமான பார்வையைத் தராது. ஆழமான பார்வை எப்போதும் அன்பில் இருந்து வருகிறது. அன்பு எப்போதும் பித்துக் குளித்தனமான காரியம்.

அல் மஸ்த்ரா என்ற ஒரு சந்நியாசி இருக்கிறாள். பைத்தியக் காரத்தனமான அன்பு கொண்டவர் என்று பொருள். சில நாட்களுக்கு முன்னர் அப்பெண் சந்நியாசம் பெற்றாள். இன்று அவள் பேராணந்தம் மற்றும் பரவசநிலையை அனுபவிப்பதாகக் கூறுகிறார். அவள் சந்நியாசியாக இருந்தபோது உச்சத்தை நோக்கி முன்னோக்கி உயர்ந்து கொண்டிருந்தாள். இப்போது அவள் நண்பன் ஒருவன் வந்து, "இதெல்லாம் வியாபாரத் தந்திரம்" என்கிறான். அவள் என்னிடம், நான் என்ன செய்யட்டும்? அவனை வெளியே போ என்று கூறட்டுமா அல்லது பொறுமையாக இருக்க வேண்டுமா?" என்று கேட்டாள்.

அல் மஸ்த்ரா பொறுமையுடன் இரு. எப்படி பொறுமை காப்பது என்று அன்புக்குத் தெரியும். உனது ஆற்றலை அவன் உணரும்படி செய். அவன் என்னை நெருங்கி வரலாம். ஆனால் இப்போது உன்னைக் காதலிக்கிறான். உனது ஆற்றலை அவன் உணரும்படி செய். இப்போது உன் ஆற்றல் எனது ஆற்றலாகும். கவலைப்படத் தேவை யில்லை. நடனமாடு, தேமிசைத்து மகிழ்ந்திரு. உனது ஆற்றலை அவன் உயிரில் பாய்ச்சு. ஏதோ முக்கியத்துவம் நிறைந்த ஒன்று உன்னுள் ஏற்பட்டு இருக்கிறது என்று அவனை உணரச் செய். அவனைச் சமாதானப்படுத்த முயலாதே. விவாதிக்க வேண்டிய விஷயம் அல்ல.

குற்றம் சுமத்துவதால் ஒருபோதும் சந்நியாசம் பெறமுடியாது. அது ஒரு மாற்றமாகும். எனவே விவாதம் செய்ய முயலாதீர்கள். நீங்கள் விவாதம் செய்தால், அவர் உங்கள் மகிழ்ச்சியை அழிக்க நிறையச் சாத்தியம் உண்டு. எல்லாவித விவாதங்களும் மகிழ்ச்சிக்கு ஆபத்து விளைவிப்பவை. அவர் உங்கள் மகிழ்வை அழிக்கும் திறனை ஒரு தடவை பெற்றுவிட்டால் அவர் செய்வது சரிதான் என்று மெல்ல மெல்ல உணர்வீர்கள். அவர் உங்களுக்குள் சந்தேகத்தை உருவாகி விடுவார்.

நீங்கள் விவாதம் செய்தால் தோற்றுப் போவீர்கள். விவாதத்தில் இறங்காதீர்கள்! மாற்றம் அடைவதற்கு அதைவிட்டு விலகி இருக்கும் ஒரு சிறந்த வழி இருக்கிறது. நடனமிடுங்கள். அவர் விவாதிக்கும்போது நீங்கள் நடனமாடத் தொடங்குகிறீர்கள். அவரைக் கட்டியணையுங்கள். அவரிடம் அன்பு காட்டுங்கள். அவரை முத்தத்தால் நனையுங்கள். அவர் விவாதிக்கும் சமயத்தில் அவரைத் தடுமாறச் செய்யுங்கள். இப்போது நீங்கள் முற்றிலும் புதிய மனிதர் என்று அவரை உணரச் செய்யுங்கள்.

அதனால்தான் நான் உங்களிடம் அல் மஸ்தாவின் பெயரைச் சொன்னேன். முட்டாள் காதலன் போல் நடந்துகொள்ளுங்கள். அவரது விவாதங்கள் பற்றிக் கவலைப்படாதீர்கள். நீங்கள் அந்த விவாதங் களுடன் சம்பந்தப்படாது போனால், அவர் உங்களிடம் ஏற்படும் மாற்றங்களுடன் சம்பந்தப்படுவார். அது தினமும் நிகழ்ந்து வருகிறது. தான் சொல்வது குறித்து அவரே சந்தேகம் கொள்வார். நீங்கள் அவரிடம் சந்தேகத்தை உருவாக்கிவிட்டீர்கள்.

அவர் உங்களிடம் ஏற்படுத்தும் சந்தேகத்தை விடவும், நீங்கள் அவரிடம் ஏற்படுத்தும் சந்தேகம் முற்றிலும் மாறுபட்டது. அவர் உங்களிடம் அறிவுசார்ந்த சந்தேகத்தை மட்டுமே எழுப்ப முடியும்.

ஆனால் நீங்கள் அவரிடம் வாழ்வு குறித்த சந்தேகத்தை எழுப்ப முடியும். உங்களுக்கு ஏற்பட்ட சந்தேகம் தனக்கும் ஏற்பட வேண்டும் என்று அவர் விரும்புகிறார். அதன் பிறகு வேலை முடிந்துவிடுகிறது.

"வெளியே போ" என்று அவரிடம் சொல்ல வேண்டாம். அவர் வெளியேற விரும்பினால் அவர் தன்னிடம் இருந்தே வெளியேறி விடுவார். அப்படிச் சொல்ல வேண்டாம். நீங்கள் அவரை நேசித்தால் உங்கள் மகிழ்வை அவருடன் பகிர்ந்து கொள்ள இதுவே தருணம். இதெல்லாம் வியாபாரம் என்று அவர் சொல்ல அனுமதியுங்கள். அதில் கவலைப்பட ஏதுமில்லை. இது வியாபாரம்தான். வியாபாரம் என்றே கூறுகிறேன்.

ஆனால் இது சாதாரண வியாபாரம் அல்ல. ஒருவித தெய்வீக மானது. ஆனால் அவர் எப்படிப் புரிந்து கொள்கிறார்? தனது பெண் அகன்றுவிட்டாள் என்று அவர் பயப்பட்டிருக்க வேண்டும். அவர் விவாதத்தில் இறங்கி அதைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறார். ஒவ்வொரு வழியிலும் உங்களைத் திசை திருப்ப முயல்கிறார். அதன் பிறகு நீங்கள் அவரைச் சார்ந்து இருக்க முடியாது. என்னைச் சார்ந் திருக்கிறீர்கள். அதுதான் பயம் தருகிறது. அவர் பெரிதும் பொறாமை கொண்டிருக்கிறார். உங்களை இழந்துவிட்ட உணர்வு அவருக்கு ஏற்படுகிறது. எல்லா வழிகளிலும் முயன்று உங்களைச் சமாதானப் படுத்த எத்தனிக்கிறார். அவரது வாதங்களைக் கேளுங்கள். எதிர்வாதம் செய்யாதீர்கள். கேட்டு ரசியுங்கள். அவர் வாதம் செய்யும்போது மேலும் வாதம் புரிவதற்குத் தூண்டுதல் அளியுங்கள். விரைவில் அவர் விவாதங்கள் ஏதுமில்லாத நிலையில் வெறுமைப்பட்டுப் போவார். விவாதங்கள் செய்ய அவரிடம் விஷயங்கள் நிறைய இல்லை. நீங்கள் பொறுமையுடன், பரிவுடன் கவனித்துக் கேட்டால் அவரிடமும் மாற்றங்கள் ஏற்படுவதைக் காணலாம்.

நீங்கள் சந்நியாசியாகும்போது என்னுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்கிறீர்கள். நீங்கள் ஏற்புடையவராக நடக்கும்போது எனது ஆற்றலை உங்கள் மூலம் யார் மீதும் பொழியலாம். அப்படித்தான் நான் செயல்படுகிறேன். நான் எனது அறையைவிட்டு வெளியே செல்வதில்லை. எனது பணிகள் இந்த ஆறு கண்டங்களிலும் தொடர்ந்து நடைபெறுகின்றன. அவை எனது சந்நியாசிகள் மூலம் நடக்கின்றன. அவர்கள் எனது விரிவாக்கங்களாகச் செயல்படுகிறார்கள். அவர்கள் எனது கைகள், எனது கண்களாக இருக்கிறார்கள். எனது இதயமாகவும் இருக்கிறார்கள். முதலில் புரிந்துகொண்டு, அதன் பின்னர் சந்நியாசம் மேற்கொள்ளலாமா என்று கேள்வி கேட்கப்படு கிறது. அப்படி ஒருபோதும் நடக்க இயலாது. முதலில் சந்நியாசம்.

அதன் பிறகுதான் அதைப் புரிந்துகொள்ள இயலும். அப்படித்தான் நடக்கிறது. இயல்பான வழிமுறை அதுதான்.

சந்நியாசியாக மாறுங்கள். அந்த எண்ணம் உங்கள் மனதில் சதா வட்டமிடுகிறது. இல்லாது போனால் இந்த கேள்வி தோன்றியிருக்க வழியில்லை. உங்கள் இதயம் ஏற்கெனவே சற்று வேகமாக அடிக்கத் தொடங்கிவிட்டது. உங்கள் சுவாசம் அந்த நறுமணத்தை உணர ஆரம்பித்துவிட்டது. நீங்கள் ஏற்கெனவே புத்தநிலைப் பகுதியின் புற எல்லையைத் தொட்டுவிட்டீர்கள். இப்போது அவர் குதிக்கலாம்.

தேவையான சமயத்தில் புரிந்துகொள்ளல் மற்றும் தீர்மானங்கள் போன்றவை தானே வந்துசேரும். அனுபவரீதியாக அவை வரும் போது அவற்றுக்கு அதீதமான கால நீடிப்புத் திறனும், மெய்மை நிலையும் ஏற்படும். மதிப்புமிக்க மெய்நிலை என்பது அனுபவம் மூலம் மட்டுமே ஏற்படமுடியும்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**நீங்கள் இன்று ஓரினக்கலவி பற்றியும், ஆண்களாகிய நாம் கைகோர்த்துக் கொண்டு வீதியில் நடப்பது பற்றியும், ஒருவரை ஒருவர் "அன்பரே! என்று அழைப்பது பற்றியும் பேசியதைக் கேட்டு நாங்கள் சிரித்தோம். ஒரு விதத்தில் சிரிப்பது நல்லது தான். சிலசமயம் அது பரிகாசத்தின் விளிம்புக்குச் சென்று விடுகிறது. ஓரினக் கலவியாளனான நான் அக்கணத்தில் எனது சிரிப்பை அடக்கிக் கொண்டேன். ஓரினக் கலவியாளர்கள், கருப்பர்கள், யூதர்கள் அல்லது வேறு சிறுபான்மை இனத்தவர் இந்த சிரிப்பை எப்படி ஏற்பார்கள், ஏற்றுக் கொள்வார்கள் என்று கூறுங்கள்.**

இங்கே நீங்கள் ஒருவர் மட்டுமே ஓரினப்புணர்ச்சியாளர் அல்ல. நம்மிடம் நிறைய ஓரினக் கலவியாளர்கள் இருக்கிறார்கள். தன் இனக் கலவியில் ஈடுபடும் பெண்களும் இருக்கிறார்கள். இது ஒரு குட்டி உலகம். என்னிடம் பலவிதமான மனிதர்கள் இருக்கிறார்கள். எனது தோட்டத்தில் எல்லாவிதமான மலர்களும், செடிகளும் உள்ளன. அது தோட்டம் என்பதைவிடவும் காடு எனலாம். நான் அனைத்தையும் ஏற்றுக் கொள்கிறேன். காட்டுச் செடிகள் போன்ற சகலத்தையும் ஏற்கிறேன். அனைத்தும் வரவேற்கப்படுகிறது.

நீங்கள் **ஒருவர் மட்டும்** ஏன் கலக்கம் கொள்கிறீர்கள்? புகழ் பெற்ற பல ஓரினக் கலவியாளர்கள் இங்கே உண்டு. நீங்கள் அவர்களில் ஒருவர் எனக்கு தெரியவே தெரியாது. ஏன் கலவரப்படுகிறீர்கள்? வேறு யாரும் அதை ஒரு குற்றமாக ஏன் எடுத்துக் கொள்ளவில்லை?

அதை ஏற்றுக்கொள்ள அவர்கள் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால், அது எனது முழுமையான போதனையாகும். நீங்கள் யாராக இருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். குற்றம் சொல்லாதீர்கள். தீர்ப்பு வழங்காதீர்கள். மதிப்பீடு செய்யாதீர்கள். நீங்கள் ஒரு ஓரினக் கலவியாளராக இருந்தால் அது பெரிய விஷயமா? அதை அனுபவியுங்கள்! வாழ்க்கை உங்களை அவ்விதம் படைத்திருக்கிறது. அது தன்னை உங்கள் மூலம் வெளிப்படுத்திக் கொள்ளும் வழியாகும். சாக்ரட்டீஸ் தொடங்கி புகழ்பெற்ற பல ஓரினக் கலவியாளர்கள் இருக்கிறார்கள்.

ஓரினக் கலவியாளர்களின் வரலாற்றைப் பார்த்தால் நீங்கள் வியந்து போவீர்கள். ஓரினக் கலவியாளர்களை விட வும் அவர்களுக்குப் பலரிடம் இணக்கமான நெருக்கம் இருந்திருக்கிறது. புகழ்பெற்ற சிறந்த கவிஞர்கள், ஓவியர்கள், இசைமேதைகள், கலைஞர்கள் பலரும் ஓரினக் கலவியாளர்களிடம் பரிவு காட்டியிருக்கிறார்கள். அதில் ஒரு விஷயம் இருக்கிறது. அதைப் புரிந்துகொள்ள வேண்டும். ஏன் ஓவியர்கள், கலைஞர்கள் எல்லாம் பரிவு காட்டினார்கள்? அவர்கள் எப்போதும் புதியன கண்டறியும் மனிதர்கள். கண்ணில் படுவது எல்லாம் அவர்களுக்குத் திருப்தி தராது. புதியவைகள் காண முயல்கிறார்கள்.

இப்போது பிற பாலினத்தவரைப் புணரும் செயல் இயல்பான ஒன்று. அது அனுமதிக்கப்பட்ட ஒன்று. புதியன கண்டறியும் மனிதர்கள் புதிய பாதைகளை சார்ந்திருக்க முயல்கிறார்கள். அவர்கள் கற்பனாவாதிகள். பெண்ணிடம் அல்லது ஆணிடம் திரும்பத் திரும்ப காதல் கொள்வது வழக்கமான ஒன்று என்று நினைக்கிறார்கள். அவர்கள் புதிய சோதனைகளில் ஈடுபட்டுப் பார்க்க ஆசைப்படுகிறார்கள். இப்படிப்பட்டவர்கள்தான் ஓரினக் கலவியைக் கண்டுபிடித்தவர்கள். அவர்கள் கண்டுபிடிப்பாளர்கள்.

சிலர் இன்னும் முன்னேறிச் சென்றார்கள். அவர்கள் இருபால் கலவியாளர்கள். அந்த இருபால் கலவியாளர்கள் ஓரினக்கலவி சற்று பின்தங்கிவிட்ட விஷயம் என்று கருதுகிறார்கள். இருபால் கலவி மாறுதல்களை ஏற்றுக்கொள்ள வசதி பெற்றது. அதில் ஈடுபடும் ஒருவர் ஆண், பெண் யாராக இருந்தாலும் அவர்களுடன் அனுசரித்துக் கொண்டு இன்பம் துய்க்க முடியும். கலவியில் ஈடுபட அவருக்கு நிறைய வாய்ப்புகள் உள்ளன. அவருக்குத் தட்டுப்பாடு ஏற்படாது. அவரால் எப்போதும் விருப்பமான ஒரு காதல் இணையைப் பெற்றிட முடியும்.

உங்களுக்குள் மனதின் ஆழத்தில் குற்றஉணர்ச்சி இருக்கிறது. அதனால் தவறிழைத்துவிட்டதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்.

இல்லாதுபோனால் அந்த ஹாஸ்யததைக் கேட்டு நீங்கள் சிரித்திருப்பீர்கள். உண்மையில், அந்த வார்த்தைகளைச் சொல்ல நேர்ந்ததற்கு நான் பொறுப்பல்ல. யார் பொறுப்பு என்று யூகித்துப் பாருங்கள். உங்களால் யூகிக்க இயலும் என்று நான் கருதவில்லை. அதற்குப் பொறுப்பு போப்பாண்டவர்.

போப்பாண்டவர் புனித பூமிக்குப் பயணம் செய்தார். பயணக் கடைசி நாளில் கல்வாரி மலைக்குச் சென்று வழிபாடு நடத்தினார். பக்தி சிரத்தையுடன் அவர் நறுமணமான புனிதப் புகை கமழும் தூபக் கலசத்துடன் மலையில் இருந்து கீழே இறங்கினார். தொலைவில் இருந்தபடி அவரைக் கவனித்துவந்த ஒரு ஓரினக்கலவியாளன் அவரது அங்கியை நளினமாகப் பிடித்து இழுத்தான். "ஹலோ டார்லிங்! உன் அழகுப் பையில் நெருப்பு பிடித்திருக்கிறது" என்றான்.

இந்த கருத்தை நான் போப்பாண்டவரிடம் இருந்து பெற்றேன். எனவே யாரையும் அவமதிக்க வேண்டாம். நான் யாருக்கும் எதிரானவன் அல்ல. முழுமையான ஏற்றுக் கொள்ளல் தேவை என்பதை நான் தரும் செய்தியாகும்.

நான் இந்த ஹாஸ்யங்களை உருவாக்கவில்லை. எனது சந்நியாசிகள் இவற்றை எனக்கு அனுப்பினார்னுரகள். பிற பாலினத்தவரைப் புணரும் முறைக்கு எதிரான ஹாஸ்யங்கள் உங்களிடம் இருந்தால், அவற்றை எனக்கு அனுப்புங்கள். மற்ற ஹாஸ்யங்களைப் பயன்படுத்துவது போல அவற்றையும் பயன்படுத்திக் கொள்கிறேன்.

பெண்கள் சிலர் எனக்குக் கடிதம் எழுதி, "எப்போதும் உங்கள் ஹாஸ்யங்கள் பெண்களுக்கு எதிராகவே உள்ளன" என்று தெரிவிக்கிறார்கள். அதற்கு நான் என்ன செய்யட்டும்? ஆண்களுக்கு எதிரான ஹாஸ்யங்களை நீங்கள அனுப்பி வையுங்கள். ஹாஸ்யங்களை உருவாக்குவதில் எனக்கு ஆர்வமில்லை. ஜனங்கள் எனக்கு அவற்றை அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். எவ்வகையான ஹாஸ்யம் என்றாலும் அனுப்பி வையுங்கள். அவற்றைப் பயன்படுத்திக் கொள்வேன்.

குற்ற உணர்வு நல்லதல்ல. ஏதோ தவறு செய்து கொண்டிருப்பதாகக் குற்ற உணர்வு உங்கள் ஆழ்மனதில் இருக்கிறது. அதுதான் உறுத்தல் தருகிறது. உங்களுக்குள் காயம்பட்டிருக்கிறீர்கள். வெளியே மூடி வைத்திருந்தாலும் காயம் உள்ளே இருக்கிறது. நீங்கள் என்னைப் புரிந்துகொண்டால் மூடிவைத்திருக்கும் காயத்தை திறக்கவும். திறந்து வைத்தால்தான் நீங்கள் அதை குணப்படுத்த முடியும். கதிரொளி அதை குணப்படுத்தட்டும். காற்று சுகப்படுத்தட்டும். திறந்து வையுங்கள்.

நீங்கள் எப்படிப்பட்டவராக இருந்தாலும் அது முற்றிலும் சரியானதுதான். அதை மதிப்பிடுவது மற்றவர்கள் வேலையல்ல.

ஒன்றாகச் சேர்ந்திருப்பது நல்லது என்று இருவர் கருதினால் அதில் குறுக்கிட மற்றவர்களுக்கு உரிமையில்லை. எந்த சட்டமோ, எந்த அரசாங்கமோ, எந்த மதமோ, எந்த தேவாலயமோ குறுக்கிட இயலாது. அந்த இருவரும் மகிழ்வுடன் இருந்தால், அது முற்றிலும் அவர்களின் முடிவு. உலகம் மகிழ்வுடன் இருக்க வேண்டும் என்று நாம் விரும்பு கிறோம். அந்த இரண்டு மனிதர்களும் மகிழ்வுடன் இருப்பது மூலம் அதை உலகத்திற்குப் பங்களிப்பு செய்கிறார்கள்.

இரண்டு பெண்கள் ஒன்றுசேர்ந்து இருப்பது மகிழ்ச்சி தருகிறது என்று அவர்கள் கருதினால், உலகம் அதற்காக ஆனந்தம் கொள்கிறது. தேவையின்றி அவர்களை குற்ற உணர்வுக்கு ஆளாக்காதீர்கள். ஆனால் குற்ற உணர்வு நிலைத்து நிற்கிறது. ஏனென்றால், ஓரினக் கலவி ஒரு குற்றச் செயல் என்று காலம் காலமாக நமக்குப் போதித்து வைத்திருக் கிறார்கள். அது மிகப்பெரிய குற்றங்களில் ஒன்று என்று பழங்காலம் தொட்டு உங்களுக்குப் போதிக்கப்பட்டுள்ளது.

ஓரினக்கலவியாளர்களுக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்காவில் ஆயுள் தண்டனை அளித்த மாநிலங்கள் சில இருந்தன என்று கேள்விப்பட்டால் ஆச்சரியம் கொள்வீர்கள். ஓரினக் கலவி செய்வது உண்மை என்று நிரூபணமானால் அவர்கள் தலைகளைத் துண்டித்த நாடுகளும் இருந்தன.

கடந்த காலங்களில் மனிதத்துவம் முட்டாள்தனமான நிலையில் இருந்து வந்திருக்கிறது. நமது ஆழ்மனதில் அந்த உணர்வுகளை நாம் பலமாகக் பதித்து வைத்திருக்கிறோம்.

ஒரு இடத்தில் இருந்துகொண்டே வேறு இடத்திலிருந்து சப்தம் வருவதுபோல செய்துகாட்டும் மிமிக்ரி கலைஞர் அவர். கிராமம் ஒன்றின் வழியே பயணம் செய்தபோது ஒரு பெரிய பண்ணை அவர் கவனத்தைக் கவர்ந்தது. அங்கு சென்று பார்க்க விரும்பினார். அதற்கு அனுமதி கிடைத்தது.

கட்டிடங்களை சுற்றிப் பார்த்தபோது அக்கலைஞருக்கு ஒரு வேடிக்கையான எண்ணம் தோன்றியது. அங்குள்ள குதிரைகளில் ஒன்று பேசுவதுபோல் நடித்தார்.

பண்ணையைக் குத்தகைக்கு எடுத்திருந்தவன் கண்கள் அச்சத்தால் விரிந்தன. கட்டிடத்திலிருந்து வேகமாக அதன் உரிமையாளரான குடியானவரிடம் ஓடினான். "சாம்! அங்குள்ள மிருகங்கள் பேசு கின்றன. என்னைப் பற்றி அந்த இளம் செம்மறியாடு ஏதாவது சொன்னால் அதை நம்பாதே. அது சுத்தப் பொய்!" என்று பதற்றத் துடன் சொன்னான்.

இப்படித்தான் குற்ற உணர்வு தலைதூக்குகிறது. அதை உங்களால் மறைக்கமுடியாது. தனது சுயமான வழிகளில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

உங்கள் ஓரினக்கலவிப் பழக்கத்தைக் குற்றம் கூறுவதால்தான் அந்த கேள்வி எழுகிறது. இல்லாதுபோனால் நீங்களும் சிரித்திருப் பீர்கள். அதை ரசித்திருப்பீர்கள். தன்னைப் பார்த்துச் சிரிக்கும் திறனை ஒருவர் பெறாதுபோனால், சிரிப்பு என்றால் என்ன என்று அவருக்குத் தெரியாது போய்விடும். சிரிப்பின் அழகு பிடிபடாது. பிறரைப் பார்த்துச் சிரிப்பது எளிது. அது குரூரமானது. வன்முறையானது. தன்னைப் பார்த்தே ஒருவர் சிரிப்பதில் ஒருவித ஆன்மீகம் கலந்திருக் கிறது. பகுத்தறிவு என்று காரணம் காட்டி அதன் பின்னால் நாம் மறைந்து கொள்கிறோம்.

ஓரினக் கலவியாளர்களான சிறுபான்மையினர் குற்றம் சாட்டப் படுகிறார்கள் என்று நீங்கள் நினைக்கலாம். ஒரு விஷயத்தை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். பிறபாலினக் கலவி, ஓரினக்கலவி, இருபாலினக் கலவி எதிலும் நான் சம்பந்தப்பட்டவனல்ல. நான் இவற்றுக்கு எதிராக இருக்க முடியாது. ஆதரவும் காட்ட முடியாது. உடலிச்சை சார்ந்த உலகில் என்னால் காலம் தள்ள முடியாது. உடலின்பம் என்பதற்கு எந்த அர்த்தமும் இடையாது. அதனால்தான் உங்கள் எல்லோரையும் நான் ஏற்கிறேன்.

நீங்கள் துறவிகள் என்று அழைக்கும் மனிதர்கள் உங்கள் எல்லோரையும் அங்கீகரிக்கும் தகுதி பெறவில்லை. காரணம், அவர்கள் உடலிச்சை சார்ந்த உலகில் வாழ்கிறார்கள். உடலின்பம் கொண்டவர் களாக இருக்கிறார்கள். அதை வெறுக்கிறார்கள், அடக்கி உள்ளே வைத்திருக்கிறார்கள். அதற்கு எதிரானவர்களாகவும் இருக்கிறார்கள். எதிராக இருத்தல் என்பதன் அர்த்தம் அதை இன்னும் வெறுப்புடன் பார்க்கிறீர்கள் என்று அமைகிறது. நான் அதற்கு ஆதரவாகவும் இல்லை, எதிராகவும் இல்லை. எனக்கு அது ஒரு பெரிய விஷயமே அல்ல. மக்கள் ரசித்து விளையாடும் ஒரு விளையாட்டு, கேளிக்கை அவ்வளவுதான். மற்றபடி அதில் தீவிரமான விஷயம் எதுவும் கிடையாது. எல்லாம் சிறுபிள்ளைத்தனம். ஓரினக்கலவி, பிற பாலினக் கலவி, இருபாலினக்கலவி என்ற எல்லாமே சிறுபிள்ளைத்தனம்.

ஒருநாள் நீங்கள் இவற்றை எல்லாம் தாண்டி மனவளர்ச்சி பெறுவீர்கள் என்று நான் நம்புகிறேன். அப்போது முற்றிலும் ஒரு புதிய வெளிப்பாடு நிகழும். கிழக்கு நாடுகளில் நாம் அதை **பிரம்மச் சரியம்** என்று கூறுகிறோம். மேற்கு நாட்டில் அதற்கு இணையான ஒரு சொல் இல்லை. காரணம் மேற்கு நாட்டு உணர்வுகள் இந்த

அளவு உயரத்திற்குச் செல்லவில்லை. உடலுறவில் ஈடுபடாத நிலை என்பது ஒரு மேலோட்டமான மொழிபெயர்ப்பு. அசிங்கமான பொருள் கொண்டது.

உடலுறவில் ஈடுபடாத நிலை என்று குறிப்பிடப்படும் அது ஒரு எதிர்மறைச் சொல். உடலுறவில் ஈடுபடாதிருத்தல் காமத்திற்கு அப்பாற்பட்டது அல்ல. அதை அடக்கி வைத்திருத்தலாகும். **பிரம்மச்சரியம்** என்பதன் அர்த்தம் கடவுள்போல் வாழ்வதாகும். தெய்வீகத்தில் வாழ்வதாகும். தெய்வீகத்தில் வாழ்வது என்றால் என்ன பொருள்? உங்கள் உடல் என்ற நெருப்பை விட்டு காமம் என்ற புகை மறைந்து விடுகிறது. உடல் நெருப்பு புகையற்று உள்ளது. காமம் மறைகிறது. காமம் முழுமையாக மறையும்போது, காமத்தில் சம்மந்தப்பட்டுள்ள ஆற்றல் முற்றாக அன்பு, பரிவு போன்றவற்றின் பக்கம் திரும்புகிறது.

குற்றச்சாட்டுக்கு ஆட்பட்ட உணர்வு உங்களுக்கு ஏற்படும்போது உங்களை நீங்களே வெளிப்படுத்திக் கொள்கிறீர்கள். ஒருவகையில் அதுவும் நல்லதுதான். இனி குற்ற உணர்வுடன் இருக்காதீர்கள் ஒளிவு மறைவற்று உங்களைக் காட்டிக் கொள்வது மிகவும் நல்லது. பயப்பட வேண்டாம். உங்களைப் பற்றி அறிந்துகொள்ள ஒரே வழி, உங்களை வெளிக்காட்டிக் கொள்வது.

மனோதத்துவ மேதை சிக்மெண்ட் ஃபிராய்டும், கார்ல் ஜுங்கும் ஒன்றாக ரயிலில் பயணம் செய்தவர்கள் என்று ஒரு கதை உண்டு. அப்பயணத்தின்போது ஜுங் ஃபிராய்டை ஆழமாக ஆராய்ந்து பார்க்க முயன்றார். மனஇயல்புகளை துல்லியமாக கண்டுபிடிக்க எண்ணினார். ஃபிராய்ட் அவற்றைத் தட்டிக்கழிக்க முயன்றார். ஜுங் பொறுமையிழந்து தனது உண்மையான அகநிலையை வெளியிடுமாறு கோரினார்.

"என்னால் முடியாது" என்று பதிலளித்தார் ஃபிராய்ட். அப்படிச் செய்வது எனது உரிமையை விட்டுக்கொடுப்பது போன்றது" என்றார்.

ஜுங் பெருமூச்சுடன் நாற்காலியில் சாய்ந்துகொண்டு, "முன்பே அதை நீங்கள் இழந்துவிட்டீர்கள்" என்று கூறினார்.

உண்மையான மனிதர் எப்போதும் தனது அகநிலையை வெளிப்படுத்தத் தயாராக இருப்பார். காரணம் அவர் அச்சம் கொள்வதில்லை. ஃபிராய்ட் இவ்வாறு சொல்கிறார் "நான் எனது உண்மை நிலையை வெளிக்காட்ட இயலாது. அப்படிச் செய்வது எனது உரிமையை விட்டுக்கொடுப்பது போன்றது." அவர் ஒரு பொய் வேடத்தை தரித்துக் கொண்டிருக்கிறார் என்பது தெளிவாகிறது. அதை அவர் தனது வாழ்நாள் முழுவதும் சுமந்து திரிந்தார். மனோவியல் ஆய்வுகளின் முன்னோடியாக அவர் இருந்தாலும், அவரை யாரும்

ஆய்வு செய்யவில்லை. அவரது சீடர்கள், "உங்களை ஆய்வு செய்ய வேண்டும்" என்று பலமுறை கேட்டார்கள். அவர் எப்போதும் அதற்கு மறுப்பே தெரிவித்து வந்தார். காரணம் அவர் பயம் கொண்டிருந்தார்.

இந்த கதை ஒரு குறியீடு ஆகும். தான் எவ்விதம் இருக்கிறோம் என்பதை வெளிக்காட்ட அவர் பயந்தார். அந்த அந்த பயமே உரிமை இழப்பாகும். ஆனால் ஒரு நிஜமான உரிமைபெற்ற மனிதர் அதை இழப்பதற்கு அஞ்சமாட்டார். அதை அவரால் இழக்க முடியாது. அதை இழக்க வழியில்லை. உண்மையான உரிமையாளருக்கும், உரிமையாளராக பாவனை செய்பவருக்கும் இடையில் உள்ள வேறுபாடு இதுதான். பாவனை செய்பவரிடம் நிஜமான உரிமை இல்லை. அவர் வேஷதாரி. உரிமை பெற்ற மனிதர் தன்னை முழுமை யாக வெளிக்காட்டிக் கொள்ள முடியும். அந்த உரிமை வெளியில் இருந்து திணிக்கப்பட்டது அல்ல. அது அகத்தில் இருக்கிறது. அவரது அனுபவத்தில், நம்பகத்தன்மையில் இருக்கிறது.

ஜுங் நன்கு சாய்ந்து உட்கார்ந்து கொண்டு "நீங்கள் அதை ஏற்கெனவே இழந்துவிட்டீர்கள்" என்று கூறினார்.

அன்றைய தினத்தில் இருந்தே ஜுங்குக்கும், ஃபிராய்டுக்கும் இடையே பிரிவு ஏற்பட்டுவிட்டதாகச் சொல்லப்படுகிறது. அதை மீண்டும் இணைக்கவே முடியவில்லை. ஜுங் மட்டுமே அந்த பிரிவுக்குக் காரணம் என்று நான் சொல்லமாட்டேன். ஃபிராய்டுக்கும் அதில் சம்பந்தம் உண்டு. ஃபிராய்ட் பலவிதமான மன அழுத்தங்களில் அகப்பட்டிருந்தார். எனவே தன்னை பரிசோதித்துப் பார்க்க அனுமதிக்க வில்லை.

உங்களின் முழுமையான ஒளிவுமறைவற்ற தன்மையை வெளிப்படுத்த உதவி செய்வதே என் பணியாகும். நீங்கள் எப்படிப் பட்டவராக இருந்தாலும், நீங்கள் எங்கு இருந்தாலும் உங்களை தேடிக் கண்டறிந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வருவேன். சிலசமயம் அது காயப்படுத்துவதாகவும் இருக்கும். அது அதிர்ச்சியளிக்கவும் செய்யும். சிலசமயம் நீங்கள் கோபம் கொள்ளலாம். குற்றம் சாட்டப்படலாம். ஆனால் பொறுமையாக இருங்கள். இது ஒரு ரணசிகிச்சை. வலி இருக்கவே செய்யும்.

நான்காவது கேள்வி

ஓஷோ,

நீங்கள் சொல்வது ஒரு வார்த்தையும் எனக்குப் புரியவில்லை.

என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? நான் எப்போதாவது ஒரு வார்த்தை பேசியதுண்டா? நான் மௌனமானவன். ஒருபோதும் பேசியதில்லை. நான் உங்களிடம் கூறிய சொற்கள் எல்லாம் உண்மையை வெளிப்படுத்துவதற்காக அல்ல. காரணம், உண்மையை வெளிப்படுத்திக் காட்ட இயலாது.

விஷயம் உங்கள் மனதில் பதிய வேண்டும் என்பதற்கு பயன் பட்ட ஒரு கருவிதான் நான் கூறிய சொற்களாகும். நிஜமான பணி முற்றிலும் வேறானது. உங்கள் மனம் எனது சொற்களுடன் சம்பந்தம் கொள்ளும்போது எனது கைகள் உங்கள் உயிரின் உள்ளே அழகாக உட்புகுகின்றன. உங்கள் அறிவு சம்பந்தப்படும்போது எனக்கு நீங்கள் அதிக அளவில் வசப்படக் கூடியவராகிறீர்கள். அறிவு சம்பந்தப்படாது போனால், அந்த அறிவு உங்களை மூடிவைத்து விடுகிறது.

நான் உங்களுடன் பேசுகிறேன். அந்த சொற்கள் விளையாட்டு பொம்மைகள் போன்றவை. நீங்கள் அந்த பொம்மைகளுடன் விளை யாடும்போது மறைவாக பெரிய அறுவைச் சிகிச்சை நடக்கிறது.

உண்மையை வார்த்தைகளால் சொல்லி விளக்க முடியாது. அதை எடுத்துரைக்க வார்த்தைகள் இல்லை. உண்மை என்பது வார்த் தைகளால் சொல்ல முடியாத விஷயம் என்றால், எது சொன்னாலும் அது சொன்னதாக இருக்காது. அதனால்தான் நான் ஒரு வார்த்தையும் பேசுவதில்லை என்று கூறுகிறேன். நான் எதுவும் சொல்லவில்லை. நீங்கள் எதையும் கேட்கவுமில்லை. எனவே புரிந்துகொள்வது பற்றிய கேள்வி இங்கே எப்படி வரும்? அது புரிந்துகொள்ளல் குறித்த கேள்வி அல்ல. அது தொடர்பு கொள்ளல் குறித்த கேள்வியாகும்.

என்னை அருந்தவும், உண்ணவும் நீங்கள் இங்கே உட்கார்ந் திருக்கிறீர்கள். சீடர் என்பவர் நரமாமிச பட்சணி போன்று இருக்க வேண்டும். அவர் குருவை உண்டு ஜீரணித்துவிட வேண்டும். வார்த் தைகள் மேலோட்டமானவை. அவை பெரிய விஷயமல்ல. அதனால் தான் நான் அனுசரித்துப் போகாதவனாக, முரண்பட்டவனாக இருக் கிறேன். வார்த்தை ஒரு பெரிய விஷயமே இல்லை. வார்த்தைகள் மூலம் நான் எதையும் எடுத்துரைப்பதில்லை. உங்களை அதில் பங்கு கொள்ள வைக்கிறேன். உங்கள் அறிவு வேறு எங்கோ இருக்கிறது. வார்த்தைகள் மூலம் உங்கள் உயிர் எனக்கு வசமாகிறது. எனது ஆற்றலை வெளிப்படுத்த ஒத்துழைக்கிறது.

நீங்கள் சொல்லும் ஒரு வார்த்தையும் எனக்குப் புரியவில்லை என்று கூறுகிறீர்கள்.

அதற்கு அவசியமில்லை.

யாத்ரி எழுதிய நகைச்சுவைப் பாடலைப் பாருங்கள்.

**பூனேயில் ஒரு குரு இருப்பதாகக் கேள்விப்பட்டேன்.**
**வாய்திறந்து ஒருவார்த்தை பேசுவதில்லை என்று**
**பிரமாணம் எடுத்துக் கொண்டவர்.**
**ஓராயிரம் பேர் அங்கு வருகிறார்கள்.**
**அவரது நாற்காலியைப் பார்க்கிறார்கள்.**
**இப்போது அவர் இல்லவும் இல்லை - என்ன அபத்தம்!**

**ஐந்தாவது கேள்வி**

**ஓஷோ,**

**உயிரற்ற குருவை நம்மால் பின்பற்ற முடியாது என்று ஒரு முறை நீங்கள் கூறினீர்கள். ஒருநாள் நீங்கள் இந்த உடலை விட்டு நீங்கும்போது நாங்கள் என்ன செய்வது? உங்கள் சீடர்களுக்கு என்ன நிலை ஏற்படும்? உயிருடன் இருக்கும் ஒரு குருவை நாங்கள் தேட வேண்டுமா? தயவுசெய்து விளக்குங்கள்.**

நீங்கள் இன்னும் சீடராகவில்லை என்பதால் கவலைப்படுகிறீர்கள். உயிருள்ள குரு இங்கு இருக்கிறார். நீங்கள்தான் இன்னும் சீடராக மாறவில்லை. நான் இறந்துவிட்டால் புதிய குருவைத் தேட வேண்டியிருக்குமே என்று கவலை கொள்கிறீர்கள். மனம் உருவாக்கும் அர்த்தமற்ற குழப்பங்களைப் பாருங்கள். அப்படி ஒரு குருவை கண்டு பிடித்தாலும் மீண்டும் அதே கேள்வியைக் கேட்பீர்கள்.

உயிரற்ற குருவை உங்களால் பின்பற்ற முடியாது என்பது உண்மைதான். நான் உயிருடன் இருக்கும்போது ஒரு சீடனாக மாறுங்கள். ஒரு உயிருள்ள குருவைக் கண்டறிய இரண்டு வழிகள் உள்ளன.

எளிதான வழி என்னவென்றால், உயிருள்ள குரு அங்கு இருந்தால் அவருக்குள் கலந்துவிடுங்கள். உங்கள் பக்கம் ஒரு சதவீத முயற்சி இருந்தால் போதும். மீதி தொண்ணூற்று ஒன்பது சதவீதப் பணியை குரு பார்த்துக் கொள்வார். உயிருள்ள குரு கிடைக்கவில்லை என்றால், அப்போது மிகவும் சிரமமாகிவிடும். தொண்ணூற்று ஒன்பது சதவீதப் பணிகளை நீங்கள் செய்ய வேண்டியிருக்கும். உயிருடன் இல்லாத குருவால் ஒரு சதவீதப் பணியை மட்டுமே செய்ய முடியும்.

உதாரணமாக நீங்கள் ஏசுவைப் பின்பற்றலாம். புத்தரைப் பின்பற்றலாம். ஆனால் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் வேலைகளை நீங்கள்தான் செய்ய வேண்டும். புத்தரால் ஒரு சதவீத வேலையைத் தான் செய்ய முடியும். பெரிய அளவில் தீவிரத்தையும், வேட்கையை

யும் நீங்கள் உருவாக்கிக் கொள்ள வேண்டும். நீங்கள் நெருப்பாக மாற வேண்டும். நெருப்பாக மாறும்போது உண்மையைத் தேடும் வேகம் அதிகரிக்கும்போது அந்த தீவிரத்தின் வழியாக புத்தர் மீண்டும் உயிர் பெறுகிறார். குரு இங்கு இருக்கிறார். வாழ்வுடன் கலந்துவிட்டார். தொடர்ந்து ஒரு உடலில் வாழ்ந்திருக்காது போனதால் அவர் இல்லை என்று கூறமுடியாது. உருவமற்று அவர் இங்கு இருக்கிறார். ஏசு உருவ மற்று இங்கு இருக்கிறார்.

நீங்கள் தீவிரமான விருப்பம் மேற்கொண்டால் அந்த விருப்பம் ஒரு ஏசுவின் உடலாகச் செயல்படும். உங்களுக்காக அவர் உயிர் பெறுவார். நீங்கள் நிஜமாகவே ஏசுவிடம் அன்பு செலுத்தினால், நீங்கள் அவருக்காக உயிர்விடத் தயாராக இருந்தால், அவர் உங்களுக்காக வாழ்கிறார். ஏனென்றால், நீங்கள் அவரது உடலாக மாறுகிறீர்கள். அவரது உடலாக நீங்கள் செயல்படுகிறீர்கள். ஆனால் அது மிகப்பெரிய பணி. வெகு அரிதான மனிதர்களே அதைச் செய்ய முடியும். ஒரு புனித ஃபிரான்சிஸ், ஒரு தெரஸா, ஒரு எக்ஹஹ்ட் போன்றவர்கள் வெகு அரிதானவர்கள். ஏசுவின் காலத்துக்கு இருபது நூற்றாண்டுகளுக்குப் பிறகு சுமார் ஐந்து பேர் தான் இதைச் செய்ய முடிந்திருக்கிறது. நான்கு நூற்றாண்டுகளில் ஒருவர் மட்டுமே செய்தார். அது வெகு அரிய செயல்.

புத்தருடன் சேர்ந்து பலரும் இந்த காரியத்தில் இறங்கினார்கள். இருபத்தைந்து நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. அந்த பலரை விரல் விட்டு எண்ணிவிடலாம். அவர்கள் அதிகம் பேர் இல்லை. ஒரு சிலர் தான் எஞ்சினார்கள்.

உங்களிடம் அந்த தீவிரமான வேட்கை இருந்தால், "அது முழுமை பெற்றது. எனது அன்பில் சந்தேகத்துக்கு இடமில்லை. தடுமாற்ற நிழல்கள் இல்லை. அது நிழல் உருவமற்றது" என்று கூறு கிறீர்கள். ஒரு உயிரற்ற குரு பிறகு உங்களுக்குள் உயிர் பெற்று விடுகிறார். அவரை நீங்கள் பின்பற்ற முடியும். அதன் பின்னர் உங்களுடைய உள் மையம் அவரது வாகனமாகி விடுகிறது.

உயிருடன் இருக்கும் ஒரு குருவைக் கண்டறிய எளிய வழி, அவர் ஸ்தூல உடலுடன் இருக்கும் போது கண்டறிவதுதான். அவரது உடலாக நீங்கள் மாறவேண்டிய அவசியமில்லை. அவருடன் நீங்கள் எளிதாகத் தொடர்பு கொள்ள முடியும். காரணம் அவர் கண்ணால் காணக்கூடியவர். இப்போது ஏசுவைப் பார்க்கலாம்....... அவர் அற்புதங்கள் புரிந்ததெல்லாம் நடந்ததா என்று உங்களுக்கு நம்பிக்கை இல்லாதுபோகலாம். நிஜமாகவே அவர் வரலாற்றுப் பாத்திரமா என்றும் யோசிப்பீர்கள். அதற்கெல்லாம் சான்று இல்லை. அவர்

வரலாற்றுப் பாத்திரம் என்று நிச்சயப்படுத்த ஆதாரம் இல்லை. உங்கள் சந்தேகத்தை உதறுவது எப்படி?

அவரது வாழ்க்கை பற்றிக் கிறிஸ்தவர்கள் சொல்வதைக் கேட்டால் இன்னும் அதிகம் சந்தேகம் எழுகிறது. அவை உதவி செய்யும் வகையில் இல்லை. அவர் ஒரு கன்னிப் பெண்ணுக்குப் பிறந்தார் என்று கூறுகிறார்கள். அதிலுள்ள முட்டாள்தனத்தைக் கவனியுங்கள். அது விஷயத்தை மேலும் சிக்கலாக்கி விடுகிறது. அந்த கருத்தை உள்வாங்கிக் கொள்வதற்கு உங்களுக்கு முட்டாள்தனமான மனம் வேண்டும். காரணம் அது அபத்தமானது. கன்னிப் பெண்ணுக்கு குழந்தைகள் பிறக்காது. இப்போது அவர் வாழ்வு இன்னும் சந்தேகத் துக்கு இடமானதாகி விட்டது. அது புராணக்கதை போல் தோன்று கிறது. அது ஒரு புனை கதை போலிருக்கிறது. சில கல்வியாளர்கள் அது நாடகம் என்கிறார்கள். கிறிஸ்தவ நாடகம். அது ஒருபோதும் நிஜமாக நடக்கவில்லை. அது கற்பனைக் கதை. பெயர் தெரியாத பழங்காலச் ஷேக்ஸ்பியர் யாரோ ஒருவர் எழுதிய நாடகம் என்கிறார்கள்.

ஏசு சிலுவையில் அறையப்பட்ட மூன்றாம் நாள், மூன்று நாட்கள் பிணநிலையில் கிடந்த உடல் உயிர் பெற்றது என்று கிறிஸ்த வர்கள் கூறுகிறார்கள். இப்போது இதன் மூலம் பிரச்சினையை மேலும் சிக்கலாக்கி விட்டார்கள். இவை எல்லாம் அற்புதங்கள் சார்ந்த கதைகள் என்றாகிவிட்டன. வரலாற்றுப் பாத்திரம் போல ஏசுவும் மறைந்து போய்விடுவார்.

ஏசுவைக் காட்டிலும் புத்தர் அதிகம் வரலாற்றுக் கதாபாத்திரத் தன்மை பெற்றுள்ளார். அவர் ஏசுவுக்கு ஐநூறு வருடங்களுக்கு முற்பட்டவர். ஆனால் இன்றும் வரலாற்றுத்தன்மையுடன் இருக்கிறார். அவர் கன்னியின் வயிற்றில் பிறக்கவில்லை. இறந்து மறுபிறப்பு எடுக்கவில்லை. ஆனால் புத்தமதத்தினர் நம்பமுடியாத பல சொந்தக் கதைகளை உருவாக்கினார்கள். அவரது தாயார் நின்று கொண்டிருக்கும் போது புத்தர் பிறந்தார் என்றார்கள். அவர் செய்த முதல் காரியம் எழுந்து நின்று அறிக்கை விடுத்தது. பிறந்ததும் ஏழெட்டு வைத்து நின்று "என்னைவிட உயர்ந்தவர் கிடையாது. வானத்திலும் இல்லை, பூமியிலும் இல்லை" என்று அறிவித்தார் என்று எழுதிவைத்தார்கள்.

புதிதாகப் பிறந்த குழந்தை எழுகிறது. ஏழடி நடக்கிறது. அறிக்கை விடுகிறது. "என்னைவிட உயர்ந்தவர் கிடையாது. வானத்திலும் இல்லை, பூமியிலும் இல்லை" என்கிறது. இப்படிப் பட்ட அபத்தத்தைச் சொல்ல ஒருவர் எழுபது வயது அனுபவம் தேவை. வெறும் ஏழடி மட்டும் போதாது!

லாவோட்ஸு தனது தாயின் கர்ப்பத்தில் எண்பத்து இரண்டு ஆண்டுகள் இருந்தார் என்கிறார்கள். அந்த தாயைச் சற்று நினைத்துப் பாருங்கள். பாவம்! ஒன்பது **மாதங்களே** பெரிய விஷயம். இவர்கள் எண்பத்து இரண்டு ஆண்டு என்கிறார்கள்! அப்படியானால் அவர் தலைநரைத்துப் போன முதியவராகவே பிறந்திருக்க வேண்டும்.

மனிதர்கள் விஷயங்களைச் சாத்தியமற்றவைகளாக்கி விடுகிறார்கள். உங்களால் இந்த கதைகளை எப்படி நம்ப முடியும்? உங்களால் நம்ப இயலாது. இந்த கதைகளின் காரணமாக, ஒரு உயிருள்ள புத்தர் எதிரே வந்தாலும் உங்களால் நம்ப முடியாது. "நீங்கள் கன்னிப் பெண்ணிடம் பிறந்தவரா?" என்பன போன்ற அசட்டுக் கேள்விகளை எழுப்புவீர்கள். உயிருள்ள புத்தரால் ஆம் என்று பதிலளிக்க இயலாது. காரணம் அது நிஜமல்ல. "பிறந்ததும் ஏழடி நடந்தீர்களா" என்று கேட்பீர்கள். "அறிவிப்பு செய்தீர்களா?" என்று கேட்பீர்கள். எண்பத்து இரண்டு ஆண்டுகள் உங்கள் தாயின் கர்ப்பத்தில் இருந்தீர்களா?" என்று கேட்பீர்கள். இந்த எல்லா கேள்விகளுக்கும் இல்லை, இல்லை, இல்லை என்பதே பதிலாகும். "அப்படியானால் நீங்கள் எந்த வகையைச் சேர்ந்த புத்தர் நீங்கள்?" என்ற கேள்வி எழுகிறது.

பழைய புத்தர்கள் மீது நம்பிக்கை கொள்ள இக்கதைகள் உங்களை அனுமதிப்பதில்லை. வாழும் புத்தர்களையும் நம்ப இக் கதைகள் அனுமதிப்பதில்லை. இக்கதைகள் பெருநஞ்சாகவும், பெரு விபத்தாகவும் இருக்கின்றன. இறந்துபோன குருவுடன் தொடர்பு கொள்ள இது இடைஞ்சலாக அமைகிறது. மரணம் ஒன்றுதான் அவர் இங்கு இல்லை என்ற நிலையை ஏற்படுத்துகிறது. மற்றபடி அவர் இங்கு இருக்கிறார். எதுவும் இல்லாது போகவில்லை. மலர் அகன்று விட்டாலும் மணம் கமழ்ந்து கொண்டிருக்கிறது. மலர் இல்லாத நிலையில் அதன் மணத்தை நுகர்வது ஆயிரம் மடங்கு சிரமமானது. நான் சொல்வதன் பொருள் இதுதான்."

"நம்மால் இறந்துபோன ஒரு குருவைப் பின்பற்ற முடியாது என்று நீங்கள் கூறுகிறீர்கள்" என்று தெரிவிக்கிறீர்கள். அதை நான் மீண்டும் சொல்கிறேன் இறந்துபோன ஒரு குருவைப் பின்பற்றுவது கிட்டத்தட்ட இயலாத செயல். அவர் வாகனமாக நீங்கள் மாற வேண்டும். ஏகவின் கொள்கை, பரப்பும் வாகனமாக மாறும் தகுதியை நீங்கள் பெறும்போது ஏன் ஏகவாகவே மாறக்கூடாது? இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த புத்தருடன் தொடர்பு கொள்ளும் திறன் உங்களுக்கு இருந்தால், நீங்கள் ஒரு புத்தராக மாறுவதை யார் தடுக்க இயலும்?

எனவே, ஒரு உயிரற்ற குருவைப் பின்தொடர்ந்து உங்களால் இயலாத காரியம். இருபது, இருபத்தைந்து அல்லது ஐம்பது நூற்றாண்டுகள் கடந்திருக்கலாம்... ஆயிரக்கணக்கான பண்டிதர்களும், துறவிகளும் அந்த ஆதார மையத்தை அழித்து, திசை திருப்பி, மாசுபடுத்தி விட்டார்கள். தங்கள் கருத்தை முன்னிலைப்படுத்துகிறார்கள். தங்கள் கருத்தாங்களைத் திணிக்கிறார்கள். ஏசு எப்படி இருந்தார் என்று உங்களுக்குத் தெரியாது. கிறிஸ்தவர்கள் அவரை எப்படி வடிவமைத்தார்கள் என்பது மட்டுமே உங்களுக்குத் தெரியும். புத்தரை வைத்துக்கொண்டு புத்த மதத்தினரால் எதுவும் செய்ய முடியாது என்பதுபோல, ஏசுவை வைத்துக்கொண்டு கிறிஸ்தவர்களாலும் எதுவும் செய்ய முடியாது.

உயிரற்ற குருவை உங்களால் தேடியலைய முடியாது. உயிருள்ள குருவைக் கண்டுபிடிப்பதுதான் எளிதானது. உயிருள்ள குருவிடம் உள்ள சிரமம் என்னவென்றால் அவரிடம் நீங்கள் சரணடைய வேண்டும். அதை அகந்தை தடுக்கிறது. இறந்துபோன குருவுடன் நீங்கள் விளையாட்டில் ஈடுபடலாம். நீங்கள் பின்தொடர்கிறீர்கள். உங்களைத் தடை செய்ய அவர் அங்கு இல்லை. உங்கள் விளையாட்டுக்கு இடையூறு அவர் அங்கு இல்லை. எனவே நீங்கள் தொடர்ந்து செயலில் ஈடுபடலாம். அது தனக்குள் பேசிக்கொள்ளும் பேச்சாகும். உங்களுக்குப் பிடித்ததை நீங்கள் உங்களுக்குள் பேசிக் கொள்ளலாம். நீங்கள் கேள்வி கேட்கிறீர்கள். நீங்களே பதில் தருகிறீர்கள். குரு அங்கு இல்லை.

ஆனால் ஒரு உயிருள்ள குரு அங்கு இருந்தால் அவர் எப்போதும் உங்கள் பிடரி மீது அமர்ந்து கொண்டிருப்பார். உங்களைக் குனிய வைப்பது மூலம் உங்கள் அகந்தையை அழிப்பார். அது மிகவும் வலி தருவதாக இருக்கும். அதைத் தவிர்ப்பதற்காக நாம் தேவையற்ற கேள்விகள் கேட்டுக் கொண்டிருக்கிறோம். "இறந்துவிட்ட ஒரு குருவை நம்மால் பின்தொடர முடியாது என்று நீங்கள் சொன்னீர்கள். நீங்கள் உயிரிழந்து விட்டால் நாங்கள் என்ன செய்வது?" என்று கேட்கிறீர்கள்.

நான் இன்னும் இந்த உடலை விட்டுப் பிரியவில்லை. நாளை பிரிய நேரிடலாம். எனவே இன்று ஒரு நாள் மட்டுமே மிச்சமிருக்கிறது. இந்த கணம்தான் மிச்சமிருக்கும் கணமாகும். நாளைய தினம் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? இக்கணத்திலேயே நீங்கள் ஞானம் பெற்றிடலாம் என்று நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் முழுமையாகச் சரணடையத் தயாராக இருந்தால், அந்த சரணடையும் கணத்திலேயே ஞானம் சித்தித்துவிடும். அகந்தை அகன்றால் நீங்கள் ஞானம் பெறுவீர்கள்.

நீங்கள் ஏற்கெனவே ஞானம் பெற்றுவிட்டீர்கள். ஞானம் பெறுதல் உங்கள் பிறப்புரிமை என்ற கருத்தைக் கண்டுணர உங்கள் அகந்தை அனுமதிப்பதில்லை. உங்கள் இயல்பு நிலையை பொய்யான அகந்தை பின்னுக்குத் தள்ளி மறைத்து விடுகிறது. அகந்தையை உதறித் தள்ளிச் சரணடையுங்கள். அதுவே சந்நியாசமாகும். அது சீடராக மாறுவதாகும். அப்போது நீங்கள் ஞானம் பெறலாம். இன்னொரு குருவைத் தேட வேண்டிய அவசியம் என்ன? இந்த குருவுடன் நீங்கள் முழுமையாக இணையவில்லை என்றால்தான் அந்த தேடல் என்ற தேவை தலைதூக்குகிறது. அப்படியே இன்னொரு குருவை கண்டறிந் தாலும் அவரிடம் நீங்கள் முழுமையாக இணைந்திருக்க மாட்டீர்கள். ஒருவரிடம் முழுமையாக இணைந்திருப்பது எப்படி என்று உங்களுக்குத் தெரியாது. எப்படி விசுவாசம் கொள்வது, எப்படி அன்பு செலுத்துவது என்றெல்லாம் உங்களுக்குத் தெரியவில்லை.

"உங்கள் சீடர்கள் நிலை என்ன ஆகும்? உயிருள்ள இன்னொரு குருவை நாங்கள் தேடிச் செல்ல வேண்டுமா? தயவு செய்து விளக்குங்கள்" என்று கேட்டீர்கள்.

நான் இங்கே இருக்கிறேன். என்னுடன் கலந்து பங்கெடுத்துக் கொள்ளுங்கள். வேறு எந்த விதமான விளக்கங்களும் உதவப் போவதில்லை. அனுபவப்பூர்வமாக என்னை உணருங்கள்! எதற்காக விளக்கம் கேட்கிறீர்கள்? அனுபவம் பெறுவது சாத்தியம் என்றால், எதற்கு விளக்கம் கேட்க வேண்டும்?

ஆறாவது கேள்வி

**ஓஷோ,**

**நீங்கள் ஏன் எப்போதும் அறிவாளிகளையும், படித்தவர்களையும், பண்டிதர்களையும், அறிவற்ற கிளிகளுடன் ஒப்பிட்டுப் பேசுகிறீர்கள்? அது சரியா?**

அது சரியல்ல! கிளிகளை அவ்வாறு ஒப்பிடுவது சரியல்ல. அவை மிகுந்த அறிவு படைத்தவை.

"என் மாமியார் என்னை அலட்சியம் செய்கிறாள், என்னை மதிப்பதில்லை" என்று சோஹன் யூதத் துறவி ராபியிடம் முறையிட்டான்.

"எதை வைத்து அப்படிச் செல்கிறாய்?"

"எனது பிறந்த நாள் அன்று என் மனைவிக்கு அவள் அனுதாபக் கடிதம் அனுப்பினாள்."

"அது அவள் நகைச்சுவை உணர்வு காரணமாக இருக்கலாம்."

இரவு விருந்துக்கு எங்களுக்கு அழைப்புக் கடிதம் அனுப்பிய போது அதில் என் பெயர் விடுபட்டுப் போயிருந்தது."

"கவனக் குறைவால் நடந்திருக்கலாம்."

"என் மனைவியிடம் அவள் பேசும்போது என்னை 'அந்த ஆள்' என்றுதான் குறிப்பிடுகிறாள்."

"அந்த ஆள் என்பது வழக்கமாக அவள் பயன்படுத்தும் ஒரு சொல்லாக இருக்கலாம்."

தனது உயிலை அவள் எழுதியபோது எனக்கு ஒரு டாலர் மட்டுமே ஒதுக்கியிருந்தாள்.

"அவள் உன்னை விரும்பவில்லை என்பது உண்மைதான்" என்றார் ராபி.

நீங்கள் படித்த மனிதர்கள் என்று அழைப்பவர்கள் எல்லாம் குப்பை போன்றவர்கள். அறிவு என்ற பெயரில் அவர்கள் சேகரித்து வைத்திருப்பது எல்லாம் புத்தகங்களில் இருந்து மனிதர்களிடமிருந்து பெற்றவை அனுபவ அறிவு சார்ந்தது அதில் துளியும் இல்லை. அவர்களை நீங்கள் ஆழமாக கவனித்துப் பார்த்தால், அவர்கள் உலகிலேயே மிகவும் முட்டாள் மனிதர்களாக இருப்பதைக் காண்பீர்கள். அவர்கள் அறிவெல்லம் கடனாக வாங்கியவை. அதன் பின்னணியில் விழிப்புணர்வு இல்லை. அவர்கள் நல்ல கணினிகள். மனித மனம் இன்னும் ஏற்படவில்லை அவர்கள் மனிதர்கள் அல்ல. இயந்திரங்கள்.

ஒரு பெரிய கல்வியாளர் தனது பக்கத்துவீட்டுக்காரரான விவசாயி வேலை செய்யும் நிலப்பகுதியைக் கடந்து சென்றார். தொலைவில் நின்று கொண்டு கல்வியாளர் கத்தினார். "ஹேய்! உனது பசுமாடு புகை பிடிக்குமா?"

வியப்படைந்த விவசாயி, "புகைபிடிக்காது. அதற்கென்ன?" என்று கேட்டார்.

"நானும் அப்படித்தான் நினைத்தேன். அப்படியானால் உனது மாட்டுக் கொட்டிலில் தெரியும் புகை அங்கே நெருப்பு பிடித்ததால் எழுந்ததாக இருக்கலாம்" என்றார்.

கிளிகள் மிகவும் அறிவுள்ள மனிதர்கள் போன்றவை.

சமீபத்தில் ஒருநாள் காலையில் படுக்கையிலிருந்து ஒரு இளம் பெண் எழுந்தாள். தனது அங்கியை அணிந்து கொண்டாள். ஜன்னல்

அடைப்பை விலக்கி வெளிச்சம் வரும்படி செய்தாள். கூண்டில் இருந்த கிளியைத் திறந்துவிட்டாள். அடுப்பில் காபி பாத்திரத்தை வைத்தாள். சப்தம் எழுப்பிய தொலைபேசியை எடுத்தபோது ஒரு ஆண்குரல் ஒலிப்பதைக் கேட்டாள்.

"ஹலோ! இனியவளே! எனது கப்பல் இப்போதுதான் துறைமுகத்தை எட்டியது. நான் வந்து கொண்டிருக்கிறேன்."

அந்த இளம் பெண் அடுப்பில் இருந்து காபி பாத்திரத்தை அப்பால் எடுத்து வைத்தாள். கிளியைக் கூண்டில் மூடினாள். ஜன்னல் அடைப்பை மூடினாள். அங்கியைக் கழற்றி எறிந்தாள். கட்டிலில் சென்று படுத்துக் கொண்டாள். அப்போது கிளி, "ஏசுவே! இன்று எவ்வளவு விரைவாக இருட்டிவிட்டது" என்று முணுமுணுத்தது அவள் காதில் விழுந்தது.

இனி கடைசிக் கேள்வி

> ஓஷோ,
>
> நான் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டவன், விதிவிலக்கானவன் என்று என்னுள் ஏற்படும் எண்ணம் என்னை மக்களிடமிருந்து விலக்கி வைத்து விடுகிறது. இந்த மாறுதலற்ற எனது மதிப்பீடு ஒரு தடையா? இந்த தாழ்வு எண்ணத்தில் ஒளிந்திருக்கும் சூட்சுமமான அச்ச உணர்வு யாது? ஏன் என்னால் இயல்பாக, சுயேச்சையாக இருக்க முடியவில்லை? எனக்குத் துன்பம் தரும் இந்த மதிப்பீட்டு அபிப்பிராயத்திலிருந்து ஏன் என்னால் விடுபட இயலவில்லை?

ஒருவர் தான் மாறுபட்டவர். விதிவிலக்கானவர், விசேஷ மானவர் என்று எப்போது எண்ணத் தொடங்குகிறாரோ அப்போதே அவர் துன்பத்தில் அகப்பட்டுக் கொள்கிறார். காரணம், ஒவ்வொரு வரும் ஏற்கெனவே விசேஷமானவராக, விதிவிலக்கானவராக, மாறு பட்டவராகவே படைக்கப்பட்டிருக்கிறார். இப்போது எப்படி அசா தாரணமான ஒருவரை மேலும் அசாதாரணமானவராக மாற்ற முடியும்? நீங்கள் தோற்றுப் போகிறீர்கள்.

ஜனங்கள் அசாதாரணமானவற்றைப் பெற்றிட முயன்று தோற்கிறார்கள். காரணம் அவர்கள் ஏற்கெனவே அதைப் பெற்றிருக் கிறார்கள். அவ்வாறு பெறாமல் இருந்திருந்தால் அவர்கள் அதைப் பெற்றிட இயலும். ஒவ்வொரு தனி மனிதரும் விசேஷமானவர், இணை சொல்ல முடியாதவர். இதற்கு முன்னர் உங்களைப் போல யாரும் இருந்ததில்லை. இனிமேலும் இருக்கப் போவதில்லை. நீங்கள் நீங்களாக இருக்கிறீர்கள்.

விதிவிலக்கானவராக இருக்க முயற்சிப்பது முட்டாள்தனம். ஓய்வாக அமர்ந்து நீங்கள் சிறப்பானவர் என்பதைக் காணுங்கள். சிறப்பானவராக மாறுவதற்கு அவசியம் இல்லை. நீங்கள் தங்கத்தைத் தங்கமாக மாற்ற விரும்பினால் தோற்றப் போவீர்கள். உங்களால் அதில் எப்படி வெற்றிபெற முடியும்? தங்கம் தங்கமாகவே முதல் இடத்தில் இருக்கிறது. மட்ட உலோகத்தை நீங்கள் தங்கமாக மாற்றலாம். தங்கத்தையே தங்கமாக மாற்ற முடியாது.

இது புரிந்துகொள்ள வேண்டிய ஒரு அடிப்படை விஷயமாகும். அந்த உலகில் ஒவ்வொருவரும் பரிதாபமானவர்கள். காரணம் தங்களிடம் ஏற்கெனவே இருப்பதை அடைய அவர்கள் முயற்சி செய் கிறார்கள். நீங்கள் முயன்று பார்க்கும் அளவுக்குத் தோல்வியடை கிறீர்கள். அதிக அளவில் தோல்வியடையும்போது கூடுதல் முயற்சி தேவைப்படுகிறது என்று நினைக்கிறீர்கள். பெரிய அளவில் முயலும் போது, பெரிய அளவில் தோல்வி வருகிறது. மெள்ள மெள்ள உங்கள் முழுவாழ்க்கையும் ஏமாற்றம் தவிர வேறு எதுவுமற்ற நெடுங்கதை யாகி விடுகிறது.

ஒப்பீடு செய்யச் சாத்தியமில்லை. யாரும் உங்களைவிட உயர்ந்தவரும் இல்லை. யாரும் தாழ்ந்தவரும் இல்லை. காரணம் உங்களைப் போல் நீங்கள் ஒருவர்தான் இருக்கிறீர்கள். எனவே எப்படி வேறு ஒருவர் உயர்ந்தவராகவோ, தாழ்ந்தவராகவோ இருக்க முடியும்? நீங்கள் ஒப்பீடு செய்தால் பிரச்சினை எழுகிறது. ஒப்பீடு செய்தல் உங்களுக்குள் நுழையும்போது அங்கு பிரச்சினை வருகிறது. நீங்கள் துன்பகரமானவராக மாறிவிடுகிறீர்கள்.

"எனக்குத் துன்பம் தரும் இந்த மாறுதலற்ற மதிப்பீடுகளில் இருந்து என்னால் ஏன் விடுபட முடியவில்லை?" என்று கேட்கிறீர்கள். அது துன்பம் தருகிறது. சில சமயம் இன்பத்தையும் கொண்டு வருகிறது அதுதான் பிரச்சினை. யாரோ ஒருவருடன் உங்களை ஒப்பீடு செய்யும் போது அது துன்பத்தைக் கொண்டு வருகிறது. அப்போது தாழ்வு மனப்பான்மை ஏற்படுகிறது. உங்களுடன் மற்றவர்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது மகிழ்ச்சி வருகிறது. அது அகந்தை மனோபாவத்தை ஏற்படுத்துகிறது. அது இருபுறமும் கூர்மையான வாள் போன்றது. அதை உங்களால் உதறிவிட முடியாது. காரணம் அது முழுவதும் துன்பகரமானதல்ல. சிலகணங்கள் இன்பமும் அதில் கலந்திருக்கிறது. அந்த சில கணங்களை நீங்கள் தவறவிட விரும்பவில்லை. சொல்லப் போனால் அந்த சில கணங்களுக்காகவே வாழ்கிறீர்கள். அந்த சில கணங்களுக்காகத் துன்பம் தொடர்கிறது.

நீங்கள் மற்றவர்களைவிட உயர்ந்தவர் என்ற பெருமிதம் ஏற்படும்போது அது நாணயத்தின் ஒருபக்கம்தான் என்பதை புரிந்து கொள்ள வேண்டும். உங்களைவிடவும் உயர்ந்த ஒருவரைக் காணும் போது நீங்கள் தாழ்ந்து போனதாக உணர்வீர்கள். இந்த இரண்டு பக்கங்களும் ஒன்றாகவே உள்ளன. நாணயத்தை முழுமையாக நீங்கள் உதறித் தள்ளலாம். ஒரு பக்கத்தை மட்டும் சேமித்து வைக்க இயலாது.

ஒப்பீடு செய்வது சில சமயம் உங்களிடம் உயர்ந்த அளவு பெருமிதத்தை ஏற்படுத்தலாம். நீங்கள் சிறப்பாக உணர்வீர்கள். அதனால்தான் ஜனங்கள் தாழ்ந்த மனிதர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்கிறார்கள். உயர்ந்தவர்கள் என்று தாங்கள் நினைக்கும் மனிதர் களை அவர்கள் ஒதுக்குகிறார்கள். தாழ்ந்த நிலையில் இருப்பதாக அவர்கள் கருதும் மனிதர்களிடம் சம்பந்தம் வைத்துக் கொள்கிறார்கள். அப்போதுதான் அவர்கள் உயர்ந்த நிலையில் இருந்து மகிழ்ச்சியுணர்வு பெறமுடியும். ஆனால் இதுவும் மிகவும் துன்பம் தரும் சிக்கலான ஒன்றுதான். தாழ்ந்த நிலையில் இருக்கும் ஒருவர் வேறு ஒரு வகையில் உயர்ந்தவராகவும் இருந்திட முடியும். சிலர் அசிங்கமாக இருக்கலாம். நீங்கள் அழகான முகத்தைப் பெற்றிருக்கலாம். எனவே நீங்கள் உயர்ந்த மனிதராக எண்ணிக் கொள்கிறீர்கள். ஆனால் அவர் அறிவாளியாக இருக்கலாம். நீங்கள் அடிமுட்டாளாகவும இருக்கலாம். இப்போது பிரச்சினை மிகவும் சிக்கலாகி விடுகிறது. ஒரு மனிதர் பல விஷயங் களுடன் சம்பந்தப்பட்டுள்ளார். நீங்கள் உயரத்தை எட்டும்போது ஏதோ ஒன்றோ யாரோ உங்களை இடையூறு செய்யலாம்.

நெப்போலியன் உயரமான ஆகிருதி கொண்டவரல்ல. ஐந்தடி ஐந்தங்குல உயரமே இருந்தார். அது கவலைப்பட வேண்டிய விஷய மல்ல. அது பெரிய பிரச்சினை அல்ல என்று நான் நினைக்கிறேன். நானும் ஐந்தடி ஐந்தங்கல உயரம்தான். எந்த பிரச்சினையும் அதில் இருப்பதாக உணரவில்லை. ஆறடி, ஏழடி உயரமுள்ளவர்களின் கால்கள் நிலத்தைத் தொடுவது போலவே எனது பாதங்களும் தொடு கின்றன. எனவே என்ன பிரச்சினை இருக்க முடியும்? எனது பாதம் நிலத்தைத் தொடாது போயிருந்தால்தான் பிரச்சினை எழுந்திருக்கும்.

நெப்போலியன் தனது வாழ்நாள் முழுவதும் சிரமப்பட்டார். ராணுவத்தில் இருந்தவர்கள் எல்லோரும் உயரமானவர்கள். ராணுவ வீரர்கள் தங்களது உடல் பலம், உயரம் போன்றவற்றின் பொருட்டே தேர்வு செய்யப்படுகிறார்கள். தனது சொந்த படையினர் முன்னர் நெப்போலியன் பிக்மி சித்திரக்குள்ளன் போல் தென்பட்டார். அதனால் எப்போதும் மனக்காயப்பட்டிருந்தார்.

ஒருநாள் அவர் தனது அறையில் எதையோ மாட்டிக் கொண்டிருந்தார். சுவரில் இருந்த நாட்காட்டியோ எதுவோ நழுவி விழுந்து விட்டது. அவரது கைக்கு ஆணி எட்டவில்லை. அவரது மெய்க் காவலன், "பொறுங்கள், ஐயா! நான் உங்களை விடவும் பெரியவன். நான் அதை மாட்டுகிறேன்" என்றான்.

"உனது வார்த்தைகளை மாற்று முதலில். நீ என்னைவிடப் பெரியவன் அல்ல. வெறுமனே உயரமானவன் மட்டும்தான்" என்று கத்தினார் நெப்போலியன். கடுங்கோபம் எழுந்துவிட்டது அவருக்கு.

சிங்கம், புலிகளைக் கண்டால் நெப்போலியனுக்கு பயமில்லை. அவரால் சிங்கத்துடன் போராட முடியும். ஆனால் பூனையைக் கண்டால் பயந்து போவார். வாழ்க்கை மிகவும் சிக்கலானது. ஒரு பூனையைக் கொண்டுவந்து அவர் எதிரில் வைத்தால் அது குளிர் காலமாக இருந்தாலும் வேர்த்துவிடும். அவர் பதட்டமடைந்து விடுவார்.

அவர் ஆறுவயதுக் குழந்தையாக இருந்தபோது ஒரு பூனை அவருடைய மார்பில் குதித்து உட்கார்ந்து விட்டது. அவரால் எதுவும் செய்ய முடியவில்லை. அவருடைய முதல் யுத்தம் தோல்வியில் முடியக் காரணம் பூனைகள்தான். ஆங்கிலேயப் படைத்தளபதி வெலிங்கடன் எழுபது பூனைகளை படையணியின் முன்னால் கொண்டு வந்து நிறுத்தினான். பின்னால் படைகள் வந்தன. நெப்போலியன் எழுபது பூனைகளைப் பார்த்ததும் நிலைதடுமாறிப் போய்விட்டார். வெலிங்டன் போரில் வெற்றி பெறவில்லை. பூனைகள் வெற்றி பெற்றன. ஒரு பூனையின் முன்னால் அவர் மிகவும் தாழ்ந்து போனார்.

ஒப்பீடு செய்து பார்த்தல் பிரச்சினையை உருவாக்குகிறது. நீங்கள் நீங்களாகவே இருக்கிறீர்கள். யாரும் தாழ்ந்தவர் இல்லை. யாரும் உயர்ந்தவர் இல்லை. ஜனங்கள் ஒரே மாதிரியாக இல்லை. எனவே ஒப்பீடு சாத்தியமில்லை. ஒப்பீடு செய்வதை உதறித் தள்ளுங்கள்! நீங்கள் உயர்ந்தவர் என்ற எண்ணத்தில் ஏற்பட்ட சில கணத்து மகிழ்ச்சி மறைந்துபோகும். நீங்கள் துயரப்பட்ட லட்சக்கணக் கான கணங்களும் அதனுடன் சேர்ந்து மறைந்துவிடும். ஆனந்தம் பெருமிதம் என்றும், துயரம் என்றும் நீங்கள் கூறிக் கொள்பவை எல்லாம் மறைந்துவிட்டது. பேரின்பம் தலையெடுக்கிறது.

பேரின்பம் என்பது மகிழ்ச்சியோ அல்லது மகிழ்ச்சியின்மையோ அல்ல. எல்லாவித இருமை நிலைகளும் அகன்றுவிட்ட நிலை அது. அங்கு மகிழ்ச்சியும் இல்லை. மகிழ்ச்சியின்மையும் இல்லை. அந்த மௌனம், அந்த சாந்தமே பேரின்பமாகும்.

ஒரு கதை சொல்கிறேன்.

ஜானி மதுச்சாலையில் மது அருந்துவதற்குக் காத்திருந்தபோது தனது அருகில் ஒரு குதிரை உட்கார்ந்திருப்பதையும், அதன் எதிரே ஒரு பானையில் நிறையப் பணம் இருப்பதையும் கண்டான். தனது கண்களை நம்ப முடியாத ஜானி மதுச்சாலைப் பணியாளனை அழைத்து இதெல்லாம் என்ன என்று கேட்டான்.

அலட்டிக் கொள்ளாமல் மதுச்சாலைப் பணியாள், "அது ஒரு போட்டி. நீங்கள் அந்த குதிரையைச் சிரிக்க வைத்துவிட்டால் பானையில் உள்ள எல்லா பணத்தையும் எடுத்துக் கொள்ளலாம். நீங்கள் தோற்றுப் போனால், பத்து டாலரைப் பானைக்குள் போட்டு விட வேண்டும்" என்று விளக்கினான்.

"ஓஷோ! அது எனக்கு ஒரு பெரிய பிரச்சினையல்ல" என்று கூறிய ஜானி குதிரையின் முன்னால் குனிந்து எதையோ அதன் காதில் முணுமுணுத்தான். அதைக் கேட்ட குதிரை பித்துப்பிடித்தது போல் சிரித்தது. நாற்காலியில் இருந்து விழுந்து, தரையில் உருண்டது. கால்களை உதைத்துக் கொண்டு கனைத்தபடி சிரித்தது.

ஜானி பணப்பானையை தனது வீட்டுக்கு எடுத்துச் சென்றான். மறுநாள் மதுச்சாலைக்குச் சென்றபோது குதிரை மறுபடியும் மற்றொரு பணப்பானையும் நாற்காலியில் உட்கார்ந்திருந்தது.

"இந்த தடவை நீங்கள் குதிரையை அழவைக்க வேண்டும்" என்று மதுச்சாலைப் பணியாளன் விளக்கினான்.

"ஓஷோ! அது எனக்குப் பெரிய பிரச்சினை இல்லை" என்று கூறிய ஜானி குதிரையை வெளியே அழைத்துச் சென்றான். சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்தான். குதிரை அழுது கொண்டிருந்தது. முழுமையாக மனமுடைந்து அழுது கொண்டிருந்தது. கன்னங்களில் கண்ணீர் வழிந்தது.

"ஐயா! பணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் எப்படி இதைச் செய்தீர்கள் என்பதை மட்டும் சொல்லிவிடுங்கள்" என்றான் மதுச்சாலைப் பணியாளன்.

"ஆஹா! அது வெகு எளிய செயல். முதல் தடவை, அந்த குதிரையிடம் இருப்பதைவிடப் பெரிய ஆண்குறி எனக்கு இருப்பதாகச் சொன்னேன். இரண்டாவது தடவை, அதை குதிரையிடம் காட்டினேன்" என்று ஜானி பதில் தந்தான்.

இன்று இவ்வளவு போதும்.

## அத்தியாயம் - 5

### முதல் கேள்வி

**இன்று ஏசுவைப் பற்றி ஒரு குட்டிக்கதை சொல்லுங்கள்.**

சந்தைக் கடைச் சாக்கடையில் ஒரு நாய் செத்துக் கிடந்தது. அங்கே கடந்து சென்றவர்களுக்கு வெறுப்பைத் தந்தது. "எவ்வளவு அருவருப்பாக இருக்கிறது!" என்ற ஒருவர் தனது தலையைத் திருப்பிக் கொண்டார். ப்பா! என்னமாய் நாறுகிறது!" என்று கூறிய மற்றொருவர் அதைக் கடந்து செல்லும்போது மூக்கைப் பிடித்துக் கொண்டார். "பிதுங்கித் தெரியும் விலா எலும்புகளைப் பாருங்கள். குமட்டிக் கொண்டு வருகிறது" என்றார் மூன்றாமவர். "பூட்ஸ் கட்டும் நூலைத் தயாரிக்கும் அளவுக்கும் அதன் உடலில் தோல் இல்லை" என்றார் நான்காவது மனிதர். "மோசமான முடிவு அதற்கு ஏற்பட்டது குறித்து வியப்படைய ஏதுமில்லை" என்றார் ஐந்தாமவர்.

அதன் பின்னர் ஒரு மென்மையான, கண்டனக்குரல் அந்த துயரத்தை வெளியிட்ட கூட்டுக்குரல்களை ஊடுருவிக் கொண்டு எழுந்தது. "முத்துக்களை விடவும் அதன் பற்கள் வெண்மையாக உள்ளன" அந்த ஜனங்கள் "நிச்சயம் அது ஏசுதான்! செத்த நாயைப்

பற்றி நல்ல வார்த்தை சொல்ல வேறு யாரால் முடியும்?" என்று முணு முணுத்தபடி கலைந்து சென்றார்கள்.

இதுவே ஏகவின் குணாதிசயமாகும். அவர் இந்த உலகை முழுமையாகக் காதலித்தார். எங்கேயும் எந்த பாவத்தையும் அவரால் காணமுடியவில்லை. அவர் இந்த உலகை முழுமையாக நேசித்தார். எதுவும் அவருக்கு அசிங்கமாகத் தெரியவில்லை. எல்லாம் ஒளிப் பிரகாசத்துடன் காட்சியளித்தன.

வாழ்க்கை மீது நீங்கள் எதை முன்னிலைப்படுத்துகிறீர்களோ அதுவே வாழ்வாக அமைகிறது. வாழ்க்கை உங்களைப் பிரதிபலித்துக் காட்டுகிறது. உங்கள் மனதில் அசிங்கம் இருந்தால், எல்லா இடங் களிலும் அதைக் காண்பீர்கள். உங்கள் மனம் சூதுவாதற்று இருந்தால் வாழ்க்கை கன்னித்தன்மையுடன் இருப்பதைக் காண்பீர்கள். உங்கள் சொந்த எதிரொலிகளை நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

உண்மையான துறவியால் உலகில் எந்த ஒரு பாவியையும் காண முடியாது. நீங்கள் துறவிகள் என்று கூறுபவர்கள் எல்லாம் பெய ரளவுக்குத்தான். அவர்களைப் பொருத்தவரை இந்த உலகம் பாவிகள் நிறைந்ததாக இருக்கிறது. கண்டனம் தெரிவிப்பதற்காகவே அவர் உயிர் வாழ்கிறார்கள். அவர்கள் கண்டனம் செய்யும் அளவுக்கு ஜனங்களின் மனதில் தாங்கள் பாவிகள் என்ற உணர்வு அதிகரிக்கிறது. உங்களைத் தாழ்த்திச் சொல்லும் அளவுக்கு ஏற்ப அவர்கள் அகந்தை சந்தோஷம் கொள்கிறது.

ஒரு நிஜமான துறவி எப்போதும் பாவியைச் சந்திப்பதே இல்லை. இதை நினைவில் கொள்ளுங்கள். அவர் தேடிப்பார்த்தாலும் பாவியைக் கண்டுபிடிக்க முடியாது. இதுவே உண்மையான துறவிக் கான விளக்கமாகும். வாழபுவில் எங்கும் அசிங்கத்தை ஒருவர் காண்பதில்லையோ அவருக்கு முழுவாழ்வும் மாறுதல் அடைந்து விடுகிறது. அது நம்பமுடியாத அளவு பேரழகுடன் திகழ்கிறது. அது முழுமையான அழகுடன் இருக்கிறது.

வாழ்க்கை முழுமையான அழகுடன் திகழும் தருணம் உங்களுக்கு ஏற்படும்போது நீங்கள் தெய்வீகத்தை அறிவீர்கள். அது ஒரு மனிதன் அல்ல. அதை நீங்கள் எங்கும் நேரடியாக எதிர்கொள்ள முடியாது. அதற்கு வடிவம் இல்லை, பெயரும் இல்லை. தெய்வீகம் என்பது ஒரு தரிசனம். உங்களுக்கு ரசனை குறித்த விழிப்புணர்வும், நுண்ணுணர்வும் இருந்தால் மட்டுமே அந்த தரிசன உணர்வைப் பெற முடியும்.

செத்த நாயிடம் ஏதோ ஒரு இணையற்ற அழகை ஏசுவால் காண முடிந்தது. "அதன் பற்கள் முத்துக்களை விடவும் வெண்மையாக இருக்கின்றன" என்று அவர் கூறினார். அந்த வெண்மையில் தெய்வீகம் வெளிப்பட்டது. அந்த வெண்மையில் தரிசன உணர்வை அவர் பெற்றார். ஒரு அழகான சூரிய உதயத்தை உங்களால் பார்க்க முடிய வில்லையே? தரிசனத்தை ஒரு அழகான ரோஜா மலரில் பார்க்க முடிவ தில்லையே? அழகான ஆண், பெண்களின் முகத்தில் அதைப் பார்க்க முடிவதில்லையே? குழந்தையின் கபடமற்ற கண் களில் அதைக் காண முடிவதில்லையே? அதை நீங்கள் தேவாலயங்கள், கோவில்கள், மசூதிகளில் தேடிக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் எல்லா தேடலும் வீணாகிறது.

ஆன்மீகம் என்பது கூர்மையான விழிப்புணர்வு பெறுவது தவிர வேறல்ல. அது எல்லாவற்றையும் இணையற்ற அழகுள்ளதாக மாற்றி விடுகிறது. அழகே தெய்வீகமாகும்.

**இரண்டாவது கேள்வி**

**ஓஷோ,**

**நான் வந்து சேர்ந்த மறுநாளே உடலின்பத்திற்கும் - மௌனத் திற்கும், உறவுக்கும் - தனிமைக்கும் இடையிலான யுத்தம் உடனே துவங்கி விட்டது. அந்த நேரத்தில் அவற்றினிடையே ஒரு பிணைப்பு இருக்கச் சாத்தியமில்லை என்று உணர்ந்தேன். நான் இதில் ஏதோ ஒன்றைத் தேர்வு செய்தால் எவ்விதமாயினும் மற்றதை இழக்க நேரிடும். பூமியில் இருந்து புறப்படாமல் நேரே வானத்துக்குச் சென்றுவிட முடியும். அப்போது தோன்றுவது போலிருந்தது.**

காலம் காலமாக இருந்துவரும் மிகப்பெரிய பிரச்சினைகளில் இதுவும் ஒன்றாகும். தியானமும் - நேசமும், தனிமை - உறவு, உடலின்பம் - மௌனம் போன்றவை சிக்கலாக அமைந்திருக்கின்றன. பெயர்கள்தான் வேறு. ஆனால் பிரச்சினை ஒன்றுதான். பிரச்சினையைச் சரியாகப் புரிந்து கொள்ளாது போனதால் காலங்காலமாக மனிதன் மிகவும் துன்பப்பட்டிருக்கிறான். விருப்பமானதை மக்கள் தேர்வு செய்தார்கள்.

உறவு முறைகளைத் தேர்வு செய்தவர்கள் லௌகீகவாதிகள் எனப்பட்டார்கள். தனிமையைத் தேர்ந்தெடுத்த மனிதர்கள் துறவிகள் என்று பெயரிடப்பட்டனர். அது மறுஉலகம் சார்ந்தது என்றார்கள். ஆனால் இருசாராரும் துன்புற்றார்கள். காரணம் அவர்கள் பாதி நிலையில் இருந்தார்கள். பாதிநிலை என்பது துன்பகரமானது. முழு

மையான நிலையில் இருந்தார்கள். பாதிநிலை என்பது துன்பகரமானது. முழுமையான நிலையில் இருப்பது ஆரோக்கியமானது. மகிழ்ச்சியானது. பாதிநிலை துன்பம் தருவதாக இருப்பது ஏன் என்றால், மற்றொரு பாதி நாசவேலைகளில் ஈடுபடுகிறது. முதல் பாதி நிலை அதற்குப் பழிவாங்கத் தன்னைத் தயார் செய்துகொள்கிறது. மறு பாதியை ஒருபோதும் அழிக்க முடியாது. காரணம் அது உங்களின் பாதி நிலையாகும். அது உங்களுடைய முக்கியமான பாகங்களில் ஒன்று. அதன் தொடர்பை அறுத்துக்கொள்வது எளிதானதல்ல.

இது "என்னைச் சுற்றி எந்த பள்ளத்தாக்கும் இல்லை" என்று மலை முடிவு செய்து கொள்வது போன்றதாகும். பள்ளத்தாக்குகள் இல்லாமல் மலை இருக்க முடியாது. மலையின் ஒரு அங்கமாகப் பள்ளத்தாக்குகள் அமைந்திருக்கின்றன. பள்ளத்தாக்குகள் இல்லாமல் மலை வாழ்ந்திருக்க இயலாது. அவை ஒன்றுக்கொன்று சகாயம் செய்து கொள்கின்றன. பள்ளத்தாக்கு இல்லாது தனித்திருக்க மலை முடிவு செய்தால் எந்த மலையும் நிலைத்திருக்க இயலாது. மலைகள் இல்லாது தனித்திருக்க பள்ளத்தாக்கு விரும்பினால், அது பள்ளத்தாக்காக இருக்காது. அப்படி இருக்கிறது என்றால் நீங்கள் ஒரு ஏமாற்றுக்காரர் என்று பொருள். எந்த பள்ளத்தாக்கும் இல்லை என்று மலை நடிக்கிறது. ஆனால் பள்ளத்தாக்கு அங்கு உள்ளது. நீங்கள் பள்ளத்தாக்கை மறைக்கலாம். உங்கள் ஆழ்மனதில் அதை ஆழமாகப் புதைத்து விடலாம். ஆனாலும் அது அங்கே இருக்கவே செய்கிறது. அது நிலைத்து இருக்கிறது. அதை அழிக்க வழியில்லை. உண்மையில் மலையும், பள்ளத்தாக்கும் ஒரே அம்சங்கள். அதுபோலவே தியானமும், அன்பும் ஒரே அம்சம். உறவும், தனிமையும் அவ்வாறே ஒன்றானவை. தனிமை என்ற மலை உறவு என்ற பள்ளத்தாக்கில் இருந்துதான் உயர்ந்து எழுகிறது.

உறவுகளை அனுபவிக்க முடிந்தால் மட்டுமே உண்மையில் உங்களால் தனிமையை அனுபவிக்க இயலும். உறவுமுறை தனிமை தேவை என்ற நிலையை உருவாக்குகிறது. அது ஒரு தாளலயமாகும். யாராவது ஒருவருடன் ஆழமான உறவு கொள்ளும்போது தனிமையின் தேவை குறித்த பெருவிருப்பம் எழுகிறது. நீங்கள் சலிப்பு, தளர்ச்சி சந்தோஷச் சலிப்பு போன்ற உணர்வுகள் ஏற்படுவதை உணர்கிறீர்கள். ஒவ்வொரு ஆனந்தமும் வெறுமையைத் தருகின்றன. எடுத்துரைக்க அது பெரிதும் அழகானது. ஆனாலும் தனிமைக்குச் செல்ல நீங்கள் விரும்புகிறீர்கள். எனவே நீங்கள் மீண்டும் ஒன்று சேர்கிறீர்கள். அதனால் மீண்டும் நீங்கள் நிறைந்து வழிகிறீர்கள். நீங்கள் மீண்டும் உங்கள் உயிரில் வேரூன்றுகிறீர்கள்.

அன்பு கொள்ளும்போது நீங்கள் அடுத்தவர் உயிரில் நுழைகிறீர்கள். உங்களுடனான தொடர்பை இழக்கிறீர்கள். நீங்கள் மயக்கத்தில் போதையில் ஆழ்ந்து போகிறீர்கள். உங்களை மீண்டும் கண்டறிய விருப்பம் கொள்கிறீர்கள். நீங்கள் தனிமையில் இருக்கும் போது மீண்டும் அன்பின் தேவையைச் சிருஷ்டிக்கிறீர்கள். விரைவில் நீங்கள் நிறைந்து போகிறீர்கள். அதைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள். நீங்கள் நிறைந்து வழிகிறீர்கள். யாராவது ஒருவரிடம் உங்களை பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள். தனிமையில் இருந்து அன்பு எழுகிறது. தனிமை உங்களை நிறைக்கிறது. அன்பு உங்கள் பரிசுகளை ஏற்கிறது. அன்பு உங்களை வெறுமையாக்குகிறது. நீங்கள் மீண்டும் உங்களை நிறைத்துக் கொள்ளலாம். அன்பினால் நீங்கள் வெறுமையாகும்போது தனிமை உங்களைப் போஷிக்க அங்கு வந்து இணைகிறது. இது ஒரு தாளலயம்.

இந்த இரண்டும் தனித்தனி விஷயங்கள் என்று எண்ணுவது முட்டாள்தனம். ஆபத்தான இந்த முட்டாள்தனம் மூலமாகவே மனிதன் துயரப்படுகிறான். சில மனிதர்கள் லௌகீகமானவர்கள். அவர்கள் சலித்து வெறுமைப்படுகிறார்கள். தங்கள் சுயத்திற்கு அங்கு இடமில்லாது போய்விடுகிறது. தாங்கள் யார் என்று அவர்களுக்குத் தெரிவதில்லை. தங்களின் அருகில் அவர்கள் வருவதில்லை. அவர்கள் மற்றவர்களுடன் வாழ்கிறார்கள். மற்றவர்களுக்காக வாழ்கிறார்கள். கும்பலின் ஒரு அங்கமாக இருக்கிறார்கள். அவர்கள் தனி நபர்கள் அல்ல. அவர்களின் நேசவாழ்க்கை நிறைவு பெற்றதல்ல என்பது நினைவிருக்கட்டும். அது பாதியில் நிற்கிறது. பாதியாக இருப்பது நிறைவு பெற முடியாது. முழுமையானதுதான் நிறைவுபெற முடியும்.

மற்றொரு பாதியைத் தேர்வு செய்தவர்களாகத் துறவிகள் இருக்கிறார்கள். அவர்கள் மடாலயங்களில் வாழ்கிறார்கள். **துறவி** என்ற சொல்லுக்குத் தனிமையில் வாழ்பவர் என்று பொருள். துறவி என்ற பொருள் தரும் Monk என்ற வார்த்தை Monogamy, Monotony, Monastery மற்றும் Monopoly போன்ற சொற்களில் இருந்து வந்தவை. இவை எல்லாம் தனிமை என்றே அர்த்தம் தருகின்றன.

தனிமையில் இருப்பதைத் தேர்வு செய்தவரே துறவியாவார். விரைவில் அவர் நிறைந்து போகிறார். தன்னை எங்கே ஊற்றுவது என்று தெரியாமல் நிற்கிறார். தன்னை எங்கு ஊற்ற முடியும்? அன்பை அவரால் அனுமதிக்க முடியாது. உறவை அவரால் அனுமதிக்க இயலாது. அவர் மக்களிடம் சென்று கலந்து பழக முடியாது. இப்போது அவரது ஆற்றல்கள் புளிக்கத் தொடங்குகின்றன. எந்த ஒரு சக்தியும் வழிந்தோடுவது நிற்கும்போது அது கசப்படைகிறது. அமுதமும்

விஷமாகிறது. மாற்றிப் பார்த்தால், வழிந்தோடும் விஷமும் அமுத மாகிறது. வழிந்தோடல் அமுதம் என்றால் என்ன என்று அறிய வைக்கிறது. அசையாது தேங்கி நிற்பது விஷத்தை அறிய உதவுகிறது.

அமுதமும், விஷமும் இரண்டு பொருட்கள் அல்ல. ஒரே ஆற்றலின் இரண்டு நிலைகளாகும். மலர்ச்சி அமுதமாகிறது. உறைந்து போதல் விஷமாகிறது. ஏதாவது ஒரு சக்தி ஒரு இடத்தில் இருந்து, அதற்கு வடிகால் இல்லாது போனால் அது புளித்துப் போகிறது. கசப்பாக மாறுகிறது. அது கவலை தருவதாகவும், அசிங்கமானதாகவும் மாறுகிறது. அது உங்களுக்கு முழுமையும், ஆரோக்கியமும் தருவ தற்குப் பதிலாக நோயைத் தருகிறது.

எல்லா துறவிகளும் நோய்பீடித்தவர்கள் - எல்லா துறவிகளும் சிகிச்சைக்குப் போகவே வண்டியவர்கள்.

லௌகீக மனிதர்கள் வெறுமையான, சலிப்பூட்டும் தளர்ந்து போன நிலையில் தங்களைக் கடமை, குடும்பம், தேசம் என்ற பெயரில் இழுத்துக்கொண்டு நகர்கிறார்கள். இந்த புனிதமான பசுமாடுகள் மரணம் வருவதற்கும், அதனிடம் உங்களை வழங்கவும் இழுத்துச் செல்கின்றன. தங்களின் ஓய்வு கல்லறையில்தான் என்று அவர்களுக்குத் தெரியும். வாழ்வில் உள்ள ஓய்வுநிலை பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது. ஓய்வற்ற வாழ்க்கை நிஜமான வாழ்க்கையாகாது என்று வாழ்க்கைக்குத் தெரியும்.

இசைக்குள் மௌனம் இல்லை என்பது போன்றதாகும். அப்படி இருந்தால் அது இசையாக இல்லாமல் வெறுப்பூட்டும் சப்தமாகவே அமையும். அது உங்களை நோய்வாய்ப்பட வைக்கும். சிறந்த இசை என்பது ஒலியும், மௌனமும் சேர்ந்த கூட்டிணைப்பாக இருக்கிறது. அந்த கூட்டிணைப்பு சிறப்பாக அமையும்போது இசை மனதில் ஆழமாக ஊடுருவும். ஒலி மௌனத்தை ஏற்படுத்துகிறது. அந்த மௌனம் ஒரு தொகுப்பை உருவாக்கி ஒலியை வரவேற்கிறது. இவ்வாறு ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டு உள்ளன. ஒலி இசையின் மீது கூடுதல் நேசத்தை ஏற்படுத்துகிறது. அதிகமான உள்வாங்கல் மௌனமாக மாறுகிறது.

நல்ல இசையைக் கேட்கும்போது நீங்கள் வழிபாட்டு நிலைக்குப் போவீர்கள். ஏதோ ஒரு முழுமை உங்களுக்குள் இணை கிறது. நீங்கள் மையம் கொள்கிறீர்கள். வேறூன்றுகிறீர்கள். வானமும், பூமியும் சந்திக்கின்றன. அவை தனித்து இருக்கவில்லை. உடலும் உயிரும் சந்தித்து இணைகின்றன. தங்கள் அடையாளத்தை இழக் கின்றன.

அதுதான் உன்னதமான கணம். தெய்வீக இணைப்பு ஏற்படும் கணம்.

"நான் வந்து சேர்ந்த மறுநாளே உடலின்பத்திற்கும் மௌனத்திற்கும் இடையிலான யுத்தம் துவங்கிவிட்டது என்றீர்கள்.

அது ஒரு பழைய யுத்தம் முற்றிலும் முட்டாள்தனமானது. தயவு செய்து ஜாக்கிரதையாக இருங்கள். உடலின்பத்துக்கும், மௌனத்திற்கும் இடையே எந்த யுத்தத்தையும் உருவாக்காதீர்கள். அப்படி யுத்தத்தை உருவாக்கினால் உங்கள் உடலின்பம் அசிங்கமானதாக, நோய்பிடித்ததாகிவிடும். உங்கள் மௌனம் மந்தமாகி, உயிரற்றுப் போய்விடும். உடலின்பம், மௌனம் இரண்டையும் சந்திக்க வைத்து இணைய விடுங்கள்.

உண்மையில், ளௌமனத்தின் உன்னதமான கணங்கள் எல்லாம் உயர்ந்த, சிறந்த அன்பைப் பின்தொடர்ந்து வந்தவைதான். உயர்ந்த அன்பை எப்போதும் தனிமை மற்றும் மௌனத்தின் உன்னத கணங்கள் தொடர்கின்றன. தியானம் அன்பை நோக்கி அழைத்துச் செல்கிறது. அன்பு தியானத்தை நோக்கி வழிநடத்துகிறது. இருவரும் பங்காளிகள். அவர்களைப் பிரிப்பது முடியாத செயல்.

இணைப்பை ஏற்படுத்த வேண்டும் என்ற பேச்சுக்கே இடமில்லை. அவற்றைப் பிரிக்கவே முடியாது. அவை பிரிக்கமுடியாதபடி உள்ளன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

"உடலின்பத்துக்கும் - மௌனத்துக்கும், உறவுக்கும் - தனிமைக்கும் இடையிலான யுத்தம் உடனே துவங்கிவிட்டது. அந்த நேரத்தில் அவற்றினிடையே ஒரு பிணைப்பை ஏற்படுத்துவது சாத்தியமில்லை என்று உணர்ந்ததாக" கூறினீர்கள்.

இணைப்பு சாத்தியமில்லை. காரணம் அவை இரண்டும் ஒன்றாக இருக்கின்றன. நீங்கள் அவற்றை இணைக்கத் தேவையில்லை. உங்கள் இணைப்பு ஒரு மோசடி வேலை. உங்கள் இணைப்பு அடிப்படையிலேயே தவறானது. இணைப்பு தேவையற்ற இடத்தில் ஒரு போலியான இணைப்பைத் திணிக்கிறீர்கள்.

இணைப்பு என்பது ஏற்கெனவே அங்கு இருந்து வருகிறது. அது ஏற்கெனவே செயல்பாட்டில் இருக்கிறது. அவை இரண்டும் ஒன்றாக உள்ளன. ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போல இருக்கின்றன. நீங்கள் அவற்றை இணைக்கத் தேவையில்லை. அவை ஒருபோதும் தனித்து இல்லை. மனிதன் முயல்கிறான். கடுமையாக முயல்கிறான். ஆனால் எப்போதும் தோற்றுப் போகிறான்.

ஆன்மீகம் என்பது உலகின் சுறுக்குக் கயிறாக இன்னும் மாற வில்லை. ஆன்மீகம் இன்னும் உயிர் சக்தியாக உலகின் அலைவீச்சாக மாறவில்லை. அதற்கு என்ன காரணம்? இந்த பிரிவுகள்தான் காரணம். நீங்கள் இவ்வுலகில் லௌகீகவாதியாக வாழவேண்டும், அல்லது ஆன்மீகவாதியாக வேண்டும். எதுதேவை என்று தேர்வு செய்யுங்கள்! அதை தேர்வு செய்யும் கணத்தில் மற்ற ஏதாவது ஒன்றைத் தவறவிடுவீர்கள். நீங்கள் எதை தேர்வு செய்தாலும் இழப்புக்கு ஆளான வராகவே இருக்கிறீர்கள்.

தேர்வு செய்யவேண்டாம் என்று நான் கூறவில்லை. அவை இரண்டும் சேர்ந்திருக்கும்படியாகவே வாழுங்கள் என்கிறேன். அந்த இருநிலை சேர்க்கையில் வாழ்வதற்கு கலைத்திறன் வேண்டும். தேர்வு செய்து ஏதாவது ஒன்றுடன் சேர்ந்து கொள்வது எளிது. எந்த முட்டாளும் அதைச் செய்யலாம். உண்மையில் முட்டாள்கள் மட்டுமே அதைச் செய்வார்கள். சில முட்டாள்கள் லௌகீக வாழ்க்கையைத் தேர்ந் தெடுப்பார்கள். சில முட்டாள்கள் ஆன்மீக வாழ்வைத் தேர்வு செய் வார்கள். அறிவுள்ளவன் மட்டுமே இரண்டையும் தேர்வு செய்வான்.

எனது சந்நியாசிகள் எல்லாம் அப்படிப்பட்டவர்களாகவே இருக்கிறார்கள். நீங்கள் பணியாரத்தைப் பெறமுடியும். அதை தின்னவும் முடியும். அதுவே அறிவுள்ள செயல். எச்சரிக்கையுடன், விழிப்புடன் இருங்கள். எந்த தேர்வும் செய்யாது தாளையத்தைக் கவனியுங்கள். அதனுடன் சேர்ந்து பயணியுங்கள். தேர்வு செய்வது விழிப்புணர்வுக் குறைபாடான செயல். இரண்டு எல்லைகளுக்கும் சென்று பாருங்கள். மேலோட்டமாக அவை முரண்பட்டவை, எதிரானவை போலிருக்கலாம். ஆனால் அவை அப்படிப்பட்டவை அல்ல. அடியாழத்தில் அவை அனுசரித்துப் போகின்றன. ஒரே ஊசல் வலது பக்கமும் செல்கிறது, இடது பக்கமும் செல்கிறது. அதை வலது புறமோ அல்லது இடதுபுறமோ பொறுத்தி வைக்க முயலாதீர்கள். அப்படிப் பொருத்தி வைத்தால் முழு கடிகாரத்தையும் நீங்கள் அழித்து விட்டவர் ஆவீர்கள். இப்போதுவரை அப்படிப்பட்ட செயல்தான் நடந்து வருகிறது.

வாழ்வின் எல்லா பரிமாணங்களையும் ஏற்றுக் கொள்ளுங்கள்.

உங்கள் பிரச்சினையை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. பிரச்சினை எளிமையானது. நன்கு தெரிந்த ஒன்றுதான். ஏதாவது ஒன்றைச் சார்ந்திருக்கும்போது எப்படி தனிமை பெறுவது என்பதை நீங்கள் அறியவில்லை என்பதே பிரச்சினையாகும். அறிவற்றதனத்தை அது எளிதாக எடுத்துக் காட்டுகிறது. அந்த உறவு தவறானது அல்ல.

போதுமான அளவு நீங்கள் இன்னும் அறிவு பெறவில்லை என்பதையே அது காட்டுகிறது. உறவு மிகப் பெரியதாகி விடுகிறது. நீங்கள் தனித் திருக்க இடமில்லாது போகிறது. நீங்கள் தளர்ச்சியும், சோர்வும் அடைகிறீர்கள். அதன் பின்னர் ஒருநாள் உறவு மோசமானது, அது அர்த்தமற்றது என்று முடிவுக்கு வருவீர்கள். "நான் துறவியாகப் போகிறேன். இமயமலைக் குகைகளுக்குச் சென்று அங்கு தனித்து வாழப் போகிறேன்" என்று கூறுவீர்கள். தனிமையில் இருப்பது பற்றிய பெரிய கனவுகள் காண்பீர்கள். அது எவ்வளவு அழகானது. உங்கள் சுதந்திரத்தை யாரும் ஆக்ரமித்துக் கொள்ள முடியாது. யாரும் உங்களை திசைதிருப்ப முயற்சி செய்ய இயலாது. மற்ற எதைப் பற்றியும் நீங்கள் கவலைப்பட அவசியமில்லை.

"மறுபக்கம் நரகம் போன்றது" என்று ஜீன்-பால் சார்த்ரே கூறுகிறார். அன்பு, தியானம் போன்றவைகளுக்கு இடையே அனுசரணை நிலை பற்றி அவர் புரிந்துகொள்ளவில்லை என்பதையே இது தெளிவாகக் காட்டுகிறது. எனவே மறுபக்கம் நரகம் என்று கூறுகிறார். தனிமை என்பது சில சமயம் எல்லா உறவுகளுக்கும் மையமாக இருக்கிறது என்பதை அறியாத காரணத்தினால் அவர் மறுபக்கம் நரகம் என்று கூறுகிறார். மறுபக்கம் நரகமாக மாறும்போது அது உப்பு சப்பில்லாத, சலிப்பூட்டும், சோர்வளிக்கும் ஒன்றாக மாறிவிடுகிறது. மறுபக்கம் எல்லா அழகையும் இழக்கிறது. காரணம் மறுபக்கம் அறிந்த ஒன்றாக மாறிவிடுகிறது. நீங்கள் அதற்கு நன்கு அறிமுகமானவராக இருக்கிறீர்கள். மேற்கொண்டு அங்கு வியப்படைய ஏதுமில்லை. அதன் எல்லைகளை நன்க அறிந்து கொள்கிறீர்கள். அந்த பிராந்தியத்தில் நெடுந்தொலைவு பயணித்திருக்கிறீர்கள். இனி அங்கு ஆச்சரியம் அளிக்க எதுவும் மிச்சமில்லை. முழுமையாக அதை உள்வாங்கிக் கொண்டுவிட்டீர்கள்.

மறுபக்கத்துடன் நெருக்கம் ஏற்படும்போது அதுவும் உங்களுடன் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்கிறது. மறுபக்கம் துயரத்தின் வசப் பட்டிருக்கிறது. ஏனென்றால், நீங்கள் அதன் நரகமாக இருக்கிறீர்கள். இருவரும் ஒருவரை ஒருவரை இறுகப் பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள். ஏதும் இல்லாது போவதற்குப் பதிலாக கிடைத்ததே பெரிது என்று கருதுகிறீர்கள். அது கைநழுவி விடுமோ என்று பயம் கொண்டிருக் கறீர்கள். குறைந்தபட்சம் அங்கே பிடித்துக் கொள்ள ஏதாவது இருந்து வருகிறது. நாளையப் பொழுது நல்ல பொழுதாகும் என்று அவர் நம்பிக் கொண்டிருக்கிறார். இன்று அவை நன்றாக இல்லை. என்றாலும், நாளை அவை நன்றாக மாறலாம். அவர் நம்பிக்கை வைக்கிறார். நம்பிக்கை வைத்துக் காலம் தள்ளுகிறார்.

விரைவிலோ அல்லது தாமதமாகவோ அவர் தனிமையில் இருப்பதே நல்லது என்று எண்ணுவார். நீங்கள் தனிமை நோக்கிச் செல்லும்போது முதலில் ஒரு சில நாட்கள் அளவுக்கு அதிகமான அழகுடன் அது திகழும். மறுபக்கத்தைவிட அது அழகாக இருக்கும். சில நாட்களுக்கு மட்டும அப்படியிருக்கும். திருமணத்தில் தேனிலவு வருவதுபோல தியானத்திலும் தேனிலவு உண்டு. சில நாட்கள் நீங்கள் மிகவும் சுதந்திரமாக இருப்பதாக உணர்வீர்கள். அங்கு உங்களை வற்புறுத்த யாரும் இல்லை. உங்களிடம் இருந்து எதையும் எதிர் பார்க்கவும் அங்கு ஆளில்லை. நீங்கள் அதிகாலையில் துயிலெழ விரும்பினால் அப்படியே செய்யலாம். சீக்கிரம் கண்விழிக்க விரும்பா விட்டால் தூங்கிக் கொண்டே இருக்கலாம். நீங்கள் ஏதாவது செய்ய எண்ணினால் அதற்கு தடையில்லை. எதுவும் செய்ய விருப்பம் இல்லாது இருந்தாலும் உங்களை வற்புறுத்த அங்கு யாருமில்லை.

சில நாட்கள் நீங்கள் மிதமிஞ்சிய மகிழ்வுடன் இருப்பீர்கள். சில நாட்கள் மட்டும்தான் அப்படியிருப்பீர்கள். விரைவில் அது சலித்துப் போய்விடும். நீங்கள் நிறைந்து வழிவீர்கள். உங்களிடம் உள்ள அன்பைப் பெற்றுக்கொள்ள அங்கு யாரும் இல்லை. நீங்கள் கனிந்து போய்விட்டீர்கள். ஆற்றலைப் பகிர்ந்து கொண்டாக வேண்டும். நீங்கள் கனத்துப் போய்விட்டீர்கள். உங்கள் சுயமான ஆற்றல் சுமை யாகிப் போய்விட்டது. உங்கள் ஆற்றலை வரவேற்று ஏற்றுக்கொள்ள யாராவது இருந்தால் நல்லது என்று ஆசைப்படுகிறீர்கள். சுமையற்று இருக்க நீங்கள் ஆசைப்படுவீர்கள்.

தனிமை இபபோது தனிமையாக இல்லாது ஆதரவற்ற நிலை யாக மாறிவிட்டது. தேனிலவு முடிந்துவிட்டது. இப்போது மாறுதல் தேவைப்படுகிறது. தனிமை இப்போது ஆதரவற்ற நிலையாக மாறத் தொடங்கிவிட்டது. மறுபக்கத்தைக் கண்டறியும் பேராவல் உங்களிடம் உருவாகிவிட்டது. மறுபக்கம் பற்றிய கனவு உங்களிடம் தோன்ற ஆரம்பிக்கும்.

துறவிகளிடம் சென்று அவர்கள் என்ன கனவு காண்கிறார்கள் என்று கேளுங்கள். அவர்களால் பெண்களைப் பற்றி மட்டுமே கனவு காண முடியும். வேறு எதுபற்றியும் கனவு காண இயலாது. தங்களை கனமற்றவர்களாக மாற்றும் ஒருவரைப் பற்றி மட்டுமே அவர்களால் கனவுகாண முடியும். பெண்துறவிகளிடம் கேளுங்கள். அவர்களால் ஆண்களைப் பற்றி மட்டுமே கனவு காண இயலும். நோயின் காரணம் பற்றி மட்டுமே அவர்களால் சிந்திக்க முடியும். கிறிஸ்தவ வரலாறு குறித்து நீங்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

சந்நியாசினிகளும், துறவிகளும் கண்களைத் திறந்துவைத்துக் கொண்டு கனவு காண்கிறார்கள். அந்த கனவு ஸ்தூல வடிவிலான நிஜம் போல் மாறுகிறது. இரவு வருவதற்காகக் காத்திருக்கத் தேவையில்லை. பகல் வேளையிலும் சந்நியாசினி அங்கு உட்கார்ந்திருக்கிறாள். சாத்தான் வருவதை அவள் பார்க்கிறாள். சாத்தான் அவளுடன் கலவி செய்ய முயல்கிறது.

நடுவயதில் சந்நியாசினிகள் காமத்தீயில் வெந்து போகிறார்கள். சாத்தானுடன் உறவு கொண்டதாக அவர்கள் பாவமன்னிப்புக் கேட்கிறார்கள். இது பல தடவை நடப்பதைக் கண்டு நீங்கள் வியந்து போகலாம். அவர்கள் பாவமன்னிப்பு பெறுவது சாத்தானுடன் கலவி செய்ததற்காக மட்டுமல்ல, சாத்தானால் கர்ப்பமானதற்காகவும் ஆகும். அது பொய் கர்ப்பம். வெறும் வெப்பக் காற்றுதான் வயிற்றில் இருக்கிறது. ஆனால் வயிறுகள் பெரிதாகிக் கொண்டே போகின்றன. அது மனோரீதியான கர்ப்பம். சாத்தான் பற்றி விபரமாக அவர்கள் வர்ணிக்கிறார்கள். அது அவர்களின் சொந்த படைப்பு. அந்த சாத்தான் இரவும் பகலும் அவர்களைப் பின்தொடர்கிறது. இதே நிலைதான் துறவிகளுக்கு ஏற்படுகிறது.

இது நோய்பிடித்த நிலையாகும். மனிதன் நீண்ட காலம் அதனால் பாதிக்கப்படுகிறான். மற்ற நோய்க்குறிகள் நீங்கள் ஆன்மீக வாதிகள் என்று அழைக்கும் மனிதர்களால் கண்டனம் செய்யப்படுகின்றன. ஆனாலும் அவை மடாலயங்களில்தான் உருவாக்கப்படுகின்றன. அந்த துறவிகள்தான் அதற்குப் பொறுப்பு. முதல் விஷயம் ஆணுடன் ஆண் உடலுறவு கொள்ளும் ஓரினக்கலவி மடாலயங்களில்தான் நடக்கிறது. வேறு எங்கும் நடக்க முடியாது. காரணம், அங்கு மடாலயங்களில் ஆண்கள் மட்டுமே வசிக்கிறார்கள். பெண்கள் தனியே வேறு மடாலயத்தில் வசிக்கிறார்கள். அவர்கள் சந்தித்துக் கொள்ள வழியில்லை. எனவே சக்தி கொதிப்படைந்து விடுகிறது.

எங்கெல்லாம் ஆண்கள் சேர்ந்து வசிக்கிறார்களோ, அங்கு பெண்கள் இல்லை என்றால், அங்கு பிறபாலினக் கலவி (Hetero sexuality) அகன்று ஓரினக்கலவி தலையெடுக்கிறது. பெண்களாக இருந்தால் அவர்கள் பெண்ணுடன் பெண் உறவு கொள்ளும் (Lesbians) கலவியாளர்களாக மாறுகிறார்கள்.

மோசமாக நோய்பிடித்த சமூகத்தின் மூலம் தனிமையில் இருக்கும் நிலை உருவாக்கப்படுகிறது. லௌகீகவாதிகளாக இருக்கும் மனிதர்கள் மகிழ்ச்சியுடன் இல்லை. துறவிகளும் மகிழ்ச்சியாக இல்லை. யாரும் மகிழ்ச்சியுடன் இருப்பதாகத் தெரியவில்லை. முழு

உலகமும் எப்போதும் துயரத்தில் இருக்கிறது. நீங்கள் இந்த துன்பம் அல்லது அந்ததுன்பம் என்ற ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்யலாம். லௌகீக உலகத் துயரம் அல்லது ஆன்மீக உலகத் துயரம் என்று ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுக்கலாம். ஆனால் துயரம் ஒரே வகை யானது. ஆனாலும் சில நாட்கள் மட்டும் அது நன்றாக இருப்பது போல் உணர்வீர்கள்.

நான் உங்களுக்குப் புதிய செய்தி கொண்டு வந்திருக்கிறேன். அந்த செய்தியில் தேர்வு செய்ய வழியில்லை. வாய்ப்பு இல்லாது போவது உங்கள் வாழ்வில் எச்சரிக்கை உணர்வு தருகிறது. சூழ்நிலை களை மாற்றுவதற்கு பதிலாக அறிவுள்ளவராக உங்களை மாற்றுகிறது. உங்கள் மனோபாவத்தை மாற்றிக்கொண்டு அறிவாளியாக மாறுங்கள். பேரானந்தத்துடன் இருப்பதற்கு நிறைய அறிவு தேவை. அதன் பிறகு நீங்கள் தனிமையுடன் சேர்ந்து உறவையும் பெறலாம்.

உங்களது ஆண் அல்லது பெண் போன்றவர்களையும் அந்த தாளலயத்துக்கு இசைவுடன் இருக்கும்படி எச்சரியுங்கள். யாராலும் இருபத்து நான்கு மணிநேரமும் காதல் செய்து கொண்டிருக்க முடியாது என்பதை மக்களுக்குக் கற்றுத்தர வேண்டும். ஓய்வு நேரங்களும் தேவைப்படுகின்றன. உத்தரவுக்கு இணங்கி யாரும் காதல் கொள்ள முடியாது. காதல் என்பது தன்னிச்சையான விந்தை. நிகழும்போது அது நிகழ்கிறது. நிகழாதபோது அது நிகழ்வதில்லை. அதற்கு ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் ஏதாவது செய்தால் பொய்யான நிகழ்வு ஒன்றைச் சிருஷ்டிக்கிறீர்கள், நடிக்கிறீர்கள்.

உண்மையான காதலர்கள், அறிவுள்ள காதலர்கள் ஒருவருக் கொருவர் அந்த விந்தை குறித்து எச்சரிக்கை செய்து கொள்வார்கள். "நான் தனிமையில் இருக்க விரும்பினால் அது உன்னை நிராகரிப்பதாக ஆகாது. உண்மையில் உனது அன்பின் காரணமாக நான் தனிமை கொள்வதை நீ சாத்தியப்படுத்தினாய்" என்பார்கள். உங்கள் மனைவி இரவு அல்லது சில நாட்கள் தனித்திருக்க விரும்பினால், அதை நீங்கள் வருத்தப்படும் ஒன்றாக எடுத்துக்கொள்ள மாட்டீர்கள். நீங்கள் நிரா கரிக்கப்பட்டதாகக் கூற மாட்டீர்கள். உங்கள் அன்பு ஏற்றுக் கொள்ளப் படவில்லை, வரவேற்கப்படவில்லை என்று சொல்ல மாட்டீர்கள். சில நாட்கள் தனித்திருக்க விரும்பும் அவள் முடிவை வரவேற்பீர்கள். உண்மையில் அதற்காக மகிழ்ச்சியே கொள்வீர்கள். உங்கள் அன்பு அப்படி உயர்வானது. அவள் வெறுமைப்பட்டுப் போனதாக உணர் கிறாள். தன்னை மீண்டும் நிரப்பிக் கொள்ளச் சிறிது ஓய்வு தேவைப் படுகிறது.

அதுதான் அறிவுள்ள செயலாகும்.

சாதாரணமாக, நீங்கள் நிராகரிக்கப்பட்டதாக எண்ணுகிறீர்கள். உங்கள் மனைவியை நெருங்குகிறீர்கள். உங்களுடன் சல்லாபிக்க அவள் விரும்பவில்லை, அல்லது உங்கள் மீது அவளுக்கு அதிக அன்பில்லை. பெரிய நிராகரிப்பாக அதை உணர்கிறீர்கள். உங்கள் அகந்தை காயம் பட்டு விடுகிறது. அகந்தை ஒரு நல்ல அறிவுசார்ந்த விஷயமல்ல. எல்லாவகை அகந்தைகளும் முட்டாள்தனமானவை. அறிவுக்கு அகந்தை கிடையாது. அறிவு நடக்கும் நிகழ்வை மட்டும் கவனிக்கிறது. அந்த பெண் ஏன் உங்களுடன் தங்கியிருக்க விரும்பவில்லை என்பதை மட்டும் புரிந்துகொள்ள முயற்சி செய்கிறது. உங்களை அவள் நிராகரிக்கிறாள் என்று பொருள் அல்ல. அவள் உங்களை மிகவும் நேசிக்கிறாள் என்று உங்களுக்குத் தெரியும். ஆனால் இது அவள் தனித்திருக்க விரும்பும் கணமாகும். நீங்கள் அவளை நேசித்தால், அவள் தனித்திருக்க விட்டுவிடுவீர்கள். அவளை சித்ரவதை செய்ய மாட்டீர்கள். உங்களுடன் கலவி செய்ய பலவந்தப்படுத்த மாட்டீர்கள்.

ஒரு மனிதர் தனித்திருக்க எண்ணினால், பெண்பிள்ளையானவள், "அவருக்கு என்மீது ஆசை இல்லை. வேறு பெண் எவளுடனோ அன்பு கொண்டுவிட்டார்" என்று நினைப்பாள். அறிவுள்ள பெண், ஆண் தனித்திருக்க அனுமதி தருவாள். அப்போது அவனுள் அவளை மீண்டும் இணைத்துக் கொள்ள முடியும். ஆற்றலை மறுபடி பகிர்ந்துகொள்ள முடியும். இந்த லயம் இரவு-பகல், கோடை - குளிர் போல மாறிமாறி வருகிறது. தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கிறது.

இருவரும் ஒருவருக்கொருவர் மரியாதை தருபவர்களாக இருந்தால், அன்பு எப்போதும் மரியாதை நிறைந்த ஒன்றாக அமையும். அது மற்றவர்களுக்கு மரியாதை தருகிறது. அது சிறந்த வழிபாடு போன்ற நிலையாகும். மெதுவாக, இருவரும் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்வீர்கள். அடுத்தவரின் சுருதி லயம், உங்கள் சுருதிலயம் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு ஏற்பட்டுவிடும். அன்பிலிருந்து, மரியாதையிலிருந்து உங்கள் லயங்கள் ஒன்றையொன்று நெருங்கிச் செல்கின்றன என்று விரைவில் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் அன்பை உணரும் சமயத்தில் அவளும் அன்பை உணர்கிறாள். அந்த தீர்மானம் தன்னைத் தானே தீர்மானித்துக் கொள்கிறது. அது பொருந்திச் செயல்படும் நிலையாகும்.

நீங்கள் எப்போதாவது கவனித்தது உண்டா? இரண்டு நிஜமான காதலர்கள் அருகில் நீங்கள் சென்றால், பல விஷயங்களில் அவர்

களிடம் ஒற்றுமை இருப்பதைக் காணலாம். உண்மையான காதலர்கள் அண்ணன் தம்பி, அக்கா தங்கை போன்ற நேச நெருக்கம் கொள்கிறார்கள். சகோதர சகோதரிகளிடம் அவ்வளவு நேசம் இருக்காது என்று கண்டு வியந்து போவீர்கள். அவர்கள் உணர்வை வெளிப் படுத்தும் முறை, நடையுடை, பேசும்முறை, அபிநயம் போன்றவை ஒரே விதமாக இருக்கும். அவர்கள் வேறுபட்டவர்களாக இருந்தாலும் அது இயல்பாக நிகழ ஆரம்பிக்கிறது. சேர்ந்திருக்கத் தொடங்கும் இருவரிடமும் மெதுவாக ஒரு பிணைப்பு லயம் ஏற்பட்டு விடுகிறது. உண்மையான காதலர்கள் ஒருவரிடம் ஒருவர் எதுவும் சொல்ல வேண்டியதில்லை. மற்றவர் அதை உடனே உள்ளுணர்வு மூலம் புரிந்து கொள்கிறார்.

பெண் சோகமாக இருந்தால், அதை அவள் சொல்ல வேண்டிய தில்லை. ஆண் புரிந்துகொண்டு அவளைத் தனிமையில் விட்டுச் செல்கிறான். ஆண் சோகமாக இருந்தால் பெண் அதைப் புரிந்து கொண்டு அவனைத் தனியே இருக்க விடுகிறாள். அவன் தனியே இருப்பதற்கான சில காரணத்தை கண்டறிகிறார்கள். முட்டாள் ஜனங்கள் இதற்கு எதிராகச் செயல்படுகிறார்கள். மற்றவர்களைத் தனித்திருக்க விடுவதில்லை. தொடர்ந்து ஒருவருடன் ஒருவர் சேர்ந் திருக்கிறார்கள். ஒருவர் மீது ஒருவர் சலிப்பும், ஆர்வமற்றும் போகி றார்கள். அடுத்தவர் தனித்திருக்க இடம் தருவதில்லை.

அன்பு சுதந்திரம் அளிக்கிறது. மற்றவர் அவரது சுயநிலையில் இருக்க அன்பு உதவுகிறது. அன்பு என்பது முரண்பட்டதுபோல் தோன்றும் விந்தை நிகழ்வு. ஒரு வழியில் அது இரு உடலையும் ஒருயிராக்குகிறது. மற்றொரு வழியில் அது உங்களுக்குத் தனித்துவம், சிறப்பு அந்தஸ்தும் தருகிறது. உங்கள் சிறுமைகளை உதற அது உதவு கிறது. அதே சமயம் உயர்நிலை அடைய உதவியும் புரிகிறது. அதன் பின்னர் பிரச்சினை கிடையாது. அன்பும், தியானமும் ஒரு பறவையின் இரண்டு சிறகுகள் போலாகின்றன. ஒன்றையொன்று சமநிலைப் படுத்திக் கொள்கின்றன. அவற்றின் இடையில் நீங்கள் வளர்ந்து தெய்வீகநிலையை அடையலாம்.

மூன்றாவது கேள்வி

ஓஷோ,

**வேறு ஒருநாள் நீங்கள் இருபாலினக் கலவி பற்றிப் பேசினீர்கள். நான் அவர்களில் ஒருவன். நான் ஆண் - பெண் இருவர் மீதும் பெருமளவு வெறுப்படைந்து விட்டேன். தயவுசெய்து எனக்கு உதவுங்கள்.**

அது இயல்பான ஒன்றுதான். தியானம் செய்வது எப்படி என்று தெரிந்துகொள்ளாதவரை அன்பு உங்களுக்கு சலிப்பூட்டுவது வெளிப் படையான ஒன்றுதான். இருபாலினக் கலவி கூடுதல் சலிப்பைத் தரும். ஏனென்றால் அவர் எல்லாவற்றையும் முடித்துவிட்டார். ஆண், பெண் இருபாலாரையும் அவர் கண்டு அறிந்துவிட்டார். பிறபாலினக் கலவியில் ஈடுபட்ட ஒருவர் ஓரினக்கலவி பற்றி கொஞ்சம் ஆர்வம் காட்டலாம். இந்த ஓரினக் கலவியாளர்கள் கூட்டம் **நிஜமாகவே** மகிழ்ச்சியுடன் இருக்கலாம். அவர்கள் சந்தோஷத்தை நிஜமாகவே அனுபவிக்கிறார்கள். மேலும் மேலோட்டமாகவேனும் அது நன்கு தெரிகிறது என்று எண்ணலாம்.

பிற பாலினக் கலவியாளர்கள் பெரும் ஏதோ ஒன்றைத் தான் இழந்துவிட்டதாக ஓரினக் கலவியாளர்கள் சிந்திக்கலாம். அது இயல்பான ஒன்றாகத் தெரிகிறது. அவர்கள் சில நிஜமான சந்தோஷங் களை இழந்திருக்கலாம். பிறபாலினக் கலவியாளர்கள் **வேறுவிதமான** ஏதோ ஒன்றைப் பெறுகிறார்கள். அவர்களுக்கு ஏன் அதிகம் தொந்தர வுகள் வருகின்றன? குடும்பம், குழந்தைகள் இன்ன பிற ஏன் வருகின்றன? அது நிறையவே தொந்தரவு. நீங்கள் அதில் நுழைந்தால் அதிலிருந்து சிலவற்றைப் பெற்றே தீரவேண்டும். நிறைய பேர் எப்படி முட்டாள்களாக இருக்க முடியும்?

ஓரினக் களவியாளர், "நான் அதிகம் சிரமம் எடுத்துக் கொள்வ தில்லை. குழந்தைகள், குடும்பம் பற்றிய பிரச்சினை இல்லை. குழந் தைகளை வளர்க்கும் பள்ளி அனுப்பும் சிரமம் இல்லை. கல்லூரிக்கும், பல்கலைக்கழகத்திற்கும் அனுப்பும் சிரமம் இல்லை. அதுவே வாழ் நாள் முழுவதும் பெரிய பணியாகி விடுகிறது". பிறபாலினக் கலவி யாளருக்கு ஏதோ கிடைக்கிறது என்ற சந்தேகம் எழுகிறது. அவர் அதைக் காட்டிக் கொள்ளாமல் இருக்கலாம். அது மிகவும் மதிப்பு மிக்கதாக இருக்கலாம். அதை அவர் மறைத்து வைத்துக் கொள்கிறார். அதை யாருக்கும் ஒருபோதும் காட்டுவதில்லை.

இந்த எண்ணம் பலவற்றுடனும் சம்பந்தப்பட்டிருக்கிறது. பக்கத்து வீட்டுக்காரர் தோட்டத்துப் புல் மிகவும் பசுமையாக, வேலியின் மறுபக்கம் இருப்பது அழகாகத் தெரிகிறது. அழகாக இல்லாமல் இருக்கலாம். பார்வைக்கு அப்படித் தெரிகிறது. இரு பாலினக் கலவியாளராக இருக்கும் ஒருவர் மிகவும் சலித்துப் போகிறார். அங்கு நம்பிக்கை கொள்ள ஏதுமில்லை. இருபாலினத் தவரையும் அறிந்து கொண்டார். நம்பிக்கை கொள்ள சாத்தியமில்லை என்று புரிகிறது.

கப்பல் விபத்தில் அகப்பட்டு ஒரு மாலுமி கடலில் ஒரு தீவில் ஒதுங்கினான். அவனுடன் வெவ்வேறு ஆண்களுடன் உடலுறவு கொள்ளும் குணமுள்ள பெண்ணும் இருந்தாள். கடைசியாக வெகு காலத்துக்குப் பின்னர் அவளுடன் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்தான். சக்தியை மீட்டெடுக்க வாரத்துக்கு ஒருநாள் விடுமுறை எடுத்துக் கொள்வது என்று தீர்மானித்தான்.

சட்டென்று ஒருநாள் கடலைப் பார்த்தான். ஒரு மனிதன் கட்டு மரத்தில் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவனும் கப்பல் விபத்தில் சிக்கியிருப்பது தெரிந்தது. ஒருவழியாக அந்த பெண்ணிடம் கஷ்டப்படுவதிலிருந்து விடுபட வழி கிடைத்துவிட்டது என்று எண்ணி னான். நீந்திச் சென்று அவனை வரவேற்றான். அந்த புதியவன் பெண் தன்மையுடன் தென்பட்டான். அதை அவனது கூச்சல் உறுதிப் படுத்தியது. "ஹலோ! இனியவனே! உன்னைப் பார்த்ததில் எனக்கு மிகவும் சந்தோஷம்!"

அதன் பின்னர் மாலுமி, "அடக்கடவுளே! எனது ஞாயிறு விடுமுறைகளும் போய்விட்டன" என்று கதறினான்.

நீங்கள் எவ்வளவு சலிப்புடன், தளர்ந்து, நம்பிக்கையிழந்து இருக்கிறீர்கள் என்று என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அதை நல்லது நடக்க வேண்டும் என்று வழிபாடு நடத்தும் நிலைக்கு மாற்றியமைக்க முடியும். மனிதன் உடலுறவை முடித்துக் கொள்ளும் போது அவன் தியானத்தில் ஆழமாக நுழைய முடியும். உடலுறவு மீது தீவிரமான வெறுப்பு ஏற்படும்போது தியானத்தில் ஆழமாகச் செல்ல வாய்ப்பு இருக்கிறது. இப்போது தியானம் மட்டுமே உங்களுக்கு உதவும்.

நீண்ட காலமாக நீங்கள் இணைந்து வாழ்கிறீர்கள். நீங்கள் தீவிரமான உறவுகொண்டு வாழ்ந்தீர்கள். இப்போது உங்களுக்கு ஒரு ஆழமான ஓய்வு தேவை. அப்போது நீங்கள் மற்றவர்கள் எல்லோரை யும் மறக்க முடியும். உங்களுக்குள் நீங்கள் பிறபால் கலவியாளர்களை விடவும், ஓரினக் கலவியாளர்களுடன் ஆழமாகச் செல்ல முடியும். காரணம் உதவியற்ற நிலையும், நம்பிக்கையற்ற நிலையும் இரு மடங்காக இருக்கிறது.

அதே பழைய விளையாட்டில் இறங்குவதற்குப் பதிலாகத் தனிமையில் நுழையுங்கள். உறவுகள் பற்றியெல்லாம் சிலநாட்கள் மறந்துவிடுங்கள். முதல் முறையாக உங்களைச் சார்ந்திருங்கள். அது தான் தியானத்துடன் சேர்ந்திருப்பதாகும். நீங்கள் நீங்களாக இருங்கள். ஓய்வாக இருந்து உங்களை அனுபவியுங்கள். பிறரை அனுபவிக்க முயன்றீர்கள். இப்போது உங்களை அனுபவிக்க முயலுங்கள்.

ஒருவர் எதுவும் செய்யாமல், மௌனமாக அமர்ந்து தன்னை அனுபவித்தலே தியானம் ஆகும். எவ்வித காரணமும் இன்றி மகிழ்சியும், ஆனந்தமும் ஏற்படுகிறது. ஏன் என்றால் எல்லா காரணங்களும் வெளியில் இருந்து வருகின்றன. நீங்கள் ஒரு அழகான ஆணையோ அல்லது பெண்ணையோ சந்தித்தால் மகிழ்ச்சி அடைகிறீர்கள். ஆனால் தியானிப்பவர் இது ஏதுமின்றியே மகிழ்வு கொள்கிறார். அவர் மகிழ்வுக்கு வெளியுலகக் காரணங்கள் எதுவும் அவசியமில்லை. அவரது மகிழ்ச்சி அவருக்குள் இருந்து வெளிப்படுகிறது.

உறவின் வாயிலாக அடுத்தவரிடம் இருந்து மகிழ்ச்சி கிடைக்கிறது. மகிழ்ச்சி மற்றவர்களிடம் இருந்து வரும்போது அது அவர்களுக்குள்ளிருந்து வெளிப்படுவதை கவனித்திருக்கிறீர்களா? அவ்வாறு இல்லாதுபோனால் அது எப்படி உங்களை வந்தடைய இயலும்? உங்கள் மகிழ்ச்சி அடுத்தவரிடம் செல்லும்போது இருவரும் ஒருவர் மகிழ்ச்சியை இன்னொருவர் அனுபவிக்கிறீர்கள். மற்றவரின் கிணற்றில் இருந்து வரும் நீரை நீங்கள் பருகுகிறீர்கள். கிணறு அங்கு இருக்கிறது. இல்லாதுபோனால் எப்படி நீர் பருக இயலும்? ஆனால் நீங்கள் காதலிக்கும் பெண்ணைப் பொருத்தவரையில், உங்கள் அன்பை அவள் அனுபவிப்பதாக எண்ணுகிறாள். நீங்கள் அவளை மகிழ்ச்சிப்படுத்துவதாகவும் அந்த மகிழ்ச்சிக்குக் காரணம் நீங்கள்தான் என்றும் நினைக்கிறாள். உங்கள் மகிழ்வுக்குக் காரணம் அவள்தான் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் மற்றவர்களுக்கு மகிழ்ச்சி தரும்போது, உங்களை நீங்களே ஏன் சுயமாக ஆனந்தப்படுத்திக் கொள்ள முடியாது?

அமைதியாக உட்கார்ந்து உங்களை அனுபவித்து ஆனந்த ஊஞ்சலாடுவதுதான் தியானம் என்று அழைக்கப்படுகிறது. அது அக உலகினுள் வழுக்கி ஊர்ந்து செல்வதாகும்.

நீங்கள் நிஜமாகவே சலித்துப்போனால் அப்போது அக உலகின் உள்ளே செல்வது எளிதாகிவிடும். சலிப்படைவது உங்கள் வாழ்க்கை முறையாக இருக்க வேண்டும் என்று நான் கூறவில்லை. ஒருபோதும் நிலையான ஒரு வாழ்க்கை முறையை உருவாக்கிக் கொள்ளாதீர்கள். அப்படிச் செய்தால் விரைவில் சலித்துப் போவீர்கள். உங்களுக்கு மீண்டும் மகிழ்ச்சி நிறைவு ஏற்பட்டால், உங்களிடம் சக்தி நிறைந்து விடும்போது, அது பொங்கி வழியும்போது, இளமைத் துடிப்பு ஏற்படும்போது தயாராகுங்கள். உங்கள் சுய மதுவை நீங்கள் அருந்தி அதைப் பகிர்ந்துகொள்ளவும் தயாராகுங்கள். அதை நீங்கள் பகிர்ந்து கொடுக்க வேண்டும். பிறகு பிறரைச் சார்ந்திருக்க வேண்டும். அதன் பிறகு உறவு கொள்ளுங்கள்.

உறவும், தியானமும், தியானமும் உறவும் இசையாகவும் அதன் லயமாகவும் அமைந்து ஒன்றுடன் ஒன்று இணங்கியிருக்கச் செய் யுங்கள். இது உங்களை நிஜமான துறவியாக, சந்நியாசியாக மாற்றும். பழைய சந்நியாசம் என்பது துறந்து போவதாகும். நான் கற்றுத் தரும் புதிய சந்நியாசம் மகிழ்ந்திருப்பதாகும். அன்பில் மகிழ்ந்திருங்கள். தியானத்தில் மகிழ்ந்திருங்கள். வாழ்வின் எல்லா அம்சங்களுடன் மகிழ்ந்திருங்கள். வாழ்க்கை உங்களுக்கு பெரிய அளவில் வாய்ப்பைத் தந்திருக்கிறது. அதைத் தவறவிட வேண்டாம். அப்படித் தவற விடுவது தான் பாவமாகும்.

SIN என்று ஆங்கிலத்தில் எழுதப்படும் பாவம் என்ற சொல்லுக்குத் தவறவிடுதல் என்பதே நிஜமான அர்த்தம் என்பதை நீங்கள் அறிவீர்களா? தவறவிடுதல் என்று பொருள் தரும் ஒரு வேர்ச் சொல்லில் இருந்தே அது உருவாயிற்று. நீங்கள் செய்யும் காரியங் களுடன் அது சம்பந்தப்பட்டதல்ல. நீங்கள் தவறவிட்ட ஏதோ ஒன்றுடன் அது சம்பந்தப்பட்டதாகும். லௌகீக வாழ்வு வாழும் மக்கள் பாவிகள். காரணம் அவர்கள் தியானத்தைத் தவறவிடுகிறார்கள். துறவிகள் பாவிகள். அவர்கள் அன்பைத் தவறவிடுகிறார்கள். அந்த இருவருமே குற்றவாளிகள். ஆம் இருவரும்தான்!

எதையும் தவறவிடாதீர்கள். இவை எல்லாம் உங்களுடையவை. அவற்றுக்கு உரிமை கொண்டாடுங்கள். இரண்டு சிறகுகளையும் பெறுவது உங்கள் பிறப்புரிமை. ஒற்றைச் சிறகை வைத்துக்கொண்டு உங்களால் எப்படிப் பறக்க இயலும்?

சூஃபி குட்டிக்கதை ஒன்று உண்டு.

குரு தனது சீடனை ஆற்றங்கரைக்கு அழைத்துச் சென்றார். நீங்கள் கேட்பது போலவே அந்த சீடரும் கேள்வி கேட்டிருக்கலாம். அன்பும், தியானமும் தனியானவையா, ஒன்று சேர்ந்தவையா என்பது போன்ற கேள்வியாக இருக்கலாம். குரு சீடனை நதிக்கு அழைத்துச் சென்றார். கேள்விக்கு ஆம் என்றோ இல்லை எனறோ பதில் சொல்ல வில்லை. ஒரு சூழ்நிலையை உருவாக்கி பதிலை நேரடியாகக் காட்டுவதே சூஃபி முறையாகும்.

சீடனை படகில் ஏற்றி நதி நீரில் அழைத்துச் சென்றார். இரண்டு துடுப்புகளை கையில் எடுத்துச் சென்று துடுப்பு வலிக்கத் தொடங்கி னார். படகு வட்டமிடத் தொடங்கியது. ஒரு துடுப்பால் வலித்தால், படகு வட்டமிடவே செய்யும்.

சீடன் சிரித்தான். "என்ன செய்கிறீர்கள்? நீங்கள் எனக்கு எதைக் காட்ட விரும்புகிறீர்கள்? நாம் ஒருபோதும் மறுகரை சென்று சேரப் போவதில்லை" என்றான்.

குரு, "ஏன் முடியாது?" என்று கேட்டார்.

சீடன் அதற்கு, "விடை வெகு எளிதானது. படகு மறுகரை செல்வதற்கு இரண்டு துடுப்புகளும் பயன்படுத்தப்பட வேண்டும். நீங்கள் ஒரு துடுப்பை மட்டும் பயன்படுத்தினால் எப்போதும் வட்டமிட்டுக் கொண்டேதான் இருப்பீர்கள்" என்று பதில் தந்தான்.

குரு அவனிடம், "நீ இப்போது புரிந்துகொண்டாய். என்னால் இரண்டு துடுப்புகளையும் பயன்படுத்த முடியும். நாம் பழையபடி கரைக்கே திரும்புவோம். மறுகரைக்குச் செல்ல எனக்கு ஆர்வமில்லை. நான் உன் கேள்விக்கு விடை தந்திருக்கிறேன். அன்பும், தியானமும் இரண்டு துடுப்புகள் போன்றவை. அன்பு மட்டும் வைக்கும் ஒருவன் சுற்றிச் சுற்றி வந்து கொண்டே இருப்பான். இம்முறையில் யாரும் எதிர்கரை சென்று சேர முடியாது. யாரும் எல்லைத் தாண்டிச் செல்ல முடியாது." இரண்டு துடுப்புகளையும் பயன்படுத்துங்கள். வாழ்க்கை உங்களுக்கு அன்பு செலுத்தவும், தியானம் செய்யவும் தகுதியைத் தந்திருக்கிறது. அன்பு, தியானம் என்ற இரண்டு சாத்தியங்கள் உங்களுக்கு ஏன் தரப்பட்டுள்ளது? வாழ்க்கை சில தவறுகள் செய்து விட்டதாக எண்ணுகிறீர்களா? இன்றுவரை நீங்கள் ஒரு துடுப்பை மட்டுமே பயன்படுத்திச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறீர்கள். மற்றொரு துடுப்பையும் பயன்படுத்த வேண்டிய நேரம் இது.

ஒரே சமயத்தில் இரண்டு துடுப்புகளையும் பயன்படுத்த நீங்கள் கற்றுக் கொண்டதும் ஆழமான இணைப்புடன் உங்கள் வாழ்க்கை முதல்முறையாக நல்லது நடப்பதற்கான வழிபாடு செய்யும் தகுதி பெறுகிறது. அதன் பின்னர் அது உங்களுக்கு ஆசீர்வாதமாகிறது. மற்றவர்களுக்கும் அது ஆசீர்வாதமாகிறது.

**நான்காவது கேள்வி**

ஓஷோ,

காந்தம் போல மக்கள் ஏன் இங்கு கவர்ந்து இழுக்கப்படுகிறார்கள்? மக்கள் ஏன் இங்கு தங்க வைக்கப்படுகிறார்கள்? அது நமது தேவைக்காகவா? அல்லது உங்களது காந்தக் கவர்ச்சியா? சில சமயம் நீங்கள் ஒரு கடவுள் என்றும், எங்களுக்காக லீலைகள் புரிவதாகவும் எண்ணி மகிழ்கிறேன். சிலசமயம் நீங்கள் ஒரு கபட மாயாஜாலக்காரர், சாமார்த்தியமாக ஏமாற்றுகிறீர்கள் என்று அச்சம் ஏற்படுவதால் கோபம் வருகிறது. உங்கள் முழுமை யான ஆசையற்ற நிலையை நம்ப விரும்புகிறேன். இவை எல்லாம் எனது அர்த்தமற்ற கற்பனைகளா?

நான் இங்கே இல்லை. அதனால்தான் கவர்ச்சி ஏற்படுகிறது. அது நான் தோன்றுவதால் ஏற்படும் கவர்ச்சியல்ல. நான் இல்லாதிருப்பதால் உண்டானதாகும். எப்போது ஒரு மனிதன் மறைந்து காணாமல் போகிறானோ அப்போது கடவுள் தன்மை வெளிப்படுகிறது. நீங்கள் அங்கு இல்லாதபோதுதான் தெய்வீகம் தலையெடுக்கும். இரண்டு காரியங்களும் ஒன்றாக நடைபெற இயலாது. நீங்கள் உள்ளே வரும் போது அது வெளியே போய்விடுகிறது. நீங்கள் வெளியே போகும் தருணத்தில் அது உள்ளே நுழைகிறது. இரண்டும் ஒருபோதும் சந்தித்துக் கொள்வதேயில்லை. அவை இருளும் ஒளியும் போன்றவை.

ஒரு பழைய குட்டிக்கதை சொல்கிறேன்.

இருட்டு ஒருநாள் கடவுளைத் தேடிக்கொண்டு சென்று அவரைச் சந்தித்து, "நான் சூரியனுக்கு எதிராக எந்த தவறும் செய்யவில்லை. ஆனால் சூரியன் காரணமின்றி என்னைத் தொடர்ந்து சித்திரவதை செய்து வருகிறது. எனக்கு எதிராக உங்கள் சூரியன் இருக்கக் காரணம் என்ன? சூரியன் என்னைப் பின்தொடர்ந்து வருகிறது. அது வரும் போது தப்பியோட வேண்டியிருக்கிறது. நான் மிகவும் பயந்து கிடக்கிறேன். அது என்னை அடித்துக் கொல்கிறது. லட்சக்கணக்கான ஆண்டுகளாக நான் துயரப்பட்டு வருகிறேன். பட்டது போதும்! இனி என்னால் சகிக்க முடியாது. அதனால்தான் வந்து புகார் சொல்கிறேன்" என்று முறையிட்டது.

கடவுள் "அது உண்மைதான். அது ஏன் உன்னைத் துன்புறுத்த வேண்டும்?" என்று கேட்டார். சூரியனைக் கூப்பிட்டனுப்பி இருட்டு எதிராகச் செயல்படக் காரணம் என்ன என்று வினவினார். அதற்குச் சூரியன், "இருட்டு என்றால் என்ன? அதை நான் பார்த்ததே இல்லை. இருட்டு எங்கு இருக்கிறது? முதலில் என்னிடம் அதை அறிமுகப் படுத்தி வையுங்கள். நான் இதுவரை பார்த்தறியாத ஒன்றை எப்படிச் சித்ரவதை செய்ய முடியும்? நீங்கள் அதை இங்கே கூட்டி வந்தால் நான் நேரில் பார்த்துப் பேசுவேன். அதன் பிறகு பிரச்சினை வராது" என்று கூறியது.

பிறகு லட்சக்கணக்கான வருடங்கள் கடந்துவிட்டன. கடவுள் இருவரையும் ஒரே இடத்தில் சந்திக்க வைக்க முயன்று தோற்றுக் கொண்டிருக்கிறார். கடவுள் சர்வ வல்லமையுள்ளவர். ஆனாலும் இதில் மட்டும் அது பொருந்தவில்லை என்று அவர்கள் கூறினார்கள். இருளையும், ஒளியையும் ஒன்றாக எப்படி உங்களால் ஒரே இடத்தில் வைக்க முடியும்? இரண்டும் நீதிமன்றத்தில் ஆஜராகாதவரை தீர்ப்பு வழங்க முடியாது.

எனவே தீர்ப்பு தள்ளி வைக்கப்பட்டிருக்கிறது. இன்னும் அந்த வழக்கு நிலுவையில் இருக்கிறது. இருவரையும் ஒன்றாக நீதி மன்றத்தில் ஆஜர்படுத்தக் கடவுளால் இயலவில்லை. இருளின் தரப்பில் இருந்து முறையீடு செய்யப்பட்டுள்ளது. ஆனால் இருவரையும் ஒன்றாக அங்கு கொண்டுவந்து நிறுத்துவது சாத்தியமில்லை என்பதால்........

அகந்தைக்கும், தெய்வீகத்திற்கும் இடையிலான சச்சரவும் இதே வகையிலானதுதான். அகந்தை என்பதும் இருள் போன்றதுதான். உங்கள் நிலை இருள். தெய்வீக நிலை ஒளிக்கு நிகரானது. எப்போது மனிதன் அகல்கிறானோ அப்போது தெய்வம் தோன்றுகிறது. உள்ளே எதுவுமில்லை என்றாகிறபோது எல்லாம் உங்கள் மூலம் தங்களை வெளிப்படுத்திக் கொள்ள ஆரம்பிக்கும். எப்போது நீங்கள் உள்ளீடற்ற மூங்கிலாக மாறுகிறீர்களோ அப்போது அதன் உதடுகளில் புல்லாங் குழலாக மாறுகிறீர்கள். சிறந்த பாடல் உங்கள் மூலம் இசைக்கப் படுதல் துவங்கிவிடும்.

அதுதான் காந்தமாக இருக்கிறது. நான் காந்தமல்ல. அது **எனது** காந்தமல்ல. ஏசு காந்தமல்ல. அதுதான் அவரது காந்தமாக இருந்தது. அது நிஜமாக அவருடையது அல்ல. அவருடையது போல மட்டும் தோற்றமளிக்கிறது. ஏசு கூறும்போது, "நானே கதவாக இருக்கிறேன். நானே பாதையாக இருக்கிறேன். நானே சத்தியமாக இருக்கிறேன்." ஜோஸப், மேரி தம்பதியின் மகனான ஏசு என்று அவர் கூறவில்லை. அவர் கூறும்போது, "நானே பாதையாக இருக்கிறேன்" என்றார். ஏசு விலகி விட்டதும் தெய்வீகம் அவ்வாறு அறிவிக்கிறது. "என் மூலமாக அல்லது எந்த ஒருவரும் கடவுளை அணுக இயலாது" என்று அவர் கூறியதன் பொருள் தனது ஆதரவு மூலமே எல்லோரும் செல்ல முடியும் என்பது அல்ல.

"இதுவரை யாரும் கடவுளை அணுகியது கிடையாது, என் மூலம் மட்டுமே அது முடியும்" என்று கூறினார். அதை வைத்துக் கொண்டு கிறிஸ்தவர்கள் இந்த உலகையே தூண்டிக் கொண்டிருக் கிறார்கள். புத்தரின் துணையுடன் கடவுளை அடைய முடியாது. லவோவின் துணையுடன் கடவுளை அடைய இயலாது. ஏசு, "என் மூலம் மட்டும் நீங்கள் கடவுளை அணுக முடியும்" என்கிறார். அவர் நான் என்பது தன்னை அல்ல. தன்னை அவர் ஒரு உள்ளீடற்ற வெற்றுக் கருவியாக வாகனமாக பயன்படுத்தினார்.

நான் என்பதை இதே பொருளில்தான் கண்ண பரமாத்மாவும் உபயோகித்தார். அர்ஜுனனிடம் அவர் கூறும்போது, "எனது பாதங்

களைச் சரணடையாத வரையில் நீ மோட்சம் பெறமுடியாது" என்றார். நான் எனது என்பது மேற்கண்ட அதே பொருள் கொண்டதே ஆகும்.

"என்னிடம் வாருங்கள். நான் பாதையைக் காட்டுகிறேன்" என்றார் புத்தர். இதுவும் அதே அர்த்தம் தான். வாழ்வு என்ற நான் என்று பொருளாகும். கிறிஸ்தவம், புத்தமதம் போன்றவற்றை வைத்துக் கொண்டு எதுவும் செய்ய முடியாது.

நான் பேசும்போது, "வாருங்கள், என்னைப் பின்பற்றுங்கள்" என்று அழைக்கிறேன். அது உலகமாகிய நான் என்று பொருள் படுகிறது.

எப்போது மனிதன் விலகி மறைகிறானோ அப்போது உயிர் என்ற கவர்ச்சி ஆற்றல் பிரகாசிக்கத் தொடங்குகிறது.

"மனிதர் ஏன் காந்தம்போல் இங்கே கவர்ந்து இழுக்கப்படு கிறார்கள்?" என்று கேட்டார்கள்.

காந்தம் ஒன்று அங்கு இருக்கிறது. ஆனால் அது நான் அல்ல. புலப்படுவது நான் ஒருவன் மட்டும் அல்ல. வேறு பலவும் நிறைய நடக்கின்றன. கண்ணுக்குப் புலப்படாதவை பல நிகழ்கின்றன. சிலவற்றைக் கண்களால் காண இயலாது. சிலவற்றைக் காதுகளால் கேட்டுணர இயலாது. சில விஷயங்கள் புரிந்துகொள்ள முடியாதபடி உள்ளன. அதுதான் காந்த சக்தியாக அமைந்துள்ளது.

லட்சக்கணக்கான மக்கள் இங்கே வருகிறார்கள்.

"மக்கள் ஏன் இங்கு தங்க வைக்கப்படுகிறார்கள்?" என்று கேட்டார்கள். இங்கே யாரையும் தங்கச் சொல்வது கிடையாது. யாரையும் பிடித்து வைப்பது கிடையாது. அவர்கள் சுயவிருப்பப்படி செயல்படலாம். அவர்களது சுயமான நேசத்தின் காரணமாக எல்லாம் நடக்கின்றன. நான் நானாக இல்லாது இருப்பது என்ற கலையைத் தவிர வேறு எதையும் இந்தியா உலகுக்கு அளிப்பதில்லை. தாங்க ளாகவே மனிதர்கள் அழகான வீடு, நல்ல சம்பளத்தில் வேலை, நவீன வசதிகள், ஆடம்பரங்கள், சௌகரியங்கள், சுகபோகங்கள் போன்ற வற்றைத் துறந்து இங்கே வந்திருக்கிறார்கள். எல்லா துன்பங்களுக்கும் ஆளாகிறார்கள். இந்தியா வாழ்வதற்கான இடமல்ல. யாரும் அவர்களைப் பிடித்து வைத்திருக்கவில்லை. ஆனால் அவர்களால் இங்கிருந்து போக முடியாது. முழு உலகமும் அவர்களுக்கு அர்த்த மற்றுப் போய்விட்டது. சிலவற்றை அவர்கள் ருசித்துப் பார்த்தார்கள். அதற்காகத் துயரப்படவும் தயாராக இருந்தார்கள். அதற்காக எல்லா வகையான சிரமங்களையும் சட்டரீதியாக, அரசு ரீதியாக, சமூக ரீதியாக,

மருத்துவரீதியாக எதிர்கொள்ளத் தயாராக இருந்தார்கள். உங்களுக்கு எப்போதும் ஞானம் தோன்றும் யாராலும் உத்திரவாதம் தர முடியாது. கல்லீரல் வீக்கம் ஏற்படலாம். அதுமட்டும் நிச்சயம்.

"இது நமக்குத் தேவையானதா? அல்லது இது உங்கள் காந்தக் கவர்ச்சியால் நிகழ்கிறதா?" என்று கேட்பீர்கள்.

அது உங்களுக்குத் தேவையாக இருக்கிறது. அது தெய்வீகத்தின் காந்தக் கவர்ச்சி. இதுவா அதுவா என்ற கேள்விக்க அங்கு இடமில்லை. அது உங்களின் தாகம். தெய்வீக நதி இங்கே தோன்றியிருக்கிறது. பிரவாகித்து ஓடுகிறது. நீங்கள் தாகமில்லாதவராக இங்கே இருக்க வில்லை. நதி இல்லை தாகம் இல்லை என்பதற்காக நீங்கள் இங்கே இல்லாது போய்விடவும் இல்லை. அதுவா இதுவா என்ற கேள்விக்கு இடம் கிடையாது. நதி இங்கே இருக்கிறது. நீங்கள் தாகமாக உள் ளீர்கள்.

"சில நேரங்களில் நீங்கள் கடவுளாக இருந்து லீலைகள் புரிவதாக எனக்குத் தோன்றுகிறது. அதனால் மகிழ்ச்சியடைகிறேன். நீங்கள் கபடமாக ஒரு ஜாலவித்தைகாரராக இருந்து ஏமாற்றுவதுபோலவும் சில சமயம் தோன்றுவதால் தயக்கமும், பயமும் கொள்கிறேன்" என்றீர்கள். இது உங்களுடைய அன்பு - வெறுப்பு போன்ற உணர்வு களைக் காட்டுகிறது. நான் ஒன்றும் செய்யவில்லை. எல்லாம் நீங்கள் உருவகப்படுத்திக் கொண்டவைகளாகும். நான் வெறுமையாக, எதுவும் தீட்டப்படாத திரைச்சீலையாக இருக்கிறேன். நீங்கள் விரும்பியதை அதில் வரையலாம். இது உங்கள் இருமைநிலை. நீங்கள் பிளவுபட்டுக் கிடக்கிறீர்கள். உங்களுக்குள் இருக்கும் சாத்தான், தெய்வீகம் என்ற இரண்டுக்கும் இடையில் கிடக்கிறீர்கள். நல்லது - கெட்டது, செய்யத் தக்கது - செய்யக் கூடாதது என்ற பிரிவுகளுக்கு இடையில் அகப் பட்டிருக்கிறீர்கள். அது உங்கள் சம்பந்தப்பட்ட பிரிவு. அதில் நான் செய்ய எதுவும் இல்லை.

எனவே உங்களின் ஒரு பக்கத்தை தெய்வீகத்தை நீங்கள் பார்க்கும்போது ஆனந்தம் கொள்கிறீர்கள். உங்களின் மறுபக்கத்தைப் பார்க்கும்போது அங்குள் சாத்தானைக் கண்டு அச்சம் கொள்கிறீர்கள். இவை எல்லாம் நீங்கள் உருவாக்கியவை என்பதை நினைவில் கொள்ளுங்கள். கடவுள், சாத்தான் இரண்டும் உங்கள் படைப்பாகும்.

நீங்கள் முறைப்படுத்தப்பட்டு, கற்றுக் கொடுக்கப்பட்டிருக் கிறர்கள் இந்த இரட்டை நிலை உங்களுக்கு பழகிப் போய்விட்டது. நீங்கள் முழுமையானவர் அல்ல என்று போதிக்கப்பட்டுள்ளதால் இவ்வாறு நிகழ்கிறது. ஒருநாள் என்மீது அன்பு கொள்கிறீர்கள். மறு

நான் மிதமிஞ்சிய வெறுப்புக் கொள்கிறீர்கள். உங்கள் அன்பு, வெறுப்பு போன்றவைகளுக்கு நான் பொறுப்பல்ல. நீங்கள் முழுமையானவராக மாறும்போது நல்லது கெட்டது என்ற இரண்டும் மறைந்து போய் விடும். அப்போதுதான் முதல்முறையாக நான் பார் என்பதை உங்களால் கண்டுரண இயலும். உண்மையில் அதுதான் சத்தியத்தில் அனுபவமாகும். அது உங்களுடைய தீமைக்கு எதிரான சத்தியம் போன்றதல்ல. அது சத்தியமாகும். அது நன்மை தீமை இரண்டும் கலந்து முழுமை பெற்றதாக அமைந்திருக்கிறது.

நான் கடவுள் என்ற சொல்லை உபயோகிப்பதும், நீங்கள் கடவுள் என்ற சொல்லை உபயோகிப்பதும் முற்றிலும் வித்தியாசமான வகையிலாகும். நான் கடவுள் என்ற சொல்லை உபயோகிப்பதன் அர்த்தம் உங்கள் கடவுள், சாத்தான் போன்றவற்றிற்கு அப்பாற்பட்ட நிலையைக் குறிப்பதாகும். அங்கு எல்லா இருமை நிலைகளும் மறைந்து விடுகின்றன. ஒருமை மட்டுமே வெளிப்படுகிறது. நான் கடவுள் என்று கூறிப் பயன்படுத்தும் சொல் உங்களுடையது போன்ற தல்ல. ஏனென்றால், உங்கள் சொல் எப்போதும் வெறுப்பின் வடிவத்தை அதில் சுமந்து வருகிறது. நான் அன்பு என்ற சொல்லைப் பயன்படுத்தும்போது அதன் அர்த்தம் அன்பு, வெறுப்பு போன்றவை மறைந்துபோன நிலையைக் குறிப்பதாக உள்ளது. அப்போது முற்றிலும் வித்தியாசமான அன்பு எழுகிறது. பூரணமான, முழுமையான அன்பு அது. தூய்மையான அன்பாகவும், கபடமற்றதாகவும், ஆழமான தாகவும் அந்த அன்பு அமைகிறது.

ஆகவே அது மீண்டும் மீண்டும் நடக்கிறது. நான் ஒரு அர்த்தத்தில் அதைப் பயன்படுத்தினால் நீங்கள் முற்றிலும் மாறுபட்ட வகையில் அதைப் புரிந்து கொள்கிறீர்கள். அது இயல்புதான். துவக் கத்தில் அப்படித்தான் இருக்கும். நீங்கள் இந்த இடத்துக்குப் புதியவர். எனது மாணவர்கள் எல்லோருக்கும் அப்படி நடந்திருக்கிறது. அது பற்றிக் கவலைப்பட வேண்டாம். இரண்டையும் அனுபவியுங்கள். என்னுடன் அன்பாக இருக்கும்போது ஆனந்தமாக அதை அனுபவி யுங்கள். என்னை வெறுக்கும்போது உங்கள் வெறுப்பையும் அனுபவி யுங்கள். உங்கள் ஆத்திரத்தையும் அனுபவியுங்கள். நிஜமான வெறுப்பைக் காட்டுங்கள்.

உங்கள் நிஜமான அன்பு, நிஜமான வெறுப்புக்கொள்ள முடியும் என்றால் விரைவில் அந்த அன்பு, வெறுப்பு போன்ற இரண்டும் மறை வதைக் காணமுடியும். உண்மைநிலை அவை இரண்டுக்கும் பாலம் அமைக்கிறது. உண்மைத்தன்மை ஒரு பாலமாகும். நீங்கள் என்மீது நிஜமாக அன்பு காட்டினாலும், நிஜமாகவே வெறுத்தாலும் அந்த இரண்டு செயல்களிலும் ஒரு ஒற்றுமை உள்ளது. அது நம்பகமான

உண்மைத் தன்மை ஆகும். அது அவற்றைப் பாலமிட்டு இணைக்கிறது. அந்த பாலங்களுக்கு அப்பால் ஒருநாள் சூரியோதயம் தோன்றும்.

அதன் பிறகு நீங்கள் என்னைப் பூரணமான வெறுமையுடன் காண்பீர்கள். அந்த வெறுமையினூடே தெய்வீகம் பெருகியோடுகிறது. நன்மை தீமை போன்றவைகளுக்கு அப்பாற்பட்டதாக, நல்லது கெட்டதுக்கு அப்பாற்பட்டதாக, பாவம் புண்ணியத்துக்கு அப்பாற்பட்டதாக அது இருக்கிறது.

உங்கள் ஆசையற்ற நிலை மீது நான் நம்பிக்கை கொள்ள விரும்புகிறேன்" என்கிறீர்கள். கடவுளுக்கு உலகின் மீது அக்கறை இல்லை என்று நினைக்கிறீர்களா? பிறகு ஏன் பூமியை அவர் உருவாக்கினார்? கடவுள் ஆறு நாட்களில் உலகைப் படைத்தார் என்று நற்செய்திகள் கூறுகின்றன. அதன் பிறகு உலகைப் பார்த்துச் சொன்னார். "நன்றாகவும், அழகாகவும் இருக்கிறது" அவர் உலகைப் படைத்து அதை நேசிக்கவும் செய்தார்.

அக்கறையின்மை என்ற கருத்தை எங்கிருந்து நீங்கள் பெற்றீர்கள்? கடவுள் முழுமையான ஆர்வத்துடன் உள்ளார். அவருக்கு உலகின் மீது அக்கறையில்லை என்று நாம் சொல்லக் கூடாது. ஏனென்றால் அதை நாம் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறோம். அவர் பூரணமான அக்கறையுடன் இருக்கிறார் என்பதே சரி. அவரைத் தவிர அக்கறை காட்ட வேறு யாரும் இல்லை. அவர் உயிர் முழுவதிலும் அக்கறை நிறைந்துள்ளது. ஏராளமான அளவு அன்பு அவரிடம் உள்ளது. அன்பு வடிவில் அவர் இருக்கிறார்.

ஏசு "அன்பே கடவுள்" என்றார். கடவுள் அன்பான வடிவில் இருக்கும்போது அவர் எப்படி ஆர்வமற்று, அக்கறையற்று இருக்க இயலும்?

நான் எதிலும் அக்கறையற்றவனாக இருப்பதில்லை. மித மிஞ்சிய அன்புடன், அளவற்ற ஆர்வத்துடன் இருக்கிறேன். மரங்கள் மீது, மக்கள் மீது பறவைகள், சூரியன் மீது சந்திரன், நட்சத்திரங்கள் மீதெல்லாம் ஆர்வம் காட்டுகிறேன். என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. நீங்கள் ஆர்வமற்றவராக இருக்காதவரை ஆன்மீகவாதியாக மாறமுடியாது என்று துறவிகள் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள். எதிலும் அக்கறை இல்லாதவராக இருக்கும்போது நீங்கள் ஆன்மீகவாதியாகிறீர்கள். அது ஒருவகையான உருக்குலைவு ஆகும். எந்த அளவுக்கு அக்கறையற்றுப் போகிறீர்களோ அந்த அளவுக்கு சலிப்பும், உயிரற்றும் போகிறீர்கள்.

நான் அகக்றையின்மையைக் கற்றுத் தருவதில்லை. அபாரமான ஆர்வம் பற்றி கற்பிக்கிறேன். அதை விரிவுபடுத்துங்கள்! மேலும் மேலும் அன்பு செலுத்துங்கள். உயிரின் எல்லைவரை அப்படி ஏதாவது இருந்தால் அதுவரை அன்பின் சிற்றலைகள் பரவட்டும். வாழ்க்கை முழுவதையும் அன்பினாலும், ஆர்வத்தினாலும் நிறையச் செய்யுங்கள். அந்த வினோதங்களில் பங்கெடுத்து இணைந்திருங்கள்.

நீங்கள் என்னைப் பார்க்க வரும்போது உங்கள் எல்லா எதிர் பார்ப்புகளுடனும் வருகிறீர்கள். அது இயல்புதான். "உங்கள் ஆர்வ மற்றநிலை மீது நான் நம்பிக்கை கொள்ள ஆசைப்படுகிறேன்" என்று கூறுகிறீர்கள். என்? அது போன்ற ஒரு வேண்டுகோளை ஏன் என்னிடம் வைக்கிறீர்கள்? உங்களுக்கும் ஏற்படுத்திக் கொள்கிறீர்கள்? முடியாத ஒரு வேண்டுகோளை வைக்கிறீர்கள். என்னால் அதை நிறை வேற்ற இயலாது. இயற்கை அதை நிறைவு செய்யாது. உலகின் மீது இயற்கை ஆர்வமற்றுப் போகும் என்றால், இந்த உலகம் என்றோ மறைந்து போயிருக்கும்.

ரவீந்திரநாத் தாகூர் தனது அழகான கவிதைகள் ஒன்றில், "நான் எப்போதெல்லாம் புதிதாகப் பிறந்த ஒரு குழந்தையைப் பார்க்கி றேனோ அப்போதெல்லாம் கடவுளுக்கு நன்றி சொல்லி அவரிடம், "நீங்கள் இன்னும் நம்பிக்கையுடன் இருக்கிறீர்களா? மனிதர்களால் இதுவரை சலிப்படையவில்லையா?" என்று கேட்கிறார்.

ரவீந்திரநாத் தாகூர் இறக்கும் தருவாயில் அவர் செய்த கடைசிப் பிரார்த்தனை இதுதான். "கடவுளே! நான் உங்களுக்கு ஏதாவது உப யோகமாக இருந்திருப்பதக நீங்கள் கருதினால் என்னை மீண்டும் பூமியில் பிறக்க வையுங்கள். உலகத்திலிருந்து என்னை வெளியேற்றச் சொல்லவில்லை. மீண்டும் இந்த உலகிற்கு அனுப்பி விடுமாறு கேட்கிறேன். உங்கள் உலகம் மிகவும் அழகாக இருக்கிறது. நான் தகுதியானவன் என்று கருதினால் மீண்டும் என்னை உலகிற்கு அனுப்பி வையுங்கள்."

இது மிகவும் வித்தியாசமான ஒரு வேண்டுகோள். ஏனென்றால் இந்தியத் துறவிகள் காலங்காலமாக "நாங்கள் மீண்டும் மறுபிறப் பெடுக்க விரும்பவில்லை. தயவுசெய்து மீண்டும் உங்களை பூமிக்கு அனுப்ப வேண்டாம். மீண்டும் பூமிக்கு வந்து பிறப்பது ஒரு தண்டனை" என்று கூறிவருகிறார்கள். ரவீந்திரநாத் தாகூர் ஒரு வழி பாட்டில் இவ்வாறு கீதமிசைக்கிறார். "நான் உங்களுக்கு ஏதாவது உபயோகமாக இருந்திருப்பதாக நீங்கள் கருதினால் என்னை மீண்டும் பூமியில் பிறக்க வையுங்கள்."

நான் ரவீந்திரநாத் தாகூரின் கருத்துக்கு உடன்படுகிறேன். நீங்கள் துறவிகள் என்று அழைக்கும் மனிதர்கள் எல்லோரையும்விட இவர் பெரிய ஞானியாக, பெரிய முனிவராக இருக்கிறார். அவர்கள் எல்லோரும் வாழ்க்கைக்கு எதிரானவர்கள். நான் வாழ்க்கைக்கு எதிரானவன் அல்ல. காரணம் இயற்கை வாழ்வுக்கு எதிரானது அல்ல. இயற்கையே வாழ்க்கையாகும். நான் எப்படி வாழ்வுக்கு எதிரானவனாக இருக்க இயலும்?

நான் இந்த உலகை நேசிக்கிறேன். நான் இந்த உலகை முழுமையாக நேசிக்கிறேன். நான் எதிலும் அக்கறையில்லாதவனாக இருக்கவில்லை. நான் **பூரணமான** அக்கறையுடன் இருக்கிறேன். நான் அனைத்திலும் ஆர்வம் காட்டுகிறேன். எனவே தயவுசெய்து, அதை மறந்து விடுங்கள். அதை நிர்வாகிக்க உங்களால் இயலாது.

உங்களுக்கு நீங்களே ஏன் அப்படிப்பட்ட ஒரு வேண்டுகோளை வைத்துக் கொள்கிறீர்கள்? அப்புறம் எப்படி உங்களால் முழுமையான நம்பிக்கையுடன் இருக்க முடியும்? உங்கள் நம்பிக்கை எப்படி முழுமையானதாக அமையும்? உங்கள் எதிர்பார்ப்பு முழுமையானதாக இருக்க முடியும்? நீங்கள் முழுமைபெறாதவரை பிரிந்து கிடப்பீர்கள். ஆர்வம், ஆர்வமற்றுப் போதல் என்பன எல்லாம் பிரிவின் பாதைகள். ஆர்வம் கொள்வது ஒரு பாவச் செயல், ஆர்வமற்று இருப்பது புனிதம் என்பார்கள். இந்த விஷயங்கள் உங்களைப் பிரித்து வைத்துக் கொண்டிருக்கின்றன. எல்லா பிரிவுகளையும் உதறுங்கள். கள்ளம் கபடமற்று இருங்கள். எதையும் கணக்குப் பார்த்துச் செய்யாதீர்கள்.

கள்ளம் கபடமற்று இருக்கும்போது ஆர்வம் என்பதே ஆர்வமற்றதாகவும் அமைவதைக் காண்பீர்கள். தற்போது அதைப் புரிந்து கொள்வது சிரமம். ஏனென்றால், இது முரண்பாடானது போலிருந்தாலும் உண்மையான கூற்றாகும். பாசம் இல்லாத இணைப்பு உண்டு. முழுமனதற்ற செயல்பாடு உண்டு. தாமரை மலர் போல ஒருவர் வாழ முடியும். தண்ணீரில் இருந்தாலும் அது நீரைத் தொடுவதில்லை. உங்கள் ஆர்வமற்ற நிலை என்ற கருத்து அது மாதிரியானதல்ல.

இந்த உலகில் வாழுங்கள். ஆனாலும் அதை விட்டு விலகி வாழுங்கள். இதுதான் எனது சந்நியாசிகளுக்கு நான் கூறும் செய்தியாகும். இந்த உலகில் இருங்கள். முழுமையாக இந்த உலகில் இருங்கள். இன்னும் அவ்வாறு இல்லாதிருந்தால் அதில் உடனே இறங்குங்கள். முரண்பாடு போலிருக்கும் இது நிறைவு பெற்றதும் அவர் வந்து சேர்வார்.

**ஐந்தாவது கேள்வி**

**ஓஷோ,**

**என்னை மாற்றிக்கொள்ள வாழ்நாளெல்லாம் முயன்றேன். மாறுதல் ஏற்பட்டதாகவே தெரியவில்லை. நான் பழைய நிலையிலேயே இருக்கிறேன். எனக்கு நம்பிக்கையூட்ட எதுவுமே இல்லையா?**

முதலில் நீங்கள் ஏன் உங்களை மாற்றிக் கொள்ள விரும்பு கிறீர்கள்? நீங்கள் அழகாக இருக்கிறீர்கள். உங்களை நீங்கள் ஏன் ஏற்றுக் கொள்ளக்கூடாது? உங்களை நீங்கள் ஏற்றுக் கொள்ளும்போது மாற்றம் நிகழும். அதுதான் அற்புதம். உங்கள் முயற்சியால் எதுவும் நடக்காது. நீங்கள் உங்களை மாற்றிக் கொள்ளும்போது அதே மனம் தன்னையும் மாற்றிக் கொள்ளாதா? மூர்க்கமான மனம் அகிம்சைக்கு மாறும்வகையில் முயல்கிறது. அது எப்படி மாற்றமடைகிறது? மூர்க்கம் இருக்கும்போது அங்கே அகிம்சையும் இருக்கும்.

கோபக்கார மனம் கோபமற்ற மனமாக மாறமுயல்கிறது. உங்களால் உருவாக்கிக் கொள்ள முடியும். உங்களைச் சுற்றி ஒரு முரட்டுத்தனத்தை ஏற்படுத்திக்கொள்ள இயலும். நீங்கள் கோபத்தை அடக்கிக் கொள்ளலாம். ஆனால் அது அதே மனதில் இருந்து வருகிறது. நீங்கள் அதன் உச்சியில் உட்கார்ந்திருக்கிறீர்கள். ஒரு எரிமலை மீது உட்கார்ந்திருக்கிறீர்கள். முட்டாள் மனம் அறிவாளியாக முயல்கிறது. அந்த தீவிர முயற்சியில் முட்டாள்தனம் மேலும் மேலும் ஆழமாகப் பதிகிறது.

வெளியே வருவதற்கு என்னதான் வழி? அதை ஏற்றுக் கொள்வதே வழியாகும். ஏற்றுக்கொள்ளல் ஒரு மந்திரச் சாவி. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அதை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். அந்த ஏற்றுக் கொள்ளலின்போது அறிவு தலையெடுக்கிறது. ஏற்றுக் கொள்ளும்போது ஏன் அறிவு பிறக்கிறது? எப்போதெல்லாம் நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களோ அதன் பிறகு பிளவுபட்டு இருப்பதில்லை. பிளவு மறைந்து போகிறது. அந்த பிளவு உங்களுக்கும், நீங்கள் எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்களோ அந்த எண்ணத்துக்கும், இடையில் இருக்கிறது. இந்த மனமயக்கத்தில் முழுமையான ரகசிய ஆணிவேர் பதிந்திருக்கிறது. "இப்படி இருக்கும் நான் அப்படி மாற விரும்புகிறேன்" என்கிறீர்கள்.

இரண்டு விஷயங்கள் மட்டுமே அதில் உள்ளன. நீங்கள் அப்படி இப்படி மாறவேண்டும் என்று விரும்புவது நாய் தனது வாலைப் பிடிக்க முயல்வது போன்றதாகும். அல்லது உங்கள் பூட்ஸ் கயிறு களைப் பிடித்து இழுத்து உங்களை நீங்கள் மேலே தூக்க முயற்சிப்பது

போன்றதாகும். நீங்கள் சிறிதளவு தாவலாம், குதிக்கலாம். அதில் பெரிய சாதனை எதுவும் நடந்துவிடாது. நீங்கள் துறவிகள் என்று அழைக்கும் மனிதர்கள் இவ்வாறுதான் தங்கள் பூட்ஸ் கயிற்றைப் பிடித்துத் தங்களை மேலே தூங்க முயன்று துள்ளிக் குதிக்கிறார்கள். சில கணங்களுக்கு அவர்கள் பூமியிலிருந்து சற்று உயரம் மேலே எழுகிறார்கள். மறுபடியும் கீழே வந்து தொப்பென்று விழுகிறார்கள்.

பிளவைச் சரிப்படுத்த இது வழி அல்ல. பிளவு இதனால் மேலும் அதிகரிக்கிறது. எந்த அளவு முயல்கிறீர்களோ அந்த அளவு தோல்வியடைகிறீர்கள். தோற்றுப்போகும் அளவைப்பொறுத்து உங்கள் தன்னம்பிக்கையும் குறைகிறது. அதனால் போதை மருந்து, குடிப் பழக்கம், அதிகார அரசியல், பணம் சேர்த்தல், சந்தைக் கடை என்று மனம் அலைகிறது. தங்களிடம் இருந்து தப்பித்துக் கொள்ள மனிதர்கள் ஆயிரம் வழிகளைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறார்கள். தங்களைப் பற்றி ஒரு மோசமான கருத்தை அவர்கள் உருவாக்கி வைத்திருக் கிறார்கள். அதனால் வேறு ஒன்றைக் கண்டுபிடித்தாக வேண்டியிருக் கிறது. "உங்களை அறியுங்கள்" என்று அவர்களிடம் சொன்னால் அது அதிர்ச்சி அளிக்கும். தங்களை அறிந்துகொள்ள அவர்கள் விரும்பவில்லை.

சாக்ரட்டீஸ் போன்றவர்கள் உன்னை நீ உணர்ந்துகொள் என்று கூறினார்கள். அதை யாரும் கேட்கவில்லை. காதில் போட்டுக் கொள்ள வில்லை. யாரும் தங்களைப் பற்றி அறிந்துகொள்ள இஷ்டப்பட வில்லை. நீங்கள் ஒரு அருவறுப்பான மனிதர் என்று ஏற்கெனவே முடிவு செய்து வைத்திருக்கிறீர்கள். நீங்கள் நோயாளியாக, அசிங்க மானவராக, அசாதாரணமானவராக, இருப்பதாக எண்ணுகிறீர்கள். சீழும், காயங்களும் உங்கள் உள்ளே இருக்கின்றன. அங்கு செல்ல யார் விரும்புவார்கள்? அந்த காரியங்களைப் பார்க்காமல் இருப்பதும், அதை மறந்துவிடுவதும் நல்லது என்று தோன்றுகிறது.

மாற்றத்தை ஏற்படுத்திக்கொள்ள விரும்பினால் என்ன செய் வீர்கள்? மரத்தின் இந்த கிளையை வெட்டுவீர்கள், அந்தக் கிளையை வெட்டுவீர்கள். பிரச்சினை வேரில் இருக்கிறது. கிளையில் அல்ல. நீங்கள் ஒரு மரத்தைக் கவாத்து செய்தால் மரம் கனமாக வளரும். நல்ல இளம் தளிர்கள் முளைக்கும். நிறைய இலைகள் வளரும். காரணம் அந்த சவாலை மரம் ஏற்றுக் கொண்டுவிட்டது. நீங்கள் மரத்தை அழிக்க விரும்புகிறீர்களா? ஒரு இலையைக் கிள்ளினால் மூன்று இலைகள் முளைக்கும். மரம் அளிக்கும் பதில் அதுதான். ஒரு கிளையை வெட்டினால், மூன்று கிளைகள் அதை சரிசெய்யும். மரத்தை எளிதாகத் தோற்கடித்துவிட முடியாது. அது வாழ்ந்துவிட முயல்கிறது. நீங்கள் கிளைகளையும், இலைகளையும் வெட்டிக் கொண்டே இருக்

கிறீர்கள். ஆனால் எதுவும் நடப்பதில்லை. அடியாழத்தில் நீங்கள் பழையபடியே இருந்து வருகிறீர்கள். காரணம் வேர்கள் மண்ணில் மறைந்திருக்கின்றன.

ஒரு கிரேக்க உணவு விடுதியில் அந்த ஜப்பானியர் நீண்டகால வாடிக்கையாளராக இருந்தார். காரணம் அவர்கள் சுவையான தாளித்த சாதம் (Fried Rice) பரிமாறுவதாகும். ஒவ்வொரு நாளும் மாலையில் அவர் அங்கு சென்று "Flied Rice" என்று கேட்டுச் சாப்பிடுவார்.

அதைக் கவனிக்கும் கிரேக்க உணவு விடுதி உரிமையாளர் எப்போதும் நிலத்தில் விழுந்து புரண்டு புரண்டு சிரிப்பார். சில சமயம் தனது இரண்டு மூன்று நண்பர்களை வரவழைத்து ஜப்பானிய வாடிக்கையாளர் Flied Rice என்று கூறுவதைக் காட்டிச் சிரிப்பார்.

ஜப்பானிய வாடிக்கையாளர் இதனால் கௌரவக் குறைச்சல் ஏற்பட்டு வருந்தினார். Fried Rice என்று சரியாக உச்சரிப்பதற்கு தனியாக உச்சரிப்பு பயிற்சி வகுப்புக்கு ஏற்பாடு செய்தார்.

மறுமுறை அவர் உணவு விடுதிக்குச் சென்று சர்வசாதாரண மாக, "Fried Rice" கொண்டு வா என்றார்.

தனது காதுகளை நம்பமுடியாத கிரேக்க உரிமையாளர், "ஐயா! அதை மீண்டும் ஒரு தடவை சொல்லுங்கள்".

ஜப்பானியர், "நான் என்ன சொன்னேன் என்று நீ கேட்கவே செய்தாய் குருட்டு அதிர்ஷ்டசாலியான கிரேக்கனே! (Flucking Gleek) என்று மீண்டும் வேறுவிதமான தவறான உச்சரிப்பில் இறங்கினார்.

மாற்றத்தை ஏற்படுத்த இது சரியான வழியல்ல. நீங்கள் ஒரு வார்த்தையை மாற்றுகிறீர்கள். ஆனாலும் கீழே ஆழத்தில் இன்னும் ஜப்பானியராகவே இருக்கிறீர்கள். அது தன்னை மற்றொரு வகையில் உறுதிப்படுத்திக் கொள்கிறது. நீங்கள் கிறுக்கனாவீர்கள் அல்லது வேஷதாரியாக மாறுவீர்கள். உங்கள் சமூகம், பைத்தியக்காரச் சமூகம். அது உங்களுக்கு இரண்டு மாற்றுவழிகளை மட்டுமே காட்டுகிறது. உங்களை மேம்படுத்திக்கொள்ள முயன்று கிறுக்கனாக மாறுவது. உங்கள் பூட்ஸ் கயிறுகளைப் பிடித்து உங்களை மேலே தூக்க முயல்வது. கொஞ்சம் புத்திசாலியாக இருந்தால் வேஷதாரியாக மாறுவது. ஏமாற்றித் திரிந்துகொண்டு சொல்வது ஒன்று, செய்வது அதற்கு எதிராக இருக்கும்படி நடப்பது செயல்படுதல். உங்கள் வாழ்க்கைக்குப் பின்வாசல் கதவு ஒன்றை அமைத்துக் கொள்கிறீர்கள். முன்புற வாயில் முகப்புத் தோற்றம் அழகானது. நீங்கள் செய்ய வேண்டியது, உங்கள் கொள்கை போன்றவை வர்ணத்தால் அழகாக

எழுதப்பட்டுள்ளன. ஆனால் பின்வாசல் வாழ்க்கை மிகவும் நிஜமான தாக உள்ளது.

இதுவும் பிரிவையே ஏற்படுத்துகிறது. நீங்கள் ஒருபோதும் விச்ராந்தியாக இருக்க முடியாது. நீங்கள் சதா பொய் சொல்கிறீர்கள். மீண்டும் மீண்டும் குட்டு வெளிப்படும். எத்தனை காலம் நடிக்க முடியும்? வேஷம் போடுவதில் நீங்கள் வெற்றியடைய இயலாது. காரணம் உங்கள் அண்டை வீட்டுக்காரர்களும் நடிக்கிறார்கள். எனவே, ஒருவரைப் பற்றி ஒருவர் நன்கு அறிவார்கள். தங்களுக்குப் பின் வாசல் ஒன்று இருப்பது அவர்களுக்குத் தெரியும். அதுபோல உங்களுக்கும் ஒன்று இருக்கும் என்று கண்டுபிடித்து விடுவார்கள்.

அதனால்தான் யாராவது ஒருவரைப் பற்றிய தவறான செய்தியை நீங்கள் கேள்விப்பட்டதும் உடனே அதை நம்பிவிடுகிறீர்கள். அதற்கு ஆதாரம் கேட்பதில்லை. யாராவது ஒருவரைப் பற்றிய நல்ல விஷயம் கேள்விப்பட்டால் ஆதாரம் கேட்கிறீர்கள். யாரோ ஒருவர், "அந்த துறவி ஒரு போலி. உண்மையான துறவியல்ல. அவர் ஒரு கொலைகாரர். சிற்றின்ப வெறியர், பேராசைக்காரர், முரடர்" என்று கூறினால் அக்கணமே அதை நம்பிவிடுகிறீர்கள். யாரோ ஒருவர் "அவர் நிஜமான துறவி" என்று சொன்னால் உங்களுக்குச் சந்தேகம் தோன்றுகிறது." அதை கவனத்தில் கொள்கிறேன். அதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். நான் அது குறித்து விசாரித்துப் பார்க்கிறேன்" என்று கூறுகிறீர்கள்.

மனிதர்கள் பற்றிய அவர் எப்படிப்பட்டவர்கள் என்பது பற்றியும் உங்களுக்குத் தெரியும். மனிதர்கள் நல்லவர்களாக இருப் பார்கள் என்று எளிதாக எப்படி உங்களால் நம்பிவிட முடியும்? உங்கள் நற்குணம் பொய்யானது என்று உங்களுக்குத் தெரியும். ஒவ்வொரு மனிதனின் நற்குணமும் அதுபோலவே பொய்யானது என்ற கருத்தை அது ஏற்படுத்துகிறது. சமூகம் முழுவதும் வேஷதாரி களால் ஆனது என்று நம்புகிறீர்கள்.

உங்களை மேம்படுத்திக் கொள்வதையும், மாற்றிக் கொள்வதை யும் நிறுத்துங்கள். எவ்விதம் உங்களை மாற்றிக் கொள்ளப் போகிறீர்கள்? எதற்காக அதைச் செய்கிறீர்கள்? நீங்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று யார் முடிவு செய்ய முடியும்? நீங்கள் இவ்விதம்தான் இருக்கவேண்டும் என்பதைப் பிறர் முடிவு செய்ய அனுமதித்தால், அது வெளியிலிருந்து வரும் ஒரு தண்டனை விதிப் பாகிவிடும். பாதிரியார்களும், அரசியல்வாதிகளும் உங்கள் மீது சில கொள்கைகளைத் திணிக்க முயல்கிறார்கள். அந்த கொள்கைகள் காரணமாக நீங்கள் இயல்பானவராக, எளியவராக இருக்க முடியாது

போகிறது. பெருஞ்சுமையை நீங்கள் தூக்கித் திரிய வேண்டிய தாகிறது. எப்போதும் இயல்புக்கு மாறுபட்டவராக, செயற்கை யானவராக, நியாயமற்றவராக இருக்கிறீர்கள். உங்களால் யாரைப் போலவும் நடிக்க முடியாது.

தாமஸ் ஏ கெம்பிஸ் என்பவர் எழுதிய imitation of christ என்பது பிரபலமான ஒரு புத்தகமாகும். இதைவிட மோசமான, பொய்யான ஒரு தலைப்பை நான் இதுவரை கண்டதில்லை. imitation of christ? இந்த புத்தகம் பெரிதும் மதிக்கப்படுகிறது. கிறிஸ்தவ ஆராய்ச்சி நூல் களில் நன்றாகப் போற்றப்படுகிறது. ஆனால் புத்தகத்தின் மொத்தக் கருத்தும் தவறானது. நீங்கள் ஏசுவைப் போல நடித்தால், வெறுமனே காப்பியடிப்பவராக மட்டுமே இருப்பீர்கள். ஒருபோதும் ஏசுவாகி விட முடியாது. நடிப்பவர் ஒரு வேஷதாரிதான். உங்களால் எப்படி ஏசு போல நடிக்க முடியும்? அவர் முற்றிலும் வித்தியாசமான மனிதர். அவர் யாரையும் காப்பியடிக்கவில்லை. அப்படி காப்பியடித்திருந்தால் யூதர்களால் அவர் நேசிக்கப்பட்டு, மரியாதை அளிக்கப்பட்டிருப்பார். அவர் மோஸஸையோ, ஆபிரகாமையோ காப்பியடித்திருந்தால் சிலுவையில் அறையப்பட்டிருக்க மாட்டார். அவர் ஒருபோதும் யாரைப் போலவும் நடிக்கவில்லை. தனது உண்மை இயல்பை வெளிப்படுத் தினார். இயற்கை அவரை எவ்வாறு படைத்ததோ அதை ஏற்றுத் தன் மீது மதிப்பு வைத்திருந்தார். எவ்விதமான காப்பியடித்தலும் அவரிடம் இல்லை. அவர் நிஜமான மனிதர். அச்சுத்தான் பிரதியல்ல.

தாமஸ் ஏ கெம்பிஸ் அச்சுத்தாள் பிரதி. அவர் வெற்றி பெற்றிருந் தாலும் அந்த அச்சுத்தாள் அசிங்கமானது. நீங்கள் நிஜமானவராக இருக்க முடியும்? எதற்காக அச்சுப் பிரதியாக வேண்டும்? புத்தரையோ, ஏசுவையோ என்னையோ காப்பியடிக்காதீர்கள். யாரையும் காப்பி யடிக்காதீர்கள். எல்லா இடத்திலிருந்தும் கற்றுக் கொள்ளுங்கள். காப்பி யடிக்க வேண்டாம். நீங்களாகவே இருங்கள். நீங்கள் நீங்களாகவே இருக்க வேண்டும். உங்களைப் பற்றி முன்கூட்டியே அறிந்துகொள்ள எந்த வழியும் இல்லை. நீங்கள் யார் என்பதை எப்படி முடிவு செய் வீர்கள்? உள்ளே புகுந்து நீங்கள் யார் என்று பார்க்காமல் எப்படி முடிவு செய்வீர்கள்?

முதல் விஷயம், மாறுதல் ஏற்படுத்திக்கொள்ள முயல வேண்டாம். முதலாவதாக, உங்களை நீங்கள் அறிந்துகொள்ள முயலுங்கள். உங்களுக்குள் யார் வசிக்கிறார்? உங்களிடம் வந்துள்ள அந்த விருந்தாளி யார் என்று பாருங்கள். உங்கள் உடல் ஒரு தங்கு மிடம். யாரோ ஒரு அந்நியர் அந்த உடலில் தங்கியிருக்கிறார். எங்கோ இருந்து வந்து உடலில் தங்கியிருக்கிறார். அது நீங்கள்தான், பாருங்கள்.

கவனியுங்கள், சிந்தியுங்கள். அது பற்றி விழிப்புணர்வு கொள்ளுங்கள். உங்களை மாற்றிக் கொள்ளும் முயற்சி அனைத்தையும் உதறித் தள்ளுங்கள். முழுசக்தியையும் நீங்கள் யார் என்பதைக் கண்டுபிடிப் பதில் செலுத்துங்கள். அந்த அறிதல் மூலம் வளர்ச்சி ஏற்படும். அந்த மேம்பாடு உங்கள் நிஜமான முகத்தைக் கொண்டு வந்து சேர்க்கும். நீங்கள் நீங்களாகவே இருக்க வேண்டும். நீங்கள் முன்பு எப்படி இருந் தீர்களோ அப்படியே இருக்க வேண்டும்.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**தேவை சார்ந்த விதிமுறை என்ன?**

பிதாகோரஸ் இரண்டு விதிமுறைகள் குறித்துப் பேசுகிறார். அவை தேவை சார்ந்த விதிமுறை. ஆற்றல் சார்ந்த விதிமுறை என்பன வாகும். தேவை சார்ந்த விதிமுறை என்றால் வாழ்க்கை எதேச்சை யானது என்று அர்த்தம். வாழ்வு இயந்திர மனிதன் போன்றது. ஒரு இயந்திரம் போன்றது. தேவை சார்ந்த விதிமுறை என்பது உங்கள் வாழ்வில் சம்பவம் நிகழ்கின்றன. நீங்கள் அதன் எஜமானர் அல்ல. அதன் எஜமானன் ஆவதற்குப் போதுமான விழிப்புணர்வு உங்களிடம் இல்லை.

ஆற்றல் சார்ந்த வாழ்க்கையில் விஷயங்கள் தானே நடப்பதில்லை. சம்பவங்களை நீங்கள் உருவாக்குகிறீர்கள். நீங்கள் தற்செயலானவர் அல்ல. நீங்கள் ஒரு சக்தியாக இருக்கிறீர்கள். விழிப்புணர்வு சக்தியைத் தருகிறது. அதன் பிறகு வாழ்க்கை நீரில் மிதக்கும் கட்டைபோல் இருக்காது. வாழ்க்கைக்கு ஒரு நோக்கம் இருக்கும். வாழ்க்கையில் சில ஒருங்கிணைப்பு இருக்கும். வாழ்க்கை ஒரு தொடர் நிகழ்வாக அமையும். ஏதோ ஒன்று உங்களிடம் திடமாக இருக்கிறது. அதனால் சக்தி நிறைந்தவராக மக்களிடம் நிகழ்த்திக் காட்ட ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் முன்னிலைப்படுத்தப்படுகிறீர்கள். எதைத் துவங்கினாலும் அதைச் செய்து முடிக்கிறீர்கள். அது விழிப்புணர்வற்ற எதிர்மறைச் செயல் அல்ல. கவனத்துடன் அமைந்த செயல்பாடாகும். பொருட்கள், விஷயங்களின் கருணையால் காலம் தள்ளவில்லை. எஜமானத்துவம் உங்களிடம் தோன்றுகிறது.

அதனால்தான் கிழக்கு நாடுகளில் சந்நியாசியைச் சுவாமி என்று அழைக்கிறார்கள். சுவாமி என்றால் தனக்கு எஜமானன் ஆனவர் என்று பொருள். தேவை சார்ந்த விதிமுறையில் இருந்து ஆற்றல் சார்ந்த விதி முறைக்குக் கடந்து செல்வதாகும். தேவை சார்ந்த வாழ்க்கை என்பது

தூங்கிக் கொண்டே நீங்கள் நடப்பது போன்றதாகும். இங்கும் அங்கும் தடுமாறுகிறீர்கள். தடுக்கி இந்த பொருள் மீது விழுகிறீர்கள், அந்தப் பொருள் மீது விழுகிறீர்கள். இருட்டில் தட்டுத் தடுமாறுகிறீர்கள். உங்கள் வாழ்க்கை அர்த்தமற்று இருக்கிறது. முட்டாள் ஒருவனால் சொல்லப்படும் கதையில் சப்தமும், வேகமும் இருக்காது. விஷயம் எதுவுமில்லை. உங்கள் வாழ்க்கை பைத்தியக்காரனின் உளறல் போல் இருக்கிறது. உங்களிடம் எந்த கவிதையும் இல்லை. எந்த பாடலும் இல்லை. உங்களிடமிருந்து எந்த இன்னிசையும் எழவில்லை. நடக்கும் ஒரே காரியம் என்னவென்றால், விழிப்புணர்வற்ற நிலையில் இருந்து விழிப்பு நிலைக்கு மாறுகிறீர்கள். தியானம் விழிப்படைய உதவும் சாவியாக இருக்கிறது. தியானமே ஆற்றல் சார்ந்த விதிமுறைக்கான நுழைவாயிலாக இருக்கிறது.

"தேவை சார்ந்த விதிமுறை என்றால் என்ன?" என்று கேட்கிறீர்கள். அதன் கீழேதான் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்.

ஒருவருடைய சுயசரிதத்தை நான் படித்தேன். அவரது தந்தையார் பயணம் செய்த புகைவண்டி தாமதமாகி விட்டதாக அவர் கூறுகிறார். தான் போகவேண்டிய ஊரை அடைந்ததும் புகைவண்டியிலிருந்து இறங்கினார். வண்டி தாமதமாக வந்ததால் வெளியே இருந்த வாடகைக் கார்கள் எல்லாம் போயிருந்தன. நள்ளிரவு நேரத்துக் கடும் குளிர் அவரை வாட்டியது. வாடகைக் கார் கிடைக்காததால் அவர் ஒரு உணவு விடுதிக்குச் சென்றார். அங்கே கடையை மூடுவதற்கு தயாராகிக் கொண்டிருந்தார்கள். கல்லாவில் இருந்த பெண் புறப்படத் தயாரா னாள். கடைக்கு அவர் வருவதைப் பார்த்த அவள் காபி தயாரித்துக் கொடுத்தாள். அவர் அதை அருந்தினார். அங்கு வேறு யாரும் இல்லை என்பதால் அவளிடம் பேசத் தொடங்கினார். அந்த பெண் அவரைப் பார்த்து, "உங்களுக்கு வாடகைக் கார் கிடைப்பது சிரமம். எனது காரில் ஏன் நீங்கள் வரக்கூடாது? சற்று தொலைவில் உள்ள சாலையில் உங்களை இறக்கி விடுகிறேன்" என்றாள்.

அவர் அவளுடன் சென்றார். அப்படித்தான் அவர்கள் ஒருவர் மீது ஒருவர் காதல் கொண்டனர். சுயசரிதம் எழுதிய மனிதரின் தாயாக அவள் மாறினாள்.

இப்போது கூறுகிறாள், "புகைவண்டி தாமதமாக வராது போயிருந்தால், நான் இந்த உலகில் பிறந்திருக்க மாட்டேன். ஒரு வாடகைக் கார் கிடைத்திருந்தால் நான் இந்த உலகில் பிறந்திருக்க மாட்டேன். அந்த பெண் அவரைத் தனது காரில் கூட்டிச் செல்ல அழைக்காதிருந்திருந்தால் நான் இந்த உலகில் பிறந்திருக்க மாட்டேன்."

எல்லாமே தற்செயலானவை, மக்கள் விழிப்புணர்வு இல்லாது வாழ்கிறார்கள். உங்கள் காதல் தற்செயலானது. உங்கள் வெறுப்பு தற்செயலானது. உங்கள் நட்பு, உங்கள் எதிரி என்று எல்லாமே தற் செயல் நிகழ்வுகள் தான்.

தற்செயல் நிகழ்வுக்கு ஆட்படுவதை நிறுத்துங்கள். உங்களை ஒன்று திரட்டிக் கொள்ளுங்கள். கூடுதல் விழிப்பைப் பெறுங்கள். என்ன நடக்கிறது என்று பாருங்கள். நீங்கள் மெள்ள மெள்ள விழிப்புடன் செயல்படத் தொடங்கும்போது உங்களுக்கு அபாரமான ஆற்றல் தோன்றுவதைக் காண்பீர்கள். அதனால் உங்கள் முழுவாழ்வும் புரிய சுவை பெற்றுவிடும்.

ஒரு கதை சொல்கிறேன்.

எழுபது வயதுக் கோடீஸ்வரர் பதினான்கு வயது கிராமத்து இளம் பெண்ணை மணந்துகொண்டார். அவர் மகிழ்ச்சியுடன் இருந்தார். சில வாரங்களுக்குப் பிறகு அவர் படுக்கையறை விளையாட்டில் இறங்கவில்லை என்றால் அவரைவிட்டு விலகிவிடப் போவதாக அப்பெண் கூறினாள்.

தனது விலையுயர்ந்த லிமோஸின் காரில் அவர் பெருந்தொகையைக் கட்டணமாக வாங்கும் ஒரு சிறப்பு மருத்துவரிடம் சென்றார். அவரை ஆய்வு செய்த மருத்துவர் ஸ்பெர்மாடோவா என்ற மருந்தை ஊசி மூலம் செலுத்தினார். "இதோ பாருங்கள்! உங்கள் ஆண்குறி விரைப்பு அடைய வேண்டுமானால் 'பீப்' என்று சொல்லவேண்டும். விரைப்பு தளர்ந்து பழையநிலை திரும்புவதற்கு 'பீப் பீப்' என்று இருமுறை சொல்ல வேண்டும்" என்றார் மருத்துவர்.

"வெகு அபாரம்!" என்று மகிழ்ந்து போனார் முதியவர்.

"ஆனால் ஒன்று மட்டும் எச்சரிக்க விரும்புகிறேன். நீங்கள் இறப்பதற்கு முன்பு மூன்று தடவை மட்டுமே அது வேலை செய்யும்" என்றார்.

அவர் வீடு திரும்பும் நேரத்தில் யோசித்தார். மூன்று முறை அதைப் பயன்படுத்தும் வரைதான் உயிரோடு இருக்கப் போவதில்லை என்று நினைத்தார். எனவே வீண் ஆனாலும் பரவாயில்லை என்று ஒரு தடவை வாய்ப்பை பயன்படுத்திப் பார்க்க முடிவெடுத்தார்.

"நிஜமாகவே அது வேலை செய்கிறதா இல்லையா என்று பார்த்து விடலாம். யார் கண்டது? மருத்துவர் ஏமாற்று வேலை செய்துமிருக்கலாம். இப்படி நடக்கும் என்பதை நம்பவே முடியவில்லை"

என்று கூறியபடியே அவர் "பீப்!" என்றார். உடனே அந்த மருந்து வேலை செய்தது. அவரது ஆண்குறி மிகுந்த விரைப்புடன் எழுந்து கொண்டது. அதை அவரால் நம்ப முடியவில்லை. அதிவினோதமாகத் தோன்றியது. இதற்கு முன்னர் அவர் இளைஞனாக இருந்த சமயத் திலும் இப்படி ஒரு விரைப்பு ஏற்பட்டதில்லை.

திருப்தியடைந்த அவர் "பீப் பீப்" என்றார். வந்த விதமாகவே விரைப்பு வேகமாகத் திரும்பவும் மறைந்துவிட்டது. அவர் மகிழ்ச்சி யும் எதிர்பார்ப்பு நிறைவும் கொண்டவராக அடக்கத்துடன் சிரித்தார்.

அந்த சமயத்தில் ஒரு சிறிய மஞ்சள் நிற வோக்ஸ்வாகன் அவரது லிமோஸின் காரைக் கடந்து செல்லும்போது "பீப்" என்று ஒலி யெழுப்பிவிட்டு நகர்ந்தது. எதிர்சாரியில் இருந்த சாலையில் சென்ன ஒரு கார் அதற்கு பதில் தருவதுபோல் "பீப் பீப்" என்று ஒலி தந்தது.

விபரீதம் ஏற்பட்டுவிட்ட எச்சரிக்கை உணர்வுடன் தன் காரோட்டியைப் பார்த்து வேகத்தை அதிகரிக்கும்படி கூறினார். முதியவர் முடிந்த அளவு விரைவாக வீட்டை அடைந்து தனது கடைசி வாய்ப்பைப் பயன்படுத்த முனைந்தார். "இனியவளே! எந்த கேள்வியும் கேட்காதே! ஆடைகளைக் களைந்துவிட்டுக் கட்டிலில் படு" என்று கத்தினார்.

அவரது ஆர்வம் அவளுக்குத் தொற்றிக் கொண்டது. அவர் சொல்லிய விதம் செய்தாள். பதட்டத்துடன் அவர் தனது ஆடைகள் அனைத்தையும் கழற்றி எறிந்தார். கட்டிலை அணுகும் முன்னர் "பீப்" என்றார். அதைக் கேட்ட அவர் இளம் மனைவி அதென்ன "பீப் பீப்" என்று உளறல்?" என்று கேட்டாள்.

இன்று இவ்வளவு போதும்.

அத்தியாயம் - ௭

இப்போதும் உங்களால் உங்களது முட்டாள்தனமான விருப்பங்களை எதிர்த்துப் போராடி வெற்றி பெறும் சக்தி தரப் பட்டுள்ளது.

அவற்றை வெற்றிகொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்.

அறிவுத் தெளிவுடனும், ஊக்கத்துடனும், தூய்மையுடனும் இருந்து, கடுங் கோபத்தைத் தவிர்த்து விடுங்கள்.

பொது இடத்திலும், தனிமையிலும் நீங்கள் தவறு செய்ய உங்களை அனுமதிக்காதீர்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக உங்கள் மீது மதிப்பு வையுங்கள்.

நீங்கள் தெரிவிக்க விரும்புவது பற்றிப் பேசாதீர்கள். அதைச் செயலில் காட்டுங்கள். நேர்மையுடன் இருங்கள்.

தோற்கடிக்க முடியாத ஒரு சக்தி உத்தரவு போட்டுச் சாகடிக்கிறது என்பதை மறவாதீர்கள். செல்வ வளங்களும், மரியாதைகளும் எளிதில் கிட்டுகின்றன. அவ்வாறே அவை எளிதில் நழுவிப் போய்விடுகின்றன.

தீமைகளுடன் ஊழ்வினை சம்பந்தப்பட்டுள்ளது. அவை எப்படிப்பட்டவை என்று மதிப்பீடு செய்யுங்கள். அவற்றைச்

சகித்துக்கொண்டு கடுமையாக உழையுங்கள். உங்களிடமுள்ள சிறப்பம்சங்களை மேம்படுத்திக் கொள்ள முடியும்.

தெய்வங்களும் சிலவற்றைத் துறவிகளிடமும் வெளிப்படுத்த குரூரம் கொண்டிருக்கின்றன.

சத்தியமும் தனது அன்பர்களிடம் தவறு செய்துவிடுகிறது.

தத்துவவாதி விவேகத்துடன் அதை அங்கீகாரம் செய்கிறார் அல்லது குற்றம் சாட்டுகிறார்.

ஒருவேளை தவறு வெற்றி பெறுமானால் அவர் விலகிச் சென்று காத்திருக்கிறார்.

தத்துவம், தத்துவவாதி ஆகிய சொற்களை முதலில் உருவாக்கியவரும், அதைப் பயன்படுத்தியவரும் பிதாகோரஸ் ஆவார். தத்துவம் என்றால் விவேகத்தின் மீது நேசம் கொள்ளல் என்று அர்த்தம். தத்துவவாதி என்றால் விவேகத்துடன் நட்புக் கொண்டவர் என்று பொருள். பிதாகோரஸ் காலத்துக்கு முன்பு இவற்றுக்கு வேறு பெயரிட்டுப் பயன்படுத்தினார்கள். Philosophy என்ற தத்துவத்திற்கு Sophia என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. Sophia என்றால் விவேகம் என்று அர்த்தம். Philosopher என்னும் தத்துவவாதியைக் குறிக்க Sophos என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. Sophos என்றால் விவேகமுள்ள மனிதன், துறவி என்று பொருள். அவை அழகான சொற்கள். ஆனால் அவை தவறான மனிதர்களின் கையில் விழுந்து அவர்களுடன் சம்பந்தப்பட்டுவிட்டன. அவை தவறான காலகட்டத்தின் வசம் அகப்பட்டுவிட்டன. வார்த்தைகளுக்கும் நல்ல காலம், கெட்ட காலம் என்று உண்டு. பெருமை நிறைந்த நாட்கள், அவமானமான நாட்கள் என்று உண்டு.

Sophos ஒரு அழகான சொல். அதற்கு முனிவர் (Sage) என்று அர்த்தம். முனிவர் என்பது துறவி என்று பொருள் தரும் சொல் அல்ல. துறவி என்பவர் பாவங்களுக்கு எதிரானவர். அது எதிர்முனை போன்றது. துறவி பாவியல்ல. புனிதமான காரியங்களைத் தேர்வு செய்பவர். பாவத்திற்கு எதிரானவர். பாவி என்பவர் புனிதத்துக்கு எதிராகச் செயல்படும் காரியங்களைத் தேர்வு செய்பவர். அவர்கள் நேர் முனை, எதிர்முனை போல துருவநிலை மாறுபாடு கொண்டவர்கள். பாவி இல்லாமல் துறவி வாழ்ந்திருக்க இயலாது. துறவி இல்லாமல் பாவி வாழ்ந்திருக்க முடியாது. அவை இரண்டும் பங்குதாரர்கள். ஒன்று சேர்ந்து இருந்தால் மட்டுமே அவை பிழைத்திருக்க முடியும். துறவிகள் இல்லாத உலகம் பாவிகள் இல்லாத உலகமாகவும் அமையும். நீங்கள்

நிஜமாகவே பாவிகள் உலகிலிருந்து மறையவேண்டும் என்று விரும்பினால் துறவிகளை இல்லாமல் செய்துவிடுங்கள். உடனே பாவிகள் இருக்க மாட்டார்கள்.

துறவிகளின் வாழ்க்கை பாவிகளை உருவாக்குகிறது. எந்த அளவுக்கு துறவிகளை மதிக்கிறீர்களோ அந்த அளவுக்கு பாவிகளை நிந்திக்கிறீர்கள். பிளவு பெரிதாகிக் கொண்டே போகிறது. விதியின் திருவிளையாடல் என்னவென்றால் அவை இரண்டும் ஒன்றாக வாழ்கின்றன. ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போலிருக்கின்றன. அவை வித்தியாசமானவை அல்ல. அவற்றின் தர்க்கம் வித்தியாசமானதல்ல. அவைகளின் வாய்ப்புதான் வித்தியாசமானது. ஒன்று வாழ்வின் இரவுப் பக்கத்தைத் தேர்வு செய்கிறது. மற்றொன்று பகல் வேளையைத் தேர்ந்தெடுக்கிறது. வாழ்க்கை இரவும் பகலும் சேர்ந்தது. ஒரு முழு நாள் என்பது தனியாக இரவோ அல்லது பகலோ அல்ல. இரண்டும் ஒரு முழுமையின் அங்கங்கள் ஆகும். எனவே இரண்டும் துன்பத்தில் உள்ளன.

உங்கள் பாவிகள் எல்லாம் துயரமானவர்கள். காரணம் அவர்கள் புனிதத்தின் அழகைத் தவறவிடுகிறார்கள். மறுபகுதியின் அழகை அவர்கள் தேர்வு செய்வதில்லை என்ற கருத்தைத் தேர்வு செய்கிறார்கள். உங்கள் துறவிகளும் துயரம் கொள்கிறார்கள். அழிக்க முடியாத ஏதோ ஒன்றை அவர்கள் மனதிற்குள் அடக்கி வைக்கிறார்கள். அது அவர்கள் மனதின் முக்கியமான அங்கமாக இருக்கிறது.

உங்கள் துறவிகளை ஆழ்ந்து கவனித்தால் அவரது விழிப்புணர்வற்ற நிலையில் ஒரு பாவி எங்கோ மறைந்திருக்கிறான் என்பதைக் கண்டு கொள்வீர்கள். பாவியின் நிலையும் இதேதான். ஆழ்ந்து கவனித்தால் துறவி தனது உள்மனதில் எதையோ மறைத்து வைத்திருக்கிறார் என்று கண்டறிவீர்கள். துறவியின் ஆழ்மனம் பாவியின் வெளிமனமாக இருக்கிறது. பாவியின் வெளிமனம் துறவியின் ஆழ்மனமாக அமைகிறது.

முனிவர் இதிலும் சேர்ந்தவர் அல்ல, அதிலும் சேர்ந்தவர் அல்ல. அவர் இப்படியுமல்ல அப்படியுமல்ல. அவர் எதையும் தேர்வு செய்யவில்லை. அவரது முழுமையை அவர் ஏற்றுக் கொண்டுவிட்டார். அவர் முழுமை பெற்றார். இரவும் பகலும் சேர்ந்த முழுநாள் போன்றவர். எப்போதும் அகந்தையைத் தேர்ந்தெடுக்கும் குணத்தை அவர் உதறிவிட்டார். எது இருக்கிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்கிறார். ஒளிமறைவற்ற பூரண உண்மையில் அவர் வாழ்கிறார். விஷயம் எதுவாக இருந்தாலும் வாழ்க்கை ஓட்டத்தில் குறுக்கிடு செய்யும் காரியத்தில் இறங்குவது கிடையாது.

முனிவர் வாழ்வு என்பது மிகவும் அழகான ஒரு விந்தை நிகழ்வு. அவரது முழுமை நிலையே அதற்குக் காரணம். முனிவர் என்பது கச்சிதமான ஒரு முழுவட்டம். அனைத்தும் அவரிடம் அடங்கியுள்ளன. எதையும் அவர் நிராகரிப்பதில்லை. Sophos -ன் இயல்பு அதுதான். அது ஒரு அழகான வார்த்தை. ஆனால் அது தனது நற்பெயரில் இருந்து நழுவிப் போய்விட்டது.

நழுவிப் போகக் காரணம் அது ஆபத்தான வார்த்தையும்கூட. தந்திரசாலி மனிதர்களாலும் அதைப் பயன்படுத்த முடியும். இப்போது பாவியும் அதை உபயோகிக்க முடியும். "நான் இரண்டுமாக இருக்கிறேன். நான் தேர்வு செய்யவில்லை. எது எப்படியிருந்த போதிலும் ...." காரணம் முனிவர் முழுமை பெற்றவர். அவர் இரு நிலைகளும் கொண்டவர். ஒரு பாவியும் முனிவர்போல நடிக்க முடியும். அவர், "இக்கணம் நான் இவ்வாறு இருக்கிறேன். அப்படி நிகழ்கிறது. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? நான் தேர்வு செய்வதை உதறித்தள்ளி விட்டேன். வாழ்வின் முழுமையை நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொல்லக்கூடும்.

முனிவர் இந்த தந்திரக்கார மனிதர்களிடம் இருந்து மாறுபட்ட ஒரு விந்தையாக அமைகிறார். தந்திரசாலி அந்த வார்த்தையைப் பயன்படுத்துகிறார். அந்த வார்த்தை அவரது தந்திர மனதுடன் இணைந்த ஒன்றாக மாறிவிடுகிறது. நீங்கள் எதைச் செய்ய விரும்பினாலும் அதை மறைக்கும் ஒரு மறைப்புக் கவசமாக அது மாறுகிறது. அடியாழத்தில் தேர்வு வாய்ப்பு உள்ளது. ஆனால் மேல்பரப்பில் நீங்கள் இருந்துகொண்டு எதையும் தேர்வு செய்யாதவர் போல நடிக்கிறீர்கள். எதையும் தேர்வு செய்யாத விழிப்புணர்வுடன் வாழ்வதாக நடிக்கிறீர்கள். அது ஒரு நுட்பமான தந்திரம்.

Sophos என்ற வார்த்தை தனது உயர்ந்த பீடத்திலிருந்து விழுந்து Sophist என்று மாறிவிட்டது. அது ஒரு அசிங்கமான வார்த்தை. வேஷதாரி என்று அதற்குப் பொருள். ஒருவர் முனிவர் போல நடிக்கிறார்; ஆனால் உண்மையில் அப்படி இல்லை என்பதே அதன் அர்த்தம். முனிவர் போல நடிப்பவர் துறவியாகவும் இல்லை. அவர் ஒரு பாவி. ஆனால் பாவியாக இருப்பதற்கு ஒரு அழகான காரணம் கற்பித்துக் கொள்கிறார்.

கொலைகாரன் பேசும்போது, "நான் என்ன செய்வது? இயற்கை என்மூலம் கொலையை நடத்த விரும்புகிறது" என்று கூறலாம். திருடன் பேசும்போது "நான் என்ன செய்யட்டும்? இப்படித்தான் இயற்கை என்னை வழிநடத்துகிறது. அதைப் பின்பற்றுகிறேன்"

என்பார். அவருடன் வாதாடுவது சிரமமான காரியம். தனது செயலுக்கு அவர் அழகான காரணம் கற்பிக்கிறார்.

Sophos அகன்று Sophist ஆக மாறிவிட்டது. Sophia என்ற சொல்லுக்கு அதே நிலைதான். விவேகம் என்பது அறிவல்ல. ஆனால் பார்க்க அதுபோலவே இருக்கும். அறிவு விவேகம் போன்று நடிக்கிறது. அது விவேகத்திற்கு எதிரானது. அறிவு எப்போதும் கடன் வாங்கப்பட்ட விஷயமாகும். அது கடன்வாங்கப்பட்டது என்பதால் அது அடிப்படையான உண்மையற்றது.

உங்களிடமிருந்து விவேகம் எழுகிறது. அது உங்கள் மலர்ச்சியாகும். அது சுயபுரிதலாகும். தன்னை அறிதலாகும். நீங்கள் பிரகாசம் பெறுகிறீர்கள். ஒரு மையம் பெறுகிறீர்கள். வேரூன்றப்பட்டுவிட்ட உணர்வு பெறுகிறீர்கள். ஒருங்கிணைப்பு கிடைக்கிறது. இனி பிளவுபட்ட நிலை உங்களிடம் இல்லை. ஒற்றை வடிவம் கொள்கிறீர்கள்.

விவேகம் என்பது உங்களுடைய ஆன்மப் புரட்சியாகும். அறிவு என்பது வெறும் குப்பை. மற்றவர்களிடம் இருந்து அதை நீங்கள் சேகரிக்கலாம். அது உங்களை மாற்றாது. பழைய நிலையில்தான் இருப்பீர்கள். நீங்கள் அழகாக அலங்கரிக்கப்படலாம். நீங்கள் பல அழகிய முகமூடிகளைப் பெறலாம். ஆனால் உங்கள் நிஜமுகம் பழையபடியேதான் இருக்கும். நீங்கள் அறிவைச் சேகரித்துக்கொண்டே போகிறீர்கள். உங்கள் நினைவாற்றல் மேலும் மேலும் செழுமை பெறுகிறத. ஆனால் உங்கள் மனம் எப்போதும் போல வறுமையில் தான் வாடுகிறது. அறிவு விவேகத்தைப் போல நடிக்கலாம். அவை இரண்டும் ஒரே மொழியைத்தான் பயன்படுத்துகின்றன.

உதாரணம் பார்க்கலாம். அல் ஹிலாஜ் மன்சூர் "நானே கடவுள்" என்று அறிவித்தார். அது விவேகமான செயல். அது அவரது அடியாழத்தில் இருந்து வெளிப்பட்டது. அது அவரால் வெளியிடப்பட்ட அறிவிப்பு அல்ல. அவர் மூலம் வெளிப்பட்டதாகும். அதை நீங்கள் கற்றுக்கொள்ள முடியும். நீங்கள் "நானே கடவுள்" என்று அறிவிக்கலாம். அது வெறும் அறிவின் கூச்சல். உங்கள் வாழ்க்கை அதற்கு ஆதரவு அளிக்காது. உங்கள் வாழ்க்கை அதற்கு ஆதாரம் காட்டும் வகையில் அமையாது. உண்மை உங்கள் இயற்கை தொடர்ந்து அதை நிராகரிக்கவே செய்யும். உங்கள் வாழ்க்கை அதற்கு எதிரானதாக இருக்கும்.

இந்தியாவில் அது நடந்திருக்கிறது. கிரீஸ் நாட்டில் நடந்திருக்கிறது. சீனாவில் நடந்திருக்கிறது. காலம் காலமாக அது தொடர்ந்து நடந்து வருகிறது. **அஹம் பிரம்மாஸ்மி** என்று, நானே கடவுள் என்று

உபநிஷதம் தனது பிரத்தியேகச் சொற்களில் கூறுகிறது. அது மட்டு மல்ல, "நானே கடவுள்; எல்லோரும் கடவுள்கள்தான்" என்கிறது.

பிராமணர்களான இந்திய துறவிகள் இந்த அற்புதமான அறிவிப்பை **"அஹம் பிரம்மாஸ்மி"** என்று பல்லாயிரம் ஆண்டு களாகத் திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறார்கள். நானே கடவுள், எல்லோரும் கடவுள்" என்பது இதன் பொருள். தீண்டாமை நாட்டில் இன்றும் நிலவி வருகிறது. மனிதர்கள் என்று அழைக்கப்படும் தகுதி இல்லாதவர்களாக அவர்கள் இருந்து வருகிறார்கள்.

ஒரு பக்கம் கிளிப்பிள்ளை சொல்வதுபோல அழகான உபநிஷத அறிவிப்பைச் செய்கிறீர்கள். ஞானிகள், அறிவாளிகள் போன்றவர்கள் அதை அறிவார்கள். அவர்கள் நிஜமான பிராமணர்கள் **பிரமேத்தை** அறிந்தவரே நிஜமான பிராமணர். பிறப்பால் ஒருவர் பிராமணராகி விட முடியாது. பிறப்பால் பிராமணராக இருக்கும் ஒருவரைக் கண்டால் அவர் வேஷதாரி என்று உணருங்கள். வாழ்வியல் அனுபவங்கள் பெறுவது மூலமே ஒருவர் பிராமணராக முடியும். தன்னை உணர்தல் மூலமே பிராமணராக முடியும். தன்னை உணர்ந்த மக்களிடம் எப்படி தீண்டாமை இருந்து வருகிறது? அது சாத்தியப் படாத ஒன்று. ஆனால் தீண்டாமை இன்றும் இருக்கவே செய்கிறது.

ஒருபக்கம் மக்கள், "எல்லாமே கடவுள்தான். கடவுளைத் தவிர வேறு எதுமில்லை. முழு இயற்கையும் கடவுளோடு கலந்து கிடக்கிறது. ஒவ்வொரு அணுவிலும் கடவுள் நிறைந்திருக்கிறார்" என்று அறிவிக் கிறார்கள். ஆனாலும், மனிதன் என்று சொல்லிக்கொள்ள அருகதை யற்ற நிலையில் இன்னும் ஜனங்கள் இருந்து வருகிறார்கள். அவர் களிடம் உள்ள கடவுள் பற்றி என்ன சொல்வது? அவர்கள் தீண்டத் தகாதவர்களாக இருக்கிறார்கள். தொட்டுவிட்டால் அது குற்றம். தொடுதல் குற்றம் மட்டுமல்ல, கடந்த காலத்தில் அவர்களின் நிழலைத் தீண்டுவதே குற்றமாகக் கருதப்பட்டது. உங்கள் மீது அவர்களின் நிழல் விழுந்துவிட்டால் அது தீட்டாகிவிடும். நிழல்பட்டுவிட்டது என்பதற்காக ஒரு தீண்டத்தகாதவர் தீயில் போட்டுக் கொளுத்தப் பட்டிருக்கிறார்.

அவை எல்லாம் கடந்த காலத்தில் நடந்தவை என்று எண்ணா தீர்கள். அந்த தீயிடல் இன்னும் இருந்து வருகிறது. அவர்களின் பெண்கள் கற்பழிக்கப்படுகிறார்கள். வீடுகள் கொளுத்தப்படுகின்றன. அவர்களின் குழந்தைகள் கொல்லப்படுகிறார்கள். உலகின் தலைசிறந்த ஆன்மீக தேசம் என்று சொல்லிக் கொள்ளும் ஒரு நாட்டில் இவை நடந்தேறிக் கொண்டிருக்கின்றன. இது எவ்வித விவேகம்? இந்த கற்பழிப்பு, கொலை, துன்புறுதல்களுக்குப் பின்னால் பிராமணர்கள்

என்று ஜாதி உரிமை கொண்டாடும் மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வேதங்களைப் பாராயணம் செய்கிறார்கள். உபநிஷதம் படிக்கிறார்கள். ஆனால் அதெல்லாம் அவர்களின் மனதில் உள்ள ஒரு ஒலிப்பதிவு நாடா போன்ற செயல்தான். அர்த்தம் புரியாமல் பாராயணம் செய்கிறார்கள்.

மற்றவர்களின் அனுபவங்களை வெறுமனே நீங்கள் பாராயணம் செய்தால் அது அறிவு சார்ந்த ஒரு செயல். அது உயிரற்ற, அர்த்தமற்ற, உளறலாகும். அதை வைத்து உங்களை நீங்கள் அலங்கரித்துக் கொள்ள லாம். உங்கள் அகந்தையை அதன்மூலம் பலப்படுத்திக் கொள்ளலாம். ஆனால் சத்தியத்தை அறிய மாட்டீர்கள்.

முனிவன் என்று பொருள் தரும் Sophos அகன்றதும் Sophist என்ற வேஷதாரி வெளிப்படும் அசிங்கமான விந்தை நிகழ்கிறது. முனிவன் அகன்றதும் வாழ்க்கையினூடே வேஷதாரி பிரவேசிக்கிறான். அவர் குதர்க்கவாதி விவாதங்களின் பொருட்டே விவாதம் செய்பவர். சத்தியத்தைக் கண்டறியும் ஆர்வமில்லை. அது வெறுமனே மொழி யியல் சார்ந்த, தர்க்கரீதியான, பகுத்தறிவு பூர்வமானது, அது அனுபவமோ, உள்ளுணர்வோ சார்ந்தது அல்ல.

ஒருவர் விவாதங்களிலும், அனுமானங்களிலும் ஈடுபடலாம். நூற்றாண்டுக் காலம் விவாதம் செய்தாலும் சத்தியத்தின் பக்கம் சென்று சேரமுடியாது. காரணம் சத்தியம் என்பது ஒரு தீர்மானமோ, தர்க்கச் செயல்பாடுகள் கொண்ட அபிப்பிராயமோ அல்ல. தர்க்கங்களால் சத்தியத்தைக் கண்டறிய இயலாது. அன்பின் மூலம் சத்தியத்தைக் கண்டறிய வேண்டும். சத்தியத்தைக் கண்டறியும் பாதை தர்க்கம் செய்வது அல்ல. அன்பு செலுத்துவதே ஆகும். விவேகம் என்பது அன்பாகும். அறிவு என்பது தர்க்கமாகும்.

எப்போதெல்லாம் அறிவு "நானே வாயிலாக இருக்கிறேன், சத்தியத்தின் பாதையாக இருக்கிறேன்" என்று வேஷம் போடுகிறதோ அப்போது சத்தியம் உலகில் இருந்து மறைந்துவிடுகிறது.

பிதாகோரஸ் புதிய வார்த்தைகளைக் கண்டறிய வேண்டியிருக் கிறது. அவர் **தத்துவம்** என்ற அழகான சொல்லைக் கண்டுபிடித்தார். அதன் அர்த்தம் விவேகத்தின் மீது நேசம் கொள்ளல் என்பதாகும். அறிவின் மீது கொள்ளும் நேசமல்ல என்பதை கவனத்தில் வையுங்கள். விஷய ஞானம் என்பது அறிவு சார்ந்தது. விவேகம் உள்ளுணர்வு சார்ந்தது. அறிவு மூளையிலிருந்து வருகிறது. விவேகம் மனதிலிருந்து வருகிறது. எனவே அன்பு கொள்ளுங்கள். தர்க்கத்தில் இறங்க வேண்டாம். திட்டமிட்டுச் செயல்பட வேண்டாம்.

கபடமற்று இருங்கள். தந்திரசாலியாக இருக்காதீர்கள். புத்திசாலியாக இருங்கள். அறிவாளியாக அல்லது புத்திசாலியாக இருங்கள்.

மேலும் அவர் தத்துவவாதி என்ற ஒரு சொல்லையும் கண்டு பிடித்தார். விவேகத்தின் சிநேகிதன் என்று அதன் பொருள். யாராவது ஒருவருடன் நீங்கள் விவாதம் செய்யும்போது உண்மையை நிலை நாட்டுவதைக் காட்டிலும் உங்கள் தற்பெருமையை முன்னிலைப் படுத்தவே அதிகம் முயல்வீர்கள் என்பதை எப்போதாவது கவனித்த துண்டா? சில சமயங்களில் உங்களுடைய விவாதத்தில் உண்மை இல்லை என்று அறிந்தாலும் அதை ஏற்றுக்கொள்ள உங்களால் முடிவ தில்லை. காரணம் அது உங்கள் தற்பெருமையைப் பாதித்துவிடும். உங்கள் அபிபிராயம் அது என்று நீங்கள் விவாதிக்கிறீர்கள். அதுதான் உண்மை என்று வாதிடவில்லை. பிறருடைய வாதங்களுக்கு எதிராக வாதிடுகிறீர்கள். காரணம் அது **அவர்களுடைய** அபிப்பிராயம் என்பதற்காக வாதிடுகிறீர்கள். அது உண்மையல்ல என்பதற்காக நீங்கள் வாதிடவில்லை.

உண்மையை நிலைநாட்ட விவாதங்கள் எழவில்லை. அகந்தைப் பயணங்களின் காரணமாகவே அவை தோன்றுகின்றன. பிறகு அது குதர்க்கவாதமாகி மோசமான நிகழ்வாகி விடுகிறது.

நீங்கள் ஒரு பெண்ணை நேசிக்கிறீர்கள். அது ஒரு அழகிய அனுபவம். ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே உண்டாகும் காதலில் அபாரமான உண்மை இருக்கிறது. அதன் சுயமான நறுமணம் இருக்கிறது. ஒருவர் நலனில் ஒருவர் அக்கறை காட்டும் பிரார்த்தனை இருக்கிறது. அது வாழ்வின் நம்பமுடியாத ஒரு விந்தையாகும். அது விபசாரியிடம் செல்வது அது போன்றதல்ல, உணர்வு பூர்வமாக அது முற்றிலும் வேறானது. விபசாரி என்பவள் மோசமான ஒரு வஸ்து. அன்புக்குரியவள் தெய்வீகமான பொருள்.

தத்துவம் என்பது உங்கள் அன்புக்குரிய பெண்ணுக்கு நிகரானது. குதர்க்கவாதம் என்பது விபசாரி போன்றது. விபசாரம் போன்ற ஒரு செயலையே குதர்க்கவாதி செய்கிறார். அவர்கள் யாருக்காகவும் வாதாடத் தயாராக இருக்கிறார்கள். யார் பணம் தருகிறார்களோ அவர் களுக்காக வாதாடுகிறார்கள். நீங்கள் குதர்க்கவாதிக்குப் பணம் தந்தால் அவர் உங்களுக்காக வாதாடுவார். வேறு யாராவது ஒருவர் கூடுதல் பணம் தந்தால் அவருக்காக வாதிடுவார். யாராவது நிறையப் பணம் தருவதாக இருந்தால் உங்களுக்கு எதிராவும் அவர் வாதாடத் தயாராக இருப்பார்.

நான் கேள்விப்பட்ட ஒன்றைச் சொல்கிறேன்.

**தே**வாலயத்தில் வழிபாட்டுக்கூட்டம் ஞாயிறு தோறும் நடக்கும் போதெல்லாம் அங்கு வரும் செல்வாக்கான, பணக்கார முதியவர் ஒருவரைப் பார்த்து பாதிரியார் அமைதியிழந்து தடுமாறுவார். பாதிரியாருக்கு நேர் எதிரே முதல் வரிசையில் அமரும் அந்த முதியவர் சில வினாடிகளில் தூங்கிப் போவார். பலமாகக் குறட்டை விடுவார். அவருக்கு எதிரே அமர்ந்து பெரியவர் குறட்டை விடுவது பாதிரியாருக்கு இடையூறாக இருந்தது.

பாதிரியார் இடையூறுக்கு ஆளானார், ஆனாலும் என்ன செய்வது? முதியவர் செல்வந்தர். "நீங்கள் செய்வது சரியல்ல" என்று அவரிடம் கூற முடியாது. எனவே அதற்கு ஒரு வழி கண்டுபிடித்தார். ஒரு சிறுவனை முதியர் தன்னுடன் அழைத்து வருவார். அவன் அவருடைய கொள்ளுப் பேரன். பாதிரியார் அந்த சிறுவனை அழைத்து, "நான் உனக்கு ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் **நான்கு அணா** தருகிறேன். எப்போதெல்லாம் பெரியவர் தூங்கி விழுகிறாரோ அப்போது அவரை உசுப்பி எழுப்பிவிடு" என்று கூறினார். பையன் மிகவும் சந்தோஷமடைந்தான். சொன்னபடியே அவன் செய்தான். பாதிரியார் திட்டம் நன்கு வேலை செய்தது.

மூன்று ஞாயிற்றுக்கிழமைகள் பிரச்சினை இல்லாது நகர்ந்தன. எப்போதெல்லாம் பெரியவர் குறட்டை விடுகிறாரோ அப்போது சிறுவன் அவரை உசுப்பி எழுப்பிவிட்டு விடுவான். ஆனால் நான்காவது ஞாயிற்று அன்று முதியவர் குறட்டை விடத் தொடங்கினார். பாதிரியார் காத்திருந்தார். சிறுவனோ அமைதியாக உட்கார்ந்திருந்தான். பிரார்த்தனை முடிந்த பிறகு அவர் சிறுவனை அழைத்து "என்ன ஆயிற்று? நான் சொன்னதை மறந்து போய்விட்டாயா?" என்றார்.

அதற்குச் சிறுவன், "மறக்கவில்லை. இப்போது முதியவர் எனக்கு ஒவ்வொரு ஞாயிறு அன்றும் ஒரு ரூபாய் தருகிறார். "நீ என்னை இடைஞ்சல் செய்யாதிருந்தால் ஒரு ரூபாய் தருவேன்" என்று சொல்கிறார்" என்றான்.

குதர்க்கவாதிகளின் நிலையும் இதுதான். அவர்கள் யாருக்காகவும் வாதாடுவார்கள். யார் பணம் தந்தாலும் அவர்களுக்காக வாதாடு வார்கள். அவர்கள் விவாதம் செய்வதில் வல்லவர்கள். ஆனால் விவாதத்தை வைத்துக்கொண்டு விவேகத்தை எதுவும் செய்துவிட முடியாது.

புத்தர் வாதம் செய்பவரல்ல. ஏதோ ஒரு அனுபவத்தை அவர் அடைந்திருக்கிறார். அவர் தர்க்கம், மொழி போன்றவற்றைப் பயன் படுத்தித் தனது அனுபவத்தை வெளிப்படுத்துகிறார். அதை நிரூபிக்க

முயல்வதில்லை. மொழி, மற்றும் தர்க்கம் மூலம் அவர் அனுபவத்தைப் பெறவில்லை. முதலில் தியானம் மூலம் அந்த அனுபவத்தை அடைந்தார். பிறகு தர்க்கம், மொழி போன்றவை மூலம் அதை வெளிப்படுத்தி விளக்கினார்.

ஒன்றை விளக்கி வெளிப்படுத்த மொழி, தர்க்கம் போன்றவை மிகவும் சரியான கருவிகள். ஆனால் அவை படைப்பாற்றல் பெற்றவை அல்ல. விளக்கிச் சொல்ல மட்டுமே ஏற்றவை. சத்தியம் முதன்மையானதாக இருக்க வேண்டும். அப்போதுதான் கருவிகள் பயன்படும். ஆனால் வெளியில் இருந்து பார்க்கும்போது யார் தனது அனுபவங்களை வெளிப்படுத்துகிறார்கள். யார் சொற்களை வைத்து விளையாடுகிறார்கள் என்று கண்டறிவது கடினம். எவ்வித சுயானுபவமும் பெறாதவர்களுக்கு அதைக் கண்டறிவது மிகவும் கடினம்.

பிதாகோரஸ் இந்தியாவுக்கு வந்து சிறந்த ஞானிகளைச் சந்தித்தார். நல்ல பிராமணர்களைச் சந்தித்தார். முதல்முறையாக அறிவாளிகள் எப்படி இருப்பார்கள் என்று கண்டறிந்தார். பல ஆண்டுகள் தியானம் பயின்று ஞானமடைந்து கிரீஸ் நாட்டுக்குத் திரும்பிச் சென்றார். அங்கு என்ன நடந்திருந்தது என்று கண்டறிந்தார். அவரது அன்புக்குரியவள் மறைந்து போயிருந்தாள். விபசாரிதான் எஞ்சியிருந்தாள்.

அவர் இந்த புதிய வார்த்தைகளைக் கண்டுபிடித்தார். அந்த வார்த்தைகள் அழகானவை. அவை மீண்டும் அதே பழைய வலையில் விழுந்துவிட்டன. பல்கலைக் கழகங்களுக்கு சென்றால் கிழக்கு அல்லது மேற்கு நாடுகளில் பிதாகோரஸின் கருத்துப்படியான தத்துவம் இல்லை என்று அறிவீர்கள். பிதாகோரஸ் பயன்படுத்திய சொற்களின் அடிப்படையிலான தத்துவவாதி பல்கலைக்கழகங்களில் இல்லை. பல்கலைக்கழகங்களில் மீண்டும் குதர்க்கவாதம் தென்படுகிறது. தத்துவவாதிகளும், கல்லூரித் தத்துவப் பேராசிரியர்களும் மீண்டும் குதர்க்கவாதிகளாகிறார்கள். எனவே, தத்துவம் தனது மரணப் படுக்கையில் கிடக்கிறது. எந்த பல்கலைக்கழகத்திற்குச் சென்றாலும் இதைக் காணலாம். ஆயிரக்கணக்கான மாணவர்கள் அறிவியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், புவியியல் போன்ற பாடங்கள் பயிலப் பல்கலைக்கழகங்களுக்கு வருகிறார்கள். எத்தனை மாணவர்கள் தத்துவம் பயில வருகிறார்கள் என்று கேட்டுப் பாருங்கள். விரல் விட்டு எண்ணும் அளவுகூட அவர்கள் இருக்க மாட்டார்கள்.

நான் தத்துவம் பயிலும் மாணவனாக இருந்தபோது வகுப்பில் மூன்று மாணவர்கள் மட்டுமே இருந்தார்கள். நான் ஒருவன். மற்ற

இருவரும் பெண்கள். வெறுமனே மூன்று மாணவர்கள். ஆனால் அந்த துறைக்குப் பத்து பேராசிரியர்கள். ஒவ்வொரு மாணவருக்கும் 3 1/3 பேராசிரியர்கள். அந்த இரண்டு பெண்களுக்கும் தத்துவத்தில் ஆர்வ மில்லை. அவர்களின் முழு விருப்பமும் ஒரு பட்டம் பெறுவது மட்டும்தான். ஒரு நல்ல கணவனைப் பெற அது உதவுகிறது. அவர் களுக்கு வேறு எந்த பாடப்பிரிவிலும் அனுமதி கிடைக்கவில்லை. அதனால்தான் அவர்கள் தத்துவத்தைத் தேர்வு செய்தார்கள். அவர் களுக்கு வேறு எந்த ஆர்வமும் இல்லை.

இது அடிக்கடி நிகழ்கிறது. எனது பேராசிரியகளில் ஒருவர் மிகவும் ஆசாரமானவர். பெண்களைப் பார்க்க அவர் விரும்பவில்லை. ஆனால் இப்போது வகுப்பில் இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். அவர் கண்களை மூடியபடி பாடம் நடத்தவேண்டும். அந்த பெண்கள் பெரும்பாலும் வகுப்புக்கு வரவே மாட்டார்கள். எனவே நான் மட்டும் வகுப்பில் இருப்பேன். அவர் கண்ணை மூடியபடி நிற்பார். நான் மூடிய கண்களுடன் பாடம் படிக்கக் கற்றுக் கொண்டேன். அவர் பேசிக் கொண்டிருப்பார். நான் தூங்கிக் கொண்டிருப்பேன்.

ஒருநாள் அவர் அதை கண்டுபிடித்து விட்டார். முதலில் அவர் நானும் ஒரு ஆசாரமான மாணவன் என்று நினைத்துவிட்டார். நானும் பெண்களைப் பார்க்க விரும்பவில்லை என்று கருதினார். ஒரே இனத்தைச் சேர்ந்தவன் கிடைத்தானே என்று அவர் மகிழ்ந்துபோனார். அவரைப் பார்த்து பல்கலைக்கழகமே சிரித்தது. "அது மிகவும் நல்லது தான். குறைந்தபட்சம் ஒருவனாவது இருக்கிறானே...." என்று அவர் எண்ணினார். ஒருநாள் அந்த இரண்டு பெண்களும் வகுப்பில் இல்லை என்று கண்டறிந்தார். எனவே கண்களைத் திறந்தார். அப்போது நான் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தேன். அவர் என்னிடம், "என்ன விஷயம்?" என்று கேட்டார். நீங்கள் கற்றுத் தருவதில் எந்த தத்துவமும் இல்லை என்பதுதான் விஷயம். நன்றாக உறங்குவது நல்லதும், பயனுள்ள செயலுமாக இருக்கும் என்று கருதுகிறேன்" என்றேன்.

அதுதான் உண்மையான நிலை. அந்த மனிதர் நேர்மையானவர். முதலில் அவர் அதிர்ந்துபோனார். பிறகு நிஜத்தை உணர்ந்துகொண்டார். காரணம் அன்றைய தினம் அவர் பதஞ்சலி பற்றியும் **சமாதி** பற்றியும் பேசினார். நான் அவரிடம், "சமாதி என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? எப்போதாவது அதை அனுபவப்பூர்வமாக அறிந்திருக் கிறீர்களா? நீங்கள் சொல்வது எல்லாம் படித்துத் தெரிந்து கொண்டது தான். விவேகம் மூலம் வந்தது அல்ல. நீங்கள் சொல்வதெல்லாம் இயந்திரத்தனமான பேச்சு. அதை ஒரு கணினி செய்துவிட முடியும். நீங்கள் செய்வதை விடவும் சிறப்பாகவும், நேர்த்தியாகவும் செய்து

விட முடியும். **சமாதி** பற்றி நீங்கள் படித்திருக்கிறீர்கள். **சமாதி** பற்றிப் படிப்பதும் **சமாதி** பற்றி அறிந்துகொள்வதும் ஒரேவகையானது அல்ல. ஒரு குருடன் ஒளியைப் பற்றி படிப்பதும், அதைப் பேசுவதும் போன்ற செயலாகும். அவனால் ஒளியைப் பற்றி அற்புதமான ஆய்வுக் கட்டுரையே எழுத முடியலாம். ஆனால் ஒளி பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது. அவனுக்குக் கண்கள் இல்லை.

**இ**து உலகம் முழுவதும் நடந்து கொண்டிருக்கிறது. காரணம் மக்களுக்கு உண்மையின் மீது அக்கறை இல்லை. காரணம் தத்துவம் மீண்டும் குதர்க்கவாதமாக மாறிக்கொண்டு வருகிறது. இந்த நூற்றாண்டின் சிறந்த தத்துவவாதிகள் எல்லாம் மொழி வல்லுனர்களாக, நேர்மறை எண்ணம் கொண்ட தர்க்கவாதிகளாக, தர்க்கத்தைக் கூறு போடுபவர்களாக மட்டுமே தென்படுகிறார்கள். பெர்ட்ராண்ட் ரஸ்ஸல், ஜி.இ. மூர்ஸ், லூட்விக் விட்ஜென்ஸ்டின் போன்றவை தத்துவ வாதிகள். சிறந்தவர்களின் பெயர்கள் அவை. ஆனால் எல்லோரும் மொழியுடன் சம்பந்தப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். கடவுள் உண்டா இல்லையா என்பதில் அவர்களுக்கு ஆர்வமில்லை. **கடவுள்** என்ற சொல் எத்தனை வகைகளில் பயன்படுத்தப்படுகிறது. அதன் பயன்பாடு மதிப்புள்ளதா இல்லையா என்பதே அவர்களின் விசாரமாகும். கடவுள் என்ற சொல்லைப் பயன்படுத்தலாமா, பயன்படுத்தக் கூடாதா, அப்படிப் பயன்படுத்தினால் அது என்ன பொருளைச் சுமந்து வருகிறது என்றெல்லாம் ஆராய்ந்தார்கள். கடவுளின் உண்மைத்தன்மை பற்றி ஆய்வில் அவர்கள் சம்பந்தப்படவில்லை. **கடவுள்** என்ற சொல்லுடன் மட்டுமே சம்பந்தப்பட்டிருந்தார்கள். அவர்கள் ஆய்வு செய்தார்கள்.

**அன்பு** என்ற வார்த்தையை ஆராயும் ஒரு மனிதரைப் பற்றி யோசித்துப் பாருங்கள். அவரை நீங்கள் என்று அழைப்பீர்களா? அன்பை அனுபவித்து உணரவேண்டும். வாழ்ந்து பார்க்க வேண்டும். ஒரு தத்துவம் நிஜமான தத்துவமாக இருந்தால், அது வாழ்க்கைத் தத்துவமாக இருக்க வேண்டும். ஒரு தத்துவம் அதன் பெயரை வைத்து மதிப்புப் பெறுவது மேலோட்டமானதாகும். அது ஆய்வை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டும். விவாதத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கலாகாது.

மறுபடியும் **தத்துவம்** என்ற வார்த்தை தாழ்ந்த நிலைக்குப் போய்விட்டது. ஒரு புதிய வார்த்தை தேவைப்படுகிறது. உதாரணமாக, தத்துவம் என்ற அர்த்தம் தரும் Philosophy வார்த்தைக்குப் பதிலாக Philousia வார்த்தையை உபயோகித்தால் நன்றாக இருக்கும். Ousia என்ற சொல் சாரம் என்ற அர்த்தம் தரும் வேர்ச்சொல்லில் இருந்து வந்ததாகும். Philousia என்ற சொல் சாரம் அல்லது இருப்பை விரும்பு

கிறவர்கள் என்று பொருள்படுகிறது. அவர் அது பற்றி வெறுமனே சிந்திக்க விரும்பவில்லை. அனுபவித்து, உணர்ந்து, பார்த்து அறிய எண்ணுகிறார்.

**தரிசனம்** என்ற இந்தியத் தத்துவ வார்த்தையின் நிஜமான பொருள் இதுதான். **தரிசனம்** என்றால் பார்த்து அறிதல் ஆகும். இருபத்தைந்து நூற்றற்டுகளுக்கு முன்னர் பிதாகோரஸ் செய்த அதே செயலை இப்போது செய்தால் நல்லது. அவர் Sophia என்ற சொல்லை Philosophy என்று மாற்றினார். இப்போது Philosophy என்ற சொல்லை மீண்டும் மாற்ற வேண்டும். அதற்கு நான் Philousia என்ற சொல்லைப் பரிந்துரைக்கிறேன். சாரத்தைப் பார்த்து அனுபவிக்க ஆசைப்படுதல். வெறுமனே அது பற்றிச் சிந்தித்தல் அல்ல.

இரண்டாம் பகுதியான சூத்திரம், தூய்மைப்படுத்துதல் தொடர்கிறது. முந்தைய சூத்திரம் இவ்வாறு கூறுகிறது.

> **உங்களால் முடிந்ததை அவருக்குச் செய்யுங்கள். கடுமையான ஒரு சக்தி தேவைசார்ந்த விதிமுறைகளைக் கட்டுப்படுத்துகிறது.**

மனிதனின் செயல்பாடுகளுக்கு இரண்டு நோக்கங்கள் இருப்பதை பிதாகோரஸ் கண்டறிந்தார். முதலில் தாழ்ந்த நிலையிலான தேவை சார்ந்த நோக்கம். ஆற்றல் எனப்படும் உயர்நிலை சார்ந்த நோக்கம். ஆனால் அந்த இரண்டும் தாவோ, தர்மம், டோரா, லோகாஸ் என்ற அடிப்படை விதிமுறைகளைச் சார்ந்திரப்பதை வெளிப்படுத்துகின்றன. கிழக்கு நாடுகளில் நாம் முதலாவதை **பிரகிருதி** என்றும், இரண்டாவதை **புருஷ்** என்றும் கூறுகிறோம்.

இந்திய தேசத்து முனிவர்களுடன் அமர்ந்து இருந்தால் நிறையத் தெரிந்துகொள்ளச் சாத்தியம் உண்டு. இந்த இரண்டு விதிமுறைகள் பற்றியும் பிதாகோரஸ் தெரிந்துகொண்டார். அவர் அதை அனுபவப் பூர்வமாக உணர்ந்து அறிந்தார். ஆனால் முதல் ஒளிரேகை ஞானம் பெற்ற இந்திய குருவினிடம் சேர்ந்திருக்கும் போதுதான் தோன்று கிறது.

**பிரகிருதி** என்பது தாழ்ந்தநிலை. லௌகீக இயல்பு. கண்ணால் கண்டறியக் கூடியது. **புருஷ்** என்பது உணர்வு, விழிப்பு நிலை. உயர்ந்த நிலை. பிரகிருதி வட்டத்தின் வெளிப்பரப்பு போன்றது. புருஷ் என்பது வட்டத்தின் மையம் போன்றது. பிதாகோரஸ் தனது சொந்த வார்த்தை களில், முதலாவது அம்சத்தை தேவை சார்ந்த விதிமுறை என்கிறார். தாழ்ந்த நிலைக்கு நீங்கள் செல்லும்போது தேவை சார்ந்த விதிமுறை அதிகம் வேலை செய்கிறது. உயர்ந்த விழிப்பு நிலைக்கு நீங்கள் சென்றால் தேவை சார்ந்த விதிமுறையின் செயல்பாடு குறைவாக

இருக்கும். ஆற்றல் சார்ந்த விதிமுறையான விடுதலை சார்ந்த விதி முறையின் செயல்பாடு அதிகமாக இருக்கும்.

தாழ்ந்த நிலையில் செயலும், விளைவும் என்பது வெறும் விதி முறைதான். ஏனென்றால், அறிவியல் செயலையும், விளைவையும் மட்டுமே அங்கீகரிக்கிறது. தெய்வீக நிலையை அது அங்கீகரிப்ப தில்லை. அது விழிப்புநிலையை அங்கீகரிப்பதில்லை. அதன் வழி முறைகள் அங்கீகாரம் அளிக்காமல் தடைப்படுத்துகின்றன. வாழ்க்கை என்ற ஏணிக்கு பல படிகள் உள்ளன. அறிவியல் ஏணியின் கடைசிப் படியில் பிணைக்கப்பட்டுள்ளது. ஏணி உங்களுக்குள் இருக்கிறது. ஒவ்வொரு மனிதனிடமும் சிறிய அளவில் இருக்கிறது.

உங்கள் உடல் **பிரகிருதியாகும்.** அது தாழ்நிலை. உங்கள் உடல் தேவை சார்ந்த விதிமுறையைப் பின்பற்றுகிறது. புத்தருடைய உடலாக இருந்தாலும் அது தேவை சார்ந்த விதிமுறையைத்தான் பின்பற்றும். இளமைக்குப் பிறகு அவர் முதுமையடைந்தார். முதுமைக்குப் பிறகு அவர் இறந்தார். புத்தராக இருந்தாலும் இயற்கை வித்தியாசமாக நடக்காது. அது உறுதியான விதிமுறை. அதில் விதிவிலக்குக்கு இட மில்லை.

அதனால்தான் ஏசு ஒரு கன்னித் தாய் வயிற்றில் பிறந்திருக்க முடியாது என்று கூறுகிறேன். காரணம் பிறப்பு என்பது தேவை சார்ந்த தாழ்நிலை விதிமுயையாகும். அதற்கு யாரும் விதிவிலக்காக இருக்க இயலாது. அவர் ஒரு கபடமற்ற பெண்ணுக்குப் பிறந்திருக்கலாம். கன்னித்தன்மை ஒரு குறியீடு என்றால் அது கச்சிதமான நிஜம். அது மேரி மாதாவின் கபடமற்ற தன்மை குறித்த கவித்துவமான வெளிப்பாடு என்றால், அது கச்சிதமான நிஜம்தான். ஆனால் நீங்கள் அதை ஒரு உடலியல் சார்ந்த நிகழ்வு என்று நம்ப விரும்பினால், மேரி ஒரு கன்னி என்று கருதினால், நீங்கள் ஒரு முட்டாள். பிறப்பு தேவை சார்ந்த விதிமுறைப் பின்பற்றி நடக்கிறது.

மறுபிறப்பு என்பதும் இதுபோன்றதுதான். ஒருதடவை ஏசு இறந்துவிட்டால் மீண்டும் பிறக்க வாய்ப்பு இல்லை. காரணம் தேவை சார்ந்த விதிமுறை விதிவிலக்குக்கு அனமதிக்காது. மறுபிறப்பு எடுப்பது மூலம் வாழ்க்கையில் மரணமே இல்லை என்று நீங்கள் எண்ணினால் ஏதோ தவறு உங்களிடம் உள்ளது. அது தொடர்ந்து இருந்து வருகிறது. பூதவுடல் மட்டுமே சாகிறது. சூட்சும உடல் அழிவற்றது என்று நம்புகிறீர்கள். மறுபிறப்பு என்று தெய்வீக மறு ஜனனம் என்று நீங்கள் கூறினால், அது தெளிவான நிஜம். ஆனால் சரித்திர நோக்கில் அது உண்மையல்ல.

இது எல்லோருக்கும் பொருந்திவரக் கூடியதாகும்.

மகாவீரருக்கு வியர்த்ததே கிடையாது என்று ஜைனர்கள் கூறு கிறார்கள். அது சாத்தியமில்லை. உங்கள் உடலில் அறுபத்தைந்து சதவீதம் நீர் உள்ளது. அதிகப்படியான சூட்டைத் தவிர்க்க உடல் மேற்கொள்ளும் ஒரு வழிமுறைதான் வியர்த்தலாகும். உங்களுக்கு வியர்க்கும்போது உங்கள் உடல் ஒருவித குளிர்சாதன அமைப்பை உருவாக்குகிறது. வியர்க்கும்போது தண்ணீர் மேல்புற தோல் பரப்புக்கு வருகிறது. பிறகு தண்ணீர் ஆவியாகிறது. அது ஆவியாக வெப்பம் தேவை. எனவே உடலின் வெப்பத்தை அது உறிஞ்சிக் கொள்கிறது. உங்கள் உள்ளுடல் குளிர்ந்த நிலையில் இருக்க ஆரம்பிக்கிறது. இது ஒரு இயல்பான நிகழ்வு. அப்படி நடக்கவில்லை என்றால் உங்கள் உடல் பிளாஸ்டிக் அல்லது எஃகு உலோகத்தால் ஆனதாகவே இருக்க முடியும். அப்படி இருந்தால் அது முற்றிலும் மாறுபட்ட ஒரு விஷயம்.

இந்தியாவின் வெப்பமான பகுதியான பீகாரின் புழுதிச் சாலை களில் மகாவீரர் நிர்வாணமாக நடந்து சென்றார். இன்றும் அச் சாலைகள் புழுதிபடர்ந்தே காணப்படுகின்றன. இருபத்தைந்து நூற் றாண்டுகளுக்கு முன்பு எப்படியிருந்திருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். அவருக்கு வியர்த்திருக்காதா? வியர்க்காது போயிருந்தால் அவர் பிழைத்திருக்க முடியாது. இறந்து போயிருப்பார். வியர்த்தல் என்பது உயிர் பிழைத்தலின் ஒரு இயக்க அங்கம்.

ஆனால் மதவாதிகள் அம்மதத்தின் ஸ்தாபகர் வித்தியாசமானவர் என்று காட்ட விரும்பினார்கள். ஒருவகையில் அவர்கள் பாதை சரியானதுதான். எவ்வகையில் அது சரி? மகாவீரர், ஏசு, புத்தர் போன்றவர்கள் ஆற்றல் சார்ந்த விதிமுறை என்னும் மற்றொரு விதி முறையையும் எட்டியிருந்தார்கள். ஆனால் அவர்கள் உடல் அதைப் பின்பற்றவில்லை. அந்த உடல் நிலம் சார்ந்த ஒன்று. புவி சம்பந்தப் பட்ட விதியையே அது பின்பற்றும். அவர்களது மனம் ஆற்றல் சார்ந்த உலகில் இருந்தது. **புருஷ்** என்ற உலகில் இருந்தது. **பிரகிருதி** என்ற உலகில் இல்லை. அவர்களின் விழிப்புநிலை முழுமையான விடுதலை பெற்றிருந்தது. அவர்களின் விழிப்பு நிலைக்கு எல்லை கிடையாது. அவர்களின் விழிப்புணர்வை நாம் கண்டுணர இயலாது.

நாமும் அந்த சிகரங்களை, உச்சத்தை, பேரின்பத்தை எட்டாத வரையில் அந்த உடலைத்தான் பார்க்க இயலும். நாம் அவர்களின் உடல் பற்றிய கட்டுக் கதைகளை உருவாக்குகிறோம். அவர்களின் உடல் ஆற்றல் சார்ந்த விதிமுறையின் ஒரு அங்கம் என்று கருதுகிறோம். அப்படி ஒருபோதும் நடப்பதில்லை. உருவக அணி நன்றாக இருக்

கிறது. கட்டுக்கதை அழகானது. ஆனால் அதை வரலாற்றுரீதியாக நிரூபிக்க முயல வேண்டாம்.

மகாவீரரின் பெருவிரலை ஒரு பாம்பு கடித்தபோது ரத்தத்திற்குப் பதிலாக விரலில் இருந்து பால் வழிந்தது என்று ஜைனர்கள் கூறுகிறார்கள். அது மிகவும் விபரீதமான விஷயம். ரத்தத்திற்குப் பதிலாக மகாவீரரின் உடலில் பால் ஓடிக் கொண்டிருந்தது என்றால், பால் வெகுகாலம் பாலாகவே இருக்காது. அது தயிராக மாறிவிடும். பாம்பு கடித்தல் நடப்பதற்கு முன்பே அவர் தயிரை வழிய விட்டிருக்க வேண்டும்.

கவித்துவமான வெளிப்பாடு என்று பார்த்தால் அது அழகானது. பால் என்பது அன்பின் குறியீடாக எளிமையாகக் கூறப்பட்டுள்ளது. ஒரு பெண்ணுக்குக் குழந்தை பிறந்ததும் அவள் மார்பிலிருந்து பால் சுரக்க ஆரம்பிக்கிறது. அது அன்பின் வெளிப்பாடு. பால் அன்பைக் காட்டும் ஒரு அழகான குறியீடு. விஷப்பாம்பு கடித்தாலும் மகாவீரர் அவரிடமிருந்து பாம்பு அன்பைத் தவிர எதையும் பெறமுடியாது என்று கதை கூறுகிறது, அவ்வளவுதான். அதை வெளிப்படுத்த அக்கதை எழுதப்பட்டது. கடிவாயில் இருந்து ரத்தம் வரவில்லை. அதற்குப் பதிலாக பால் வந்தது என்று கூறப்பட்டது. முட்டாளாக இருக்காதீர்கள். உடல்ரீதியாகவே பால் வந்தது என்று அதை நிரூபிக்க முயலாதீர்கள்.

அந்த உடல் பூமியின் ஒரு அங்கமாக உள்ளது. விழிப்புநிலை வானத்தின் அங்கமாக இருக்கிறது. அது நிஜமாகவே ஆகாயம் சார்ந்தது.

மனிதன் அந்த இரண்டு விதிமுறைகளின் சங்கமம் ஆவான். தேவை சார்ந்த விதிமுறை, ஆற்றல் சார்ந்த விதிமுறை. **புருஷ்** மற்றும் **பிரகிருதி.** பந்தம், விடுதலை என்று அவை இருவகையானவை. பூமி - வானம், உடல் - உயிர், பார்க்க முடிவது, பார்க்க இயலாதது, திடப் பொருள், சூட்சமப் பொருள் என்று பிரிவுபடுகிறது. மனிதன் ஒரு சந்திப்புப் புள்ளி. அவனது புகழுக்கு அதுதான் காரணம். அவன் துன்பத்துக்கும் அதுவே காரணம். சரியாகப் புரிந்து கொள்ளாவிட்டால் அதுதான் துயரத்திற்கு வழியாகிறது. ஏனெனில், நீங்கள் இரண்டு பெரிய சக்திகளின் சந்திப்புப் புள்ளியாக இருக்கிறீர்கள் என்பதைப் புரியாது போனால், எதிர் துருவங்களின் சந்திப்பு என்று புரியாது போனால் வருத்தம், துன்பம் போன்றவற்றில் நீங்கள் உழல்வீர்கள். இரண்டாகப் பிளவுபட்டதாக நினைப்பீர்கள். இரண்டு சக்திகள் வெவ்வேறு பக்கம் இழுப்பதாக எண்ணுவீர்கள். உங்கள் வாழ்க்கை பெரும் துயரமாகிவிடும். எதைச் செய்யலாம் இதையா அதையா என்று தடுமாறுவீர்கள்.

பூமி உங்களைக் கீழ்நோக்கி இழுக்கிறது. வானம் மேலே இழுக்கிறது. உடல் என்னைப் "பின்தொடர்" என்கிறது. உயிர் "என்னுடன் வந்து சேர்" என்கிறது. அவைகளின் பாதைகள் வெவ் வேறானவை. ஒரே சமயத்தில் இரண்டையும் பின்பற்ற முடியாது. அது சாத்தியமில்லாத ஒன்றாகத் தோன்றுகிறது. நீங்கள் உடலைப் பின் பற்றினால் குற்ற உணர்வுக்கு ஆளாவீர்கள். உங்கள் உயிரின் ஆழ்ந்த குரலை நீங்கள் கவனித்து போவீர்கள் என்பதால் குற்றஉணர்வு வருகிறது. அது இன்னும் சிறு குரல் ஒலியாகவே இருந்து வருகிறது. அதை நீங்கள் பின்பற்றினால் உடலை வருத்துவதாக உணர்வீர்கள். உடல் போஷிக்கப்படாது போனதாக உணர்கிறது. அன்பு காட்டப் படாமல் போனதாக நினைத்து கலகம் செய்யத் தொடங்குகிறது.

நீங்கள் எதைத் தேர்வு செய்தாலும்.... உடலை நீங்கள் தேர்ந் தெடுத்தால் உயிர் மூச்சுத் திணறல் கொள்கிறது. நீங்கள் உயிரைத் தேர்வு செய்தால், உடல் போஷாக்கற்றுப் போகிறது, நிராகரிக்கப்படுகிறது. எந்த வகையில் பார்த்தாலும் அது பதட்டமான நிலைதான். அதுவே மனிதனின் துயரத்திற்கு காரணம்.

ஆனால் இந்த இரண்டு விதிமுறைகளையும் புரிந்துகொண்டால், அந்த விதிமுறைகளின் லயத்தை உணரலாம். அவை எதிரானவை போல் தெரிந்தாலும், உள்ளே ஆழத்தில் ஒன்றுக்கொன்று அனு சரணையாக உள்ளன என்பது விளங்கும்... எல்லா எதிர்நிலைகளும் அனுசரணையானவைதான். வாழ்வும் சாவும் எதிரானவை ஆனாலும் அனுசரணை உள்ளவை. ஆணும் பெண்ணும் எதிரானவர்கள். ஆனாலும் அனுசரணை கொண்டவர்கள். நன்மையும் தீமையும் எதிரானவை என்றாலும் அனுசரணை உள்ளவை. அனுசரணைத் தன்மையை நீங்கள் கண்டு கொண்டால் மேம்பட்ட நிலை உங்களிடம் தோன்றும். உங்கள் கீர்த்தி வெளிப்படும். நீங்கள் ஒளி பெறுவீர்கள்.

அதுவே புத்த நிலை, ஏக நிலை ஆகும். அவை புத்த விழிப் புணர்வு அல்லது கிறிஸ்தவ விழிப்புணர்வு, கிருஷ்ண விழிப்புணர்வு என்றும் கூறலாம். நீங்கள் என்ன பெயர் வைக்கிறீர்கள் என்பது பெரிய விஷயமல்ல. அதன் அர்த்தம், உங்கள் மன இறுக்கம் அகலும்போது கவலை மறைகிறது. உடலும் மனமும் இணங்கி ஒன்றுபடுகிறது. உடல் மற்றும் மனதுடன் விளையாடுவது எப்படி என்று நீங்கள் கற்றுக் கொண்டால், உராய்வு ஏதுமின்றி விளையாடக் கற்றுக் கொண்டால், உங்கள் வாழ்வு சிறந்த இன்னிசை எழுப்பத் துவங்கு கிறது. அந்த இசைதான் தியானமாகும். அதன் பிறகு உங்கள் வாழ்க்கை மிகவும் முக்கியத்துவம் பெற்ற மெல்லிசையாகிவிடும். நீங்கள் திருவிழாவாக, கொண்டாட்டமாக மாறுவீர்கள். நீங்கள் மலர்ச்சி பெறுவீர்கள்.

நீங்கள் உடலை ஒரு அடித்தளமாகக் கொண்டு உங்கள் விழிப்பு நிலையைப் பயன்படுத்தி ஒரு கோவிலை உருவாக்குகிறீர்கள். உங்கள் உடல் அஸ்திவாரமாகிறது. விழிப்புநிலை கோபுரமாகிறது. நீங்கள் உங்கள் உடலை புல்லாங்குழலாக்குகிறீர்கள். உங்கள் உடலை ஒரு சிதார் கருவியாக்குகிறீர்கள். உங்கள் விழிப்புநிலை இசையாக மாறி அதிலிருந்து எழுகிறது.

நீங்கள் இதுவரை கவனித்ததில்லையா? திடப்பொருளால் உருவான ஒரு வாத்தியக் கருவியில் இருந்து வெளிப்படும் இசை தெய்வீகமாக அமைகிறது அல்லவா? உருவான இடத்தை வைத்து அது தாழ்ந்த நிலையில் இருப்பதில்லை. அதுபோல தேவை சார்ந்த விதி முறையும், ஆற்றல் சார்ந்த விதிமுறையும் ஒரு பொதுவான அடிப்படை விதிமுறையிலிருந்தே வேர்விட்டிருக்கின்றன. லாவோ அந்த விதி முறையைத் தாவோ என்று குறிப்பிடுகிறார். ஏசு அதை லோகாஸ் என்கிறார். புத்தர் அதை தர்மம் என்கிறார். மோஸஸ் அதை டோரா என்கிறார். ஒரு அடிப்படை விதிமுறை இருக்கிறது. அங்கு எல்லா இருமை நிலைகளும் அகன்று போகின்றன. இருமையற்ற நிலை உருவாகிறது. ஒரு விதிமுறையே உலகளாவியதாக மாறுகிறது. அந்த அடிப்படை விதிமுறையே இயற்கையாகும். அந்த அடிப்படை விதி முறையே சத்தியமாகும்.

உண்மைக்கு உடலுண்டு. தேவை சார்ந்த விதிமுறையைக் கொண்டு அந்த உடல் உருவாக்கப்பட்டுள்ளது. உண்மைக்கு உயிர் உண்டு. அந்த உயிர் ஆற்றல் சார்ந்த விதிமுறையால் உருவானது. அந்த இரண்டுமாக மனிதன் இருக்கிறான். ஒரு கயிறு அந்த இரண்டு எல்லை களையும் பிணைத்துக் கட்டுகிறது. அதையே ஃபிரெடரிக் நியாட்ஷே, இரண்டு எல்லைகளையும் ஒரு கயிறு பிணைக்கிறது. கடந்த காலம், எதிர்காலம் என்ற இரண்டையும் இணைக்கிறது. ஸ்தூலத்தையும், சூட்சுமத்தையும் இணைக்கிறது என்றார். இழுத்துக் கட்டப்பட்ட அந்த கயிற்றின் மீது நடக்க மிகுந்த திறமை வேண்டும். கயிறு மீது நடக்கும் மனிதராக நீங்கள் மாற வேண்டும்.

சித்தர்களும், சந்நியாசிகளும் அப்படிப்பட்ட நபர்களாகவே இருக்கிறார்கள். ஆன்மீகவாதி அந்த கயிற்றின் மீது நடக்கும் வித்தை தெரிந்தவராக இருக்கிறார். அது மிகவும் சிரமமானது. அது ஆபத்தான தாகவும் இருக்கிறது. ஒரு அடி தப்பாகிவிட்டாலும் விழுந்து விடு வீர்கள். ஒரு அடி நழுவிப் போனாலும் நீங்கள் திசை மாறிப் போவீர்கள். சிறியதாகவோ, பெரியதாகவோ எப்படி தப்பு நடந் தாலும் வீழ்ச்சி ஏற்பட்டுவிடும்.

நீங்கள் உயர்நிலை அடையும்போது உங்கள் வாழ்வும் நிரம்ப ஆபத்துக்குள்ளாகிறது. அதிகமான ஆபத்து உள்ள வாழ்க்கையே மதிப்பு நிரம்பிய வாழ்க்கையாகும். நிறைய முக்கியத்துவமும், அர்த்தமும் கொண்டதாக அது அமைகிறது.

நியாட்ஷே மேலும், "ஆபத்தான வாழ்க்கை வாழ்ந்து பார்" என்கிறார். அவர் ஆபத்தான வாழ்க்கை வாழ்ந்து பார் என்று கூறுவதன் பொருள் என்ன? ஒருவர் சுகமான வாழ்வு வாழ்ந்தால் அது வாழ்க்கையே அல்ல. அது மெதுவான மரணம் தவிர வேறல்ல. மெதுவான தற்கொலையாகும் அது. வாழ்வின் கூர்மையிலும், புத்திசாலித்தனத்திலும் தான் உயிர்ப்பு உள்ளது. நீங்கள் ஆபத்தான வாழ்வை வாழும் போதுதான் அது வெளிப்படும். தேவை சார்ந்த விதிமுறைக்கும், ஆற்றல் சார்ந்த விதிமுறைக்கும் நடுவே செல்வதுதான் மிகப்பெரிய அபாயமாகும். அது இரண்டு இமயமலைச் சிகரங்களுக்கு நடுவே கயிறு கட்டி அதில் பயணம் செய்வது போன்றதாகும். கீழே விழுந்தால் முடிந்து போவீர்கள். மறுமுனையை நீங்கள் எட்டிவிட்டால், அந்த பெரும் புகழ் உங்களுடையது. வாழ்க்கை உங்களுடையது, மோட்சம் உங்களுடையது.

மனிதன் கயிறாகவும், ஏணியாகவும், பூமி வானத்தின் சந்திப்பாகவும், உடலும், உயிராகவும், பந்தமும் விடுதலையாகவும், சம்சாரம், மோட்சமாகவும் இருக்கின்றன. இதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை என்றால் தொடர்ந்து துயரத்தில் இருப்பீர்கள். இதைப் புரிந்துகொண்டால் பேரின்பம் தோன்றும். ஒரே சக்தியானது துன்பமாகவும், பேரின்பமாகவும் மாற்றம் பெறுகிறது. அறியாமை நிறைந்திருக்கும்போது அந்த சக்தி கசப்பாகவும், விஷமாகவும் மாறி நரகத்தை உண்டாக்குகிறது. நீங்கள் விழிப்புணர்வு பெறும்போது, கூடுதல் கவனம் எடுத்துக்கொள்ளும் போது சாட்சியாக விலகி நின்று பார்க்கும் போது அதே சக்தி மாற்றம் அடைந்து சொர்க்கமாக மாறுகிறது.

இன்றைய சூத்திரத்தின் தொடர்ச்சியைப் பார்க்கலாம்.

**இப்போதும் உங்களால் உங்களது முட்டாள்தனமான விருப்பங்களை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ளும் சக்தி தரப் பட்டுள்ளது.**

**அவற்றை வெற்றி கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்.**

இந்த வார்த்தைகளை நாம் சிந்திக்க வேண்டும். ஏனென்றால் இந்த வார்த்தைகள் சொல்லி இருபத்தைந்து நூற்றாண்டுகள் கடந்து விட்டன. அந்த சொற்களின் அர்த்தம் மாறிவிட்டது. ஃபிராய்ட் காலத்துக்கு முன்பு அவை எழுதப்பட்டன. அவை வித்தியாசமான சமூகச் சூழலில், வித்தியாசமான சூழ்நிலையில் எழுதப்பட்டவை.

பிறகு அவை முற்றிலும் மாறுபட்ட அர்த்தம் கொண்டுவிட்டன. அந்த அர்த்தத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அந்த வார்த்தை களுடன் நீங்கள் சம்பந்தப்பட்ட அர்த்தத்தை அல்ல.

**"இப்போதும் உங்களால்...."** என்று பிதாகோரஸ் கூறுகிறார். ஆனாலும் அது சிரமமான செயல். ஏனென்றால், தேவைசார்ந்த விதி முறையும், ஆற்றல் சார்ந்த விதிமுறையும் ஒரு முரட்டுச் சட்டம் பிணைத்துள்ளது.... அவற்றுக்குள் ஒருங்கிணைப்பு ஏற்படுத்துவது மிகவும் கஷ்டம். அது கத்தியின் விளிம்பில் நடப்பது போன்றதாகும். அது சாத்தியமான ஒன்றுதான். முடியாத ஒரு காரியமல்ல.

"உங்கள் முட்டாள்தனமான விருப்பங்களை எதிர்த்துப் போராடி வெற்றிகொள்ளும் சக்தி தரப்பட்டுள்ளது...." அது உங்கள் பிறப்புரிமை. **முட்டாள்தனமான விருப்பங்களைப் போரிட்டு வெற்றி இறன் உங்களுக்கு உள்ளது.** சண்டை என்ற வழக்கமான செயலுடன் இங்கு குறிப்பிடப்படும் சண்டை சம்பந்தப்பட்டதல்ல. இந்த சண்டைக்கு முற்றிலும் புதிய ஒரு அர்த்தம் இருக்கிறது. பிதாகோரஸின் மதக் கல்வி நிலையத்தில் சண்டை என்றால் உராய்வை உருவாக்கல் என்று பொருள். குர்ட்ஜிஃப் போன்ற உராய்வு வழிமுறைகள் பற்றி சீடர் களுக்கு எடுத்துரைத்தார். ஒரு உராய்வை உங்களுக்குள் ஏற்படுத்தி னால், அதிலிருந்து சக்தி வெளிப்படும்.

உதாரணமாக, உங்களுக்குக் கோபஉணர்வு வந்தால் பெரும் சீற்றம் உங்களிடம் தோன்றுகிறது. கோபம் உங்களிடம் தலை தூக்கும் போது அதை அடக்கி வையுங்கள். நேச உணர்வு ஏற்படுத்திக் கொள் ளுங்கள். இதுதான் பிதாகோரஸ் வழிமுறையாகும். அவ்வாறு செய்வது சிரமம் தருவதாக இருக்கலாம். காரணம் உங்களுக்குக் கோபம் வரும் போது எப்படி நேச உணர்வு கொள்ள முடியும்? ஆனால் அது முடியாத செயல் அல்ல.

உண்மையில் கோபமும், நேசமும் இரண்டு வெவ்வேறு சக்திகள் அல்ல. அந்த கோபமே நேசமாக மாறுகிறது. நீங்கள் நேசத்தை உருவாக்கும்போது கோபம் அங்கு இருந்தால் அதுதான் சண்டை யாகிறது. உராய்வாகிறது. நீங்கள் இரட்டை நிலையை உருவாக்கு கிறீர்கள். இரண்டு சிகரங்களாக அவை உள்ளன. அந்த இரண்டு சிகரங் களுக்கு இடையே கட்டப்பட்டுள்ள கயிற்றின் மீது நீங்கள் நடந்து கோபத்திலிருந்து நேசத்தைச் சென்றடைய வேண்டும். நீங்கள் கோபத்திலிருந்து நேசத்தை நோக்கிச் சென்றடைந்தால், கோபத்தை வென்றதாக அது அமைகிறது.

காமம் தோன்றும்போது நேசத்தை உருவாக்குங்கள். அவை ஒரே விதமான சக்திகள்தான். காமத்தில் இருந்து நேசம் நோக்கி நடந்து செல்லுங்கள். அது ஆரம்பத்தில் சிரமமாக இருக்கும். காரணம் நாம் உராய்வு சம்பந்தப்பட்ட நெறிமுறைகள் அனைத்தையும் முற்றாக மறந்து விட்டோம். ஆனாலும் அதை முயன்று பாருங்கள்.

உதாரணமாக, நீங்கள் கவலையுடன் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது மகிழ்வுடன் நடனமிடத் தொடங்குங்கள். உங்களிடம் ஏற்படும் மாற்றத்தை உடனடியாக உணர்ந்து வியந்து போவீர்கள். கவலை ஒரு மூலையில் இருக்கிறது. அதன் எதிர் மறு முனையில் சூட்சும நிலையில் எழத் தொடங்குகிறது. அதைக் கண்டு நீங்கள் பெரிதும் வியப்படைவீர்கள். என்ன நடக்கிறது என்று உங்களால் நம்பவே முடிவதில்லை. கவலையுடன் இருக்கும்போது மகிழ்வு முதல் தடவை நிகழும்போது, அவை இரண்டும் ஒன்றாக இருக்கும் சமயத்தில் அது சண்டையாக மாறுகிறது. அதுவே உரசல் ஆகும். அந்த உரசலில் பெரும் சக்தி வெளிப்படுகிறது. பெரு நெருப்பு உங்களிடம் எழுகிறது. நெருப்பு தூய்மை செய்கிறது. எப்போதும் உராய்வு மூலமே நெருப்பு எழுகிறது.

உராய்வு மூலமே ஆதிமனிதன் நெருப்பை உண்டாக்கியிருக்க வேண்டும். இரண்டு கற்களை ஒன்றுடன் ஒன்றை உரசி நெருப்பு மூட்டியிருப்பான். மனிதன் நெருப்பை உண்டாக்க எண்ணிய முதல் திட்டம், மூங்கில் அல்லது மற்ற மரங்கள் பெருங்காற்றில் உராய்ந்து நெருப்பு உண்டாவதைக் கண்டதும் ஏற்பட்டது. இயற்கையாக உராய்வு ஏற்பட்டதைக் கண்டான். அது எப்போதும் இயல்பாக மூங்கில் காடு களில் நிகழ்கிறது. காற்று பலமாக இருந்தால், மூங்கில்கள் ஒன்றுடன் ஒன்று உராய்கின்றன. அவை வெப்படைந்ததும், நெருப்புப் பிடிக் கிறது. இயற்கையான உராய்வைக் கண்டுதான் ஆதிமனிதனின் நெருப்புப் பற்றவைக்கும் திட்டம் உருவாயிற்று.

மனிதனின் அகத்திலும் இதே கதைதான். உராய்வை ஏற்படுத் துங்கள். உங்களுக்குள் என்ன நடக்கிறதோ அதற்கு எதிரானதை எப்போதும் உருவாக்குங்கள். அது முடியாத செயல் என்று முதலில் சொல்வீர்கள். ஏனென்றால், நீங்கள் அதற்கு ஒருபோதும் முயன்ற தில்லை. ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் மனதால் உணரும் அனைத்தும் உங்களுக்குள் இருக்கவே செய்கின்றன. சில சமயம் அது கண்ணால் காணும் வடிவில் இருக்கலாம். சில சமயம் அது செயலற்ற வடிவில் இருக்கலாம். நீங்கள் எதிர்மறையான ஒன்றை உருவாக்க முயலும்போது செய்யும் காரியம் செயலற்று இருக்கும் அதை விழிப்படைய வைப்பதே ஆகும்.

நீங்கள் முன்னர் நேசத்துடன் இருந்தீர்கள். முன்னர் பாச உணர்வுடன் இருந்தீர்கள். பாசம் என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியும். இப்போது அந்த இடத்தில் கோபம் இருக்கிறது. எங்கோ உங்கள் உடலின் ஏதோ ஒரு அறையில் அந்த பாசம் உறக்க நிலையில் இருந்துவருகிறது. அதைத் தட்டியெழுப்புங்கள்! அதை விழித்தெழ வைக்கலாம் என்று ஒரு தடவை தெரிந்து கொண்டுவிட்டால், உங்களிடம் பெரிய உராய்வு ஏற்படும். கோபமும், நேசமும் சண்டையிட ஆரம்பிக்கும்.

எப்போதும் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். உயர்ந்ததும், தாழ்ந்ததுமான இரண்டும் சண்டையிடத் துவங்கினால் உயர்ந்து வெல்லும். தாழ்ந்து வெற்றிபெற முடியாது. உயர்ந்தது காணாமல் போகுமானால் அப்போதுதான் தாழ்ந்தது வெற்றியடைய முடியும். உயர்ந்தது காணாமல் போகும்போதுதான் தாழ்ந்தது வெல்கிறது. உயர்ந்தது அங்கு இருந்தால் தாழ்ந்தது பலமற்றுப் போகிறது. எனவேதான் பிதாகோரஸ் அதை ஆற்றலின் விதிமுறை என்கிறார்.

> இப்போதும் உங்களால் உங்களது முட்டாள்தனமான விருப்பங்களை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ளும் சக்தி தரப்பட்டுள்ளது.
>
> அவற்றை வெற்றி கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்.

உங்கள் விருப்பங்கள் எல்லாம் முட்டாள்தனமானவை. ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். பிதாகோரஸ் விருப்பங்களுக்கு எதிரானவர் அல்ல. உங்கள் சக்தி முழுவதையும் அவை தம்முள் கொண்டிருக்கின்றன. அவர் முட்டாள் தனத்துக்கு எதிரானவர். உங்கள் விருப்பம் அறிவாக நிறம் மாறும் தருணத்தில் அவை கச்சிதமான அழகு பெற்று விடும்.

காமம் விழிப்புணர்வு இல்லாது இருக்கும் சமயத்தில் ஒரு இயந்திரத்தனமான வேட்கை உங்களிடம் ஏற்படுகிறது. அது தவறு. அறிவின் ஒளிக்கீற்றை நீங்கள் சிறிதளவு உங்கள் காமத்தினுள் கொண்டு வரமுடியுமானால் அந்த ஒளி அதை மாற்றியமைத்து விடும். அதன் பிறகு அது காமமாக இருக்காது. அது முற்றிலும் மாறுபட்டதாக இருக்கும். முற்றிலும் மாறுபட்ட அதைக் குறிப்பிட உங்களிடம் வார்த்தை கிடையாது.

கிழக்கு நாடுகளில் நம்மிடம் அதற்கு தாந்த்ரா என்ற சொல் இருக்கிறது. மேற்கு நாடுகளில் உங்களிடம் அதற்கு ஏற்ற வார்த்தை கிடையாது. காமம் அறிவுடன் ஒன்று சேரும்போது முற்றிலும் புதிய சக்தி உருவாகிவிடுகிறது. அந்த சக்தியே **தாந்த்ரா** ஆகும்.

**தாந்த்ரா** என்றால் விரிவாக்கம் செய்யும் திறன் என்று பொருள். அது விரிவடைந்து கொண்டே செல்கிறது. காமம் உங்களை சுருங்கிப் போக வைக்கிறது. தாந்த்ரா விரிவடைய வைக்கிறது. அது அதே சக்தி தான். ஆனால் செயலில் மாறுபட்டதாக இருக்கிறது. இனி அது சுயநலமாக இருக்காது. தன் முனைப்பு கொண்டிருக்காது. அது விரிவடையத் தொடங்கி, முழு உகையும் தொட்டுவிடுகிறது. காமத்தின் போது சில கணங்கள் நீங்கள் இன்ப உச்சம் பெறலாம். அதற்குப் பெரிய விலை தரவேண்டும். தாந்த்ராவில் நீங்கள் நாள் முழுவதும் இன்ப உச்சியில் இருக்கலாம். உங்கள் முழு சக்தியும் இன்ப உச்சமாக மாறுகிறது. இனி எந்த தனிமனிதனையும் சந்திக்க வேண்டாம். உங்கள் சந்திப்பு பிரபஞ்சம் சார்ந்ததாக உள்ளது. நீங்கள் ஒரு மரத்தைப் பார்க்கிறீர்கள். ஒரு மலரைப் பார்க்கிறீர்கள், ஒரு நட்சத்திரத்தைப் பார்க்கிறீர்கள். அப்போது ஏதோ இன்ப உச்சம் போன்ற ஒன்று ஏற்படுகிறது.

ஒருவர் முழுமையான அறிவுடன், விழிப்பான, எச்சரிக்கையுடன் இருந்தால் அவர் இன்ப உச்சம் சார்ந்த வாழ்க்கை வாழ்கிறார். அவரது ஒவ்வொரு அசைவிலும் இன்ப உச்சம் இருக்கிறது. உச்சத்திற்கு மேல் உச்சம் கிடைக்கிறது. தாந்த்ரா நிகழும்போது காமம் மறைந்து போகிறது. காமம் ஒரு விதை போன்றது. தாந்த்ரா அதில் வளர்ந்த மரம். விதை இறந்துபோகும் போதுதான் மரம் உருவாகும்.

உங்கள் ஒவ்வொரு சக்தியும் இரண்டு வடிவங்கள் உள்ளவை. ஒன்று, அறிவு. மற்றது முட்டாள்தனம். பிதாகோரஸ் உங்கள் விருப்பங் களுக்கு எதிரானவர் அல்ல. எந்த அறிவாளியும் உங்கள் விருப்பங் களுக்கு எதிராக இக்கமாட்டார். ஆனால் ஒவ்வொரு அறிவாளியும் உங்கள் முட்டாள்தனத்துக்கு எதிராக இருப்பார். உங்கள் அறியாமை, உங்கள் இருண்ட நிலை, உங்கள் அசட்டுத்தனம், இயந்திரத்தனம் போன்றவற்றிற்கு எதிராக இருப்பார்.

காமத்தில் உங்கள் செயல்கள் ஒரு இயந்திர மனிதனைப் போன்று அமைந்துள்ளன. தேவை சார்ந்த விதிமுறையிலிருந்து ஏதோ ஒன்று, **பிரகிருதியில்** என்று உங்கள் தாழ்ந்த நிலையிலிருந்து ஏதோ ஒன்று உங்களை இறுக்கிப் பிடிக்கிறது. நீங்கள் அதன் பின்னர் நீங்களாக இருப்பதில்லை. ஒரு அடிமையாகி விடுகிறீர்கள். உங்கள் மனதிற்கு நீங்கள் எஜமானராகும்போது நீங்கள் இதே உலகில்தான் வாழ்கிறீர்கள். ஆனால் பார்வை முற்றிலும் புதியதாக இருக்கிறது. அந்த பழைய உலகம் தெய்வீகமானதாக மாறிவிடுகிறது.

சம்சாரமே நிர்வாணம் - இந்த உலக வாழ்க்கைதான் ஞான மடைதல் ஆகும் என்று ஜென் குருமார்கள் அறிவித்த செய்தியின்

அர்த்தம் இதுதான். முட்டாள்தனத்தில் இருந்து நீங்கள் விவேகத்திற்கு மாறவேண்டிய அந்த ஒன்று மட்டுமே தேவைப்படுகிறது. விழிப் புணர்வற்ற நிலையில் இருந்து விழிப்பு நிலைக்குச் செல்கிறீர்கள்.

**இப்போதும் உங்களால் உங்களது முட்டாள்தனமான விருப்பங் களை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ளும் சக்தி தரப் பட்டுள்ளது.**

**அவற்றை வெற்றி கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்.**

அவற்றை அழிக்க வேண்டியதில்லை. வெற்றி பெறப் பழகினால் போதும். வெற்றிகொள்ளல் என்பது அடக்கி வைத்திருப் பதல்ல என்பதை நினைவில் வையுங்கள். அது பிதாகோரஸின் திட்டச் செயல்முறைகளில் இல்லை. வெற்றி கொள்ளல் என்றால், நீங்கள் விழிப்புணர்வு பெறும்போது எஜமானராகி விடுகிறீர்கள். விருப்பங்கள் உங்கள் அடிமைகளாகி விடுகின்றன. அடிமைகளாக இருக்கும்போது அவை அழகானவை. எஜமானர்களாக இருக்கும்போது அவை ஆபத்தானவை.

விடுதலை என்பது உங்களை நீங்கள் வெற்றி பெற்று எஜமான ராவதுதான். பந்தம் என்றால் உங்களை நீங்கள் வெற்றிகொள்ள வில்லை என்றாகிறது. ஆயிரம் ஆசைகளுக்கு ஆட்பட்டு அவற்றுக்கு நீங்கள் பலியாகிக் கிடப்பது பற்றிய விழிப்புணர்வு உங்களிடம் இல்லை. கோபம், காமம், பேராசை, தற்பெருமை போன்ற பல்வேறு வகைப்பட்டவைகளாக அந்த விருப்பங்கள் அமைந்திருக்கின்றன. நீங்கள் விழிப்புடன் இருந்து உங்கள் விருப்பங்களைக் கவனித்தால், உங்களுக்கு என்ன நடக்கிறது கவனித்தால், காரியங்கள்தானே நடப்பதைத் தடுத்து நிறுத்திவிடுவீர்கள். யந்திரத்தனமாக நடக்கும் எதிர்விளைவுகளின் மீது உங்களுக்கு மேலும் விழிப்பு ஏற்படும். அவற்றை யந்திரத்தனமற்ற வகையில் மாற்றுவீர்கள். அப்போது அடக்கியாளும் எஜமானத்துவம் தலையெடுக்கும். அதிகாரத்துடன் கத்தி உரிமை கோரிய அந்த விருப்பங்களின் கொட்டம் அடங்கி அவை வேலைக்காரர்களாக அடங்கிப் போகின்றன.

சிறிய வகுப்பறையில் நடப்பது போன்ற ஒரு செயல்தான் இது. வகுப்பிலுள்ள குழந்தைகள் சண்டையிட்டுக் கொண்டும், ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டும், பொருட்களை வீசியெறிந்து கொண்டும் கூச்லிட்டபடி இருப்பார்கள். வகுப்பில் ஆசிரியர் நுழைந்ததும் சட்டென்று எல்லோரும் அவரவர் இருக்கைக்குச் சென்று விடுவார்கள். தங்கள் புத்தகங்களைத் திறப்பார்கள். கணத்தில் அமைதி தோன்றிவிடும். ஆசிரியர் ஒரு வார்த்தை பேசவில்லை. அவர் அங்கு வந்ததும் ......

உங்கள் குரு நுழைந்ததும் - குரு என்று நான் கூறுவது உங்கள் விழிப்புணர்வு தலையெடுத்ததும் - விருப்பங்கள் ஒழுங்காக வரிசையில் சென்று நின்று கொள்கின்றன. எஜமானத்துவம் கேட்டு அவை அதன் பிறகு கூச்சலிடுவதில்லை. எஜமானர் வந்துவிட்டார். நிஜமான எஜமானர் அங்கு இல்லாது போனதால் அவை எஜமானத்துவத்திற்காகப் போராடின.

இது வெற்றி கொள்ளல் ஆகும். உங்கள் விருப்பங்களைப் பார்வையாளராகத் தள்ளி நின்று பாருங்கள். அப்போது வெற்றி கொள்ளல் நடக்கிறது.

**அறிவுத் தெளிவுடனும், ஊக்கத்துடனும், தூய்மையுடனும் இருந்து கடும் கோபத்தைத் தவிர்த்திடுங்கள்.**

**பொது இடத்திலும், தனிமையிலும் நீங்கள் தவறு செய்ய உங்களை அனுமதிக்காதீர்கள்.**

**எல்லாவற்றிற்கும் மேலாக உங்கள் மீது மதிப்பு வையுங்கள்.**

உங்கள் மீது நீங்கள் மதிப்பு வையுங்கள். முதலும், முடிவுமான பிதாகோரஸின் தத்துவம் இதுதான். உங்கள் துறவிகள் நீங்கள் உங்கள் மீது மதிப்புக் கொள்ள வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். மற்றவர்களை மதிக்க வேண்டும் என்று அவர்கள் கற்றுத் தருகிறார்கள். புத்தர், மகாவீரர், ஏசு போன்றவர்களை மதியுங்கள். உங்கள் மீது குற்றம் சாட்டிக் கொள்ளுங்கள் என்கிறார்கள். அதில் ஒரு சூட்சுமமான தந்திரம் உள்ளது. உங்களை நீங்கள் நிந்தித்துக் கொள்ளும்போதுதான் பிறரை மதிக்க முடியும். உங்களை நிந்தித்துக் கொள்ளாதபோது பிறரை மதிக்க வாய்ப்பு இல்லை. உங்களை நீங்கள் மதிக்கும்போது உயர்ந்தவர் இல்லை, தாழ்ந்தவர் இல்லை. சிறந்தவரும் இல்லை, மோசமானவரும் இல்லை. பிறகு ஒரு வித்தியாசமான நிகழ்வு ஏற்படுகிறது. அதை மதிப்பளித்தல் என்று அழைக்க இயலாது. அது நேசத்திற்கும், மதிப்புக்கும் நெருக்கமானது.

உண்மையான சீடர் குருவை நேசிக்கிறார். காரணம் அவரைத் தன்னில் ஒரு அங்கமாகவே காண்கிறார். தனது சுயத்தில் உள்ள தெரியாத ஏதோ ஒன்று குரு மூலம் வெளிப்படுகிறது. அவர் தன்னை மதிக்கிறார். அவர் குருவை மதிக்கிறார். தன்னை மதிப்பதால் குருவை மதிக்கிறார். ஆனால் இப்போது மதிப்பளித்தல் என்பது வித்தியாசமான நிறம் பெற்றுவிட்டது. அது வழக்கமான முறையில் இல்லை. யாராலும் திணிக்கப்படவில்லை. அது அன்பின் ஒரு அங்கமாகும். அன்புக்கு உயர்வு, தாழ்வு கிடையாது. மரியாதை அளிப்பது அதன் சம்பிரதாயமான விஷயம். அன்பு காட்டல் இயல்புக்கு மாறானது.

மரியாதை தருதல் என்பது நம்மால் உருவாக்கிக் கொள்ளப்படும் ஒன்று. அன்பு என்பது தன்னிச்சையாக, உங்களுக்குள் இருந்து எழுகிறது. அது உருவாக்கிக் கொள்ளப்படவில்லை.

உதாரணமாக, நீங்கள் கிறிஸ்தவராகப் பிறந்து இருந்தால் ஏசுவை மதிப்பீர்கள். நீங்கள் இந்துவாகப் பிறந்திருந்தால் கிருஷ்ணரை மதிப்பீர்கள். ஒரு இந்து ஏசுவைச் சந்தித்தால் அவரை மதிக்க மாட்டார். ஒரு கிறிஸ்தவரை சந்தித்தால் அவரை மதிக்கமாட்டார் என்றால் அவரால் எப்படி கிருஷ்ணரை மதிக்க முடியும்? கிருஷ்ணரைப் பற்றிய ஒரு விஷயமும் அவருக்குத் தெரியாது. அந்த மனிதர் கிருஷ்ணரை உணர்ந்து தெய்வீகத்தின் மீது நேசம் வைத்தால், அது ஏசுவை நேசித்த தாகவும் ஆகிறது. ஏனென்றால், ஏசுவும் அந்த சக்தியின் மற்றொரு வடிவம்தான்.

நீங்ள் புத்தரை நேசித்தால் உலகிலுள்ள புத்தர்கள் எல்லோரை யும் நேசிப்பீர்கள். எந்த வடிவில் அவர்கள் தோன்றினாலும், எந்த வகையில் அவர்கள் வெளிப்பட்டாலும் அவர்களை உங்களால் உடனே ஏற்றுக்கொள்ள முடிகிறது. அப்படி புத்தரை ஏற்றுக் கொள்ளும் ஒரு மனிதரால் மற்றவர்களை ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. காரணம் அன்பு என்பது சம்பிரதாயமானது. அவரால் புத்தரை மட்டுமே மதிக்க முடியும். அது அவருக்குக் கற்பிக்கப்பட்டுள்ளது. அவர் மகாவீரரை மதிக்க மாட்டார். அவர் நபிகள் நாயகத்தை மதிக்க மாட்டார். அது அவரால் இயலாது. எப்படி ஒரு ஜைனரால் நபிகள் நாயகத்தை மதிக்க முடியும்? தனக்கு மகாவீரர் மீது அக்கறை இல்லை என்று காட்டுகிறார். மகாவீரர் பற்றி அவருக்கு ஒன்றும் தெரியாது. அவ்வாறின்றி மகாவீரரை அவர் அறிந்திருந்தால், ஞானம் அடைந்த மற்றவர்கள் எல்லோரின் சுவையையும் அறிந்திருப்பார்.

நீங்கள் கடல் நீரின் சுவையை எங்கிருந்து வேண்டுமானாலும் ருசிக்கலாம். அதன் சுவை உவர்ப்பு. எப்போதும் அது அப்படித்தான் இருக்கும். அது இந்தியப் பெருங்கடலாக இருந்தாலும், பசிபிச் பெருங் கடலாக இருந்தாலும் அல்லது அட்லாண்டிக் பெருங்கடலாக இருந் தாலும் அதில் எந்த வித்தியாசமும் இல்லை. சுவை ஒரே விதமாகவே இருக்கும்.

முதல் விஷயம் இதுதான். **எல்லாவற்றிலும் மேலாக.... உங்கள் மீது நீங்கள் மதிப்புக் கொள்ளுங்கள்.** உங்களை நீங்கள் மதிக்காவிட்டால், உங்களைப் பற்றி உங்களால் அறிந்துகொள்ள இயலாது. அன்பு செலுத்தினால் மட்டுமே நம்மால் அறிந்துகொள்ள முடியும். நாம் நமக்கு மதிப்பளித்தால், நாம் சிறந்து புகழ் பெற்றுள்

ளோம் என்று நாம் நினைத்தால் மட்டுமே உள்முகமாகச் செல்ல முடியும். உங்களை நீங்கள் இழிவான, உபயோகமற்ற பாவி என்று கருதினால் ஆரம்பத்திலிருந்து அவ்வாறு குறை சொல்லி வந்தால், உங்களை நீங்கள் வெறுத்தால், நீங்கள் மதிப்பற்றவர் என்ற உணர்வு கொண்டிருந்தால் உங்களால் எப்படி உள்முகமாக மனதிற்குள் செல்ல முடியும்? நரகத்தில் நுழைய யார் விரும்புவார்கள்? நீங்கள் அதைத் தவிர்ப்பீர்கள். ஒருபோதும் உள்ளே செல்ல மாட்டீர்கள்.

நான் பூரணமாகப் பிதாகோரஸின் கருத்துக்கு உடன்படுகிறேன். தியானத்தின்போது அடிப்படைத் தேவையாக இருப்பது ஒருவர் தன் மீது கொண்டுள்ள அபாரமான மரியாதையே ஆகும். அது தற் பெருமை அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களை நீங்கள் மதிக்கும்போது, மற்றவர்களையும் நீங்கள் மதிக்கிறீர்கள். காரணம் உங்களைப் போலவே ஒவ்வொருவருக்கும் சுயம் என்பது இருக்கிறது. நீங்கள் உங்கள் அக உடலை மதித்தால் அதுபோலவே உலகிலுள்ள உயிர்கள் எல்லாவற்றையும் மதிப்பீர்கள். உங்களை நீங்கள் மதிக்கும் போது மரம், மலை போன்றவற்றையும் மதிப்பீர்கள். ஏனென்றால் அவைகளுக்கும் சொந்தமாக உயிர் இருக்கிறது.

சுயமரியாதை என்பது அகந்தையல்ல. அது அதற்கு எதிரானது. இயற்கை தந்த பெரும் பரிசுக்குப் பெருமை சேர்க்கும் விஷயம். அது நன்றி கூறலாகும்.

அதன் பிறகு **நிதானத்துடன் இருங்கள்** என்கிறார் பிதாகோரஸ். அங்கு தங்க விதிமுறையாகும். நிதானத்துடன் இருத்தல் என்பது எதிலும் தீவிரமாக இருக்கவேண்டாம். அசட்டையுடனும் இருக்க வேண்டாம் என்பதாகும். நடுநிலையாக இருப்பதே நிதானமாகும். மிகவும் தீவிரமாக இருப்பவர் நோயாளி போன்றவர். அசட்டையாக இருப்பவரும் நோயாளிதான். நிதானத்துடன் இருங்கள். சரியான நடு நிலையில் இருங்கள். பிதாகோரஸின் கூற்றுப்படி அதிகப்படியாக இருப்பது தீமையாகும். சமநிலையில் இருக்க மையத்தில் நிற்க வேண்டும்.

இதையே புத்தர் **"மாஜிம் நிகாயா"** நடுவில் உள்ள பாதை என்றார். கன்ஃபூஸியஸும் இதையே, "மையத்தில் இருப்பதே அறிவாளியின் பாதை" என்றார். மையத்தில் இருப்பது இருமை நிலைக்கு அப்பால் இருப்பதாக அமைகிறது. சரியாக மையத்தில் இருந்தால் ஒரு நிதானம், சமநிலை, தனித்துவம் கிடைக்கிறது.

**அறிவுத் தெளிவுடனும், ஊக்கத்துடனும் இருங்கள்....** மீண்டும் அந்த தங்க விதிமுறையை கவனத்தில் கொள்ளுங்கள்.

பிதாகோரஸ் கூறும் அடிப்படைத் தத்துவம் இதுதான். சிரத்தை காட்டுதல் என்பது வேகமாகச் செயலில் இறங்குவதல்ல. பதட்டமாகச் செயல்படுதலும் அல்ல. அவசரப்படுதல் இல்லாமலும், செயலற்று இருக்காமலும் சரியாக மையத்தில் நிற்பதாகும். தீவிரச் செயல் பாட்டுக்கும், செயலற்ற நிலைக்கும் மத்தியில் இருத்தலாகும். இதுவே சிரத்தை எனப்படும். பைத்தியக்காரத்தனமான வேகத்துடன் செயல் படுகிறீர்கள். மேற்கு நாடுகள் நிம்மதியற்று இருப்பது போலாகி விடாதீர்கள். மனிதர்களால் நிம்மதியாக இருக்க இயலாது. பூதங் களிடம் அகப்பட்டவர்கள் போல பரபரக்கிறார்கள். வேலைக்கு சென்றாக வேண்டும். சில கணங்களும் அவர்களும் அமைதியாக உட்கார்ந்திருக்க முடியாது.

கிழக்கு நாடு தனது மறுஎல்லைக்குச் சென்றுவிட்டது. அது சோம்பேறித்தனத்துடன், செயலற்று, அழிவு நோக்கிச் செல்கிறது. யாரும் எந்த செயலும் செய்ய இஷ்டப்படவில்லை. கிழக்கு நாட்டி லுள்ள ஒவ்வொரு மனிதரும் வேலை என்றால் ஒவ்வாமை ஏற்பட்டு விட்டவர் போலாகிறார். மேற்கு நாடு மேலும் மேலும் பைத்திய மாகிக் கொண்டிருக்கிறது. காரணம் மிதமிஞ்சிய செயல்பாடுதான். கிழக்கு நாடு ஏழ்மையாகிக் கொண்டே போகிறது. நோய் பிடித்தது போலிருக்கிறது. காரணம் அதிகம் செயலற்று இருப்பதே ஆகும்.

கோட்பாட்டு பூமியில் நமக்குப் புதிய மனிதன் வேண்டும். பிதாகோரஸ் கோட்பாட்டு மனிதன் மையத்தில் நடந்து செல்கிறான். நமக்கு கிழக்கு நாடுமல்லாத, மேற்கு நாடுமல்லாத ஒரு மனிதன் தேவை. எப்படிச் செயல்படுவது, எப்படிச் செயலற்று இருப்பது என்று தெரிந்த ஒருவர் நமக்குத் தேவை. செயலற்ற தன்மைக்கும், செயல் பாட்டிற்கும் இடையே இணக்கத்தை ஏற்படுத்தும் ஒருவர் வேண்டும். பணியில் ஈடுபடும்போது அவர் முழுவதும் ஓய்வான நிலையில் இருக்க வேண்டும். வேலை செய்ய ஒவ்வாமை கொள்ளவோ, வேலை செய்யாமல் இருக்க ஒவ்வாமை கொள்ளவோ கூடாது. அதுவே சிரத்தையாகும்.

தூய்மையுடன் இருங்கள். துறவியும், பாவியும் உச்சம்வரை போகிறார்கள். துறவியோ, பாவியோ யாரும் புனிதமானவர்கள் இல்லை. பாவி மிக அதிகமாகப் பாவத்தில் மூழ்குகிறான். துறவி அதிகமாகப் புனிதத்தில் நுழைகிறார். துறவிக்கு தனது நேர்மை, பெருமை, அகந்தை குறித்த உணர்வுகள் தலைதூக்குகின்றன. "நான் துறவி!" என்று கூறிக் கொள்கிறார். பாவி அதிக அளவில் தவறான வழியில் செல்கின்றன. பெருமளவு குற்றஉணர்வு அவனுக்கு எழுகிறது. "நான் பாவி, மதிப்பற்றவன்" என்று கூறிக் கொள்கிறான்.

யார் நற்குணமுள்ள நபர்? நற்குணமுள்ள நபர் யார் என்றால் அவர் தன் செயல்களில் அதீதம் இல்லாதவர். பிதாகோரஸ் கருத்துப்படி அதீதம் என்பது தூய்மையற்றது. எனது கருத்தும் அதுதான். அதீதம் தூய்மையற்றது. அதீத நடவடிக்கைகளில் ஈடுபடாது இருப்பது தூய்மை, நற்பண்பு, மையத்தில் இருத்தல், மனஇறுக்கம் இல்லா திருத்தல் போன்றவை இங்கே இழுத்துவரும் அல்லது அங்கே கொண்டு செல்லும்.

நற்பண்பு என்பது இயல்பாக, ஓய்வாக இருத்தலாகும். உங்களுக்கென்று ஒரு குறிப்பிட்ட குணாதிசயத்தைத் தேர்வு செய்து கொள்ளவில்லை. எல்லா குணதிசயங்களும் நற்பண்பு அற்றவை யல்ல. நீங்கள் குறிப்பிட்ட ஒரு நல்லொழுக்கம் அல்லது தீயொழுக் கத்தையோ நீங்கள் தேர்வு செய்து கொள்ளவில்லை. நீங்கள் எதையும் தேர்வு செய்யவில்லை. நீங்கள் வெறுமனே சாட்சியாக இருக்கிறீர்கள். உங்கள் சாட்சி நிலையின் நற்பண்புப்படி கணத்துக்குக் கணம் செயல் படுகிறீர்கள். சாட்சி நிலையே நற்பண்பாகும். அது தூய்மையான. மாசற்றது.

நீங்கள் உங்கள் உயிரின் சாட்சியாக மாறும்போது வானத்தைப் போலாகி விடுகிறீர்கள் எண்பதை நிலையில் கொள்ளுங்கள். மேகங்கள் வந்து போகின்றன. கருமேகம் வெண்மேகம் எல்லாம் வந்து செல் கின்றன. ஆனால் வானம் மாசுபடாமல் இருக்கிறது. எந்த மேகமும் வானத்தில் கறையை, அடையாளத்தை விட்டுச் செல்வதில்லை. அதைப் போலவே உங்கள் அகத்திலும் ஒரு வா னம் இருக்கிறது. இது விழிப்புணர்வு என்ற வானம். அது தூய்மையானது. நீங்கள் ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்தால் - அந்த மேகத்தையோ அல்லது இந்த மேகத்தையோ தேர்ந்தெடுத்தால், உங்கள் தூய்மையிலிருந்து நழுவி விடுகிறீர்கள். உங்கள் தூய்மையில் தவறிவிடுகிறீர்கள். நீங்கள் மாசு பட்டவர் என்று அடையாளப்படுத்தப்படுகிறீர்கள். அடையாளப் படுத்தப்படாது இருப்பதே தூய்மையானதாகும்.

கடும் கோபத்தைத் தவிர்த்திடுங்கள். எல்லா மூர்க்கத்தனங் களையும் தவிர்த்து விடுங்கள். கடுங்கோபத்துடன் என்ன செய்தாலும் அது தவறாகிவிடும். நீங்கள் சரியானதைச் செய்தாலும் தவறாகிவிடும்.

அது பிதாகோரஸின் சொந்த வாழ்வில் நடந்தது. இந்த சூத்திரம் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. அவர் கிழக்கு நாட்டி லிருந்து திரும்பினார். பல சீடர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். 'நானாக' இல்லாதிருப்பது என்ற காந்தக் கவர்ச்சியை அவர் கொண்டு வந்திருந்தார். மிகவும் விலைமதிப்புள்ள ஒன்றை அவர் எடுத்து வந்திருந்தார். அது புதையல் போன்றது என்பதால் தேடியலைந்து

கொண்டிருந்த மக்கள் அவரை நாடி வந்தார்கள். தான் கொண்டு வந்திருந்த செய்தியைத் தருவதில் அவர் பெரிதும் ஆர்வத்துடன் இருந்தார். அந்த பொக்கிஷத்தைப் பகிர்ந்துகொள்ள விரும்பினார். அவருக்கு வயதாகிவிட்டது. கிழக்கிலிருந்து நிறையச் செல்வத்தை அகச் செல்வத்தைக் கொண்டு வந்திருந்தார். அதைப் பகிர்ந்துகொள்ள முடியுமோ, முடியாதோ என்று அஞ்சினார். தனது வாழ்நாள் முழு வதும் அவர் தேடியலைந்தார். அவசரததில் இருந்தார். வந்து சேர்ந்த சீடர்களிடம் கடுமையாக நடந்து கொண்டார். அது முதல் சீடர்களின் அணியாகும். அவர்கள் முடிந்தவரை விரைவில் மேம்பாட்டை அடைய வேண்டும் என்று விருப்பம் கொண்டிருந்தார். நாளையே அவர் இறந்துபோகலாம், என்ன நடக்குமென்று யாருக்குத் தெரியும்? வயது முதிர்ந்து போயிருந்தார். ஆபத்து அது மட்டுமல்ல. ஆட்டு மந்தைக் குணம் கொண்ட மனிதர்கள் கூட்டம் அவருக்கு எதிராக இருந்துவந்தது.

சத்தியத்தைக் கண்டறிய விரும்புவோர் அவரிடம் அன்பு பாராட்டினார்கள். பொய்யான வாழ்க்கை வாழ்ந்தவர்கள் கூட்டம் மூலம் சத்தியவேட்கை கொண்டவர்கள் துயரப்பட நேர்ந்தது. எந்த நிமிடமும் யாரும் சொல்லப்படலாம் என்ற ஆபத்து இருந்து வந்தது. இயற்கை மரணம் வரப்போவதில்லை. மக்கள் மந்தையால் அவர் எந்த நேரத்திலும் கொல்லப்பட வாய்ப்பு இருந்தது. எனவே அவருக்கு ஒரு அவசரம் ஏற்பட்டது இயல்புதான். தகுதியானவர்களிடம் அவர் மிகவும் கடுமையாக நடந்து கொண்டார்.

தகுதியுள்ள சீடர் தப்பு செய்தால் அவர் என்ன செய்கிறோம் என்று தெரியாது. கோபத்துடன் நடந்து கொண்டார். அன்பும், பரிவும் கொண்ட நற்பண்பாளர் பிதாகோரஸ் சீடரிடம் கடுமையாக நடந்து கொண்டார். சீடருக்கு அது குரு கோபமாக இருப்பது போன்ற எண்ணத்தை ஏற்படுத்தியது. உண்மையில் அவர் கோபத்துடன் இல்லை. ஆனால் அந்த கோபம் சீடரிடம் மோசமான விளைவை ஏற்படுத்தியது.

ஒரு சீடர் தற்கொலை செய்து கொண்டார். அந்த காயம் பிதா கோரஸின் மனதில் ஆழமாகப் படிந்து விட்டது. அதன் பிறகு சீடர் களிடம் அவர் கடுமையாக நடந்து கொண்டதாக யாரும் கேள்விப் படவே இல்லை. குரு கோபமாக இருக்கிறார் என்று நினைக்கும்படி ஒரு வார்த்தையும் கடுமையாகப் பேசியது கிடையாது. அந்த தற்கொலை குறித்து சீடர்கள் வருந்தினார்கள். நல்ல குதிரை, மோசமான குதிரை என்று இருபிரிவுகள் உண்டு என்கிறார் புத்தர். நல்ல குதிரைக்கு சாட்டையின் நிழலைக் காட்டினாலே போதும். அவர் அந்த வகையான

மனிதர். குதிரையை அடிக்க வேண்டாம். நிழலைக் காட்டினாலே போதும்...

சீடர் சத்தியத்திற்கு மிக நெருக்கமாக இருந்தார். அப்படிப் பட்ட சிறந்த தகுதிகள் அரிதானவை. குருவை வருந்தச் செய்து விட்டதால் தன்னைப் பற்றி மோசமான குற்ற உணர்வு கொண்டிருந்தார். விழிப் புணர்வுடன் இருக்க உறுதி கூறியிருந்தாலும் விழிப்புணர்வில்லாது போய்விட்டார். எதையும் அவரால் சிந்திக்க முடியவில்லை. தற்கொலை செய்து கொண்டார்.

அன்றிலிருந்து கடுங் கோபத்தைத் தவிர்க்க வேண்டும் என்ற கருத்தைப் பிதாகோரஸ் ஏற்படுத்திக் கொண்டார். அது நல்ல விளைவு களை ஏற்படுத்தக்கூடியதாக இருந்தாலும் கோபம் கொண்டுவிடக் கூடாது. கோபம் விஷத்தைப் போல செயல்படக் கூடியது. அது நல்ல விஷயத்துடன் சேர்ந்தாலும் நல்லதின் அழகை அது அழித்து விடும்.

**பொது இடத்திலும், தனிமையிலும் நீங்கள் தவறு செய்ய உங்களை அனுமதிக்காதீர்கள்.**

தவறு என்பது என்ன? விழிப்புணர்வு இல்லாது இருப்பதே தவறு செய்தலாகும். விழிப்புணர்வு இல்லாது செயலாற்றுவது தவறு செய்தலாகும். நற்பண்பு என்றால் என்ன? விழிப்புணர்வுடன் காரியங்கள் செய்தலே நற்குணமாகும். பிதாகோரஸ் எந்த நன்நெறி விளக்கத்தையும் உலகிற்கு அளித்துவிட்டுச் செல்லவில்லை. உண்மை யான முனிவர் எந்த நன்நெறியையும் உலகிற்கு வழங்கிவிட்டுச் செல்வது கிடையாது. உண்மையான விவேகத்திலிருந்து எப்போதும் ஒரு குரல் மட்டுமே எழும். எது செய்தாலும் அதில் விழிப்புடன் இருங்கள் என்று அது கூறும் தனியிடமோ, பொது இடமோ, எதுவாக இருந்தாலும் விழிப்புடன் செயல்படுங்கள். விழிப்புடன் நடந்து கொள்ளுங்கள்.

இப்படி ஒரு கதை உண்டு.

ஒருநாள் புத்தர் தனது சீடர்களுடன் நடந்து சென்று கொண் டிருந்தார். அச்சம்பவம் அவன் ஞானம் பெறுவதற்கு முன்பு நடந் திருக்கலாம். ஞானமடைவதற்கு முன்பே அவருக்குச் சில சீடர்கள் இருந்தார்கள். அதிகாலை என்பதால் ஒளி படரத் துவங்கியிருந்தது. சூரியன் இன்னும் உதிக்கவில்லை என்றாலும் வானம் செந்நிறத்துடன் காணப்பட்டது. பூமியில் வெளிச்சம் பரவியிருந்தது. தொடுவானில் சூரியன் மேலே எழுவதற்குத் தயாரானான்.

புத்தர் ஞானம் பெறுவதற்கு முன்பு அவருக்கு ஐந்து சீடர்கள் இருந்தார்கள். அந்த ஐந்து சீடர்களுடன் அவர் நடந்து கொண்டிருந்தார்.

அப்போது ஒரு ஈ அவர் தலை மீது வந்து அமர்ந்தது. அது பற்றிக் கவலைப்படாமல் புத்தர் தனது சீடர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். இயந்திரத்தனமாக அவர் கையை அசைத்தார். ஈ பறந்து சென்று விட்டது. அதன் பிறகு நின்று தனது கண்களை மூடிக் கொண்டார். என்ன நடக்கிறது என்று சீடர்களுக்கு புரியவில்லை. ஏதோ முக்கியத் துவம் நிறைந்த ஒன்று நிகழ்கிறது என்று உணர்ந்து எல்லோரும் மௌனமானார்கள்.

அவர் முகம் அதிகம் பிரகாசம் பெற்றது. மெதுவாகத் தனது கையை உயர்த்தினார். ஈ அங்கே முன்னெற்றியில் இருப்பது போல் பாவித்து கையை வீசினார். ஆனால் ஈ இல்லை. "என்ன செய்கிறீர்கள்? ஈ இல்லையே?" என்று சீடர்கள் கேட்டனர்.

அதற்கு புத்தர், "இப்போது நான் சுயஉணர்வுடன் கையை வீசினேன். முன்பு நான் விழிப்புணர்வின்றி வீசினேன். விழிப்புடன் இருக்கும் ஒரு வாய்ப்பை நான் தவறவிட்டேன். நான் உங்களுடன் அதிகமாகப் பேசிக் கொண்டிருந்ததால் கை இயந்திரத்தனமாகத் தானாக உயர்ந்தது. விழிப்புணர்வுடன் அது உயர வேண்டும். இப்போது நான் அந்த விழிப்புடன் கையை அசைத்தேன்" என்றார்.

இதுவே நற்பண்பின் பாதையாகும். சிறிய விஷயங்களிலும் எச்சரிக்கையுடன் இருங்கள். சிறிய பாவனைகள், அசைவுகள் போன்ற வற்றிலும் முழு விழிப்புடன் செயல்படுங்கள்.

**நீங்கள் தெரிவிக்க விரும்புவது பற்றிப் பேசாதீர்கள். அதைச் செயலில் காட்டுங்கள். நேர்மையுடன் இருங்கள்.**

பிரதிபலித்தல் என்ற வார்த்தையைப் புரிந்துகொள்ள வேண்டும். அகராதிகள் சொல்வதுபோல அது சிந்தித்தல் என்ற பொருளில் வருவதல்ல. சரியானபடி அது கண்ணாடியில் பிரதிபலித்தல் என்பதாகும். நீங்கள் இந்த சூத்திரத்தைப் படிக்கும்போது **நீங்கள் தெரிவிக்க விரும்புவது பற்றிப் பேசாதீர்கள். அதைச் செயலில் காட்டுங்கள்** என்று கூறப்பட்டுள்ளதாக நினைப்பீர்கள். முதலில் அது பற்றிச் சிந்திக்க வேண்டும். பிறகு செயல்பட வேண்டும் என்று எண்ணு வீர்கள். இல்லை. நீங்கள் சூத்திரத்தைத் தவறாகப் படித்துவிட்டீர்கள்.

ஒருவர் கண்ணாடி போலிருக்க வேண்டும். சிந்திப்பது என்பது கண்ணாடியில் பிரதிபலிப்பதற்கு எதிரானது. பிரதிபலித்தல் என்பது சிந்தனையின்றி விழிப்புடன் இருப்பதாகும். ஒரு கண்ணாடி போன்று இருங்கள். அந்த பிரதிபலித்தலில் இருந்து செயல் வெளிப்பட அனுமதியுங்கள். அதன் பிறகு எல்லாம் நல்லதாகவே அமையும். நீங்கள் சிந்தித்தால், எதைப் பற்றிச் சிந்திக்க முடியும்? நீங்கள் கடந்த காலத்தில்

இருந்து அவற்றை வெளியே கொண்டு வருகிறீர்கள். கடந்த காலத்து அனுபவங்கள், நினைவுகள் போன்றவற்றை வைத்துக்கொண்டு செயல்படுவீர்கள். கடந்த காலத்தை வைத்துக்கொண்டு செயல்படுவது பொறுப்பான காரியம் அல்ல. அது செயல்பாடு அல்ல. எதிர்வினை யாகும். அது இயந்திரத்தனமானது. இக்கணத்தில் செயல்படுதல், தன்னிச்சையாக இப்போதே செயல்படுதல் வேண்டும். இங்கு இப்போது தேவைப்படுவது பிரதிபலித்தல்தான். சிந்திப்பது அல்ல.

ஒரு கண்ணாடி போன்று இருங்கள். ஒரு வார்த்தை சொல்லும் முன்னரோ, செயல்படும் முன்னரோ சிந்தனை நிலையில் இருங்கள். அதன் பின்னர் எதுவும் தவறாகிப் போகாது. நீங்கள் வருந்தும் அவசியம் நேராது.

நேர்மையுடன் இருங்கள்.

நியாயம் என்று பிதாகோரஸ் எதைச் சொல்கிறார்? இரட்டை நிலைகள் கொள்ளாதீர்கள். உங்களுக்கு என்று ஒன்றும், பிறருக்கு என்று ஒன்றும் கண்ணோட்டம் கொள்ளாதீர்கள். எப்போதும் ஒரே நிலையில் இருங்கள். அதுவே நியாயத்தின் பக்கம் இருத்தலாகும்.

நாம் எல்லோரும் இரட்டைத் தர நிலைகள் கொண்டிருக்கிறோம்.

முல்லா நஸ்ருதீனின் மகன் கேட்டார். "அப்பா! ஒரு முகமதியர் கிறிஸ்தவரானால் அவரை எப்படிக் குறிப்பிடுவீர்கள்?"

அதற்கு அவர் "சந்தர்ப்பவாதக் கொள்கைவாதி என்று குறிப் பிடுவேன்" என்றார்.

"ஒரு கிறிஸ்தவர் முஸ்லிமாக மாறினால் என்ன சொல்வீர்கள்?"

முல்லா சிரித்துக்கொண்டே, "விஷயம் தெரிந்த மனிதர் என்பேன்" என்றார்.

இதுவே இரட்டைத் தரநிலையாகும். ஒரு இந்து கிறிஸ்தவ ரானால் அவருக்குப் புரிந்துகொள்ளும் திறன் வந்துவிட்டதாக கிறிஸ்தவர்கள் நினைக்கிறார்கள். ஒரு கிறிஸ்தவர் இந்துவாக மாறினால் அவர் துரோகியாகி விட்டதாகக் கண்டனத்திற்கு ஆளாகிறார். இவையே இரட்டைத் தரநிலைகள்.

நியாயமான மனிதரிடம் ஒற்றைத் தரநிலையே காணப்படும். தனக்கும், பிறருக்கும் அது பொதுவானதாக இருக்கும்.

> தோற்கடிக்க முடியாத ஒரு சக்தி உத்தரவு போட்டுச் சாகடிக் கிறது என்பதை மறவாதீர்கள். செல்வ வளங்களும் மரியாதை களும் எளிதில் கிட்டுகின்றன. அவ்வாறே அவை எளிதில் நழுவிப் போய்விடுகின்றன.

மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. நீங்கள் பிறக்கும்போதே அது வந்து சேர்ந்துவிட்டது. பிறப்பு உங்கள் இறப்பைத் தீர்மானிக்கிறது. அதை நீங்கள் தவிர்க்க இயலாது அதைத் தவிர்த்துவிட எந்த வழியும் இல்லை. மரணத்தைத் தவிர்க்க ஒரு வழி பிறக்காமல் இருப்பது தான். ஆனால் நீங்கள் ஏற்கெனவே பிறந்துவிட்டீர்கள். பகலைத் தொடர்ந்து இரவு வருவதுபோல மரணம் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

மரணம் குறித்து நாம் மறந்துவிட்டோம் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். எப்போதும் இங்கு வாழ்ந்திருக்கப் போவதாக எண்ணிக்கொண்டு ஜீவிக்கிறோம். அதனால்தான் நிஜமான பொக்கிஷத்தை, இயற்கை சாம்ராஜ்ஜியத்தை, சுயத்தைத் தேடியடைவதற்கான வாய்ப்புகளைத் தவறவிட்டு விடுகிறோம். நாம் மேலோட்டமான சிந்தனைகளில் மூழ்கி, "நாம் இங்கே இருக்கப் போகிறோமே, எதற்கு அவசரப்பட வேண்டும்? நாளைக்கு தெய்வீகத்தைத் தேடிக் கொள்ளலாம். இன்று வங்கியில் கொஞ்சம் பணம் சேர்ப்போம்" என்று யோசிக்கிறோம்.

**செல்வ வளங்களும், மரியாதைகளும் எளிதில் கிட்டுகின்றன. அவ்வாறே அவை எளிதில் நழுவிப் போய்விடுகின்றன.**

மரணம் சகலத்தையும் உங்களிடமிருந்து பறித்துக் கொள்ளப் போகிறது, வெறும் கையுடன் வந்த நீங்கள் வெறும் கையுடனே திரும்பிப் போவீர்கள். உள்முகமாக நீங்கள் திரும்பிப் பார்க்காத வரையில் வெறுமையாகவே இருப்பீர்கள். உள்ளே பார்க்கத் தொடங்கியதும் பேரரசராகி விடுவீர்கள். உங்களிடமிருந்த பிச்சைக்காரர் சட்டென்று மறைந்து போய்விடுவார். மனம் ஒரு பிச்சைக்காரன் போன்றது. ஆன்மா சக்ரவர்த்தி போன்றது.

ஒருவர் தன்னைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமானால், எனக்கு எதுவும் தேவையில்லை. தேவையான அனைத்தும் ஏற்கெனவே வழங்கப்பட்டுவிட்டது என்று உணர்தல் வேண்டும். "என்னிடம் அற்புதமான சிறந்த பொக்கிஷம் உள்ளது. இயற்கையின் சாம்ராஜ் ஜியத்தை நான் பெற்றுள்ளேன். அதில் எதையும் சேர்க்கும் வேலைக்கே அவசியமில்லை. எதையும் அதில் சேர்க்கவும் இயலாது. ஏற்கெனவே அது கச்சிதமாக அமைந்திருக்கிறது" என்று புரிந்துகொள்ளல் வேண்டும்.

தேடல் மற்றும் விருப்பம் போன்றவை உங்களிடம் இருந்தால், மரணத்தால் அப்புறப்படுத்த இயலாத உண்மைப் பொக்கிஷத்தைத் தேடுங்கள். அதற்கான திட்டமான அளவீடு இதுதான். மரணத்தால்

அப்புறப்படுத்தப்படும் பொக்கிஷம் ஒரு போலியான பொக்கிஷமாகும். அப்புறப்படுத்த இயலாததே நிஜமான பொக்கிஷம்.

**தீமைகளுடன் ஊழ்வினை சம்பந்தப்பட்டிருக்கிறது. அவை எப்படிப் பட்டவை என்று மதிப்பீடு செய்யுங்கள். உங்களிடம் இருக்கும் சிறப்பு அம்சங்களை மேம்படுத்திக் கொள்ளலாம்.**

வாழ்வில் பல்வேறு வலிகளும், இடையூறுகளும் இருக்கின்றன. அவை எல்லாம் வளர்ச்சியின் ஒரு அங்கம். எந்த நிலையில் அவை இருந்தாலும் அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். அது ஆரோக்கியமற்ற நிலை அல்ல. துயரத்தை அனுபவிப்பதில் சுகம் காணும் செயலும் அல்ல. எது நடந்தாலும் அதை சகித்துக் கொள்ளுங்கள். உங்களால் முடிந்தால் அதை வைத்து உங்களை மேம்படுத்திக் கொள்ளுங்கள். உங்களால் மேம்படுத்திக் கொள்ள இயலும். இது அறிவுபூர்வமான அறிவுரையாகும்.

ஆபத்து அங்கே இருக்கிறது. மக்கள் வாழ்வின் ஒவ்வொரு வலியுடனும் போராடுகிறார்கள். அவர்கள் எல்லா வலிகளையும் தவிர்த்துவிட நினைக்கிறார்கள். அப்படிச் செய்யும்போது வளர்ச்சி தவிர்க்கப்பட்டு விடுகிறது. அதுவும் ஒருவித வலிதான். மற்றொரு படுகுழியும் உண்டு. மக்கள் வலிகளை ஏற்றுக்கொள்ளத் தொடங்குகிறார்கள். ஏற்றுக் கொள்வது மட்டுமின்றி அவற்றை வரவேற்கவும் செய்கிறார்கள். அதுமட்டுமல்ல, வலிகளை உருவாக்கவும் செய்கிறார்கள். பல்வேறு வலிகளில் அடிபடும்போது அதன் வளர்ச்சி வேகம் பிடிக்கிறது. அவர்கள் தங்களை அழித்துக் கொள்ளத் தொடங்குகிறார்கள். தற்கொலை செய்து கொள்பவர்களாக மாறுகிறார்கள். அந்த இரண்டுமே உச்ச நிலைகள். அவை தவிர்க்கப்பட வேண்டியவை. உங்கள் வாழ்வில் சில வலிகள் ஏற்பட்டால் அவற்றைச் சகித்து ஏற்றுக் கொள்ளுங்கள். சாட்சியாக இருந்து அதன் மூலம் வளர்ச்சி பெறுங்கள். இங்கொன்றும் அங்கொன்றுமாக சில மேம்படுத்தல்கள் செய்ய முடியும் என்றால் அவ்வாறு செய்யுங்கள். காரணம் மேம்படுத்தலும் வளர்ச்சியின் ஒரு அங்கம்தான்.

எப்போதும் இதை நினைவில் கொள்ளுங்கள்.

**தெய்வங்களும் சிலவற்றைத் துறவிகளிடம் வெளிப்படுத்த குரூரம் கொண்டிருக்கின்றன.**

அறிவுள்ள மனிதர் எப்போதும் தங்கள் மனக்கிலேசம், நரகத் துன்பம் போன்றவற்றை வெளிக்காட்டுவதில்லை. முனிவர் எதை வெளிப்படுத்தினாலும் அது வளர்ச்சியின் ஒரு அங்கமாகவே இருக்கும். வலிகளும், சவால்களும் இல்லாது வாழ்க்கை வளர்ச்சி பெறமுடியாது.

துன்பங்கள் துயரங்கள் சவால்களைக் கொண்டு வருகின்றன. துயரப் படாமல் நீங்கள் விழிப்படைய முடியாது. துயரம் உங்களிடம் விழிப்பை ஏற்படுத்துகிறது.

**சத்தியமும் தனது அன்பர்களிடம் தவறு செய்து விடுகிறது.**

**தத்துவவாதி விவேகத்துடன் அதை அங்கீகாரம் செய்கிறார் அல்லது குற்றம் சாட்டுகிறார்.**

**ஒருவேளை தவறு வெற்றி பெறுமானால் அவர் விலகிச் சென்று காத்திருக்கிறார்.**

இந்த முழு உலகமும் சத்தியத்தின் மீது நேசம் கொண்டதாக இல்லை என்பதை ஞாபகத்தில் வையுங்கள். பெரும்பான்மையோர் அதற்கு எதிராக இருக்கிறார்கள். பெரும்பான்மையோர் சத்தியத்தை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. அது பொய்களால் அதிகம் அலங்கரிக்கப்பட்டுள்ளது.

**சத்தியமும் தனது அன்பர்களிடம் தவறு செய்து விடுகிறது.** முழு உலகமும் உண்மையின் மீது காதலுடன் இல்லை என்பது நினைவிருக்கட்டும். அவர்கள் மீது கோபம் கொள்ள வேண்டாம். அது அவர்கள் தேர்வாகும். தவறுகளை அவர்கள் விரும்பினால், பொய்கள் மிகவும் சரியானவைதான். அவர்களுக்குச் சுதந்திரம் உண்டு. அவர்கள் மீது சினம் கொள்ள வேண்டாம். அவர்களைக் குறைகூற வேண்டாம்.

**தத்துவவாதி விவேகத்துடன் அதை அங்கீகரிக்கிறார் அல்லது குற்றம் சாட்டுகிறார்.**

தத்துவவாதி சில சமயம் சிலவற்றை அங்கீகரிக்கிறார் அல்லது குற்றம் சாட்டுகிறார். எப்போதும் அது பெரிய அளவிலான விழிப்புணர்வுடன் நடப்பதாகும். அது யாரையும் குற்றம் சாட்டும் செயலோ, பாராட்டும் காரியமோ அல்ல. அவர்களுக்கு செய்யவே அவ்விதம் செய்கிறார். அவை எல்லோருக்கும் ஆசிர்வாதங்களாகின்றன.

**ஒருவேளை தவறு வெற்றி பெறுமானால் அவர் விலகிச் சென்று காத்திருக்கிறார்.**

நீங்கள் வெற்றிப் பெருமிதம் கொள்ளத் தேவையில்லை. சத்தியம் உங்கள் பக்கம் இருக்கிறது. ஏசு சிலுவையில் அறையப் பட்டார். சத்தியம் சிலுவையில் அறையப்பட்டது. சாக்ரட்டீஸ் விஷமூட்டப்பட்டார். அது சத்தியத்திற்கு விஷமூட்டியதாகும். சத்தியம் உங்களிடம் இருப்பதால் நீங்கள் வெற்றி பெற்றிட முடியும் என்று எண்ண வேண்டாம். ஆட்டு மந்தை மக்கள் கூட்டம் தங்கள் மூட நம்பிக்கைகள், குருட்டுத் தனம், அறியாமை போன்றவற்றில் ஆழ்ந்து

கிடக்கிறது. மந்தைக் கூட்டத்து மக்கள் பலம் கொண்டவர்கள். அவர்களே பூமியில் பெருவாரியானவர்களாக இருக்கிறார்கள்.

**ஒருவேளை தவறு வெற்றி பெருமானால்....**

தவறுகள் வெற்றி பெறவும் நிறைய வாய்ப்பு இருக்கிறது. அறிவாளிகளும், தத்துவவாதிகளும் **விலகிச்** சென்று **காத்திருக் கிறார்கள்.** சரியான தருணத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கிறார்கள். அவர்கள் கோபம் கொள்வதில்லை. ஏமாற்றம் அடைவதில்லை. சத்தியம் வெற்றி பெறும் என்று எதிர்பார்ப்பதில்லை. எது நடந்தாலும் அதை ஏற்றுக் கொள்கிறார்கள். சரியான தருணம் வரும்வரை காத்திருக் கிறார்கள். அந்த தருணம் வந்ததும் மீண்டும் சத்தியத்தை எடுத்துரைக் கிறார்கள்.

தத்துவவாதி எப்போதும் காத்திருக்கிறார். அவர் மக்களிடம் அதிகாரம் செலுத்துவதில்லை. அவர் மக்களை மதிக்கிறார், அவர்கள் சுதந்திரத்தை மதித்து அன்பு காட்டுகிறார். அவர்கள் கண்ணியத்தை மதித்து, அவர்கள் தேர்வை ஏற்றுக் கொள்கிறார். மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தும் எண்ணம் அவரிடம் இல்லை. எனவே காத்துக் கொண் டிருக்கிறார்.

எப்போதும் அப்படித்தான் நடக்கிறது. சீடர் வருவதற்காக குரு காத்திருக்கிறார். உண்மையான குரு சீடரை எதிர்பார்த்து எப்போதும் காத்திருக்கிறார். அவர் சீடரைத் தேடியலைவதில்லை. ஒரு விதத்தில் அது தனது அதிகாரத்தைப் பிறர் மீது திணிப்பது போன்ற காரியமாகி விடும். தாகம் கொண்டவர்கள் அவரை வந்தடைவார்கள். அவர்கள் வந்தால் நல்லது. தன்னிடம் உள்ளதை அவர் பகிர்ந்து அளிக்கிறார். அவர்கள் வராதுபோனால் அதுவும் நல்லதுதான். வருவதும், வராமல் இருப்பதும் அவர்களின் சுதந்திர உரிமையாகும்.

இன்று இவ்வளவு போதும்.

# விழிப்புணர்வே முதன்மையான திறவுகோல்

அத்தியாயம் - 7

முதல் கேள்வி

ஓஷோ

நீங்கள் இன்று விழிப்புணர்வு மற்றும் சுயஉணர்வு பற்றிப் பேசினீர்கள். ஒருவரின் செயல்களை வழிநடத்த இவை தேவைப்படுகின்றன என்று தோன்றுகிறது. சுயஉணர்வும், விழிப்புணர்வும் இல்லாத நிலையில் கொலை, கற்பழிப்பு, திருட்டு போன்றவற்றைச் செய்திருந்தால் மட்டுமே அவை தவறானவை என்று கொள்ளலாமா?

ஆம். விழிப்புணர்வு இல்லாதிருப்பதுதான் பாவச்செயல். ஒரே நற்பண்பு விழிப்புடன் இருத்தலாகும். விழிப்புணர்வு இல்லாமல் செய்ய முடியாது போகும் காரியங்கள் எல்லாம் பாவமாகும். விழிப்புணர்வுடன் செய்யப்படும் செயல்கள் யாவும் நற்செயல்களாகும். விழிப்புணர்வுடன் இருந்தால் உங்களால் கொலை செய்ய முடியாது. நீங்கள் விழிப்புணர்வோடு இருக்கும் சமயத்தில் வன்முறையில் இறங்க முடியாது. கற்பழிக்க, திருட, சித்திரவதை செய்ய இயலாது. விழிப்புணர்வு இருக்கும்போது அவை நடக்க முடியாத செயல்

களாகும். விழிப்புணர்வற்ற, இருள்நிலை வெளிப்படும்போது எல்லா விதமான எதிரிகளும் உங்களுக்குள் புகுந்து கொள்கிறார்கள்.

"வீட்டில் விளக்கு எரிந்தால் திருடர்கள் அந்த வீட்டைத் தவிர்த்து விடுகிறார்கள். காவல்காரன் விழிப்புடன் இருந்தால் அவர்கள் திருட முயற்சிக்க மாட்டார்கள். மனிதர்கள் வீட்டினுள் நடந்து கொண்டும், பேசிக் கொண்டும் இருந்தால் அந்த வீட்டினர் தூங்கவில்லை என்று தெரிந்துவிடும். திருடர்களுக்கு உள்ளே நுழைய மட்டுமின்றி, அது பற்றிச் சிந்திக்கவே வாய்ப்பு இல்லாது போய்விடுகிறது" என்கிறார் புத்தர்.

சரியாக உங்களுக்கும் அதே நிலைதான். நீங்கள் விளக்கு இல்லாத வீடாக இருக்கிறீர்கள். தன்னிச்சையான இயந்திரத்தனம் என்பதே சாதாரண மனிதனின் இயக்க நிலையாக உள்ளது. பெயரளவுக்கு நீங்கள் ஒரு மனிதர். மற்றபடி நீங்கள் ஒரு திறமையான, பயிற்சி பெற்ற இயந்திரம். நீங்கள் எந்தக் காரியம் செய்தாலும் அது தவறாகிவிடுகிறது. நீங்கள் **எது செய்தாலும்** என்று நான் கூறுவதைக் கவனிக்கவும். நீங்கள் விழிப்புணர்வற்று இருந்தால் உங்கள் நற்பண்புகளும் நற்பண்புகளாக இருக்காது. விழிப்புணர்வு இல்லாதபோது நீங்கள் நற்பண்பாளராக இருக்க இயலும்?

உங்கள் நற்பண்புகளின் பின்னால் பெரிய அகந்தையும் உங்களிடம் வந்து சேர்ந்து விடுகிறது. உங்கள் துறவி நிலை கடும் உழைப்பாலும், முயற்சியாலும், பயிற்சியாலும், கடைப்பிடித்தல் முறைகளாலும் உருவானதாகும். அது பயனற்றது. ஏனென்றால் அது எளிமையைக் கொண்டு வரவில்லை. பணிவைக் கொண்டுவரவில்லை. எந்த சிறந்த தெய்வீக அனுபவத்தையும் கொண்டுவரவில்லை. அகந்தை மறையும்போதுதான் அது நிகழும். துறவி என்ற மதிப்புமிக்க வாழ்வை நீங்கள் வாழக்கூடும். ஆனால் எங்கும் காணப்படும் ஏழைகள் போன்றுதான் நீங்கள் இருக்கிறீர்கள். உள்ளே உளுத்துப்போய், அர்த்தமற்ற வாழ்க்கை வாழ்கிறீர்கள். அது வாழ்வே அல்ல. சோம்பேறியாகக் காலம் தள்ளுவதாகும். உங்கள் பாவங்கள் பாவங்களே. உங்கள் நற்பண்புகளும் பாவங்கள்தான். உங்கள் தீயொழுக்கமும் தீயொழுக்கம்தான். நல்லொழுக்கம் தீயொழுக்கம்தான். நான் உங்களுக்கு நல்லொழுக்கம் கற்றுக் கொடுக்க வரவில்லை. நற்பண்புகள் கற்றுத் தரவும் வரவில்லை. விழிப்புணர்வு இல்லாவிட்டால் அவை எல்லாம் வெளிவேஷம் பாவனைகள் என்று எனக்குத் தெரியும். அவை உங்களைப் பொய்யானவராக்குகின்றன. அவை உங்களுக்கு விடுதலை தருவதில்லை. அவற்றால் விடுதலை தர இயலாது. அதற்குப் பதிலாக அவை உங்களுக்கு சிறைவாசத்தையே தரும்.

ஒரு விஷயம் மட்டும் போதும். விழிப்புணர்வே பிரதானமான திறவுகோலாகும். வாழ்வின் அனைத்துப் பூட்டுகளையும் அது திறந்து விடுகிறது. விழிப்புணர்வு என்றால் நீங்கள் கணத்துக்குக் கணம் வாழ்கிறீர்கள். விழிப்புடன், மன உணர்வுடன், உங்களைச் சுற்றி நடப்பவை பற்றி தெளிவுடன், கணத்துக்குக் கணம் அதற்கு பதிலளித்து கொண்டு வாழ்கிறீர்கள். நீங்கள் ஒரு கண்ணாடி போல் இருக்கிறீர்கள்.

பிரதிபலித்தல் என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று பிதாகோரஸ் விரும்பினார். பிரதிபலித்தலில் இருந்து கிடைப்பதை முழுமையாகப் பிரதிபலிக்கவும். எந்த ஒரு செயல் தோன்றினாலும் அது சரியானதுதான். அது பொருந்தி வருகிறது. இயற்கையுடன் இசைந்திருக்கிறது. அது உங்களிடமிருந்து நிஜமாக எழவில்லை. அதை செயல்படுத்தியவர் நீங்கள் அல்ல. முழுமையான ஒரு சூழலில் இருந்து அது எழுந்திருக்கிறது. நீங்களும் மற்ற அனைத்தும் அதில் சம்பந்தப்பட்டு இருக்கிறீர்கள். அந்த முழுமையில் இருந்து அச்செயல் பிறந்தது. அது உங்கள் செயல் அல்ல. அவ்விதமாக அதை செய்வதென்று நீங்கள் தீர்மானிக்கவில்லை. உங்கள் எண்ணம் அதுவல்ல. உங்கள் கருத்து அதுவல்ல. அது உங்கள் குணாதிசயமல்ல. நீங்கள் அதைச் **செய்யவில்லை** அது நடந்தேற நீங்கள் **அனுமதி மட்டும்** தந்தீர்கள்.

காலை வேளையில் நடந்து சென்று கொண்டிருக்கிறீர்கள். சூரியன் இன்னும் உதிக்கவில்லை. பாதையின் குறுக்கே கிடக்கும் ஒரு பாம்பின் அருகே சென்று விடுகிறீர்கள். சிந்திக்க நேரமில்லை. எதிர் வினை புரியவே முடியும். என்ன செய்யலாம், செய்யக் கூடாது என்று தீர்மானிக்க நேரமில்லை. நீங்கள் உடனே குதிக்கிறீர்கள். **உடனே** என்ற வார்த்தையைக் கவனியுங்கள். ஒரு கணமும் தாமதிக்கவில்லை. உடனே பாதையிலிருந்து குதித்து அப்பால் சென்று விடுகிறீர்கள். பிறகு நீங்கள் ஒரு மரத்தடியில் அமர்ந்து அது பற்றிச் சிந்திக்கிறீர்கள். என்ன நடந்தது, அப்போது நீங்கள் என்ன செய்தீர்கள் என்று யோசித்து உங்கள் முதுகில் நீங்களே தட்டிப் பாராட்டிக் கொள்கிறீர்கள். ஆனால் உண்மையில் நீங்கள் அதைச் செய்யவில்லை. அது நடந்தேறியது. முழுமைச் சூழலில் இருந்து அது நடந்தேறியது. நீங்கள், பாம்பு, மரணம் தரும் ஆபத்து, உயிர் காத்துக் கொள்ளும் முயற்சி போன்ற ஆயிரத்தொரு விஷயங்கள் அதனுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. முழுமைச் சூழல் அந்த செயலை நிகழ்த்திற்று. நீங்கள் வெறும் ஊடகமாகவே இருந்தீர்கள். இப்போது இந்த செயல் பொருத்தமானதாகிறது. அதைச் செய்தவர் நீங்கள் அல்ல ஆன்மீகக் கண்ணோட்டத்தில் நாம் சொல்லும் போது இயற்கை உங்களின் துணையோடு அதை நடத்தியது

என்கிறோம். அது ஆன்மீகக் கண்ணோட்டம் அவ்வளவுதான். நற்டண்பு என்ற பங்களிப்புடன் முழுமைநிலை செயல்பட்டிருக்கிறது. அதற்காக நீங்கள் வருந்தத் தேவையில்லை.

இதுவே நிஜமான விடுபடும் செயலாகும். ஒருமுறை அது நடந்தால் அத்தோடு முடிந்துவிடுகிறது. நீங்கள் மீண்டும் செயல்படும் சுதந்திரம் பெறுகிறீர்கள். உங்கள் அறிவில் இதை நீங்கள் சுமந்து கொண்டிருப்பதில்லை. உங்கள் உடல் சார்ந்த நினைவுகளின் ஒரு அங்கமாக அது அமைவதில்லை. அது அந்த காயத்தையும் ஏற்படுத்தி விட்டுப் போவதில்லை. அது இயல்பானது. அடையாளங்கள் எதையும் உங்களிடம் விட்டுச் செல்வதில்லை. அச்செயல் கர்மாவாக மாறுவது இல்லை. அந்த செயல் எந்த கீறலையும் உங்கள் மீது விட்டுச் செல்வதில்லை. கர்மாவாக மாறும் ஒரு செயல் நிஜமான செயல் அல்ல. அது கடந்த காலத்துச் செயலின் எதிர்வினை ஆகும். அது கடந்த காலத்துச் சிந்தனை, நினைவுகளில் இருந்து வெளிப்படுகிறது. நீங்கள் முடிவு செய்பவராக தேர்வு செய்பவராக இருக்கிறீர்கள். அது விழிப் புணர்வு அல்ல. விழிப்புணர்வு இல்லாத காரியமாகும். அப்போது அது பாவச் செயலாகி விடுகிறது.

என்னைப் பொறுத்தவரை விழிப்புணர்வே அனைத்துமாக இருக்கிறது. நான் விழிப்புணர்வு பற்றி கற்பிக்கிறேன்.

குகை வாழ்க்கை பற்றிய குட்டிக்கதை மூலம் பிளேட்டோ கற்றுணரும் செயல்பாடு பற்றி விளக்க முற்பட்டார். பூமிக்கு அடியில் பாதாளக் குகையில் அடைபட்டு கிடந்த கைதி சுவரின் நிழலில் தெரிந்த காட்சிகளையே உலகம் என்று நம்பிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் தன்னை விடுவித்துக் கொண்டு வெளிச்சத்தை நோக்கி பயணமானான்.

குகையிலிருந்து வெளியே வந்த அவன் பிரகாசமான சூரிய ஒளியில் கண்கூசி நின்றுவிட்டான். மீண்டும் குகைக்கே திரும்பிவிட விரும்பினான். உள்ளதை உள்ளபடி பார்க்கும் வாய்ப்பே நிஜமான வாழ்க்கை என்பதைப் புரிந்து கொண்டான். சூரிய ஒளியால் கண் பார்வை மங்கியதால் மீண்டும் இருட்டிற்குச் செல்ல எண்ணினான். குகையின் நிழல் உருவங்களை பார்த்தே வாழ்ந்துவிட நினைத்தான். பிறகு விழிப்புணர்வு பெற்ற அவன் குகைக்குத் திரும்பி மற்றவர் களையும் விடுதலை செய்து வெளியுலகிற்கு அழைத்துவர விரும்பி னான். கற்பனை நிழல் உருவகக் காட்சிகளில் இருந்து விடுவித்துவிட வேண்டும். அவை பொய்யான உலகில் அவர்களை விலங்கு போட்டு சிறை வைத்திருக்கிறது.

நீங்கள் விழிப்புணர்வு அடையும் அந்த கணத்தில் உங்கள் வாழ்க்கை மாறுதலடைவது மட்டுமின்றி, நீங்கள் புதிய வகையில் செயல்படவும் ஆரம்பிக்கிறீர்கள். மற்றவர்கள் மாற்றம் பெற உதவுகிறீர்கள். ஒருமுறை நீங்கள் விழிப்புணர்வு ஒளியைக் கண்டுவிட்டால், தெளிவற்ற மனம் என்ற குகையிலிருந்து வெளியே வந்துவிட்டால், முன்னர் நீங்கள் அறிந்து வைத்திருந்தவை எல்லாம் நிஜமல்ல என்று உணர்ந்து திகைத்துப் போவீர்கள். அவை உண்மையின் நிழல்கள். நிஜம் பற்றி நீங்கள் கனவு கண்டுகொண்டு இருந்திருக்கிறீர்கள்.

ஒருமுறை ஒளியைக் கண்டுவிட்டால் அதைப் பிறருடன் பகிர்ந்துகொள்ள விரும்புவீர்கள். குகைக்குத் திரும்பிச் சென்று மற்றவர்களுக்கும் விடுதலை அளிக்க ஆசைப்படுவீர்கள். அதையே காலம் காலமாக குருமார்கள் செய்து வருகிறார்கள். அதையே பிதாகோரஸும் செய்தார். அவர் குகையிலிருந்து விடுபட்டுச் சுதந்திரம் அடைந்தார்.

முதல் தடவை உங்களுக்குப் பிரகாசத்தால் கண்கள் கூசும். முதல் தடவை உங்கள் கண்கள் துன்புற்றதாக உணர்வீர்கள். அது வலியின் வளர்ச்சி. முதல் முறையாக இருண்ட குகைக்கே திரும்பிச் சென்று விடலாம் என்ற பெருவிருப்பம் தோன்றும். காரணம் நீங்கள் அதற்குப் பழக்கப்பட்டு விட்டீர்கள். அது ஆறுதல் தருகிறது. ஆனால் உண்மையான ஒரு சிறு துணுக்கைப் பார்த்துவிட்டால் நீங்கள் மீண்டும் குகைக்குத் திரும்பிச் செல்ல விரும்பமாட்டீர்கள். திரும்பி வரும் எல்லைக் கடந்து சென்றுவிட்டீர்கள். நீங்கள் ஒளியில் வாழ்ந்தே தீர வேண்டும். ஒளியை உள்வாங்கிக் கொள்வது எப்படி என்று கற்றுக் கொண்டாக வேண்டும். காரணம் நிஜம் இன்பகரமானது. உண்மை அனுபவம் வெளிப்படும்போது வாழ்க்கை ஆன்மீகம் நிறைந்த ஒன்றாக மாறுகிறது. உண்மை அனுபவம் பெறும்போது நீங்கள் பழைய வழிகளில் செயல்பட வேண்டியிருக்காது.

இந்த கேள்வி ஏன் எழுந்தது என்று எனக்குத் தெரியும். காரணம் நீங்கள் கோபம் கொள்ளாது இருக்க முயற்சி செய்கிறீர்கள். அதற்கு பலமுறை முடிவு எடுத்தீர்கள். ஆனால் கோபம் வருகிறது. பேராசைப் படக்கூடாது என்று நினைத்தீர்கள். ஆனால் மீண்டும் மீண்டும் அந்த வலையில் விழுந்து விடுகிறீர்கள். உங்களை மாற்றிக் கொள்ள எல்லாக் காரியங்களையும் செய்து பார்த்தீர்கள். ஆனால் எதுவும் நடக்கவில்லை. நீங்கள் அப்படியேதான் இருக்கிறீர்கள்.

அதற்கு ஒரு எளிய வழி இருக்கிறது என்று நான் கூறுகிறேன். அதுதான் விழிப்புணர்வு ஆகும். உங்களால் அதை நம்ப முடியாது. வேறு எதுவும் பலன் தராதபோது வெறும் விழிப்புணர்வு என்ன செய்துவிட இயலும் என்று நினைப்பீர்கள். சாவிகள் எப்போதும்

சிறியவைதான். அவை பெரிய பொருட்கள் அல்ல. சிறிய சாவி ஒரு பெரிய பூட்டையும் திறந்துவிடும். விழிப்புணர்வை ஏன் ஒரு சாவி யாகப் பயன்படுத்தக் கூடாது?

கனவில் வாழும் மனிதர் நீண்ட உறக்கத்தில் இருக்கிறார். அந்த அமுக்கும் பிசாசு சித்திரவதை செய்கிறது. எதிர்த்துப் போராடும் அவர் பயந்து கிடக்கிறார். யாராவது தன்னைக் காப்பாற்றினால் தேவலாம் என்று நினைக்கிறார். தப்பிக்க வழி கண்டறிய முடியவில்லை. அவரைச் சுற்றிலும் எதிரிகள் உருவிய வாளுடன் நிற்கிறார்கள். மரணம் நிச்சயம் என்று தோன்றுகிறது. கெட்ட கனவுகண்டு வியர்த்து, பயந்து நடுங்கி அவர் விழித்து எழுகிறார். இன்னும் அவர் சுவாசம் சீரடைய வில்லை. அவர் இன்னும் வியர்த்து, நடுங்கினாலும், சிரிக்கத் தொடங்கு கிறார். அதில் பிரச்சினை இல்லை. கனவு மறைந்துவிட்டது. எல்லா எதிரிகளும், உருவிய வாட்களும் நிஜமானவையல்ல. பாதுகாக்கும்படி கேட்க வேண்டியதில்லை. தற்காப்புக்கு ஏற்பாடு செய்ய அவசிய மில்லை. அது முழுவதும் நிழல் உலகம். ஒருமுறை விழிப்புணர்வு பெற்றால் கனவு முழுமையாக மறைந்துவிடுகிறது. கனவில் அவர் தன்னைப் பாதுகாப்பு செய்துகொள்ள முடிந்த வழிகளில் எல்லாம் முயன்றார். அது சாத்தியமில்லை என்று கண்டுகொள்கிறார். அதுதான் உங்களுக்கும் நடக்கிறது. எல்லோருக்கும் நடக்கிறது.

கோபம் ஒரு நிழல் உருவம். நிழலுடன் போரிட்டு உங்களால் வெற்றிபெற முடியாது. பேராசை ஒரு நிழல். அவை உண்மையானவை அல்ல. விழிப்புணர்வு உள்ள நிலையிலும் நிஜமானவை அப்படியே இருக்கும். விழிப்புணர்வு பெற்ற எவருக்கும் கோபம், பேராசை ஏற்படாது என்பது ஒரு விந்தையான விஷயம். அவர்கள் அதை உதறி விடவில்லை. அவற்றை அவர்கள் கண்டறிவதில்லை. ஒளி வரும் போது இருள் அங்கு இருப்பதில்லை.

புத்தர் ஞானமடைந்தபோது அந்த முதல் கணத்தில் சிரித்தபடி இப்படிச் சொன்னதாகக் குறிப்பிடப்படுகிறது. "இது நம்பமுடியாத ஒன்றாக இருக்கிறது. நான் துவக்கத்திலிருந்தே ஞானமடைந்துதான் இருந்திருக்கிறேன். அப்படியானால் அந்த விலங்குகளும், பந்தங்களும் வெறும் கனவுகள்தானா?"

மக்கள் அவரிடம், "கோபமற்று இருக்க நாங்கள் என்ன செய்ய வேண்டும்? பேராசையில்லாது இருக்க என்ன செய்ய வேண்டும்? அதிகக் காம இச்சையும், உணவு மீது அதிக விருப்பமும் கொள்ளா திருக்க என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டனர். அவரது பதில் எப்போதும் சில "விழிப்புணர்வுடன் இருங்கள். உங்கள் வாழ்க்கையில் விழிப்புணர்வைக் கொண்டு வாருங்கள்" என்றே இருந்தது.

அவரது சீடர் ஆனந்தர் மீண்டும் மீண்டும் கவனித்தார். பல்வேறு மனிதர்கள் பல்வேறு பிரச்சினைகள் என்று எதிர்ப்படுவதை அறிந்தார். ஆனால் மருத்துவரின் மருந்துச் சீட்டில் இருந்த குறிப்பு ஒரேவிதமாகவே அமைந்திருந்தது. அது வியப்பை ஏற்படுத்தியது. நீங்கள் அதை விழிப்புணர்வு என்று பெயரிடலாம். அதை சாட்சியாக இருத்தல் என்று கூறலாம். நினைவில் வைத்தல் எனலாம். அதை தியானம் என்று சொல்லலாம். ஒரே மருந்துக்கு இவை எல்லாம் வித்தியாசமான பெயர்கள். கூடுதல் விழிப்புணர்வுடன் செயல்படுங்கள்.

தனது வீட்டிலிருந்து பணிபுரியும் இடத்திற்கு ஒருவர் புகை வண்டியில் பயணம் செய்தார். வண்டி புறப்பட்ட சிறிது நேரத்தில் அதன் தாலாட்டுப் போன்ற அசைவு தூக்கத்தை வரவழைத்துவிட்டது. வழியில் ஏதோ ஒரு நிலையத்தில் அவசரச் சிவப்பு விளக்கு எரிந்ததைக் கண்டு புகைவண்டி நின்றுவிட்டது.

தனது பணி இடம் வந்துவிட்டது என்று நினைத்து சட்டென்று விழித்தெழுந்த அந்த மனிதர் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கியதும் தண்டவாளத்தின் பக்கம் விழுந்துவிட்டார். அதிர்ச்சி யுடன் நிலைதடுமாறித் தரையில் கிடந்த அவரை சில பயணிகள் தூக்கி வந்து பெட்டிக்குள் உட்காரவைத்தார்கள்.

ஆடையில் படிந்திருந்த தூசியைத் தட்டிக்கொண்டு, கழுத்துப் பட்டையைச் சரிசெய்து கொண்ட அந்த மனிதர், "எதிர்ப்பக்கம் தவறான கதவைத் திறந்துகொண்டு நான் முட்டாள்தனமாக இறங்கிவிட்டேன்" என்று தன்னை நொந்துகொண்டார். பிறகு மறுபக்கம் இருந்த கதவைத் திறந்துகொண்டு விரைவுப் புகைவண்டி வந்து கொண்டிருந்த பாதை யில் இறங்கினார்.

கண்களைத் திறந்துகொண்டு தூங்கிப் போவதுதான் மனிதர் களிடம் உள்ள ஒரே பிரச்சினை. அதனால்தான் உங்களுக்கு விழிப் புணர்வு இல்லை என்ற விழிப்புணர்வே ஏற்படவில்லை. உங்கள் கண்கள் திறந்திருக்கின்றன. ஆனால் கனவு கண்டு கொண்டிருக் கிறீர்கள். ஆயிரத்தொரு கனவுகள் ஆசைகள் எழுகின்றன. "நீங்கள் இங்கே இல்லை. நீங்கள் விழிப்புணர்வுடன் இல்லை என்றால் அது தான் அர்த்தம். கடந்த காலத்தில் இருந்து கொண்டிருக்கிறீர்கள். கனவு வடிவிலான நினைவுகளில் வாழ்கிறீர்கள். அல்லது எதிர்காலத்தில் இருக்கிறீர்கள். அது கற்பனையானது. அது ஒரு கனவுதான்.

இப்போது இங்கே இருங்கள்.

கடந்த காலம் இங்கு இருந்தால் நீங்கள் விழிப்புணர்வுடன் இல்லை என்றாகிறது. எதிர்காலம் இங்கே இருந்தால் நீங்கள் விழிப்

புணர்வுடன் இல்லை என்பது தெளிவாகிறது. விழிப்புணர்வு என்பது நிகழ்காலத்தில் வாழ்வதாகும். இக்கணத்தில் இங்கு இருங்கள். ஒரு சிறிய எண்ணம் உள்ளே கடந்து சென்றாலும் நீங்கள் விழிப்புடன் இல்லை. சிந்தனை என்பது உறக்கம்தான். சிந்தனையற்று இருப்பதே விழிப்புணர்வாகும்.

பளிங்கு போன்ற தெளிவுடன், இக்கணத்தில் இங்கே வாழும் போது உங்களால் எவ்வாறு பாவச் செயல் செய்ய இயலும்? தெளிவு ஏற்படும்போது அகந்தை மாறுகிறது. வாழ்வின் எல்லாவிதமான பிரச்சினைகளையும் கொண்டு வருவது அந்த அகந்தைதான். அகந்தை வன்முறையான குணம் கொண்டது. நீங்கள் பணிவுடன் இருக்க முயன்றால், பணிவுடன் நடக்க முடியும். ஆனால் அகந்தை அந்த பணிவின் பின்னால் மறைந்து கொண்டிருக்கும். நீங்கள் விழிப்புணர்வு பெறாதவரை அகந்தை பல்வேறு புதிய விளையாட்டுகளில் ஈடுபடவே செய்யும். விளையாட்டுகள் மாற்றப்படுகின்றன. நீங்கள் ஒரு சிறை யிலிருந்து அடுத்த சிறைக்கு நகர்கிறீர்கள். சிறையிலிருந்து வெளியே வருவதில்லை.

சிறையிலிருந்து வெளியே வருவதற்கு ஒரே வழி முழுமையான விழிப்புணர்வுடன் இருப்பதேயாகும். அந்த விழிப்புணர்வால் நீங்கள் தெளிவு பெறுகிறீர்கள். அந்த விழிப்புணர்வால் நீங்கள் மையம் கொள்கிறீர்கள். சரியாக மையம் கொள்ளல் உங்களை உண்மையின் மையம் நோக்கி அழைத்துச் செல்லும். அந்த அனுபவம் பேரானந்தம் கொண்டதாக இருக்கும். அதன் பிறகு திருடனாக இருக்க மாட்டீர்கள். ஏனென்றால் உங்களுக்குத் தேவையான அனைத்தும், நீங்கள் விரும்பியவை எல்லாம் நிறைவு பெறுகின்றன. மழையாய் அவை உங்கள் மீது தன்னிச்சையாக அவை பொழிகின்றன. அந்த அளவுக்கு நீங்கள் கேட்கவில்லை. திருடனாக இருக்க யார் விரும்புவார்கள்? எதற்கு அப்படியிருக்க வேண்டும்?

கொலைகாரனாக இருக்க யார் விரும்புவார்கள்? எதற்கு அவ்வாறு இருக்க வேண்டும்? கொலை பற்றி நீங்கள் கற்பனை செய்து பார்த்ததில்லை. எதையும் கொன்றுவிட முடியாது என்று இப்போது உங்களுக்குத் தெரியும். எல்லாம் நித்தியமானவை. நமது முயற்சி பயனற்றது. எதையும் உங்களால் கொல்ல முடியாது. மேலாடைகளை வேண்டுமானால் நீங்கள் அகற்றலாம். அகம் அப்படியேதான் இருக்கும். விழிப்புணர்வு பெற்ற ஒளி நிலையில் நீங்கள் உங்கள் அகத்தை எல்லா உயிர்களின் அகத்தையும் பார்க்க முடியும். அது நித்தியமானது. மரணம் என்பது பொய்யானது. கனவில்தான் மரணம் நிகழ்கிறது. உண்மையில் நடக்கவில்லை. வாழ்வில் நிகழவில்லை.

விழிப்புணர்வுடன் நீங்கள் இருக்கும்போது எப்படி கற்பழிப்பில் ஈடுபட முடியும்? விழிப்புணர்வு மிகுந்த அன்பைக் கொண்டு வருகிறது. அன்பு செலுத்தும் ஒருவரால் கற்பழிக்க முடியாது. அன்பு பற்றி எதுவும் தெரியாத ஒரு மனிதர் மட்டுமே கற்பழிப்பில் ஈடுபடு வதற்குச் சாத்தியமுள்ளது. கற்பழிப்பில் ஈடுபடுவோர் மட்டும் கற்பழிப்பாளர்கள் அல்ல. நீங்கள் ஒரு நல்ல கணவனாக இருக்கலாம், ஒரு நல்ல மனைவியாக இருக்கலாம், சட்டப்படி மணம் புரிந்து அனைத்தும் நன்றாகவே அமைந்திருக்கலாம். உங்கள் உறவு கற்பழிப்பு தவிர வேறல்ல. விழிப்புணர்வு இல்லாதிருந்தால் வேறு எதுவும் செய்ய இயலாது. கற்பழிப்பவர் செயல் போன்றே உங்கள் உறவு அமைந் திருக்கும். சட்டபூர்வமான முறையில் நீங்கள் கற்பழிக்கிறீர்கள். அதிகாரப்பூர்வமாக, சமூக அனுமதியுடன் செய்கிறீர்கள். அதெல்லாம் பெரிய விஷயமல்ல. உங்கள் மனைவி உங்களுடன் உறவு கொள்கிறாள் என்றால் அது அவள் கடமை. கணவன் விரும்பும் போதெல்லாம் உறவில் ஈடுபட்டாக வேண்டும். அது ஒரு கற்பழிப்புதான். அந்த உறவில் அவள் இல்லை. அது கற்பழிப்புதான். அவள் வெறுமனே மனைவியின் கடமையை நிறைவு செய்கிறாள். நீங்கள் மனைவியுடன் காதல் விளையாட்டில் ஈடுபடும்போது நிகழ்காலத்தில் விழிப்புடன் அக்கணத்தில் அங்கே இல்லை என்றால் அது கற்பழிப்புதான். அந்த பெண் உங்களைக் கற்பழிக்கிறாள். நீங்கள் அவளைக் கற்பழிக்கிறீர்கள்.

அன்பு மனப்பூர்வமானதாக இருக்கும்போதுதான் அது அன்பாக மாறுகிறது. இருபக்கங்களில் இருந்தும் விழிப்புணர்வு பெறும்போது அன்பு அன்பாக அமைகிறது. இரண்டு "இப்போதைய கணங்கள்" சந்தித்துக் கொள்கின்றன. "இரண்டு இங்கேக்கள்" (Heres) சந்தித்துக் கொள்கின்றன. இரண்டு நிகழ்காலங்கள் சந்தித்துக் கொள்கின்றன. அப்போது அது அன்பாக மாறுகிறது. அதன் தெய்வீக இயல்பை அதன் பின்னர் பெறுகிறது.

விழிப்புணர்வு இல்லாது வாழ்து எப்படி என்று கற்றுக் கொண்டிருக்கிறீர்கள். விழிப்புணர்வற்று எவ்விதம் செயல்படுவது என்று தெரிந்து வைத்திருக்கிறீர்கள். உங்கள் வீட்டின் நுழைவாயில் மற்றும் அறைகளின் கதவுகள் இருக்கும் நன்கு தெரியும். எல்லாவித திறமைகளுடனும் உங்களுக்குப் பரிச்சயம் உள்ளது. உங்களால் அலுவலகத்திற்கு காரோட்டிச் சென்றுவிட்டுத் திரும்பிவர இயலும். விழிப்புணர்வு அவசியமில்லை. இக்காரியங்களை நீங்கள் இயந்திரத் தனத்துடன் செய்கிறீர்கள்.

இந்த இயந்திரத்தனத்தில் இருந்துதான் எல்லா பாவங்களும் தலையெடுக்கின்றன. உங்கள் வாழ்க்கை நரகமாகிவிடுகிறது. நரகம்

என்றால் நிகழ்காலத்தில் இல்லாதது என்று பொருள். சொர்க்கம் என்றால் நிகழ்காலத்தில் இருப்பது என்று அர்த்தம்.

அமெரிக்காவின் அர்கான்ஸாஸ் மாநிலத்து விவசாயக் குடும்பத்துப் பையன் தனது தந்தையால் நியூயார்க் நகருக்கு அனுப்பி வைக்கப்பட்டான். புகழ்பெற்ற ஃபிராங்க ஈ காம்பெல் என்பவரின் மேற்பார்வையில் வியாபார நுட்பங்களைக் கற்றுக்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது.

சில மாதங்களுக்குப் பிறகு அந்த பெரிய நகருக்குச் சென்று தந்தையார் மகனைப் பார்த்தார். "நிறைய விஷயங்கள் கற்றுக் கொண்டாயா? சொல்" என்று கேட்டார்.

"ஆம் தந்தையே! நான் நிரம்பக் கற்றுக்கொண்டேன். அது மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறது" என்றான் மகன்.

"மிகவும் சுவாரஸ்யமான அந்த விஷயம் என்ன?"

மகன் சில நிமிடங்கள் யோசித்துவிட்டு, "ஒரு உணர்ச்சிகரமான அனுபவம் எங்களுக்கு ஒரு பாடம் கற்றுத் தந்தது."

"அது என்ன?"

ஒருநாள் எங்களுக்கு டாஃப்ட் ஹோட்டலில் இருந்து ஒரு தொலைபேசிச் செய்தி வந்தது. ஹோட்டல் அறைகளின் மேற்பார்வை யாளர் அறையை ஒன்றைச் சோதித்துப் பார்த்தபோது கட்டிலில் ஒரு ஆணும் பெண்ணும் நிர்வாணமாக இறந்து கிடந்ததைக் கண்டார்.

"அடடே! திரு. காம்பெல் அப்புறம் என்ன செய்தார்?"

துக்க நிகழ்வு நடந்துவிட்டால் அணியும் கருப்பு அங்கியை அவர் அணிந்து கொண்டார். நான் எனது கருப்பு அங்கியை அணிந்தேன். அவரது லிமோஸின் கார்களில் ஒன்றில் நானும் அவரும் டாஃப்ட் ஹோட்டலுக்குச் சென்றோம். மேலாளர் எங்களை ஒரு குமாஸ்தா விடம் கூட்டிச் சென்று சம்பவம் நடந்த அறை எண்ணைப் பெற்றுத் தந்தார். தானியங்கித் தூக்கி மூலம் மேலாளரும் எங்களுடன் வந்தார். நாங்கள் மௌனமாகப் பயணித்தோம். காரணம் திரு. காம்பெல் எல்லா காரியங்களையும் கண்ணியத்துடன் செய்யக் கூடியவர்.

"எவ்வளவு அருமை! பிறகு என்ன நடந்தது?" என்று தந்தை கேட்டார்.

"அந்த அறைக்கு நாங்கள் சென்றோம். தன்னிடம் இருந்த தங்கப் பூண் போட்ட பிரம்பினால் கதவைத் தள்ளித் திறந்தார் காம்பெல்.

அவரும், நானும், மேலாளரும் அறைக்குள் சென்றோம். நிர்வாணமாக கட்டிலில் இருந்த தம்பதியர் மல்லாந்து படுத்திருந்தார்கள்.

"அதன் பின்ன என்ன ஆயிற்று?"

ஒரு அவசரப் பிரச்சினை இருப்பதை காம்பெல் கண்டார். கட்டிலில் கிடந்த மனிதரின் ஆண்குறி துடிப்புடன் விரைத்து நின்றிருந்தது. ஆம், அது உண்மைதான்.

"அப்புறம் என்ன ஆயிற்று?" என்று கேட்டார் தந்தை.

"திரு. காம்பெல் வழக்கம்போல சூழ்நிலையைச் சமாளிக்கத் தயாரானார். தனது தங்கப்பூண் போட்ட பிரம்பால் அந்த ஆண் குறியை பலமான ஒரு விளாசு விளாசினார்."

"அப்புறம் என்ன ஆயிற்று?" என்றார் தந்தை.

"அப்பா! எல்லாம் தப்பாகிப் போய்விட்டது. நாங்கள் சென்றது தவறான அறையாக இருந்துவிட்டது."

இப்படித்தான் எல்லாம் நடந்து கொண்டிருக்கின்றன. நீங்கள் தவறான அறையில் இருக்கிறீர்கள். எப்போதும் தவறான அறையில் இருக்கிறீர்கள். விழிப்புணர்வற்ற நிலையே தவறான அறை எனப் படுகிறது. நீங்கள் நல்லது கெட்டது என்று எந்த காரியம் செய்தாலும், மரியாதைக்குரிய, மரியாதையற்ற செயல்களில் இறங்கினாலும் கடைசியான இறுதி மதிப்பீட்டில் எல்லாம் ஒன்றாகவே அமைகிறது. காரணம் நீங்கள் தவறான அறையில் இருக்கிறீர்கள். தவறான அறை யில் இருந்துகொண்டு சரியான எதையும் செய்ய முடியாது. தவறான அறையில் இருந்தபடி நீங்கள் ஒரு துறவியாக மாறலாம். ஆனால் அதே அறையில் நீங்கள் பாவியாகவே இருப்பீர்கள். நீங்கள் மிகவும் நீதி நேர்மை கொண்டவராக மாறலாம். உங்களால் திருடனாகவோ, கற்பழிப்பவனாகவோ, கொலைகாரனாகவோ மாற முடியாது. அறை தவறானது. எதைச் செய்தாலும் சரியானபடி செய்ய முடியாது.

உங்கள் மனநிலை முழுமையாக மாற்றம் பெறவேண்டும். அதுதான் விழிப்புணர்வு என்பதன் அர்த்தமாகும். நீங்கள் கடந்த காலத்திலும், எதிர்காலத்திலும் இருந்து வருகிறீர்கள். நீங்கள் மனதில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதே அதன் அர்த்தம். மனம் என்பதுதான் தவறான அறையின் பெயர் ஆகும். மனதிலிருந்து வெளியே வாருங்கள். நிகழ்காலத்தில் இருங்கள். நீங்கள் நிகழ்காலத் தில் இருக்கும்போது மனதின் ஒரு அங்கமாக இருக்க மாட்டீர்கள். அதன் பிறகு ஒவ்வொரு செயலும் அபாரமான தெளிவுடன் காணப் படும். காரணம் நீங்கள் ஒரு கண்ணாடி. அந்த கண்ணாடியில் தூசு

படியவில்லை. ஏனென்றால் சிந்தனை என்ற செயல் அங்கு நடக்கவில்லை.

நான் கற்றுத்தர விரும்புவது அதைத்தான். விழிப்புணர்வுடன் இருப்பது எப்படி? சுயஉணர்வுடன் இருப்பது எப்படி? எண்ணங்கள் இல்லாது இருப்பது எப்படி? என்று கற்றுத்தர நினைக்கிறேன். அதன் பிறகு வாழ்க்கை தானே தன்னை மாற்றிக்கொள்ளத் துவங்கிவிடும். நான் உங்களுக்கு அகிம்சை பற்றிக் கற்றுத் தரவில்லை. அகிம்சை பற்றி நமது நாட்டில் காலங்காலமாகப் போதிக்கப்பட்டு வருகிறது. ஆனால் ஜனங்கள் அகிம்சாவாதிகளாகி விடவில்லை. உண்மையில் இங்கு இருப்பவர்களைக் காட்டிலும் மோசமான வன்முறையாளர்களை வேறு எந்த நாட்டிலும் காண்பது சிரமம். ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு சாத்தியமான வழியிலும் வன்முறை வெளிக் கிளம்புகிறது. அதற்கு ஏதாவது ஒரு சிறிய காரணம் போதுமானதாக இருக்கிறது. பேருந்துகள் கொளுத்தப்படுகின்றன. ஜனங்கள் கொல்லப்படுகிறார்கள். காவல்துறையின் துப்பாக்கிச் சூடு நடத்த வேண்டியிருக்கிறது. தினமும் அது நடக்கிறது! அது செய்திகளில் வெளியான விஷயமல்ல. அது புதிதாக இல்லாத ஒன்று என்பதால் எப்படி செய்தியாக முடியும்? அச்செயல் எங்கோ ஒரு இடத்தில் அல்லது வேறு இடத்தில் நடக்கிறது உறுதியாக நீங்கள் நம்பலாம்.

மதுரா ஒரு கேள்வி கேட்டார். "இந்தியாவில் ஏன் பொது வன்முறை நிறைய நடக்கிறது?" அகிம்சை பற்றிய போதனைதான் அதற்குக் காரணம். அகிம்சை பற்றி கடந்த ஐந்தாயிரம் ஆண்டுகளாக மக்களுக்குப் போதிக்கப்படுகிறது. மக்கள் அகிம்சாவாதிகளாக இருப்பது போல நடக்கக் கற்றுக் கொண்டுவிட்டார்கள். வன்முறையை மனதில் அடக்கி வைத்திருப்பதே இவ்வாறு எல்லாம் நடக்கக் காரணம் ஆகும். அவர்கள் எரிமலையின் மீது உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். ஏதாவது ஒரு சிறிய காரணம் கிடைத்தாலும் போதும், வன்முறை கட்டவிழ்த்து விடப்படுகிறது. பிறகு அது காட்டுத் தீ போலப் பரவி விடுகிறது.

இந்து-முஸ்லீம் கலவரங்கள் ஏற்படும் சமயத்தில் நாட்டு மக்களின் உண்மையான முகத்தைக் காணமுடியும். அது கொலை வெறியுடன் இருக்கிறது. ஒரு நாளைக்கு முன்புவரை இந்து கோவிலில் வழிபாடு செய்தான். முஸ்லீம் மசூதியில் தொழுகை நடத்தினான். ஒருவன் வேதம் படித்தான். அடுத்தவன் குரான் ஓதினான். பக்திமான்கள் போல அவர்கள் காணப்பட்டார்கள். கலவரம் ஏற்படும் போது பக்தியெல்லாம் ஆவியாகி மறைந்து போகிறது. அது அங்கு இருந்ததாகவே தெரிவதில்லை. அவர்கள் கொலை, கொள்ளை,

கற்பழிப்புச் செயல் போன்ற எதிலும் இறங்கத் தயாராகிறார்கள். இந்த வன்முறை நாட்டில் திரும்பத்திரும்ப வெடிக்கிறது. ஏனென்றால் கற்றுத் தரப்பட்டது தவறான பாடம். அது மனதிற்குள் அடக்கி வைத்துக்கொள்ள வழிகாட்டும் செயல். எது ஒன்றையும் நீங்கள் மனதிற்குள் அடக்கி வைத்துக்கொள்ள வழிகாட்டும் செயல். எது ஒன்றை நீங்கள் மனதிற்குள் அடக்கி வைத்தாலும் அது திரும்பத் திரும்ப வெளியே வரும்.

நான் விழிப்புணர்வு அடையக் கற்றுத் தருகிறேன். உணர்வுகளை அடக்கிக் கொள்ள அல்ல. அதனால்தான் நான் அகிம்சை பற்றிப் பேசுவதில்லை. "வன்முறையில் ஈடுபடாதீர்கள்" என்று நான் கூறுவதில்லை. எச்சரிக்கையுடன், விழிப்புணர்வுடன் இருங்கள் என்று மட்டுமே கூறுகிறேன். நீங்கள் எதைச் செய்தாலும் அவ்விதமான அக்கறையுடன் செய்யுங்கள். உள்ளுணர்வுடன் செயல்படுங்கள். செயலில் நீங்கள் கலந்து ஒன்றிவிட வேண்டும். அதனுடன் இணைந்து விட வேண்டும். வெறுமனே பாவனை செய்யும் மனிதராக இருக்கக் கூடாது. நீங்கள் நிகழ்காலத்தில் அதனுடன் இருக்கிறீர்கள். அது ஒரு ரசவாத மாற்றத்தைக் கொண்டுவந்து சேர்க்கும். உணர்ச்சிகளை ஒரு போதும் அடக்கி வைக்கக்கூடாது. எரிமலை மீது உட்காரக்கூடாது. நீங்கள் விழிப்புணர்வு பெறும்போது வாழ்வில் கூடுதல் அமைதி, மௌனம், அன்பு போன்றவை கிடைக்கும். அவை விழிப்புணர்வின் துணைத் தயாரிப்புகளாகும்.

### இரண்டாவது கேள்வி

**ஓஷோ,**

**கவர்ச்சிகரமான மனிதர்கள் பயம் தருபவர்களாக இருப்பதை நான் அறிகிறேன். அது ஏன்?**

கவர்ச்சிகரமான மனிதர்களிடம் பயப்படப் பல்வேறு காரணங்கள் உள்ளன. முதலாவதாக, கவர்ச்சியான மனிதராக ஒருவர் இருந்தால் அவர் அல்லது அப்பெண்ணின் பிடியில் சிக்கி அடிமைப்பட்டுவிட நிறைய சாத்தியங்கள் இருக்கின்றன. பயம் ஏற்பட அதுதான் காரணம். கவர்ச்சி வசீகர ஈர்ப்புக் கொண்டது. நீங்கள் அதன் பிடியில் அகப் பட்டுக் கொள்வீர்கள். ஒரு அடிமையாக மாறிவிடுவீர்கள்.

கவர்ச்சிகரமான மனிதர்கள் வசீகரிக்கிறார்கள். அத்துடன் பயமுறுத்தவும் செய்கிறார்கள். அவர்கள் அழகானவர்கள். நீங்கள் அவர்களைச் சார்ந்திருக்க விரும்பலாம். அவர்களைச் சார்ந்திருப்பது என்றால் உங்கள் சுதந்திரத்தை இழப்பதாக அர்த்தம். அவர்களைச்

சார்ந்து இருக்கும்போது அதன்பிறகு நீங்கள் நீங்களாக இருக்க முடியாது. காரணம் அவர்கள் கவர்ச்சியானவர்கள். அவர்களை விட்டு விலக உங்களால் முடியாது. நீங்கள் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக் கிறீர்கள். உங்கள் சுபாவம் குறித்து உங்களுக்குத் தெரியும். ஒருவர் எவ்வளவு கவர்ச்சியாக இருக்கிறாரோ அந்த அளவுக்கு அவரைப் பிடித்துக் கொண்டு நீங்கள் தொங்குவீர்கள். நீங்கள் மேலும் மேலும் சார்ந்திருக்க முயல்கிறீர்கள். அதுவே பயத்திற்குக் காரணம்.

யாரும் பிறரைச் சார்ந்திருக்க விரும்புவது கிடையாது. சுதந்திரம் என்பது உன்னதமான மதிப்புமிக்கது. சுதந்திரத்தைக் காட்டிலும் அன்பு பெரிய விஷயம் அலல. சுதந்திரம் உன்னதமான மதிப்புள்ளது. அன்பு அதற்கு அடுத்தபடியானதுதான். அன்புக்கும் சுதந்திரத்திற்கும் இடை விடாத சச்சரவு நடந்து கொண்டிருக்கிறது. அன்பு உன்னதமான மதிப்பை எட்ட முயல்கிறது. அதனால் முடிவதில்லை. எனவே சுதந்திரத்தை அது அழித்துவிட முயல்கிறது. அப்புறம் அது உன்னத இடத்தைப் பிடித்துவிடலாகுமே? சுதந்திரத்தின் மீது ஆசையுள்ளவர் அன்பைக் கண்டு பயம் கொள்கிறார்.

கவர்ச்சியான மனிதரால் கவரப்படுவதே அன்பு ஆகும். அந்த மனிதர் கூடுதல் அழகுடன் திகழ்ந்தால் நீங்கள் மேலும் அதிகமாகக் கவரப்படுகிறீர்கள். அத்துடன் கூடுதலான பயமும் ஏற்பட்டுவிடுகிறது. தப்பித்தல் என்பது எளிதாக இல்லாத ஏதோ ஒரு விஷயத்திற்குள் நீங்கள் இப்போது நுழைந்து கொண்டிருப்பதே காரணம். ஒரு சாதாரண மனிதரிடம் இருந்து நீங்கள் எளிதாகத் தப்பிவிடலாம். அந்த மனிதர் அசிங்கமாக இருந்தால் நீங்கள் சுதந்திரம் பெறுவீர்கள். அவரைப் பெரிதும் சார்ந்திருக்கத் தேவையில்லை.

நகரில் இருந்த மிக அசிங்கமான பெண்ணை முல்லா நஸ்ருதீன் மணந்து கொண்டார். யாரும் அதை நம்பவில்லை. ஜனங்கள் அவரிடம், "நஸ்ருதீன், உங்களுக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், "அதில் தர்க்கரீதியான விஷயம் அடங்கியிருக் கிறது. இந்த ஒரு பெண்ணிடம் இருந்துதான் நான் எந்த நேரமும் தப்பித்துவிட முடியும். உண்மையில் தப்பிப்பது சிரமமான காரியம் அல்ல. நகரில் உள்ள பெண்களில் இவளை மட்டும்தான் நாம் நம்பலாம். அழகான பெண்கள் நம்பிக்கைக்கு உரியவர்கள் அல்லர். எளிதாக அவர்கள் காதல் வயப்பட்டு விடலாம். ஏனென்றால் பலபேர் அவளால் கவரப்படுகிறார்கள். இந்த பெண்ணை நான் நம்பலாம். எனக்கு எப்போதும் விசுவாசமாக இருப்பாள். அவளைப் பற்றி நான் கவலைப்படத் தேவையில்லை, நான் பல மாதங்கள் வெளியூரில்

தங்கியிருக்கலாம். நான் எவ்வித அச்சமும் கொள்ளத் தேவையில்லை. எனது பெண்மணி என்னுடையவளாகவே இருப்பாள்" என்றார்.

இதிலுள்ள கருத்தைக் கவனியுங்கள். ஒரு நபர் அசிங்கமாக இருந்தால் அவரை நீங்கள் வசப்படுத்திக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க லாம். அந்த அசிங்கமான மனிதர் உங்களைச் சார்ந்திருப்பார். அந்த நபர் அழகாக இருந்துவிட்டால் அவரைச் சார்ந்து நீங்கள் இருக்கும்படி செய்துவிடுவார். அழகு ஆற்றல் மிக்கது. அதீதமான சக்தி அதற்கு உண்டு. அசிங்கமான மனிதர் அடிமையாக, வேலைக்காரனாக இருக்கிறார். தன்னிடமிருந்து விடுபட்டுப் போன அழகுக்கு மாற்றாக ஒவ்வொரு வகையிலும் அமைகிறார். அழகான பெண்ணைவிட அசிங்கமான பெண் நல்ல மனைவியாக இருப்பாள். அவள் அப்படித் தான் இருந்து தீர வேண்டும். அவள் உங்கள் மீது அக்கறை காட்டுவாள். நல்ல தாதியாக இருப்பாள். தன்னிடம் அழகு இல்லை என்று அவளுக்குத் தெரியும். அதற்கு பதிலாக ஏதாவது ஒன்றால் அதை ஈடு கட்ட வேண்டும், அவள் உங்களுக்கு நல்லவளாக அமைந்திருப்பாள். அவள் உங்கள்மீது குற்றம்கூறி தொந்தரவு செய்யமாட்டாள். உங்களுடன் சண்டையிடமாட்டாள். உங்களுடன் சதா சச்சரவு செய்து கொண்டு இருக்கமாட்டாள். அவளால் அவ்விதம் நடக்க முடியாது.

அழகானவர்கள் ஆபத்தானவர்கள். அவர்கள் சண்டையிடு வார்கள். அதற்கான காரணங்கள் இவைதான்.

"கவர்ச்சிகரமானவர்கள் பயமூட்டுபவர்களாக இருப்பதை நான் அறிகிறேன். அது ஏன்?" என்று கேட்டீர்கள். நீங்கள் விழிப்புணர்வும், புரிதலும் இல்லாதுபோனால் அந்த பயம் நிலைத்து நின்றுவிடும். கவர்ச்சி / பயம் என்ற இரண்டும் ஒரு விஷயத்தில் இரண்டு அம்சங்கள். எப்போதும் உங்களைக் கவரும் ஒரு மனிதரிடம் உங்க ளுக்குப் பயம் இருக்கும். பயம் என்றால் நீங்கள் இரண்டாம் தரமான இடத்தில் இருப்பதாக ஆகிறது. மனிதர்கள் முடியாத ஒன்றுக்கே ஆசைப்படுகிறார்கள்.

பெண் ஒரு ஆணை விரும்புகிறாள். அந்த ஆண் உலகிலேயே மிகவும் அழகான, செல்வாக்கான நபர். அவர் தன்னிடம் மட்டுமே விருப்பம் கொள்ள வேண்டும் என்று அந்த பெண் நினைக்கிறாள். அது நடக்க முடியாத ஒரு வேண்டுகோள். மிகுந்த அழகும், செல் வாக்கும் உள்ள மனிதரிடம் பலர் ஆர்வம் கொண்டிருப்பார்கள். அவர் மீதும் பலர் ஆர்வம் காட்டியிருக்கலாம்.

உலகின் அழகான பெண்ணை விரும்பும் ஒருவர், அவள் தனக்கு மட்டுமே விசுவாசமாக நடந்து கொள்ள வேண்டும், தனக்காக

அவளை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படு கிறார். அது சிரமமான காரியம். நடக்கமுடியாத ஒன்றைக் கேட்கும் செயல். ஒரு பெண் அழகாக உங்களுக்குத் தோன்றினால், நீங்கள் அழகாக இல்லை என்பதையே அது காட்டுகிறது. மேலும் நீங்கள் பயப்படவும் செய்கிறீர்கள். உங்களுக்கு அந்தப் பெண் அழகாகத் தோன்றினால் மறுபக்கம் என்ன நடக்கிறது? நீங்கள் மிகவும் அழகாக இல்லை. அதனால் அவள் உங்களைவிட்டு விலகிவிடலாம் என்று பயப்படுகிறீர்கள்.

எல்லா பிரச்சினைகளும் அங்கே இருந்து கொண்டுதான் வரு கின்றன. உங்கள் அன்பு நிஜமான அன்பாக இல்லாது ஒரு விளை யாட்டாக மாறும்போதுதான் பிரச்சினைகள் தலைதூக்குகின்றன. அது நிஜமான அன்பாக இருந்தால், எதிர்காலம் பற்றி அது சிந்திக்காது. அதன் பின்னர் எதிர்காலம் பற்றிய பிரச்சினை இல்லை. உண்மை யான அன்புக்கு நாளை என்பது இல்லை. உண்மையான அன்புக்குக் காலம் என்பது இல்லை. நீங்கள் ஒருவரை விரும்பினால் அன்பு செலுத்துங்கள். நாளை என்ன நடக்கும் என்று எதற்குக் கவலைப்பட வேண்டும்? இன்றைய தினம் நிரம்ப மிச்சமிருக்கிறது. இக்கணம் நித்தியமானது. நாளைக்கு என்ன நடக்கும்? நாளை வரும்போது பார்த்துக் கொள்ளலாம். நாளை என்பது என்றும் வராது. உண்மை அன்பு என்பது நிகழ்காலம் சார்ந்தது.

நிஜமானது எதுவும் விழிப்புணர்வின் அங்கம் என்பதை எப்போதும் கவனத்தில் கொள்ளுங்கள். அது நிகழ்காலத்தின் ஒரு அங்கமாக, தியானத்தின் ஒரு அங்கமாக இருந்திட வேண்டும். அப்படி யிருந்தால் எந்த பிரச்சினையும் இல்லை. கவர்ச்சி பற்றியும், பயம் பற்றியும் கேள்வி எழவே வாய்ப்பு இல்லை. உண்மையான அன்பு பகிர்ந்து தருகிறது. அது பிறரை ஏமாற்றுவதில்லை. அது பிறரை வசப்படுத்துவதில்லை. நீங்கள் பிறரை வசப்படுத்த முயன்றால், பிரச்சினை எழுகிறது. மற்றவர் உங்களை வசப்படுத்தி விடலாம். மற்றவர் சக்தி நிறைந்தவராக, கவர்ச்சியானவராக இருந்தால் நீங்கள் அடிமையாகி விடுவீர்கள். நீங்கள் மற்றவர்களின் எஜமானாக விரும்பி னால் பயம் எழுகிறது. "நான் அடிமை நிலைக்குத் தள்ளப்படலாம்" என்று எண்ணுகிறீர்கள். மற்றவர்களை வசப்படுத்த நீங்கள் விரும்ப வில்லை என்றால் பயம் ஒருபோதும் எழாது. அன்பு எப்போதும் ஆதிக்கம் செய்ய முயலாது.

அன்பு ஒருபோதும் வசப்படுத்த முயலாது. பிறருக்கு வசமாகவும் செய்யாது. உண்மையான அன்பு உங்களைச் சுதந்திரம் நோக்கி அழைத்துச் செல்லும். சுதந்திரம் உயர்ந்த சிகரமாகும். அது உன்னத

மான மதிப்புடையது. அன்பு சுதந்திரத்திற்கு மிகவும் நெருக்கமானது. சுதந்திரம் நோக்கிச் செல்ல உதவும் படிக்கட்டாக அன்பு இருக்கிறது. அன்பு சுதந்திரத்திற்கு எதிரானது அல்ல. அன்பின் அடுத்த படிக்கட்டு சுதந்திரமாகும். இதையே விழிப்புணர்வு உங்களுக்குத் தெளிவு படுத்தும். சுதந்திரம் அடைவதற்கான படிக்கட்டாக அன்பைப் பயன்படுத்த வேண்டும். நீங்கள் அன்பு செலுத்தினால் மற்றவர்களை விடுவிக் கிறீர்கள். மற்றவர்களை விடுவிக்கும்போது அவர்களை உங்களை விடுவிக்கிறார்கள்.

அன்பு பகிர்ந்தளித்தல் ஆகும். அது ஏமாற்றல் அல்ல. உண்மை யில் அன்பு அசிங்கம், அழகு பற்றி எல்லாம் சிந்திப்பதில்லை. அன்பு அசிங்கம், அழகு குறித்தெல்லாம் யோசிப்பதில்லை என்றால் அது உங்களுக்கு வியப்பூட்டலாம். அன்பு செயல்புரிகிறது, பிரதிபலிக்கிறது, தியானிக்க வைக்கிறது. எது பற்றியும் யோசிப்பதில்லை. ஆம், சில சமயம் யாரோ ஒருவருடன் பொருந்திப் போகிறீர்கள். சட்டென்று எல்லாம் இணக்கமாக அமைந்துவிடுகிறது. அழகு, அசிங்கம் என்று பற்றிப் பேச்சே இல்லை. அது இணக்கம், லயம் குறித்ததாகும்.

குர்ட்ஜிஃப் சொல்லும் ஒரு வாசகம் பற்றி யாரோ ஒருவர் கேள்வி எழுப்பினார். "ஒவ்வொரு ஆணுடனும் சம்பந்தப்பட்ட பெண் இந்த பூமியில் எங்கோ இருக்கிறாள். ஒவ்வொரு பெண்ணுடனும் சம்பந்தப் பட்ட ஒரு ஆண் இந்த பூமியில் எங்கோ இருக்கிறான்". ஒவ்வொரு வரும் அதன் எதிர்துருவத்துடன் பிறக்கிறார்கள். நீங்கள் மற்றவரைக் கண்டறிந்தால் உடனே எல்லாம் இணக்கமாக மாறிவிடும். அவர்களின் மையங்கள் இணைந்து செயல்படுகின்றன. அதுவே அன்பாகும். அது வெகுஅரிதாக நடக்கும் செயலாகும். ஒருவருக்கொருவர் பொருந்தி வரும் ஜோடியைக் கண்டறிவது வெகு அரிது. நமது சமூகத்தில் இதுபோன்ற குறுக்கீடு, தடைகள் உள்ளன. உண்மையான ஜோடி மற்றும் நண்பர்களைக் கண்டறிவது கிட்டத்தட்ட முடியாத காரியமாக இருக்கிறது.

கிழக்கு நாட்டுப் புராணத்தில் ஒரு கதை இருக்கிறது. அழகான கதை அது. உலகம் உருவாக்கப்பட்டபோது ஒவ்வொரு குழந்தையும் தனியாகப் பிறக்கவில்லை. ஒரு ஆண் ஒரு பெண் என்று ஜோடி யாகவே உருவாக்கப்பட்டன. ஒரே தாயிடம் அவை இரட்டையர் களாகப் பிறந்தன. ஒருவருக்கு ஒருவர் பொருத்தமாக அமைய இவ்வாறு பிறந்தன. அது தம்பதியர் ஜோடி. ஒவ்வொரு வகையிலும் அவர்கள் இணங்கியிருந்தார்கள்.

ஆண் கடவுளின் கிருபையை இழந்ததும் ஒரு தண்டனைபோல அவர்கள் ஒரு தாய்க்கு பிறப்பது நின்றது. ஆனாலும் பிறந்தார்கள்.

கடவுள் கிருபையை இழப்பது நிஜமான பாவம் என்பது கருத்தாகும். குர்ட்ஜிஃப் சொன்னது சரிதான். எனது சொந்த கண்டறிதலும் அது தான். ஒவ்வொரு மனிதருக்கும் ஒரு தெய்வீக இணை எங்கோ இருக்கிறது. அவர்களைக் கண்டுபிடிப்பதுதான் சிரமம். நீங்கள் சிவப்பாக இருக்கலாம், எதிர்முனை கருப்பாக இருக்கலாம். நீங்கள் இந்துவாக இருக்கலாம், எதிர்துவரும் முகமதியராக இருக்கலாம். நீங்கள் சீனராக இருக்கலாம், எதிர்துருவம் ஜெர்மானியராக இருக்கலாம்.

சிறப்பான உலகில் மனிதர்கள் தேடுவாரக்ள், ஆசைப்படுவார்கள். உங்களுக்குப் பொருந்தும் சரியான நபரைக் கண்டறியும் வரை நீங்கள் மனஇறுக்கத்திலும், துன்பத்திலும் இருப்பீர்கள்.

நீங்கள் தனியாக இருந்தால் வருந்துவீர்கள். நீங்கள் மற்றவரைச் சந்தித்தால் கவலைப்படுவீர்கள். அடுத்தவர் பொருந்தி வராதுபோனால் கவலைப்படுவீர்கள். தற்போது அறிவியல் ஆராய்ச்சிகளும் இதைக் கண்டறிந்துள்ளன. ஒருவருடன் பொருந்தி வரும் மனிதர்களும், பொருந்தாத மனிதர்களும் இருப்பதாகத் தெரிவிக்கப்படுகிறது. அறிவியல் பூர்வமான ஏற்பாடுகள் செய்யலாம். ஒவ்வொருவரும் தனது மையத்தை அறிவிக்கலாம். தனது ஜோதிடக் குறிப்பு, லயம் போன்றவற்றைத் தரலாம். மற்றவர் சரியாகப் பொருந்துவதைக் கண்டறிய வாய்ப்பு உள்ளது. உலகம் மிகவும் சிறியதாகி விட்டது. அடுத்த நபரை நீங்கள் கண்டறிந்துவிட்டால் அவர் அழகா, அசிங்கமா என்று கேள்வி எழவே இடமில்லை. உண்மையில் அழகானவரும் இல்லை. அசிங்கமானவரும் இல்லை. அசிங்கமானவர் யாரோ ஒருவருடன் பொருந்தி வரலாம். அவருக்கு அந்த அசிங்கமானவர் அழகாகத் தெரியலாம்.

அழகு என்பது இணங்கிப் போகும் செயலின் நிழலாகும். மனிதர்களிடம் காதல் கொள்வதற்கானது அல்ல. அந்த செயல்பாடு எதிர்மறையானது. நீங்கள் ஒருவர் மீது காதல் கொள்ளும்போது அவர் அழகானவராக மாறிவிடுகிறார். அழகு என்ற எண்ணத்தைக் கொண்டு வருவதும், வராமல் இருப்பதும் அன்பின் செயலாகும்.

உங்களுடன் முழுமையாகப் பொருந்தி வரும் மனிதரைக் கண்டறிவது மிகவும் அரிது. யாராவது ஒருவருக்கு அந்த அதிர்ஷ்டம் இருந்தால், வாழ்க்கை மெல்லிசையாக மாறும். அதன் பிறகு இரண்டு உடல்கள். ஒரு உயிர் என்றாகும். அதுவே நிஜமான தம்பதியாக அமையும். அப்படிப்பட்ட ஒரு தம்பதியை நீங்கள் கண்டறிந்தால் பேரருளும், உயர்ந்த சங்கீதமும் அவர்களைச் சூழ்ந்திருக்கக் காண்பீர்கள். அற்புதமான ஒளிவட்டம், பிரகாசம், அமைதி போன்றவை

யும் தென்படும். அன்பு அதன் பிறகு தியானம் நோக்கி அழைத்துச் செல்லும்.

மனிதர்கள் கலந்து பழகி உறவாடித் தனது இணையைக் கண்டறிய அனுமதிக்க வேண்டும். திருமணம் செய்துகொள்ள ஜனங்கள் அவசரப் படக்கூடாது. அவசரம் ஆபத்தானது. அது மணமுறிவை மட்டுமே தருகிறது. அல்லது காலமெல்லாம் துன்பத்தை அளிக்கிறது. மற்றவர் களைச் சந்திக்க குழந்தைகளுக்கு அனுமதி தரவேண்டும். நாம் தொழில் நுட்பங்களுக்கு முந்தைய குறுக்கீடுகளை உதறித் தள்ள வேண்டும். அவை தற்போது பொருத்தமில்லை.

நாம் தொழில்நுட்ப யுகத்துக்குப் பிந்தைய காலத்தில் வாழ் கிறோம். மனிதன் மனமுதிர்வு பெற்றுள்ளான். பலவற்றை அவன் மாற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது. காரணம் பல விஷயங்கள் தவறானவை. பழைய நாட்களில் அவை வடிவமைக்கப்பட்டவை. அது அப்போது தேவையாக இருந்தது. இப்போது அது அவசியப்பட வில்லை. உதாரணமாக, ஆணும், பெண்ணுமாக மனிதர்கள் இன்று சேர்ந்து வாழலாம். திருமணம் செய்துகொள்ள அவசரப்படத் தேவை யில்லை. பல ஆண்கள், பெண்களுடன் கலந்து பழகிய பின்னர்தான் யார் உங்களுக்கு பொருந்தி வருவார், யார் பொருந்தமாட்டார் என்று புரியும். நீண்ட மூக்கு, அழகான முகம் என்பதெல்லாம் முக்கிய மில்லை. சிலருக்கு அழகான முகம் இருக்கலாம். நீங்கள் அதனால் கவரப்படலாம். அழகான கண்கள் இருக்கலாம். கூந்தலின் நிறம் நன்றாக இருந்து கவரப்படலாம்.... இந்த விஷயங்கள் முக்கியமல்ல. இரண்டு நாட்கள் சேர்ந்து வாழ்ந்தால் அவளது தலைமுடியைக் கவனிக்கமாட்டீர்கள். மூன்று நாட்கள் சேர்ந்திருந்தால் மூக்கை கண்டு கொள்ள மாட்டீர்கள். மூன்று வாரங்களுக்குப் பிறகு அவள் உடல் அமைப்பு பற்றிச் சுத்தமாக மறந்துவிடுவீர்கள். இப்போது நிஜம் உங்களை மோதி உசுப்பும். உண்மை விஷயம் ஆன்மீக ஒருங்கிணைப் பாகும்.

திருமணம் என்பது இன்றுவரை ஒரு மோசமான விவகார மாகவே இருந்து வருகிறது. பாதிரியார்கள் அதை அனுமதிப்பதில் ஆனந்தம் கொள்கிறார்கள். அதை அனுமதிப்பதில் மகிழ்ச்சி மட்டு மல்ல. அந்த முறையைக் கண்டறிந்ததே அவர்கள்தான். உலகில் ஐயாயிரம் ஆண்டுகளாக நடைமுறையில் இருக்க இந்த மோசமான திருமண முறைக்குப் பாதிரியார்கள் அனுசரணையாக நடந்துகொள்ளக் காரணம் இருக்கிறது. மனிதர்கள் துன்பத்தில் கிடந்தால்தான் கோவில், தேவாலயங்களுக்குப் போவார்கள். ஜனங்கள் கஷ்டத்தில் இருந்தால் தான் துறவறம் பூணுவார்கள். மக்கள் சிரமத்தில் இருந்தால்தான்

பாதிரியார்களின் பிடிக்குள் அடங்கிக் கிடப்பார்கள். ஒரு மகிழ்ச்சியான சமுதாயம் பாதிரியாருடன் எந்த உறவும் வைத்துக் கொள்ளாது. இது வெளிப்படையான விஷயம்! நீங்கள் ஆரோக்கியமாக இருந்தால் மருத்துவரிடம் போக வேண்டியதில்லை. நீங்கள் பூரணமான மனத் தெளிவுடன் இருந்தால் மனோதத்துவ நிபுணரிடம் செல்லும் வேலை இருக்காது. நீங்கள் முழுமையான ஆன்மீக உணர்வுடன் இருந்தால் பாதிரியார்களிடம் தொடர்புகொள்ள அவசியமில்லை.

திருமணம் மூலம் மிகப்பெரிய ஆன்மீக இணக்கமற்ற நிலை உருவாகிறது. பாதிரியார்கள் பூமியில் நரகத்தைப் படைக்கிறார்கள். அவர்களின் வியாபார ரகசியம் இதுதான். அதன் பிறகு ஜனங்கள் அவர்களிடம் வந்து என்ன செய்வது என்று ஆலோசனை கேட்கிறார்கள். வாழ்க்கை துயரமானதாகி விடுகிறது. வாழ்விலிருந்து விடுதலை பெறுவது எப்படி என்று அப்போதுதான் விளக்க முடியும். மீண்டும் மறுபிறப்பு எடுக்காமல் இருப்பதற்கான சடங்குகள் செய்யச் சொல்ல முடியும். பிறப்பு, இறப்பு என்ற வாழ்க்கைச் சக்கரத்திலிருந்து விடுபடுவது எப்படி என்று கூறமுடியும். வாழ்வை இவ்வாறு நரகமாக மாற்றிவிட்டு, அதிலிருந்து விடுபடுவது எப்படியென்று கற்றுத் தருவார்கள்.

எனது முயற்சிகள் இதற்கு எதிரானவை. நான் இப்போதே இங்கு சொர்க்கத்தை உருவாக்க விரும்புகிறேன். எனவே எதையும் ஒதுக்கித் தள்ள அவசியமில்லை. பிறப்பு இறப்பை ஒதுக்கத் தள்ளுவது பற்றி யோசிக்கத் தேவையில்லை. மதம் என்று அழைக்கப்படும் பழைய விஷயங்களும் தேவையில்லை. நிறைய இன்னிசை வேண்டும். நிறையக் கவிதை வேண்டும். நிறையக் கலைகள் வேண்டும். நிச்சயமாக நிறைய இறைமையியல் வேண்டும். நிறைய அறிவியல் வேண்டும். அப்போதும் முற்றிலும் புதிய ஒரு மதம் தோன்றும். அந்த புதியமதம் வாழ்க்கைக்கு எதிரான கோட்பாட்டை உங்களுக்குப் போதிக்காது. அதற்குப் பதிலாக வாழ்வை எப்படி இணக்கத்துடன், கலையுணர்வுடன், உணர்வுபூர்வமாக, மையம் கொண்ட வகையில், பூமியில் வேறூன்றி வாழ்வது என்று கற்றுத் தரும். அந்த மதம் வாழ்க்கைக் கலையைக் கற்றுத்தரும். வாழ்வின் தத்துவத்தைப் போதிக்கும். கூடுதல் கொண்டாட்டத்துடன் வாழ்வது எவ்விதம் என்று கற்றுத் தரும்.

"கவர்ச்சியான மனிதர்கள் எனக்கு அச்சம் தருபவர்களாக இருக்கிறார்களே?" என்று கேட்கிறீர்கள்.

காரணம், உள்ளே உங்கள் ஆழத்தில் ஒரு தேடல் இருக்கிறது. ஒவ்வொருவரிடமும் அந்த எதிர் துருவத்தைத் தேடும் தேடல் உள்ளது.

எதிர் துருவமாக இல்லாத யாரோ ஒருவருடன் சம்பந்தம் வைத்துக் கொள்ள நீங்கள் தயாராக இல்லை. நிறைய நண்பர்களுடன் கலந்து பழகாமல் அந்த எதிர் துருவத்தைக் கண்டுபிடிக்க வழியில்லை. நிஜமாகவே உங்கள் அன்புக்குரியவரைக் கண்டறிய விரும்பினால் பல்வேறு காதல் காரியங்களில் ஈடுபட வேண்டும். கற்றுக்கொள்ள அதுதான் வழி. பயத்தை உதறுங்கள்! அழகானவர்களைக் கண்டு அஞ்சி, அசிங்கமானவர்களிடம் நட்பு கொள்ளத் தொடங்கினால் அது உங்களுக்குத் திருப்தி தரப் போவதில்லை.

கோஹன் தம்பதியர் அறைகலன் வசதி (Furnished) அமைந்த அறை ஒன்றை வாடகை எடுத்துக் குடியேறினார்கள். கோஹன் பியர் தனது எல்லா தேவைகளையும் நிறைவு செய்யும் வகையில் அறை அமைந்திருக்கக் கண்டார். ஆனால் அவர் மனைவி கோஹன் மியர் அதை குறை கூறினாள்.

"எனக்கு இந்த அறை பிடிக்கவில்லை."

"என்ன காரணம் ரச்சேல்? இது அருமையான அறை ஆயிற்றே? நவீனமான மேம்படுத்தப்பட்ட வசதிகள் உள்ளன. துவைக்கும் வசதி, பிரகாசமான ஒளிவிளக்குகள், ஒரே சீராக அமைக்கப்பட்ட குழாய் வசதி, குளிர்ந்த நீர், வெண்ணீர் குழாய்கள் என்று எல்லாம் இருக்கிறதே? உனக்கு ஏன் பிடிக்கவில்லை என்கிறாய்?"

"நீங்கள் சொல்வதெல்லாம் எனக்கும் தெரியும். ஆனால் குளியல் அறையில் ஜன்னல் திரை இல்லை. ஒவ்வொரு தடவை நான் குளிக்கும் போது அக்கம்பக்கத்தவர் பார்க்க வாய்ப்பு உள்ளது.

"பரவாயில்லை ராச்சேல். அக்கம்பக்கத்தவர் உன்னைப் பார்த்ததும் தங்கள் அறைக்குத் திரை வாங்கிப் போட்டு கொள் வார்கள்!"

அசிங்கத்தினாலும் பயன் உண்டு. ஆனால் அது உங்களுக்குத் திருப்தி அளிக்காது. அழகானவர்களைக் கண்டு நீங்கள் அச்சப் பட்டால், நெருக்கமான உறவுகொள்ள நீங்கள் அச்சப்படுவதாக அர்த்தம் என்று புரிந்து கொள்ளுங்கள். விலகியிருக்க விரும்புகிறீர்கள். அப்படி சற்றுத் தள்ளி விலகியிருந்தால் தேவைப்பட்டால் எந்த நேரத் திலும் தப்பித்து ஓடிவிடலாம். ஆனால் உள்ளே செல்ல இது பாதை யல்ல. அன்பின் ரகசியங்களை அறிய இது பாதையல்ல. ஒருவர் மென்மையாக அதில் பிரவேசிக்க வேண்டும். கவசங்களையும், தற்காப்பையும் உதறித் தள்ளிவிட வேண்டும்.

அது பயமுறுத்துவதாக இருந்தால் பயமுறுத்தட்டும். நீங்கள் உள்ளே நுழையுங்கள். பயம் மறைந்துவிடும். பயத்தை உதற ஒரே

வழி எது உங்களுக்கு பெரிதும் அச்சம் தருகிறதோ அதில் இறங்கிப் பார்த்து விடுவதுதான். யாராவது ஒருவர் என்னிடம் வந்து, "எனக்கு இருட்டைக் கண்டால் பயமாக இருக்கிறது" என்று சொன்னால் நான் அவர்களுக்குக் கூறும் ஆலோசனை இதுதான். "இரவில் நடந்து செல்லுங்கள். நகருக்கு வெளியே உள்ள மரத்தடியில் தனியே அமருங்கள். நடுங்குங்கள்! வியர்த்துப் போங்கள். பதட்டப்படுங்கள். ஆனால் அங்கேயே உட்கார்ந்திருங்கள். எவ்வளவு நேரம் உங்களால் நடுங்க முடியும்? மெதுவாக எல்லாம் அடங்கிப் போய்விடும். இதயம் இயல்பாக இயங்கத் தொடங்கும். சட்டென்று நீங்கள் இருள் என்பது பயப்படுவதற்கு அல்ல என்று கண்டு கொள்வீர்கள். மெதுவாக இருளின் அழகு பற்றிய விழிப்புணர்வு உங்களிடம் தோன்றும். இருளிடம் மட்டுமே அது இருக்கிறது. ஆழம், அமைதி, வெல்வெட், மிருதுத்தன்மை, சலனமற்ற நிலை, இரவின் இன்னிசை பூச்சி இனங்கள், இணக்க நிலை எல்லாம் அதனிடம் மட்டுமே உள்ளன. மெதுவாக அச்சம் மறையும்போது நீங்கள் வியந்து போவீர்கள். இருள் என்பது இருட்டு அல்ல அது சொந்தமாக ஒரு பிரகாசத்தைப் பெற்றுள்ளது என்று உணர்வீர்கள்!

உங்களால் மங்கலாக ஏதாவது ஒன்றைப் பார்க்க முடியும். தெளிவாகப் பார்க்க இயலாது. ஆனால் தெளிவு உள்ளீடற்ற தன்மை யைத் தந்துவிடுகிறது. மங்கலான காட்சி ஆழத்தையும், வியப்பையும் அளிக்கிறது. ஒளி என்பது இருள் போல விந்தையானது அல்ல. ஒளி உரைநடை போன்றது. இருள் கவிதை போன்றது. ஒளி நிர்வாண மானது. நீங்கள் எவ்வளவு நேரம் அதில் ஆர்வம் காட்ட முடியும்? ஆனால் இருள் மூடுதிரையிட்டது. பெருவிருப்பத்தை அது தூண்டு கிறது. திரையை விலக்கிப் பார்க்க விருப்பம் ஏற்படுகிறது.

இருட்டைக் கண்டு நீங்கள் பயந்தால் இருட்டில் இறங்கி நடந்து செல்லுங்கள். அன்பைக் கண்டு பயந்தால் அன்பு செலுத்திப் பாருங்கள். தனியே இருக்க பயம் கொண்டால் இமயம் சென்று தனித் திருங்கள். அதை உதறித் தள்ள அதுதான் ஒரே வழி. இல்லாது போனால் சிறிய விஷயங்களும் பெரும் சுமையாகிவிடும்.

இரண்டு நாட்களுக்கு முன்பு ஒரு அழகான இத்தாலிய இளைஞர் சந்நியாசம் மேற்கொண்டார். தனது தொப்புளை அவரால் தொட முடியவில்லை என்பதுதான் பிரச்சினை. அதற்கு பயம்தான் காரணம். யாரும் அவரது தொப்புளைத் தொட அனுமதிக்கவில்லை. அவராலும் தொட முடியவில்லை. ஒருபோதும் தனது தொப்புளை விரலால் தொட்டதில்லை. அது அவரால் முடியாத காரியம். தொட்டால் இறந்து போய்விடுவோம் என்று அஞ்சினார். அப்போது அது அசட்டுத்

தனம் என்று தெரிகிறது. அது அசட்டுத்தனம் என்று தெரியக்காரணம் உங்களிடம் வேறு பயங்கள் இருக்கின்றன. அது அவரது பயம்.

இப்போது நான் என்ன செய்வது? "கொஞ்சம் காத்திரு. சில நாட்களுக்குப் பிறகு உன் தொப்புளைத் தொட வரும் அனைவரிடமும் சொல்லி விடுகிறேன்" என்று அவரிடம் கூறினேன். முதல் தடவையாக அவர் அதிர்ச்சி அடைந்திருக்கலாம். கோமா நிலைக்குச் சென்றிருக்க லாம். ஆனால் யாரும் இறந்ததில்லை. அது மனோவியல் சார்ந்தது. அவரது தொப்புளைப் பலர் தொட்டபோது அவர் சிரித்தார்.

அது ஒன்றுதான் வழி. சில சமயங்களில் நீங்கள் நிதானித்துச் செய்கிற செயல்கள் நல்ல வழிப்புணர்வு தரும்.

ஒருமுறை இளைஞர் ஒருவரை என்னிடம் அழைத்து வந்தார்கள். அவர் கல்லூரிப் பேராசிரியர். அவர் பெண் பிள்ளை போல நடக்கிறார் என்பதுதான் பிரச்சினை. பல்கலைக்கழகத்தில் இருந்து கொண்டு, ஒரு பேராசிரியராக பணிபுரிந்துகொண்டு ஒரு பெண் பிள்ளை போல அசைந்து நடப்பது சங்கடப்படுத்தும் விஷயம். அவர் பெரிதும் கலவரப்பட்டுப் போயிருந்தார். பலவிதமான வழிமுறை களை முயன்று பார்த்திருந்தார்.

நான் அவரிடம், "நீங்கள் எந்த முயற்சியும் செய்ய வேண்டாம். எது செய்தாலும் அது முடியாத காரியம். ஒரு ஆணால் பெண்ணைப் போல் நடக்க முடியாது. விந்தையான ஒரு செயலை நீங்கள் செய்கிறீர்கள். நீங்கள் பெண் போல நடக்கிறீர்கள் என்றால் உங்கள் வயிற்றில் கர்ப்பப்பை இருக்கலாம். அந்த பையின் வட்ட வடிவம் காரணமாக அவள் வித்தியாசமாக நடக்கிறாள். அவளது உடல் கட்ட மைப்பு வித்தியாசமானது. ஒரு ஆணால் அப்படி நடக்க முடியாது. ஒருவர் அப்படிச் செய்தால் அது பெருமைப்படத்தக்க விஷயம். நீங்கள் ஒரு விந்தைச் செயல் புரிகிறீர்கள். அதை எனக்குச் செய்து காட்டுங்கள்" என்றேன். அவர் என்னைப் பார்த்து, "என்ன சொல்கிறீர்கள்? அது விந்தையா?" என்றார். நான் அவரிடம், "என் முன்னால் ஒரு பெண் பிள்ளை போல நடந்து காட்டுங்கள்" என்று கேட்டுக் கொண்டேன்.

அவர் முயன்று தோற்றுப் போனார். அவரால் நடக்க முடிய வில்லை. நான் அவரிடம், "இதுதான் சாவி. மீண்டும் பல்கலைக்கழகம் செல்லுங்கள். இதுவரை நீங்கள் பெண் போல நடக்கக்கூடாது என்று முயன்றீர்கள். இன்று முதல் பெண்போல நடக்கத் தீவிர முயற்சி செய்யுங்கள். பெண்பிள்ளை போல நடக்கக் கூடாது என்று முயன்றது தான் எல்லா பிரச்சினைகளுக்கும் காரணமாகும். அது ஒருவித ஆவேச மாக, மன மயக்கமாக மாறிவிட்டது. உங்களை நீங்களே மன

மயக்கத்தில் ஆழ்த்திக் கொண்டீர்கள். மன மயக்கத்திலிருந்து விடுபட ஒரேவழி. அதில் தீவிரமாக இறங்குவதுதான். உடனே பல்கலைக் கழகம் செல்லுங்கள். அந்த இடத்தைச் சுற்றி நடந்து செல்லுங்கள். ஒவ்வொரு அசைவிலும் நீங்கள் முடிந்தவரை பெண் என்று காட்டுங்கள்" என்றேன். அவர் முயன்று பார்த்து தோற்றுப்போனார். அதன் பிறகு அவர் வெற்றியடையவே இல்லை.

நீங்கள் பயந்து போயிருந்தால்.... பயம் கவர்ச்சியான மனிதர்களைக் கண்டதும் எழுகிறது. அதுவும் இதுபோன்றதுதான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். யாராவது உங்கள் தொப்புளைத் தொட்டு விடுவார்கள் என்று பயப்படுவதோ, இருட்டைக் கண்டு அஞ்சுவதோ, பெண் பிள்ளை போல நடப்பது பற்றியதோ அல்லது இன்னும் பல வெவ்வேறான பயங்கள் எல்லாம் ஒரே விதமானவையே. பயம் அகற்றப்பட வேண்டும். பயம் முடமாக்கும் செயல்பாடு. செயலிழக்கச் செய்யும் செயல்பாடு.

அதைக் கரைந்தோடச் செய்ய ண்டும் என்றால் அதனுள் நுழைய வேண்டும். அனுபவம் விடுதலை தருகிறது. நம்மிடம் பல அழகான மனிதர்கள் இருக்கிறார்கள். வேறு எந்த இடத்திலும் இத்தனை பேரை ஒன்றாகப் பார்க்க முடியாது. நீங்கள் அழகானவர்களைக் கண்டு அஞ்சினால் தற்கொலைதான் செய்துகொள்ள வேண்டும். காரணம் நிறைய அழகானவர்கள் வந்து போகிறார்கள்.

எனவே கற்றுக் கொள்வது நல்லது. பயத்தை உதறக் கற்றுக் கொள்வது நல்லது. மக்களைச் சார்ந்திருப்பது நல்லது. உண்மையில், அவ்வாறு சார்ந்திருக்கும்போது ஒவ்வொரு மனிதரிடமும் ஏதோ ஒரு அழகு இருப்பதைக் காண்பீர்கள். யாரும் அழகில்லாமல் வரவில்லை. அழகு பலவித பரிமாணங்கள் கொண்டிருக்கலாம். சிலரது முகம் அழகாக இருக்கலாம். சிலரது குரல் அழகாக இருக்கலாம். சிலரது உடல் அழகாக இருக்கலாம். சிலரது மனம் அழகாக இருக்கலாம். அழகில்லாமல் யாரும் வரவில்லை. இயற்கை ஒவ்வொருவருக்கும் ஒருவித அழகையோ அல்லது வேறு சிறப்பையோ தந்திருக்கிறது. மனிதர்கள் பலர் இருப்பது போலவே அழகும் பலவகைப்பட்டதாக இருக்கிறது.

ஒரு மனிதனின் அழகுடன் தொடர்பு கொள்ள வேண்டும் என்றால், நெருக்கமானவராக மாறுங்கள். பயத்தை உதறுங்கள். தற்காப்புச் செயல்களை விலக்குங்கள். அதன் பிறகு தெய்வீகம் பல வடிவங்களில் வெளிப்படுவதைக் கண்டு வியந்து போவீர்கள். தெய்வீகமே அழகாகும்.

தெய்வீகத்தைக் குறிப்பிடும் மூன்று சொற்கள் உள்ளன. **சத்தியம்** - உண்மை, **சிவம்** உன்னதமான மேன்மை, **சுதந்திரம்** - அற்புதமான அழகு. அதில் அழகே கடைசியாக வருகிறது. தெய்வீகம் அழகானது. தெய்வீகமே அழகாக இருக்கிறது. எப்போதெல்லாம் நீங்கள் அழகைக் காண்கிறீர்களோ அது தெய்வீக அழகின் பிரதி பலிப்பாகும். அந்த பிரதிபலிப்பைக் கண்டு அச்சம் கொண்டால் எப்படி நீங்கள் உண்மையைச் சார்ந்திருக்க முடியும்? அந்த பிரதிபலிப்பு பாடம் கற்றுக்கொள்ள உதவுகிறது. எனவே ஒருநாள் நீங்கள் உண்மை யைச் சார்ந்திருப்பீர்கள்.

மூன்றாவது கேள்வி

ஓஷோ,

எனது வாழ்க்கை முழுவதும் நரகமாக இருக்கிறது. ஆரம்பத்திலிருந்தே ஏதோ தவறாகப் போய்விட்டது போல் தெரிகிறது. நான் ஆரம்பம் முதலே பக்தியும், நேர்மையும் உள்ளவனாக வாழ்வதற்கு கடுமையாக முயன்றேன். ஆனால் பேரின்பம் எனப்படுவதன் ஒரு சிறு ஒளிக்கீற்றும் எனக்குத் தென்படவில்லை. என்னிடம் உள்ள தவறு என்ன?

நீங்கள் சென்று கொண்டிருக்கும் பாதை தவறானது. அதுதான் உங்களிடமுள்ள தவறாகும். நீங்கள் நம்பகமானவர் அல்ல. நீங்கள் நீங்களாக இருக்க உங்களை அனுமதிக்கவில்லை. நீங்கள் ஒரு பாவனையாளர்.

நான் ஆரம்பம் முதலே பக்தியும், நேர்மையும் உள்ளவனாக வாழ்வதற்குக் கடுமையாக முயன்றேன்" என்றீர்கள். அதன் அர்த்தம் என்ன?

உங்களால் எப்படி பக்தி வாழ்க்கை வாழ்ந்திட இயலும்? தெய்வீக அனுபவம் உங்களிடம் சிறிதும் இல்லை. உங்கள் ஆன்மீக வாழ்க்கை போலி வேஷம். நீங்கள் ஆன்மீகவாதிகள் என்று நினைக்கும் சிலரைப் பார்த்து, அவர்களைப் போல நடிக்கிறீர்கள். அவர்கள் ஆன்மீகவாதியா இல்லையா என்று எவ்விதம் முடிவு செய்தீர்கள்? அதுவும் சமூகத்தால்தான் முடிவு செய்யப்படுகிறது.

நீங்கள் வலையில் அகப்பட்டுக் கிடக்கிறீர்கள். ஆட்டு மந்தையைச் சார்ந்து, கூட்டத்துடன் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். கூட்டம் என்பது தாழ்ந்த நிலை விழிப்பாகும். கும்பல் வாழ்வு என்றால் குறைந்தபட்ச வாழ்வு வாழ்தலாகும். கும்பல் தெய்வீகத்தின் மீது ஆர்வம் கொள்வதில்லை. அதன் நன்நெறி என்பது சமுதாயத்தைத் திருப்திப்படுத்துவதே ஆகும். அது நிஜமான நன்நெறி அல்ல. அதன்

நன்நெறி உராய்வைத் தடுக்கும் உயவு எண்ணெய் போன்றது. மனிதர்கள் ஒன்று சேர்ந்திருக்க அது உதவுகிறது. அதன் நோக்கம் உண்மையான நேர்மையல்ல. அது நேர்மையாக இருக்க இயலாது. நேர்மையே சிறந்த கோட்பாடு என்று ஒரு பழமொழி உண்டு. கோட்பாடு அடிப்படையில் அந்த நேர்மையைப் பற்றி யோசித்துப் பாருங்கள். அது நேர்மையற்ற ஆரம்பமாக இருக்கிறது. நேர்மை என்பது ஒரு கோட்பாடு அல்ல. அது அரசியல் அல்ல. நேர்மை என்பது உங்கள் வாழ்வைச் சுதந்திரத்துடனும், உண்மையாகவும், உள்ளது உள்ளபடியும் வாழ்வதற்கானது. பொய்யாகவும், பாவனையுடன் நடந்து அதுதான் நேர்மை என்று கூறாதீர்கள். கிடைக்கும் பலன் எதுவாக இருந்தாலும், நீங்கள் வெறுக்கப்பட்டாலும், அன்பு காட்டப் பட்டாலும் நீங்கள் மதிக்கப்பட்டாலும் அவமதிக்கப்பட்டாலும் அது பெரிய விஷயமல்ல. ஒரு நேர்மையான மனிதர் முற்றும் உள்ளது உள்ளபடி, இயற்கை அவரைப் படைத்த விதமாகவே வாழ்கிறார். அவர் தன்னைப் பெரிதும் மதிக்கிறார். எனவே எந்த செயலிலும் துணிந்து ஈடுபடத் தயாராக இருக்கிறார்.

நீங்கள் சிரமமான வாழ்க்கை வாழ்ந்ததாகச் சொன்னீர்கள். நேர்மை என்பது உங்களுக்கு விதிக்கப்பட்ட ஒரு தண்டனை போல் இருந்திருக்கலாம். அதனால்தான் அது சிரமமானதாக இருந்திருக்கிறது. இல்லாதுபோனால் ஒரு நேர்மையான மனிதர் அவ்விதம் உணர மாட்டார். நேர்மையாக நடக்க எதைத் தியாகம் செய்ய வேண்டு மானாலும் தியாகம் செய்வார். ஆனால் அதற்கேற்ற மதிப்புள்ளதாக அது இருக்க வேண்டும். அவரது ஆனந்தம் அளவற்றது. அவரது பேரின்பம் எல்லையற்றது. எந்த அளவு தியாகம் செய்கிறாரோ அந்த அளவு மகிழ்ச்சி பெறுகிறார். கூடுதலான இன்பம் கொள்கிறார்.

"நான் பக்தியும் நேர்மையும் உள்ளவனாக வாழ்வதற்கு முயன்றேன்" என்று கூறுகிறீர்கள். ஆம். நீங்கள் சிரமமான, துறவு வாழ்க்கை வாழ்ந்திருக்கலாம். குறிப்பிட்ட ஒரு குணாதிசயத்தை உருவாக்கிக்கொள்ள கடுமையான முயற்சி செய்திருக்கலாம். குணா திசயங்களை வளர்த்துக் கொள்வது மூலம் பேரின்பம் பெற்றிட இயலாது. வளர்த்துக் கொள்ளப்பட்ட குணாதிசயம் போலியானது, செயற்கையானது. அதில் பேரின்பம் தோன்றாது. காகித மலருக்கு வாசனை கிடையாது. நிஜமான ரோஜா மலரிடம்தான் வாசனை யுண்டு. நிஜமான ரோஜாவை வளர்க்கச் செடியை நிலத்தில் ஊன்ற வேண்டும். அது நிஜமான ரோஜாவாக வளர்வதற்குத் தேவையான சிரமங்கள் எல்லாவற்றையும் எதிர்கொண்டாக வேண்டும்.

பொய்மை பொத்திப் பாதுகாக்கப்படுகிறது. நிஜம் திறந்த வெளி யில் இருந்து சூரிய ஒளி, காற்று, மழையில் அடிபடுகிறது. நிஜமாக இருக்க வேண்டுமானால் இந்த கஷ்டங்கள் அவசியம். காகித மலர் காற்று, வெய்யில், மழையில் தடுமாறத் தேவையில்லை. அறைக்குள் வைத்து நீங்கள் அதைப் பாதுகாக்கலாம். அதற்கு நிலம் தேவை யில்லை, வேர் தேவையில்லை. அதற்கு எதுவும் தேவையில்லை. காரணம் அது போலி - அது அழிவற்றது.

உண்மையான ரோஜா காலைச் சூரியஒளியில் ஜனிக்கிறது. மாலையில் அது மறையத் தொடங்குகிறது. நட்சத்திரங்கள் தோன்றும் போது, இலைகள் உதிரும்போது அக்கணத்தில் மட்டும் நிஜமான ரோஜா வாழ்கிறது. பிறகு மறைந்து விடுகிறது. உண்மைக்குப் பிறப்பும் இறப்பும் தெரியும். உண்மை ஆபத்தில் வாழ்கிறது.

உங்கள் நன்நெறி, நேர்மை, மதாச்சாரம் போன்றவை நிஜமான ஆபத்தான வாழ்க்கை முறைகள் அல்ல. அதற்குமாறாக அது ஒரு தற்காப்பு முயற்சியாகவே உள்ளது. நீங்கள் வாழ்வில் ஒரு பாது காப்பை உருவாக்கிக் கொள்கிறீர்கள். அதனால்தான் அதைத் தவற விடுகிறீர்கள்.

நீங்கள் நிஜமாகவே வாழ விரும்பினால் பாதுகாப்பற்ற வாழ்வை மேற்கொள்ளுங்கள். உண்மையாக வாழுங்கள். உண்மையாக வாழுங்கள் என்று நான் கூறுவது வேதங்களும், குரானும், பைபிளும் கற்றுத் தந்த உண்மையல்ல. உங்களுக்கு நீங்கள் உண்மையாக இருங்கள் என்பதே அதன் பொருளாகும். நீங்கள் எப்படிப்பட்டவராக இருந்தாலும் அதை மறைக்காதீர்கள். ஏமாற்றாதீர்கள். காற்றிலும், மழையிலும், வெய்யிலிலும் அது காயட்டும். அதில் ஆபத்து உண்டு. ஆனால் அதிக ஆபத்து ஆனந்தம் தரும். அதிக ஆபத்து பேரின்பம் அளிக்கும். அதுவே ரோஜாவின் நறுமணமாகும்.

மதநூல்கள் சார்ந்து நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அதனால்தான் லட்சக்கணக்கான மக்கள் நன்நெறி, ஆன்மீகம் என்று கடுமையான வாழ்க்கை வாழ்கிறார்கள். ஆனால் இதுவரை பேரின்பம் என்றால் என்னவென்று அறிந்து கொள்ளவில்லை. புத்தகங்களைச் சார்ந்து அவர்கள் வாழ்கிறார்கள். தங்கள் அகச் சிறுகுரல் கூறுவதை கவனிக்க முயன்றதில்லை. அவர்கள் தங்களுக்குத் தாங்களே துரோகம் இழைத்துக் கொள்கிறார்கள். அவர்கள் தங்கள் உண்மைக்குத் துரோக மிழைக்கிறார்கள்.

**இ**ளம் தனது பத்து வயது மகன் ஹார்விக்காக ஒரு சைக்கிள் வாங்கினார். "கவலைப்படாதே ஹார்வி" நான் இதை நொடிப் பொழுதில் பொறுத்தி விடுகிறேன்" என்று அவர் உறுதி கூறினார்.

சைக்கிளின் பாகங்களை அவர் பெரிய பெட்டியிலிருந்து ஒவ்வொன்றாக எடுப்பதை ஹார்வி பொறுமையின்றிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"இதோ வழிகாட்டும் குறிப்பேடு இருக்கிறது" என்று முணு முணுத்தார் கிளம்". சக்கரத்தை எடுத்து அந்த துவாரத்திலும் இந்த துவாரத்திலும் சேரும்படி பொருத்தவும். மறையாணியை எடுத்து அந்த துவாரத்தில் வைத்துத் திருகவும்" என்று அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

"அப்பா! உங்களால் இதை செய்துவிட முடியுமா?" என்று கேட்ட ஹார்வி, தந்தை வியர்வையில் நனைவதைக் கண்டான்.

நான் ஒரு ராணுவ இயந்திரப் பொறிவினைஞனாக (Mechanic) இருந்தவனாக்கும்" என்று கடுமையான குரலில் சொன்னார் கிளம்.

ஐந்து மணி நேரத்திற்குப் பிறகு கிளம் மகிழ்ச்சியுடன், "ஹல்லே லூயா! நான் செய்து முடித்துவிட்டேன்" என்று கூவினார்.

ஹார்வி சைக்கிளைப் பார்த்துவிட்டு, "அப்பா! மேல்புறம் கீழாகவும், பின்னோக்கியும் செல்லும் வகையில் இருக்கும் ஒரு சைக்கிளில் எப்படிச் சவாரி செய்ய முடியும்?" என்று கேட்டான்.

சில புத்தகங்களின் வழிகாட்டல்படி உங்கள் வாழ்வை நீங்கள் ஒருங்கிணைத்தால் சிரமத்திற்கு ஆட்பட நேரிடும். உங்களது சிறிய ஒளியின் வழியில் வாழுங்கள். போதுமான வெளிச்சம் உங்களுக்குத் தரப்பட்டிருக்கிறது. அதை உங்களுடன் கொண்டு வந்திருக்கிறீர்கள். நீங்கள் புத்தரைச் சார்ந்தோ, மகாவீரரைச் சார்ந்தோ, கிருஷ்ணரைச் சார்ந்தோ இருக்கத் தேவையில்லை. அவர்கள் யாரைச் சார்ந்தும் இருக்க வில்லை என்பது நினைவிருக்கட்டும்!

ஜென் குரு பொகூஜூ பற்றி நான் கேள்விப்பட்டதைச் சொல் கிறேன். தனது குருவின் பிறந்தநாளை அவர் கொண்டாடிக் கொண் டிருந்தார். "நீங்கள் அவரைப் பின்பற்றுவதில்லை. அப்புறம் எதற்கு அவரது பிறந்த நாளைக் கொண்டாடுகிறீர்கள்?" நீங்கள் அந்த குருவுக்கு எதிரான கருத்து உடையவர். உங்கள் மரியாதையை ஏன் அவருக்குச் செலுத்துகிறீர்கள்?" என்று ஒருவர் அவரிடம் கேட்டார்.

அதற்கு பொகூஜூ, "எனது குரு தனது குருவைப் பின்பற்ற வில்லை. நானும் அதையே செய்கிறேன். தன்னைப் பின்பற்ற வேண்டாம் என்று எனது குரு என்னிடம் கூறினார். அவர் எனக்குத் தந்த செய்தி அதுதான். அவரைப் **பின்பற்றாது** இருந்ததால் பெரிய ஒளி என்னுள் எழுந்தது. அதற்கான மரியாதையும், நன்றி கூறலும் தான் இந்த கொண்டாட்டம்" என்றார்.

ஆனால் ஜனங்கள் மிகவும் முட்டாள்தனமாக வாழ்கிறார்கள். அவர்கள் போலிகளாக இருக்கிறார்கள். பிதாகோரஸ் இறந்த பிறகு ஒரு மூடக் கருத்து அவரது சீடர்களிடம் தோன்றியது. அவரைக் காயைச் சாப்பிடக் கூடாது என்று ஒரு செய்தி பரவியது. பிதாகோரஸ் ஏன் அவரை சாப்பிடவில்லை என்று மக்கள் காலங்காலமாக வியந்து போயிருந்தார்கள். பிதாகோரஸ் சைவ உணவுக்காரர். அவரைக் காய் அசைவம் அல்ல. பிதாகோரஸ் இறைச்சியும், மீனும் சாப்பிடாது இருந்தது சரிதான். ஏன் அவரை சாப்பிடவில்லை? உண்மையில் அது அவருக்கு ஒத்துக் கொள்ளவில்லை. அதுதான் காரணம். அவரை சாப்பிட்டால் அவருக்கு வயிற்றில் சிக்கல் ஏற்பட்டது. அதனால் அதைச் சாப்பிடுவதை நிறுத்திவிட்டார். அது சரியான செயல்தான். தனது அகஒலியை அவர் கவனித்தார். அவர் அலட்டிக் கொள்ள வில்லை. அவர் இந்தியாவில் இருந்திருக்கிறார். சைவ உணவு முறையை அங்கே கற்றுக் கொண்டார். புத்தரும், மகாவீரரும் அவரைக் காய் சாப்பிட்டார்கள் அவர்கள் சிறந்த சைவ உணவுக்காரர்கள். சைவ உணவுக்காரர்கள் பற்றி அவர் கவலைப்படவில்லை. தனக்கு ஒத்துக் கொள்ளவில்லை என்பதால் அவரை சாப்பிடவில்லை.

அந்த முட்டாள் சீடர்களைப் பாருங்கள். காலங்காலமாக அவர்கள் அவரைக்காய் உண்பதில்லை. ஏன் என்று கேட்டால் பதில் சொல்ல இயலாது. "அதில் ஏதாவது ரகசியம் இருக்கலாம். அது எங்களுக்கு மறந்துபோய்விட்டது" என்று நினைக்கிறார்கள்.

பிதாகோரஸ் வெறும் காலுடன் நடந்து சென்றார். பூமியுடன் தொடர்பு கொள்ள அது அற்புதமான பயிற்சியாகும். அதனால்தான் மகாவீரரும் வெறும் காலுடன் நடந்தார். நீங்கள் மிருதுவான தரையில் வெறும் காலுடன் நடப்பதே நல்லது. காலணி போடாதீர்கள். அபரி மிதமான தொடர்பு பூமியுடன் உங்களுக்கு கிட்டும். நான் பூமியைச் சார்ந்திருக்கிறோம். நம்மில் பாதி பூமியாகவும், மீதி ஆகாயமாகவும் அமைந்திருக்கிறது. காலைச் சூரிய ஒளியில் நீங்கள் ஈர நிலத்தில் நடந்து சென்றால், பூமி, வானம் என்ற இரண்டையும் அனுபவிக்கலாம். அது நிச்சயம் சரிதான். ஆனால் ஜைனத் துறவிகள் தார்ச் சாலையில் வெறும் காலுடன் நடக்கிறார்கள். அது ஆபத்தானது. நரம்புகளுக்கு ஊறு விளைவிக்கக் கூடியது. சிமெண்ட் அல்லது தார்ச்சாலையில் வெறும் காலுடன் நடப்பது நரம்பு மண்டலம் முழுமைக்கும் கேடு தரக் கூடியது. குறிப்பாக, மூளைச் செல்கள் பாதிக்கலாம். ஈரநிலத்தில் வெறும் காலுடன் நடப்பது நரம்புகளுக்கு நன்மை தரக்கூடியது. அது நரம்புகளுக்கு இதம் தருகிறது.

மகாவீரர் வெறும் காலுடன் நடந்தார். அது சரியே. ஜோரதஸ் திரார் வெறும் காலுடன் நடந்தார். அதுவும் சரியானதே. பிதாகோரஸ்

வெறும் காலுடன் நடந்தார். அதுவும் சரியானதுதான். ஆனால் ஜைனத் துறவிகள் மும்பை, டில்லிச் சாலைகளில் இன்றும் வெறும் காலுடன் நடக்கிறார்கள். அது முட்டாள்தனம்!

ஒவ்வொருவரும் தனது சுய ஒளியைச் சார்ந்து வாழ வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். குருவை அப்படியே காப்பி யடிக்கக் கூடாது. அவரைப் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் உயிரற்றுப் போய்விட்ட கொள்கைகளையும், விதிமுறைகளையும் பின்பற்றுகிறீர்கள். அதனால் அவை உங்களுக்கு பொருந்துவதில்லை. பெரிய முரண்பாடு உங்களிடம் எழுகிறது. முரண்பாடு ஏற்படுத்திக் கொள்வது நரகத்தைப் படைத்துக் கொள்வது போன்றதாகும்.

டேவும், மேபலும் இரண்டு பேர் ஓட்டிச் செல்லும் வகையில் உருவாக்கப்பட்ட சைக்கிளில் (Tandem) அமர்ந்து ஒரு செங்குத்தான குன்றில் ஏறினார்கள். அவர்கள் மலையுச்சியை அடைந்ததும் டேவ் கீழே குதித்து புல்தரையில் படுத்துக் கொண்டார். "கடவுளே! எவ்வளவு செங்குத்தான குன்று இது!" என்றார்.

அதற்கு மேபல், "ஆமாம். நான் பிரேக்கை அழுத்திப் பிடிக் காமல் இருந்திருந்தால் வண்டி பின்நோக்கி வழுக்கிக் கொண்டு சென்றிருக்கும்" என்றார்.

லட்சக்கணக்கான மக்களின் வாழ்க்கை இக்கதைபோல அமைந்திருக்கிறது. நீங்கள் குன்றைத் தேவையின்றிக் கடினமான தாகவும், சிரமமானதாகவும் மாற்றி விட்டீர்கள். பிரேக் போடப் பட்டிருக்கிறது. உங்கள் வாழ்க்கைச் சக்தியுடன் ஒரு முரண்பாட்டை ஏற்படுத்திக் கொண்டு விட்டீர்கள். ஒருவரை எப்போது நீங்கள் காப்பி யடித்தாலும் ஒரு முரண்பாட்டை உருவாக்குகிறீர்கள். நீங்கள் நீங்க ளாகவே மட்டும் இருக்க முடியும். நீங்கள் பிறருடன் ஒற்றுமையாக, இணக்கமாக, புரிதலுடன் வாழலாம். ஆனால் அவர்களைக் காப்பி யடிக்காதீர்கள். கற்றுக் கொள்ளுங்கள், காப்பியடிக்காதீர்கள்.

காப்பியடிக்க மக்கள் அவசரம் காட்டுகிறார்கள். ஏன் மக்கள் போலியாக நடிக்க விரும்புகிறார்கள்? அது எளிதான செயல். காப்பி யடிக்க அறிவு தேவையில்லை. எந்த முட்டாளும் காப்பியடிக்க முடியும். உண்மையில் முட்டாள்களால் மட்டுமே காப்பியடிக்க முடியும். அறிவுள்ள மனிதர் கற்றுக் கொள்கிறார். புரிந்து கொள்கிறார். தனது புரிதலில் இருந்து வரும் ஒளியைப் பின்பற்றுகிறார்.

உங்கள் நற்குணம், நேர்மை, ஆன்மீக வாழ்க்கை என்று கூறப் படுவதை எல்லாம் உதறித் தள்ளுங்கள். இன்னும் தாமதமாகிவிட வில்லை. தயவுசெய்து உதறித் தள்ளிவிடுங்கள். முதலில் இருந்து

ஆரம்பியுங்கள். காரியங்கள் நடக்கத் தொடங்கிவிடும். உங்களுக்கு நான் முழுச் சுதந்திரம் தருகிறேன். நீங்கள் விடுதலை அடைய நான் உதவுகிறேன். குணாதிசயத்தை உருவாக்கிக் கொள்ள நான் உதவுவ தில்லை. மன உணர்வுகளை உருவாக்க நான் உதவுகிறேன். அந்த மன உணர்வு உங்கள் குணாதிசயத்தைக் கொண்டு வந்து சேர்க்கும். குணாதிசயம் என்பது திரவ வடிவச் செயல்பாடு அதனிடம் விறைப்பு இல்லை.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**நீங்கள் எப்படி வருடக் கணக்கில் தினந்தோறும் விடாமல் இவ்வளவு அழகாகப் பேசுகிறீர்கள். உங்களிடம் உள்ள ரகசியம் என்ன?**

*அதில் ரகசியம் எல்லாம் ஒன்றுமில்லை!*

புயலும், இருளும் கலந்த ஒரு இரவு வேளை அது. கப்பல் காப்டன் சக அதிகாரிகளில் ஒருவரிடம், "எங்களுக்கு ஒரு கதை சொல்லுங்கள்" என்று கேட்டார்.

அந்த சக அதிகாரி, "புயலும், இருளும் கலந்த ஒரு இரவு வேளை அது. கப்பல் காப்டன் சக அதிகாரிகளில் ஒருவரிடம், "எங்களுக்கு ஒரு கதை சொல்லுங்கள் என்று கேட்டார்" என்று ஆரம்பித்தார்.

மீண்டும், அந்த சக அதிகாரி கதையைத் துவங்கினார். "புயலும், இருளும் கலந்த ஒரு இரவு வேளை அது...."

நான் ஒன்றையே திரும்பத் திரும்பப் பேசிக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு நாளும் நான் புதிதாக எதையும் பேசுவதில்லை. உண்மை எளிமையானது. அதை சில வரிகளில் சொல்லிவிடலாம். நீங்கள் அதைக் கேட்காதபோது திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டியிருக் கிறது.

*லிமரிக் வகை கவிதையில் நிஸீமா*

ஒரு பைத்தியக்கார புத்தர் பூனேயில் இருந்தார்
வேண்டாததை வெட்டித் தள்ள நினைத்து அகந்தை
கொண்டிருந்தார்.
அச்சமற்றுச் செயல்பட்டார்
கணக்கில்லாமல் விளம்பரங்களைத் துணைக்கு வைத்துக்
கொண்டார்.
கடைசியில் ஒரு நாள் அவரை எல்லோரும் அடையாளம்
கண்டு கொண்டார்கள்.

நான் உங்களிடம் பேசிக் கொண்டே இருக்கிறேன். ஒருநாள் என்னிடம் ஏற்பட்டுள்ள அமைதியை நீங்கள் கவனிக்கும்படி செய்ய முடியும். என்னைப் புரிந்துகொண்டவர்கள் அதன் பிறகு நான் பேசுவதைக் கேட்க மாட்டார்கள். எனது தரிசனத்தைக் கவனிப்பார்கள். இங்குள்ள உங்களில் பலர் ஏற்கெனவே என்னுடன் வார்த்தைகளற்ற தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு விட்டார்கள். எனது வார்த்தை களைக் கவனித்தாலும், அதில் வார்த்தைகளற்ற நிலை அதிலிருப்பதை காண்பீர்கள்.

அதனால்தான் புதிதாக இங்கு வருவோர் என்னுடன் எனது வழி முறைகளில் பழகுவதில்லை. இங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று அவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. இது கிரீஸில் இருந்த பிதாகோரஸின் மடாலயம் போன்றதாகும். இங்கு ஏதோ நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் பெரிதும் ஏமாற்றம் தரக்கூடியது. வெளியில் இருப்பவர்களுக்கு விளக்கிச் சொல்லிவிட முடியாது. அது அன்பு சார்ந்த தொடர்பாகும்.

ஒரே விஷயம் பற்றி நான் பேசிக்கொண்டே இருக்கிறேன். அதே விஷயத்தை நீங்கள் கேட்டுக் கொண்டே இருக்கிறீர்கள். அன்பு மிகுதியால் பேசுகிறேன். அன்பு காரணமாக அதைக் கேட்கிறீர்கள். பேசுதலும், கேட்டலும் ஒன்றுக்கொன்று சம்பந்தமற்று இருக்கின்றன. ஆனாலும் ஒருவித பிணைப்பு உள்ளது. பிணைப்பு ஏற்படக் கேட்டல் ஒரு காரணமாக அமைந்திருக்கிறது.

விரைவில் அந்த நாள் வரும். எனது மௌனத்தைக் கவனிக்க முடிந்தவர்களை நான் வளைத்துப் பிடித்துவிடுவேன். அதன் பிறகு வருடம் முழுவதும் நான் உங்களுடன் அமைதியாக உட்கார்ந்து கொள்வேன்.

உங்களுக்குச் சொற்களின் மீது ஆசை இருந்தால் உங்களால் முடிந்தவரை அதை திருப்திப்படுத்துங்கள். விரைவில் வார்த்தைகள் மறையும். உள்முகமாக இருப்பவர்களுக்கு மட்டும் நான் தென்படு வேன். அதன் பிறகு புதிய வெளியாட்கள் உள்ளே வர வாய்ப்பு இல்லை. அவர்கள் வார்த்தை என்ற வாயின் மூலமே உள்ளே வர முடியும். நான் நீண்ட நேரம் பேசினால் கூடுதலாகச் சிலர் உள்ளே வருவார்கள்.

எனது மனிதர்களை நான் பெற்றுவிட்ட பிறகு பேச வேண்டிய அவசியமில்லை. நானும் அமைதியாக உட்கார்ந்து இருப்பேன். நீங்களும் அமைதியாக உட்கார்ந்திருப்பீர்கள். நாம் ஒன்றுசேர்ந்து தெய்வீகம் தோன்ற வழி செய்யலாம்.

இன்று இவ்வளவு போதும்.

## அத்தியாயம் - 8

### முதல் கேள்வி

ஓஷோ,

இந்திரா காந்தி இந்தியப் பாராளுமன்றத்திலிருந்து வெளி யேற்றப்பட்டது பற்றியும், மொரார்ஜி தேசாய் அரசால் அவர் சிறையில் தள்ளப்பட்டது பற்றியும் அதனால் நாடு முழுவதும் ஏற்பட்ட கலவரம் பற்றியும் கூறுங்கள்.

இந்திரா காந்தி தண்டிக்கப்படவில்லை, பரிசளிக்கப்பட்டிருக் கிறார். ஒவ்வொரு புரட்சியாளருக்கும் இதுதான் தலைவிதி. உலகிற்கு ஏதாவது நற்செயல் செய்ய நினைப்பவர்களுக்கு அந்தஸ்து வரிசை பார்க்காமல் இவ்வித பரிசுகள் மீண்டும் மீண்டும் தரப்பட்டு வரு கின்றன.

ஆட்டு மந்தை, இந்த ஜனக்கும்பல் உலகிற்கு புதியதைக் கொண்டுவரும் நபரை மன்னிப்பதில்லை. கும்பல் எப்போதும் பழைமை சார்ந்திருக்கிறது. ஏற்கெனவே இறந்துவிட்ட ஒன்றைப் பிடித்துக் கொண்டு அது வாழ்க்கை நடத்துகிறது. அதற்கு எதிர்காலப் பார்வை கிடையாது. தொலைநோக்கு உள்ளவர்கள், மனோராஜ்ஜியங்

களில் ஈடுபடுவோர், கனவு காண்பவர்கள் போன்றவர்கள் இவ்விதம் தண்டிக்கப்படுகிறார்கள் அல்லது பரிசளிக்கப்படுகிறார்கள்.

நான் அதைப் பரிசு என்று கூறுகிறேன்.

அது இந்திராகாந்தியின் கௌரவத்தைச் செழுமைப்படுத்தியுள்ளது. மொரார்ஜி தேசாய் பற்றி வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கிறது. அது அவரது வேடத்தை வெளிப்படுத்தியிருக்கிறது. அது அவருடைய அகிம்சையை வெளிக்காட்டியிருக்கிறது. அது அவருடைய "மகாத்மாப் பண்பை" காட்டியிருக்கிறது. ஒரு விஷயத்தை அது நிரூபித்திருக்கிறது. அவரது பயம், பிறரை நம்பாத சந்தேகப் புத்தியை அது உணர்த்தியிருக்கிறது.

எப்போதும் பெருந்தன்மை கொண்ட மனதைக் கண்டால் சின்னத்தனமுள்ள மனம் அச்சம் கொள்ளும். பிக்மி குள்ளர்கள் எப்போதும் ஆஜானுபாகுவானவர்களைக் கண்டு பயப்படுகிறார்கள். எப்போதும் அறிவற்றவன் அறிவாளியைக் கண்டால் பயப்படுகிறான். அறிவற்றவர்கள்தான். பெரும்பான்மையினராக இருக்கிறார்கள். அறிவாளிகள் உரிமை கொண்டாட முடியாத அதிகாரம் அவர்களிடம் உள்ளது. அவர்கள் எப்போதும் கூட்டத்தினரின் ஆதரவைப் பெற்றாக வேண்டியிருக்கிறது. அதுதான் இப்போது நடக்கிறது.

மொரார்ஜிக்குப் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை இருக்கிறது. அவரது கும்பல் இந்திரா காந்தியைக் கண்டு பயம் கொள்கிறது. அவர் பாராளுமன்றத்தில் இருந்தால் தங்களது அதிகார நாட்கள் மிகவும் குறைவாகவே இருக்கும். அதை விரல்விட்டு எண்ணி விடலாம் என்று பயப்பட்டார்கள். ஏதாவது ஒரு காரணத்தை வைத்து அவரை வெளியேற்ற வேண்டும். அவர்கள் எதைக் கண்டுபிடித்திருந்தாலும் அது ஒரு சாக்குபோக்கு.

அது இரண்டாம்தரமான பொறாமையைக் காட்டுகிறது. இரண்டாம் தரமான மனிதர்கள் எப்போதும் பொறாமை கொண்டவர்களாகவே இருப்பார்கள். தங்களால் பெறமுடியாதவைகளின் மீது அவர்கள் பொறாமை கொள்வார்கள். மொரார்ஜி தேசாயிடம் கவர்ச்சி இல்லை. அவர் இந்திரா காந்தி மீது பொறாமை கொண்டார். அவரை அழித்துவிட விரும்பினார். அவரது முயற்சி அது சார்ந்ததாகவே இருக்கிறது.

கவர்ச்சியானவர்களை ஒருபோதும் மக்களும் விரும்புவதில்லை. தங்களைப் போன்ற சாதாரணத் தோற்றம் கொண்டவர்களையே விரும்புகிறார்கள். யாராவது ஒருவரிடம் உயர் குலத்து கம்பீரம் தென்பட்டால் மக்கள் அவரை விரும்புவதில்லை. அந்த மனிதர்

தங்களைச் சார்ந்தவர் அல்ல என்று மனதிற்குள் எண்ணிக் கொள்கிறார்கள்.

அது ஒரு மோசமான அரசியல் பழிவாங்கலாகும். அது ஒரு தண்டிக்கும் முயற்சியாகும். மிகவும் முக்கியத்துவம் பெற்ற ஒரு செயலைச் செய்ய முயன்றதற்கான தண்டனையாகும். குறிப்பிட்ட ஒரு ஒழுங்குடன் நாட்டை உருவாக்க அவர் முயன்று வருகிறார். அது தான் அவரது தவறு. குறிப்பிட்ட ஒரு கட்டுப்பாட்டுடன் நாட்டை உருவாக்க முயல்கிறார். கடத்தல்காரர்கள், குண்டர்கள், கொள்ளைக்காரர்கள், ஏமாற்றுக்காரர்கள் போன்றவர்களை அவர் அழிக்க நினைக்கிறார். அவர்கள் எல்லோரும் மொரார்ஜி தேசாயின் பின்னால் ஒன்று சேர்ந்து கொண்டுவிட்டார்கள். அவர்கள் எல்லோரும் பயந்து போய் விட்டார்கள். மீண்டும் அவர் ஆட்சிக்கு வந்தால் பிரச்சினை உருவாகி விடும். மொரார்ஜி ஒரு பாதுகாப்பாக இருக்கிறார்.

உண்மையான அதிகாரம் மொரார்ஜி தேசாயின் கையில் இல்லை. உண்மையான அதிகாரம் இந்து எதேச்சதிகாரவாதிகளின் கையில் இருக்கிறது. மொரார்ஜி இந்திராவுக்கு தண்டனை தந்துவிட்டு, அவரை பாராளுமன்றத்தில் இருந்து வெளியேற்றிவிட்டு, அவரைச் சிறையில் தள்ளிவிட்டுச் சொன்னார். "நான் ஆண்மையற்றவன் அல்ல என்பதை மக்கள் தெரிந்து கொள்ள முடியும். அது இப்போது நிரூபணமாகிவிட்டது. என்னாலும் காரியமாற்ற முடியும்" என்று கூறினார்.

ஆனால் உண்மையில், அது எதிர்மறையான நிரூபணமாகும். அவர் ஆண்மையற்றவர் என்பதையே அது நிரூபிக்கிறது. அவருக்குப் பின்னால் இருந்து செயல்படும் எதேச்சதிகாரச் சக்திகளை எதிர்க்கும் ஆண்மைத்திறன் இல்லாதவர். அவர் வெறும் வெளித்தோற்றம் தான். உண்மையான சக்திகள் இந்து எதேச்சாதிகாரவாதிகள் கையில் இருக்கிறது. இச்செயல் அவர் ஆண்மையற்றவர்தான் என்று எளிதாக நிரூபிக்கிறது. அவர் உண்மையில் பதவி அதிகாரத்தில் இல்லை. சில மனிதர்கள் அவருக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம்தான் நிஜமான அதிகாரம் இருக்கிறது. அவர்கள் இந்திரா காந்தியை நசுக்க விரும்புகிறார்கள், அழிக்க விரும்புகிறார்கள். இந்த நாட்டிலுள்ள எல்லா புரட்சியாளர்களையும், முற்போக்குவாதிகளையும் அவர்கள் அழிக்க விரும்புகிறார்கள்.

அது குடியரசுக் கோட்பாட்டுக்கு எதிரானது. அது இந்திரா காந்தியைப் பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுத்து பொதுமக்களுக்கு இழைக்கப்படும் அவமானமாகும். அது முற்றிலும் குடியரசுக் கோட்பாட்டுக்கு எதிரானது. எப்போதெல்லாம் மக்கள் அதிகாரத்தில் இருக்

கிறார்களோ அப்போது அவர்கள் குடியரசுக் கோட்பாடற்றவர்களாக இருக்க விரும்புகிறார்கள். மக்கள் அதிகாரத்தைப் பிடிக்க குடியரசை ஒரு ஏணியாகப் பயன்படுத்துகிறார்கள். அதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகு குடியரசு யாருக்கு வேண்டும்?

மொரார்ஜி தேசாய் இப்படிச் செய்தது எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது. காரணம் அவரது ஆட்சி முடிவுக்கு வருவதன் துவக்கம் இது. இந்திரா காந்தியின் கௌரவத்தை அது வளப்படுத்தியது என்பதால் நான் மகிழ்ச்சியடைகிறேன்.

அதில் ஒரு சூட்சுமமான வரலாற்றுப்பூர்வமான நியாயம் இருக்கிறது. அந்த நியாயம் என்னவென்றால், யார் ஒருவர் இந்த வகையில் மோசமாக, குடியரசு நிலைக்கு எதிராகத் தண்டிக்கப் படுகிறாரோ அவர் மீது பொதுமக்கள் இரக்கம் கொள்ளத் தொடங்குகிறார்கள். அதுதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. தண்டனை பெறுவதற்கு முன்னர் இந்திரா காந்தி மீது இருந்த மக்களின் அனுதாபத்தை விடவும் இப்போது கூடுதலாகக் கிடைத்திருக்கிறது. அதனால்தான் நான் மகிழ்ச்சியடைவதாகக் கூறுகிறேன். அது மொரார்ஜி தேசாய் மற்றும் அவரது கும்பலுக்கும் முடிவு நெருங்கி விட்டதற்கான துவக்கமாகும்.

நினைவில் வையுங்கள். இந்த தேசம் குழப்பத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. ஒரு ஒழுங்குமுறை இல்லை. சட்டதிட்டங்கள் முறையாக இல்லை. இந்த நாடு கிட்டத்தட்ட அரசாங்கமற்றுக் காலம் தள்ளிக் கொண்டிருக்கிறது. பொதுவாக, சிறுபான்மையினர் துன்பத்தில் இருக்கிறார்கள். மொரார்ஜி தேசாயின் போலி அரசாங்கம் இந்த இருபது மாதங்களில் தந்திருப்பது இதைத்தான். நிச்சயமாக அது ஆண்மையற்ற செயல்தான். அது எந்த காரியத்தையும் செய்யவில்லை. அது கெட்டுப் போன அதிகார வர்க்கத்தின் ஆட்சியை முற்றும் சார்ந்திருக்கும் செயலாகும். அது முன்னேற்றம், புதிய எதிர்காலத்துக்கான அழைப்பு போன்றவற்றைத் தடை செய்கிறது.

நேற்று நான் செய்தித் தாளில் இதைப் படித்தேன். நான் மதத்தை அழிக்க முயல்வதாகவும், அவர் அதைத் தடுத்துக் காப்பாற்ற முயல்வதாகவும் அதில் கூறப்பட்டிருந்தது. எந்த வகையான மதத்தை அவர் காப்பாற்ற முயல்கிறார்? மதம் பற்றிய எந்த புரிதலும் அவருக்கு இல்லை. ஆனால் அவர் என்ன சொல்கிறார் என்று என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அது பழுதுபட்டுப்போன, உயிரற்ற, கடந்த காலம் என்று கூறுகிறார். சம்பிரதாயத்தைக் காப்பாற்ற அவர் விரும்புகிறார். அதை மதம் என்று சொல்கிறார். மதம் என்பது சம்பிரதாயம் அல்ல. மதம் என்பது எப்போதும் ஒரு புரட்சியாகும்.

நான் மதத்தை அழிப்பதால் எனக்கு எதிராக அவர் இருப்பதாகச் சொல்கிறார். நான் ஒரு புதிய மதத்தைத் தோற்றுவித்திருக்கிறேன். மதம் என்பது எப்போதும் புதுப்பிக்கப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும். மதத்தினுள் எப்போதும் புதிய சக்திகளை வார்க்க வேண்டும். அப்போதுதான் அது உயிருடனும், நீரோட்டமாகவும் இருக்கும். காலத்தையும், சூழ்நிலையையும் பொறுத்து மதம் மீண்டும் மீண்டும் தோன்ற வேண்டும்.

ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய ஒன்று இன்றைக்கு வரைக்கும் சரியானதாக இருக்க இயலாது. கடந்த காலத்தில் நீதியாக எண்ணப்பட்ட ஒரு விஷயம் இன்று அநீதியாகி விடுகிறது. உதாரணமாக, கிருஷ்ணர் காலத்தில் யுத்தம் ஒரு நீதியாக கருதப்பட்டது. அன்று அணுகுண்டோ, ஹைட்ரஜன் குண்டோ இல்லை. இன்று யுத்தம் என்பது ஒரு அநீதியான செயல். இன்று யுத்தம் என்றால் அது உலகின் தற்கொலை. புதிய மதம் யுத்தம் வேண்டும் என்று கற்பிக்காது. அது அன்பை மட்டுமே போதிக்கும்.

மனப்பிளவுக்கு ஆட்பட்ட மனிதர்களையே எல்லா பழைய மதங்களும் சார்ந்திருந்தன. புதிய மதம் ஒரு புதிய மனிதனை உருவாக்குகிறது. அவருக்கு "ஹோமோ நோவஸ்" என்று பெயர். நான் ஒரு புதிய மனிதனை அறிவிக்கிறேன். நான் புதிய மனிதன் பற்றி போதிக்கிறேன். புதிய மனிதன் ஒருமையாக, முழுமையாக இருக்கிறான். அந்த புதிய மனிதன் மனம், உடல் என்று பிளவுபட்டுக் கிடக்கவில்லை. உயர்வு, தாழ்வு என்று பிரிந்து கிடக்கவில்லை. புதிய மனிதன் எந்தவிதமான பிரிவையும் அறிய மாட்டான். புதிய மனிதன் ஒருங்கிணைந்த வாழ்க்கை வாழ்வான்.

பழைய மதங்கள் எல்லாம் வாழ்க்கைக்கு எதிரான சூழ்நிலையை பூமியில் ஏற்படுத்தி விட்டன. அதனால்தான் வாழ்க்கை மிகவும் மோசமாக, துயரமாக, துன்பம் தருவதாக இருக்கிறது. புதிய மதம் வாழ்க்கைக்கு எதிரானது அல்ல. எல்லோரும் வாழ்வதற்கானது. வாழ்வின் மீது அது அதிகமான மரியாதை கொண்டிருக்கிறது. புதிய மதம் தெய்வீகத்துடன் இணக்கமாக இருக்கிறது. பழைய மதத்தில் கடவுள் வாழ்வுக்கு எதிராக இருக்கிறார். கடவுளை அடைய நீங்கள் வாழ்வைத் துறக்க வேண்டும். நான் மகிழ்ந்திருத்தல் பற்றி போதிக்கிறேன். துறவறம் பற்றியல்ல.

நான் மதத்தை அழிக்க முயல்வதாக அவர் கூறுவது ஏன் என்று என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. பழைய கோட்பாடுகள் கொண்ட மதத்தை நிச்சயமாக நான் அழிக்க முயல்கிறேன். அது அழிக்கப்பட

வேண்டும். ஒரு மனிதன் வாழ விரும்பினால், பேரின்பத்துடன் இருக்க விரும்பினால் பழைய கட்டமைப்பு தகர்க்கப்பட வேண்டும். பழையது இறந்தால்தான் புதியது பிறக்கும்.

அவர் மரபுவழி விஷயங்களில் நம்பிக்கை கொண்டவர். வைதீகக் கருத்துள்ளவர். அவரால் கடந்தகாலம் சார்ந்தே சிந்திக்க முடியும். நாம் இருபதாம் நூற்றாண்டில் வாழ்கிறோம் என்ற எண்ணமே அவருக்கு இல்லை. அவர் சமகாலத்தைச் சார்ந்த மனிதன் அல்ல. உயிரற்றுப் போய்விட்ட கடந்த காலங்களைச் சார்ந்திருக்கிறார். இந்தியாவில் அப்படிப்பட்ட மனிதர்கள் செல்வாக்குப் பெற முடியும். காரணம் பெரும்பாலான பொதுமக்கள் கடந்த காலங்களில் வாழ் கிறார்கள். அவர்கள் சமகாலத்தவர்களாக இல்லை.

எதிரிடையான ஒரு சூழ்நிலை அது. புதிய பார்வைகள் மட்டுமே பொதுமக்களுக்கு உதவிட இயலும். புதிய பார்வைகள் மட்டுமே அவர்களை புதிய உயரங்களுக்கு இட்டுச் செல்லும். ஆனால் அவர்கள் புதிய பார்வைகளுக்கு எதிராக இருக்கிறார்கள். பழைய பார்வை களுக்குச் சாதகமாக இருக்கிறார்கள். அந்த பழைய பார்வைகள் பொருத்தமானவைகளாக அமைந்திருக்கவில்லை. அவர் எல்லா புரட்சி யாளர்கள், புரட்சிக் கருத்துகளுக்கும் எதிரானவராக இருக்கிறார். இந்த தேசத்தின் முட்டாள்தனமான, கெட்டுப்போன மனங்களின் பிரதிநிதி யாக இருக்கிறார். தேசம் வாழ வேண்டுமானால் அவர் விலகிச் சென்றாக வேண்டும்.

இந்த நாடு புதிய மகிழ்ச்சி உச்சம் மற்றும் ஆனந்தம் பெற வேண்டுமானால், இப்படிப்பட்ட எல்லா மனிதர்களும் அப்பால் சென்றாக வேண்டும். இந்த நாடு வெகுகாலமாக வாழ்க்கைக்கு எதிரான கண்ணோட்டத்துடன் இருந்து வந்திருக்கிறது. அதனால் எப்படி பாடுவது, எப்படி நடனமிடுவது, எப்படி அன்பு கொள்வது, எப்படி வாழ்வது என்பதையெல்லாம் மறந்துவிட்டது. இந்த தேசம் சோம்பேறியாகக் காலம் தள்ளிக் கொண்டிருக்கிறது!

ஒருவகையில் பார்த்தால் அவர் மதத்தைப் பாதுகாப்பதாகச் சொல்வதும், நான் மதத்தை அழிப்பதாகச் சொல்வதும் சரிதான். பொருந்தி வராமல் இருக்கும் இருப்பதை நான் நிச்சயம் அழிக்கிறேன். வெகுகாலம் பொருந்தி வராமல் இருப்பதை மதம் என்று அழைக்க லாகாது. மதம் என்பது அக்கணத்தில் வாழும் மக்களுக்குப் பொருந்தி வரவேண்டும். அது அவர்களுக்கு ஆசீர்வாதமாக இருக்க வேண்டும்.

ஒரு புதிய மனிதர் தூது கொண்டு வர வேண்டும். அந்த புதிய மனிதர் வந்து கொண்டிருக்கிறார். ஒவ்வொரு கணமும் அந்த புதிய

மனிதர் வந்து கொண்டிருக்கிறார். அந்த புதிய மனிதர் முற்றிலும் புதிய வாழ்வைக் கொண்டு வருகிறார். அவரது வாழ்வு பூமி சார்ந்தது. அது நிலத்தில் வேரூன்றியுள்ளது. ஆனால் வானத்தையும் வசப்படுத்த வல்லது. அந்த புதிய மனிதர் தன்னுடன் ஒரு புதிய உலகைக் கொண்டு வந்திருக்கிறார். இந்த பூமியைச் சொர்க்கமாக மாற்றப் போகிறார். மரணத்திற்குப் பிறகுதான் சொர்க்கத்தை பார்க்க முடியும் என்று அவர் நினைக்கவில்லை. வாழ்வையே ஒரு சொர்க்கமாக அவர் மாற்றி விடுவார். அந்த புதிய மனிதர் உயிர் பிழைத்திருப்பது மட்டுமின்றி வாழ்ந்திருக்கவும் செய்வார். பேரின்பத்தில் திளைத்து வாழ்வார். ஏனென்றால் அதுதான் வாழ்க்கையாகும்.

மகிழ்ந்து களித்திருங்கள்! நான் மீண்டும் மீண்டும் சொல்கிறேன். "மகிழ்ந்து களித்திருங்கள். அதுவே வாழ்க்கையாகும்." வாழ்க்கையுடன் இணைந்திருக்க ஒரே வழி மகிழ்ந்து களித்திருப்பதே ஆகும். ஆனந்தம் அடையும் ஒருவரே வாழ்வில் காலடி வைக்க முடியும்.

மொரார்ஜி தேசாய் எதிலும் தீவிரமானவர். உயிர்ப்பற்ற மனிதர். அவரால் மகிழ்ந்திருக்க இயலாது. அவரால் மகிழ்ச்சி அனுபவத்தைப் புரிந்துகொள்ளவோ அனுபவிக்கவோ இயலாது. அரசியல் புரட்சிவாதி களுக்கு அரசியல் ரீதியாக அவர் எதிரானவர். மதச் சீர்திருத்தவாதி களுக்கு அவர் மதரீதியாக எதிரானவர். கலைப்புரட்சிவாதிகளுக்கு அவர் புரட்சிகளுக்கு எதிரானவர். உலகத்தில் வெகுகாலம் நிலைத் திருக்காமல் உள்ள ஒன்றைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு இருக்க அவர் விரும்புகிறார்.

எனது முயற்சி நீங்கள் எதையும் 'பிடித்துத் தொங்காமலும்' எதனுடனும் பிணைத்துக் கொள்ளாமலும் இருக்க உதவுவதே ஆகும். அதனால் உங்கள் கரங்கள் புதிய வெகுமதியைப் பெற்றிட வசதியாக இருக்கும். "ஹோமோ நோவஸ்" என்ற புதிதாகப் பிறந்த மனிதன் என்ற வெகுமதியைப் பெற உதவிகரமாக இருக்கும்.

இரண்டாவது கேள்வி

> ஓஷோ,
>
> உணர்வு பூர்வமான சகா ஒருவரைக் கண்டறியுங்கள் என்று கூறுவதைக் கேட்க நன்றாக இருக்கிறது. ஆனால் ஏகதேசம் அது சாத்தியமில்லை. தயவு செய்து அது பற்றி இன்னும் கொஞ்சம் சொல்ல முடியுமா?

உணர்வுபூர்வமான சகா ஒருவரைத் தேடிக் கண்டறிவது கிட்டத் தட்ட ஒரு காரியம்தான். எல்லா வசதிகள் இருந்தாலும் அது சாத்திய மில்லை. உலகம் பெரியது... அதில் கோடானு கோடி மக்கள் வாழ்

கிறார்கள். வாழ்க்கை மிகவும் குறுகியது. எப்படி உங்களால் உங்களுடைய உணர்வுபூர்வமான சகாவைக் கண்டறிய முடியும்? எல்லா வசதிகளும் இருந்தாலும், எந்த வசதியும் அதற்கு கிட்டவில்லை என்பதை நினைவில் வையுங்கள். அதற்கான வசதிகளை ஏற்படுத்த முடியாதபோது மேலும் அது சாத்தியமற்றதாகி விடுகிறது. உங்கள் சகாவை கண்டறிய முடியாதபடி ஒவ்வொரு வழியிலும் நீங்கள் தடுக்கப்படுகிறீர்கள். ஆனால் உங்களுக்கு உதவி கிட்டினால், உணர்வு பூர்வமான சகாவைக் கண்டறிவது எப்படி என்று கற்றுக் கொடுத்தால், அப்போதும் இந்த எழுபது வருட குறுகிய வாழ்வில் அவரைக் கண்டு பிடிப்பது சிரமம்தான். அது அரிதாக நடக்கிறது. அது ஒரு விந்தை நிகழ்வாகும்.

மனிதனுக்கு ஏழு மையங்கள் இருக்கின்றன. அதில் தாழ்ந்த நிலை கொண்டது காம மையம். உயர்ந்த நிலை கொண்டது சமாதி மையம். இவை இரண்டுக்கும் இரண்டும் இடையில் மேலும் ஐந்து மையங்கள் உள்ளன. அவை ஒரு ஏணிகளாகும். அந்த ஏழு மையங்களும் உங்களுக்கு ஒரு லயத்துடன் இணங்கிச் செயல்பட்டால், அவ்வாறு செயல்படும் ஒரு பெண்ணைக் கண்டால், உங்கள் உணர்வு பூர்வமான சகாவைக் கண்டுவிட்டதாக அர்த்தம். அது ஒரே தடவையில் கிருஷ்ணருக்கும் ராதைக்கும் இடையே ஏற்பட்டது. சிவனுக்கும் சக்திக்கும் இடையே ஏற்பட்டது. லைலா மஜ்னுவை சந்திக்க விட்டிருந்தால் அவர்களிடையேயும் அது ஏற்பட்டிருக்கும். ஸ்ரீயையும் ஃபர்கத்தையும் சந்திக்க விட்டிருந்தால் அவர்களிடையிலும் ஏற்பட்டிருக்கும். ஆனால் சமூகம் அதைத் தடுத்து விட்டது.

கிருஷ்ணரும், ராதையும் சமூகத்தினரால் அனுமதிக்கப்படவில்லை என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். அது சட்டபூர்வமான திருமணம் அல்ல. சட்டவிரோதமானது. ராதா கிருஷ்ணரின் மனைவி அல்ல. ஒரு பெண்தோழி. சிவசக்தி விஷயத்திலும் சிவனுக்குப் பெண் கொடுக்கப் பெற்றோர் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். அவர் வினோதமான மனிதராகத் தென்பட்டார். சக்தி சிவனிடம் காதல் வயப்பட்டது பெற்றோரின் அறிவுரைக்கு எதிரான செயலாக அமைந்தது.

ஒருமுறை மட்டும் அது ஏற்படும்போது இயல்பான செயலாகத் தெரிகிறது. எப்போதெல்லாம் அது நிகழ்கிறதோ அப்போது ஒருமை நிலை உணரப்படுகிறது. அது இணைதல் அல்ல, ஐக்கியம் ஆகும். இரண்டு நபர்களும் முழுமையாக ஒருவருக்குள் ஒருவர் மறைந்து போகிறார்கள். எந்த ஒரு சிறிய மெல்லிய திரையும் அவர்களைப் பிரிப்பதில்லை. பிரிவு என்பதே இல்லை. அது **Unio Mystica** ஐக்கிய விந்தை எனப்படுகிறது. இரண்டு நபர்களும் ஒரு மனிதர் போன்றே

செயல்டுகிறார்கள். இரண்டு உடல்கள், ஆனால் ஒரு ஆன்மா. அது முழுமையான ஒருங்கிணைப்பாகும். அது உச்சமான அன்பாகும். எந்த தியானமும் அவசியமில்லை. இந்த அன்பே போதும்.

நீங்கள் இந்தியாவில் சிவன் கோவில்களைப் பார்த்திருக்கலாம். **சிவலிங்கத்தைப்** பார்த்திருக்கலாம். **சிவலிங்கம்** இரண்டு காதலர் களின் ஆனந்த நிலையைக் காட்டுகிறது. **சிவலிங்கம்** ஆண் சக்தியின் பிரதிநிதியாகும். அதற்கு சற்று கீழே சக்தியின் அடையாளக் குறியீடான யோனி உள்ளது. சிவலிங்கமும், சக்தியின் யோனியும் சந்திக் கின்றன. அவை இரண்டும் ஒன்றாகி விடுகின்றன. ஒன்றினுள் ஒன்று மறைந்து விடுகின்றன. அவை தங்கள் அடையாளங்களை இழந்து விட்டன. அதனால்தான் முகமற்ற ஒரே உருவச்சிலையாக அது உலகில் இருந்து வருகிறது.

தூய்மையான சக்தி **சிவலிங்கமாகவும் யோனியாகவும்** அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. ஆணின் பாலுறுப்பாகவும், பெண்ணின் பாலுறுப்பாகவும் உள்ளன. சக்தி படைப்பாற்றலாக பிரதிநிதித்துவப்படுத்தப்பட்டுள்ளது. அந்த உயிர் சக்தியில் இருந்தே எல்லா உயிர்களும் பிரவகித்து எழுகின்றன. சக்திக்கும் முகம் இல்லை, சிவனுக்கும் முகம் இல்லை. முகங்கள் அர்த்தமற்றுப் போய்விட்டன. அடையாளங்கள் காணாமல் போய்விட்டன. அது தூய்மையான சக்தியின் சங்கமம். தூய சக்திகள் மட்டுமே ஒன்றில் ஒன்று கரைய முடியும். உங்களுக்கு திடமான அடையாளம் இருந்தால், அது கரை வதற்குத் தடையாக இருக்கும். நெகிழ்வுத் தன்மையுள்ள தூய்மையான சக்தி மட்டுமே ஒன்று கலந்து ஒன்றாக முடியும். நீங்கள் இரண்டு கற்களை அருகருகே வைக்க முடியும். அவற்றை ஒன்றாக்க முடியாது. நீங்கள் தண்ணீருக்குள் தண்ணீரை ஊற்றினால் அது ஒன்று கலந்து விடுகிறது.

ஏழு மையங்களும் அந்த உச்சிப் புள்ளியில் சந்திக்கும்போது மனிதர்கள் மறைகிறார்கள். சக்திகள் மட்டும் எஞ்சி நிற்கும் சக்தியின், விழிப்பின் செயல்பாடு மட்டுமே எஞ்சியிருக்கும். அந்த மகிழ்ச்சி நிலையானது. அது இன்ப உச்சமாகும். அது ஒரு தெய்வீக இணைப் பாகும். அப்படிப்பட்ட தம்பதியருக்கு தியானம் தேவையில்லை. அப்படிப்பட்ட தம்பதிக்கு அன்பே தியானமாகிறது. அது ஒரு விந்தை நிகழ்வு. அது ஆழமானது. ஆனால் அது வெகு அரிதாக நிகழ்கிறது. லட்சோபலட்சம் மக்களில் சிலருக்கே நடக்கிறது. அது ஒரு சந்தர்ப்ப மாக அமைகிறது.

அதற்குக் கீழே மற்றொரு சந்திப்பு. ஆறு மையங்களின் இணைப்பு அது. அதுவும் ஒரு அரிதான நிகழ்வுதான். முதல் நிகழ்வு

ஒரு சதவீதம் என்றால், இரண்டாம் நிகழ்வு இரண்டு சதவீதமாக உள்ளது. அது இணைப்பாகும். ஐக்கியமல்ல. அது பிரபஞ்ச இணைப்பு அல்ல. ஆனாலும் அது ரசிகத்தன்மையுள்ள இணைப்பு. கலாபூர்வ மான நிகழ்வு. ஒரு கவிதானுபவம்.

முதல் நிலையை சடோரி எனப்படும் **சமாதி** நிலை பற்றி அறிந்தவர்களால் மட்டுமே புரிந்துகொள்ள இயலும். இரண்டாம் நிலையைக் கவிஞர்கள், ஓவியர்கள், நடனக் கலைஞர்கள், இசை வல்லுனர்களால் புரிந்துகொள்ள முடியும்.

அதற்குக் கீழே உள்ள மூன்றாம் நிலை ஐந்து மையங்களின் சங்கமம் ஆகும். அது மூன்று சதவீதம் சாத்தியப்படுகிறது. அது இணைப்பு நிலையல்ல. இருமைநிலை ஆகும். இரண்டு நபர்களும் இருவராகவே இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடம் சிறந்த ஒருங் கிணைப்பு இருக்கிறது. சுருதியுடன் இணைந்து இரு இசைக் கருவிகள் வாசிக்கப்படுவது போல அந்த இரண்டு செயல்பாடுகளும் நிகழ் கின்றன. அந்த இருவரும் இருவராகவே இருக்கிறார்கள். அங்கு ஐக்கியம் இல்லை. இணைதல் இல்லை. அவர்கள் தனியே பிரிந்திருக் கிறார்கள்.

அதையே கலீல் ஜிப்ரான், "காதலர்கள் இருவரும் கோவிலின் ஒரு கூரையைத் தாங்கும் இரண்டு தூண்கள் போலிருக்க வேண்டும். தனியே விலகி இருந்தாலும் ஒன்று சேர்ந்து தாங்க வேண்டும்" என்று கூறினார். இது ரசிகத்தன்மை, கலைஉணர்வு, இசையுணர்வு போன்ற வற்றிற்குச் சற்று கீழான அனுபவம். அது நீதிநெறி சார்ந்த அனுபவம். புனிதம் என்ற அது அழகானது.

நான்காம் நிலை நான்கு புள்ளிகளின் சங்கமம் ஆகும். அதற்கு நான்கு சதவீத வாய்ப்பு உள்ளது. இருமை நிலையும், இணக்கமும், மறைந்து போகின்றன என்றாலும் சிறப்பான புரிதல் இருக்கிறது. ஒருவர் பற்றி ஒருவருக்கு நல்ல புரிதல் இருக்கிறது. ஒருவர் மீது ஒருவருக்கு அக்கறை இருக்கிறது. தன்னிச்சையான இணக்கம் இல்லை. புரிதல் காரணமாக ஒரு குறிப்பிட்ட லயம் கடைப்பிடிக்கப்படுகிறது. அது சிறந்த புத்தி சார்ந்த அனுபவம். அது நீதிநெறி அல்ல. ஒருவர் விழிப்புணர்வு பெற்றவராக இருக்க வேண்டும். விழிப்புணர்வு இல்லை என்றால் அந்த நான்காம் நிலையிலிருந்து நழுவி விழுந்து விடுவார்.

அடுத்ததாக ஐந்தாம் நிலை. அங்கு மூன்று மையங்கள் சந்திக் கின்றன. அதற்கு ஐந்து சதவீதம் வாய்ப்பு இருக்கிறது. இருமை நிலை பெரிதும் பிரதானப்படுத்தப்படுகிறது. விழிப்புணர்வு இருக்கிறது.

ஆனால் நிலையாக இல்லை. கண்சிமிட்டல் போல சலனத்துடன் இருக்கிறது. சச்சரவுகள் எழுகின்றன. ஆனால் அன்பு விரிசலடைவ தில்லை. அதற்குப் பதிலாக ஒன்றுடன் ஒன்று இணைந்து கொள்கிறது. அதற்கு கொஞ்சம் சுவையூட்டுகிறது. அது மனம் சார்ந்த அனுபவ மாகும்.

அதற்குக் கீழே இரண்டு மையங்கள் சந்திக்கின்றன. அதற்கு ஆறு சதவீத வாய்ப்பு இருக்கிறது. தெளிவான இருமை நிலைக் கணங்கள் சார்ந்த புரிதல் ஏற்படுகிறது. சில கணங்கள் மட்டுமே புரிதல் நடக்கிறது. பிறகு அதிகமான அளவு சச்சரவு தோன்றுகிறது. புரிதல் ஐம்பது சதவீதம். சச்சரவு ஐம்பது சதவீதமாக இருக்கின்றன. அது மனம் சார்ந்த அனுபவம்தான். ஐம்பது சதவீதம் புரிதல், ஐம்பது சதவீதம் சச்சரவும் இருப்பதால் நல்ல சமநிலை நிலவுகிறது.

அதற்குக் கீழே ஒரு மையம் இணைகிறது. அதற்கு ஏழு சதவீதம் வாய்ப்பு இருக்கிறது. அங்கு பெருமளவு சச்சரவும், சில கணங்கள் ஆனந்தமும் ஏற்படுகின்றன. எப்போதாவது அரிதான ஆனந்த அனுபவம் தோன்றுகிறது. ஆயினும் அது மதிப்புள்ளது. அது காமம் சார்ந்த அனுபவம்.

அதற்குக் கீழே தாழ்ந்த நிலையில் மையங்கள் எதுவும் சந்திப்ப தில்லை. அது சாமான்யமான ஒன்று. நீங்கள் சந்திக்கும் தம்பதிகள் அவ்வாறானவர்கள். அது காம அனுபவம் அல்ல. அதற்கும் கீழானது. அது ஒருவிதமான சமூக, பொருளாதார, அரசியல் ஏற்பாடாகும். அது ஏமாற்று வேலையாகும். அது வியாபாரம் போன்றது. பெற்றோர் களால் ஏற்பாடு செய்யப்படும் திருமணம் கிட்டத்தட்ட சந்தைக்கடை வியாபாரம் போன்றது.

அன்பு இல்லை, மரியாதை இல்லை, வெறுப்பும் இல்லை. அது நட்பும் இல்லை, பகைமையும் இல்லை. அது வெறும் சம்பிரதாய மான நட்பு. அப்படிப்பட்ட நட்பு, நட்பே அல்ல. சுய இன்பத்திற்கான பரஸ்பர ஏற்பாடாகும். மற்றவரை நீங்கள் ஏமாற்றுகிறீர்கள். அவர் உங்களை ஏமாற்றுகிறார். அது ஒரு வகையான விபசாரம். மோசமான சாத்தியக்கூறு. ஆனால் அதுதான் பூமியில்நடந்து கொண்டிருக்கிறது.

**வெ**ள்ளிக்கிழமை பிற்பகல் வேளையில் ஹெரால்டின் முதலாளி அவரிடம் அன்று கூடுதல் நேரம் பணியாற்ற வேண்டி யிருக்கும் என்றார். ஹெரால்டுக்கு அதில் ஒன்றும் பிரச்சினை இல்லை. தான் தாமதமாக வீட்டிற்கு வரும்படி நேரலாம் என்று மனைவிக்குத் தகவல் சொல்வதுதான் எப்படியென்று தெரியவில்லை. அவர்கள் புறநகர் பகுதியில் இருந்த ஒரு சிறிய வீட்டிற்கு குடிபெயர்ந்து

விட்டதால் இன்னும் அங்கு தொலைபேசி வசதி ஏற்படுத்தப்பட வில்லை.

"நான் அந்த வழியாகத்தான் போகிறேன். உன் மனைவியிடம் நான் தகவல் சொல்லிவிடுகிறேன்" என்று தானாக முன்வந்து கூறினார் முதலாளி.

சில மணிநேரங்களுக்குப் பிறகு அந்த வீட்டை அடைந்து அழைப்பு மணியை முதலாளி அழுத்தினார். உள்ளாடை வெளியே தெரியும் வகையில் மெல்லிய கவுன் அணிந்துகொண்டு வந்து ஹெரால்டின் மனைவி கதவைத் திறந்தாள். அவள் மீதிருந்து பார்வையை அகற்ற அவரால் முடியவில்லை.

"என்ன வேண்டும், சொல்லுங்கள்?" என்றாள் அவள்.

"நான் ஹெரால்டின் முதலாளி. அவர் கூடுதல் நேரம் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. வீட்டிற்கு வருவதற்குத் தாமதமாகும் என்று சொல்லச் சொன்னார்" என்றார் முதலாளி.

"நன்றி" என்றாள் அவள்.

"மாடிக்குச் சென்று இருவரும் கொஞ்சம் காதல் விளையாட்டில் ஈடுபடலாமா?" என்று கேட்டார் முதலாளி.

கோபத்தில் ஹெரால்டின் மனைவியின் கண்ணங்கள் சிவந்தன. "உங்களுக்கு என்ன துணிச்சல்?" என்று

"நான் ஐம்பது டாலர்கள் தருவதாக இருந்தால் சம்மதமா?" என்று கேட்டார் முதலாளி.

"நிச்சயம் முடியாது இப்படிப்பட்ட பேச்சை நான் கேட்ட தில்லை."

"நூறு டாலர்கள்?

"ஊ உம்... முடியாது"

"நூற்றைம்பது?"

"அது போதுமானதாக இருக்கும் என்று எனக்குத் தோன்ற வில்லை. நீங்கள் நினைக்கிறீர்கள்?" என்று கேட்டாள் அவள்.

அதைக் கேட்டதும் முதலாளி சந்தோஷச் சிரிப்பை வெளிப் படுத்தினார். "இனியவளே! கொஞ்சம் கவனி. ஹெரால்டுக்கு இது தெரியப்போவதில்லை. நூற்றைம்பது டாலர்கள் சம்பாதிக்க இது எளிய வழி. நாம் இருவரும் சிறிது நேரம் சேர்ந்திருப்போம்."

அவள் தலையசைத்துச் சம்மதித்தாள். அவரது கையைப் பிடித்து மாடிக்கு அழைத்துச் சென்றாள். ஒரு மணிநேரம் இருவரும் காதல் களியாட்டங்களில் ஈடுபட்டனர்.

அன்று இரவு ஹெரால்ட் வீடு திரும்பியதும் "நான் தாமதமாக வருவேன் என்று முதலாளி தகவல் சொன்னாரா?" என்று கேட்டான்.

"ஆமாம் ஹெரால்ட். சில வினாடிகள் மட்டுமே அவர் இங்கு இருந்தார்."

"நல்லது. எனது சம்பளப் பணத்தை அவர் உன்னிடம் தந்திருப்பார்" என்றான்

இது தந்திரம் நிறைந்த வியாபார உலகம். நீங்கள் செய்து கொள்ளும் ஏற்பாடுகளுக்கு நட்பு என்று பெயரிடுகிறீர்கள். காதல் உறவு என்கிறீர்கள். அவை நட்போ, காதல் உறவு அல்ல. அடிப்படையில் அவை பொருளாதாரம் சார்ந்த ஏற்பாடுகளாகும்.

ஒரு காலத்தில் டேவ் என்பவர் ஸ்காட்லாந்தில் வாழ்ந்து வந்தார்.
ஒரு வேசியின் பிணத்தைக் குகைக்குள் வைத்துப்
பாதுகாத்து வந்தார்.
"அது பயன் இல்லாத செயல்
என்று ஒப்புக் கொள்கிறேன்"
ஆனால் பணத்தை நான் சேமித்து வைத்திருப்பதாக
எண்ணுகிறேன்" என்றார்.

இப்படிப்பட்ட ஸ்காட்லாந்துக்காரர்களை நீங்கள் எல்லா இடங்களிலும் பார்க்கலாம்! முழு உலகமும் நிஜமாக ஒரு ஸ்காட்லாந்து போன்றிருக்கிறது.

உணர்வுபூர்வமான சகாவைக் கண்டறியுங்கள் என்று கூறுவது கேட்க நன்றாக இருக்கிறது. ஆனால் ஏகதேசம் அது சாத்தியமற்ற செயல்" என்று கூறினீர்கள்.

ஆம். கிட்டத்தட்ட அது முடியாத செயல்தான். இயற்கையின் போக்கில் விட்டுவிட்டால் கிட்டத்தட்ட அது முடியாத செயல்தான். ஆனால் கிழக்கு நாடுகளில் நாம் அதற்கு ஒரு அறிவியல் வழி முறையை உருவாக்கியிருக்கிறோம். ஒரு உணர்வுபூர்வமான சகா உங்களால் கண்டறிய முடியாவிட்டால் அப்படிப்பட்ட ஒருவரை உருவாக்கிக் கொள்ளலாம். அந்த அறிவியல் முறைக்கு தாந்த்ரா என்று பெயர். ஒரு சகாவைக் கண்டறிதல் என்றால் உங்கள் ஏழு மையமும் இயல்பாக அவருடன் சந்திக்கின்றன என்று பொருள். அது சாத்திய மில்லை. எப்போதாவது கிருஷ்ணர் ராதை, சிவன்-சக்தி போன்றவர் களுக்குத்தான் அது நிகழும். அப்படி நடந்தால் அபாரமான அழகு

டையதாக இருக்கும். அது ஒரு மின்னல் போன்றது. நீங்கள் அதைச் சார்ந்திருக்க இயலாது. நீங்கள் உங்கள் மதநூலைப் படிக்க விரும்பி னால் நீங்கள் அதைச் சார்ந்திருக்க் இயலாது. மின்னல் ஒளியில் படிக்கலாம் என்று எண்ணக்கூடாது. மின்னல் ஒரு இயற்கை நிகழ்வு. அதைச் சார்ந்திருக்க இயலாது.

உங்கள் இயல்பான உணர்வுபூர்வச் சகா வரவேண்டும் என்று காத்திருந்தால், மின்னல் வரும்போது மதநூலை படிக்கலாம் என்று காத்திருப்பது போன்ற செயலாகிவிடும். உங்களால் எதையும் படித்திட இயலாது. ஒரு கணம்தான் அது இருக்கும். நூலை நீங்கள் திறக்கும் சமயத்தில் மின்னல் மறைந்து விடும்.

எனவே தாந்த்ரா உருவாக்கப்பட்டுள்ளது. தாந்த்ரா ஒரு அறிவியல் அணுகுமுறை. தாந்த்ரா ஒரு ரசவாதம். அது உங்கள் மையங் களை மலர்ச்சி பெறச் செய்யும். மற்றவர்கள் மையங்களையும் தூண்டி விடும். உங்களுக்கும், உங்கள் அன்புக்கு உரியவருக்கும் இடையே ஒரு லயத்தையும், இணக்கத்தையும் அது ஏற்படுத்தும். அதுவே தாந்த்ரா வின் அழகாகும். அது உங்கள் வீட்டிற்குள் மின்சாரத்தைக் கொண்டு வருவது போன்ற செயலாகும். அதன் பிறகு நீங்கள் தேவையான சமயத்தில் அதைப் போடலாம், நிறுத்தலாம். மின்சாரம் மூலம் ஆயிரத் தொரு பயன்களை அடையலாம். அது உங்கள் அறைக்குக் குளிர்ச்சி யூட்டும். அறையை வெதுவெதுப்பாக்கவும் வைக்கும். அதன் பிறகு அது ஒரு விந்தையான விஷயமாகிவிடும். உங்களிடமுள்ள ஏழு மையங்களும் உடல்சார்ந்த மின்மையங்கள்தான். நான் மின்னல் பற்றிப் பேசும்போது அதை ஒரு உவமையாக இலக்கிய நயத்துக்காகச் சொல்கிறேன்.

உங்கள் உடலில் சூட்சுமமான ஒரு மின்சார சக்தி உள்ளது. அது மிகவும் சூட்சுமமானது. ஆழமாக உள்ளே இருக்கிறது. அது எளிதாகக் காணக்கூடியதல்ல. உங்கள் உடலில் உள்ள எல்லா மின்சாரத்தையும் ஒன்று சேர்த்தால் அதை வைத்து ஐந்து மெழுகுவர்த்தித் திறன் உள்ள பல்பை எரிக்கலாம் என்று அறிவியலாளர்கள் கூறுகிறார். அது அதிக அளவு மின்சாரம் அல்ல. அளவில் அது அதிகம் இல்லை. அளவில் ஒரு அணுவும் அதிகம் இல்லைதான். ஆனால் தரத்தை எடுத்துக் கொண்டால்.... அது வெடித்தால் ஏராளமான சக்தி அதிலிருந்து வெளிப்படும்.

ஏழு மையங்கள் எனப்படும் சக்கரங்கள் பற்றி யோகக் கலையும், தாந்த்ரீகமும் காலம் காலமாகப் பேசிவருகின்றன. அவை உடல் மின்சாரத்தின் ஐந்து முடிச்சுகள். அவற்றை மாற்ற் முடியும். மறு

சீரமைப்பு செய்ய முடியும். அவற்றுக்குப் புதிய வடிவமும், உருவமும் தரமுடியும். இரண்டு காதலர்கள் ஆழமாக ஒன்றிணையும்போது அவர்களின் ஏழு மையங்களும் சந்திக்கத் துவங்குகின்றன.

சாதாரணக் காதலர்களை உணர்வுபூர்வச் சகாக்களாக மாற்றும் சக்தி படைத்த அறிவியலாகத் தாந்த்ரா அமைந்திருக்கிறது. அதுவே தாந்த்ராவின் சிறப்பு. அது பூமியை மாற்றவல்லது. அது ஒவ்வொரு தம்பதியையும் உணர்வுபூர்வமான சகாக்களாக மாற்றக் கூடியது. அது இன்னும் பயன்படுத்தப்படவில்லை. இங்கே கிடக்கும் பயன்படுத்தாத பெரிய பொக்கிஷம் அது. மனித இனம் அதைப் பயன்படுத்தும் நாள் வந்தால், புதிய அன்புநிலை பூமியைச் சூழ்ந்துவிடும். புதிய அன்பினால் பூமி பிரகாசிக்கும். புதிய மனிதனை 'ஹோமோ நோவஸால்' மட்டுமே அதைப் பயன்படுத்த முடியும்.

அதனால்தான் நான் புதிய மனிதருக்கு தூது அனுப்புகிறேன். புதிய மனிதரால் மட்டுமே அதைப் பயன்படுத்த முடியும். ஏனென்றால், தனது உடலில் உள்ள முழுமையைப் புதிய மனிதன் மட்டுமே அங்கீகரிப்பான். பழைய மனிதன் தனது உடலை அங்கீ கரிப்பதில்லை. எப்போதும் அவன் உடலுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறான். உடலுடன் சச்சரவு செய்கிறான். தனது உடலை அழிக்க முயல்கிறான். பழைய மனிதன் தற்கொலைச் செயலுக்கு ஒப்பானவன். பழைய மனிதன் மனநலம் பாதிக்கப்பட்டவன் போன்றவன்.

புதிய மனிதன் தன்னிடம் ஒரு முழுமையைக் கொண்டிருக் கிறான். அவன் தற்கொலைக்கு நிகரானவன் அல்ல. அவன் வாழ்வின் மீது அபாரமான அன்பு கொண்டிருக்கிறான். எனவே மீண்டும் மீண்டும் வரவிரும்புகிறான். புதிய மனிதனால் மட்டுமே வாழ்க்கைச் சக்தி மையங்களை மலர்விக்க முடியும்.

அதைத்தான் நான் இங்கு செய்ய முயற்சி எடுத்துக் கொள்கிறேன். நாடு முழுவதும் என்மீது குற்றம் சாட்டுகிறது. நாடு மட்டுமல்ல, உலகம் முழுவதுமே அவ்விதம்தான் இருக்கிறது. காரணம், அது போன்ற ஒன்றை அவர்கள் இதுவரை கேள்விப்பட்டதில்லை. இது ஒரு பெரிய பரிசோதனை. அது வெற்றி பெற்றால் பல விஷயங்கள் அதைச் சார்ந்து நிற்கும்.

கிருஷ்ணன் - ராதைக்கு ஏற்பட்டதுபோன்ற ஆழமான காதல் ஒவ்வொரு தம்பதிகளிடமும் ஏற்பட நாம் உதவி செய்ய முடியும். ஒவ்வொரு தம்பதியும் சிவசக்தி போல மாறலாம். அப்படிப்பட்ட உலகை ஒருகணம் கற்பனை செய்து பாருங்கள். எவ்வளவு அழகான

தாக அது இருக்கும்! சொர்க்கமும் அது முன்னால் மங்கிப்போய் விடும். இந்த பூமியே சொர்க்கமாகிவிடும்.

ஆனால் அந்த அறிவியல் சூட்சுமமானது. தப்பான அபிப் பிராயம் கொள்ளாமல் புரிந்துகொள்ளத் தயாராக இருப்பவர்கள் மட்டுமே அதை அறிந்திட இயலும். அந்த பணி மிகவும் நுட்பமானது. விந்தையானது. வெளியில் இருப்பவர்களால் என்ன நடக்கிறது என்று புரிந்துகொள்ள முடியாது. அவர்கள் தவறான புரிதலின் பிடியில் இருக்கிறார்கள்.

இது நீங்கள் சில வெளியாட்களை ஒரு அறிவியல் பரிசோதனைக் கூடத்திற்கு அழைத்துச் செல்வத்தைப் போன்றதாகும். அங்கே நடக்கும் அணுசக்தி ஆராய்ச்சி பற்றி வெளியாட்கள் புரிந்துகொள்ள இயலுமா? அது வெகு ஆழமான ஆராய்ச்சி. ஏனென்றால் அணுசக்தி என்பது திடப்பொருள் சார்ந்த ஒரு ஆய்வாகும். மனித ஆற்றல் பற்றி ஆராய்வது, அன்பின் சக்தி பற்றி ஆய்வு செய்வது மனம் சார்ந்த பணி யாகும். அதைப் பார்த்தறிய நுட்பமான உணர்வுள்ள மனிதர்கள் தேவை.

அப்படிப்பட்ட ஒரு கருத்துப்பரிமாற்றம் செய்துகொள்ளத்தக்க அமைப்பை உருவாக்க நான் விரும்புகிறேன். புத்தபுலம் எனப்படும் அதன் மூலம் ஒவ்வொரு தம்பதியையும் நான் கிருஷ்ணர் - ராதை களாக மாற்றிவிட முடியும். அங்கு ஒவ்வொரு தம்பதியரும் அந்த ஆனந்தத்தைப் பெறலாம். அந்த பிரபஞ்ச மகிழ்ச்சி, பிரபஞ்ச உச்சம், முழுமையான பேரின்பம் ஆண் பெண்களின் ஏழு மையங்களும் சந்திக்கும்போது நடக்கின்றன. ஒருவருக்குள் ஒருவர் கலந்து மறை கிறார்கள்.

தற்போது நீங்கள் தாழ்ந்த நிலையில் இருந்து வருகிறீர்கள். ஒரு மையமும் சந்திக்கவில்லை. இயற்கையைச் சார்ந்து நின்றால் அது சாத்தியப்படாது. நீங்கள் தாந்த்ராவைச் சார்ந்திருந்தால் அது மிகவும் சாத்தியமான ஒன்றாகிவிடும்.

மூன்றாவது கேள்வி

ஓஷோ,

வாழ்வின் நோக்கம் என்ன?

ஞானம் பெற்ற பிறகு நாம் என்ன செய்ய வேண்டும்?

ஞானம் பெற்ற பிறகு நான் இப்போது என்ன செய்து கொண் டிருப்பதாக நினைக்கிறீர்கள்? பசி எடுத்தால் சாப்பிடுகிறேன். உறக்கம்

வந்தால் உறங்குகிறேன். நீங்கள் செய்வது போன்ற அதே காரியங் களைத்தான் நானும் செய்கிறேன். ஆனால் அதன் தரம் மாறியுள்ளது, முக்கியத்துவம் மாறியுள்ளது. அணுகுமுறை மாறியுள்ளது. நீங்கள் தேனீர் அருந்துகிறீர்கள். நானும் தேனீர் அருந்துகிறேன். ஆனால் நீங்கள் தேனீர் அருந்துவது வெறும் தேனீரை மட்டும் அருந்துவதாகும். நான் தேனீர் அருந்தும்போது நான் வாழ்க்கையை அருந்துகிறேன். வாழ்க்கை என்பது தேனீரின் ஒரு வடிவம். வாழ்வை நான் சுவைக் கிறேன்.

வெளியில் இருந்து பார்த்தால் செயல் ஒரே மாதிரியானதுதான். ஆனால் உள்ளே அது முற்றிலும் வித்தியாசமானது.

இதேபோன்ற கேள்வியை ஒரு ஜென் குருவிடம் ஒருவர் கேட்ட தாகச் சொல்லப்படுகிறது. "நீங்கள் ஞானம் பெறுவதற்கு முன்பு என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?"

அதற்கு அவர், "நான் விறகு வெட்டினேன். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்தேன்" என்றார்.

அந்த மனிதர், "ஞானம் பெற்ற பிறகு என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"விறகு வெட்டுகிறேன். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக் கிறேன்" என்றார் குரு.

கேள்வி கேட்டவர் திகைத்துப் போனார், "அதில் என்ன வித்தியாசம் இருக்கிறது? நான் எந்த வித்தியாசத்தையும் காண வில்லை. விறகு வெட்டுவதையும், தண்ணீர் இறைப்பதையும் ஞானம் பெறுவதற்கு முன்பும் செய்தீர்கள், இப்போதும் செய்கிறீர்கள்" என்றார்.

அதற்கு குரு சிரித்துக் கொண்டே சொன்னார். "ஆமாம். முன்பு நான் அதைச் செய்து கொண்டிருந்தேன். இப்போது தானாக அது நடக்கிறது. காரியமாற்றுவர் என்பவர் இல்லை. நான் காரியமாற்று பவனாக அதன் பின்னர் இல்லை. மரம் வெட்டப்பட்டது, தண்ணீர் இறைக்கப்பட்டது. அச்செயலில் நான் இல்லை" என்றார்.

ஜென் மனிதர்கள் கடவுள் என்ற சொல்லைப் பயன்படுத்துவது கிடையாது. அது பற்றி ஒரு சூஃபி குருவிடம் கேட்டால், "இப்போது கடவுள் விறகு வெட்டுகிறார், தண்ணீர் சுமக்கிறார்" என்று கூறுவார். ஜென் மனதர்கள், "அது மரத்தை வெட்டுகிறது. தண்ணீர் சுமக்கிறது" என்பார். அவர்களது கடவுளின் பெயர் அதுதான். கடவுளுக்கு உருவம் தருவதில்லை.

எல்லாம் அதேவிதமாகவே உள்ளன. ஆனால் எதுவும் அதே வகையில் இல்லை.

"வாழ்வின் நோக்கம் என்ன?" என்று கேட்டீர்கள். ஞானமற்ற மனதில்தான் நோக்கம் என்ற கருத்து எழுகிறது. காரணம், நோக்கமற்ற வாழ்க்கை வாழ ஞானமற்ற மனதால் முடியாது. எவ்வித நோக்கமும் இல்லாது வாழ்வை விளையாட்டாக வாழ்வது எப்படி என்று அவருக்குத் தெரியாது. தன்னை இழுத்துச் செல்ல நோக்கம் என்று அவருக்குத் தேவைப்படுகிறது. தன்னை முன்னோக்கித் தள்ளிச் செல்ல நோக்கம் என்ற ஒன்று வேண்டியிருக்கிறது. தான் சாமார்த்தியமாகச் செயல்பட அவருக்கு நோக்கம் என்ற ஒன்று அவசியப்படுகிறது. நோக்கம் இல்லாது போனால் அவர் தொலைந்து விடுகிறார். முன்னேறிச் செல்ல அவருக்கு நோக்கம் என்ற தூண்டுகோல் தேவைப் படுகிறது. அதனால்தான் அவர் கவலையுடன் காணப்படுகிறார்.

கவலை என்று பொருள் agony என்ற சொல் ag என்ற வேர்ச் சொல்லில் இருந்து தோன்றியது. அந்த ag என்ற வேர்ச்சொல்லில் இருந்து இரண்டு சொற்கள் தோன்றின. ஒன்று action என்ற செயல்பாடு. மற்றது agony என்ற கவலை. அது அழகானது. ag என்ற சொல்லின் அடிப்படை அர்த்தம் முன்னோக்கித் தள்ளிச் செல் என்ப தாகும். செயல்பாடு பொருட்களைத் தள்ளிச் செல்கிறது. நதியோட்டத் தைத் தள்ளுகிறது. நதி நீருக்கு எதிராக உங்களைத் தள்ளுகிறது. எதிர் நீச்சலிட முயற்சி செய்ய வைக்கிறது. அது கவலையைக் கொண்டு வருகிறது. அது உங்களை வருந்த வைக்கிறது. நீங்கள் தோற்றுவிடப் போவதை உங்களால் அறிய முடிகிறது. இங்கொன்று அங்கொன்று என்று நீங்கள் வெற்றி பெறலாம். ஆனால் யுத்தம் ஆரம்பத்திலேயே தோற்றுப் போய்விட்டது. எவ்வளவு தூரம் எதிர்நீச்சலிட முடியும்? எப்படியும் களைத்துப் போவீர்கள். நதி உங்களை நீருக்குள் ஆழ்த்தி விடும். நீங்கள் போராடுகிறீர்கள். அது கவலையை வரவழைக்கிறது. அதைச் செய்தாலும், செய்யாது போனாலும் வெற்றி பெற்றாலும் பெறாவிட்டாலும் கவலை வந்து விடுகிறது.

நோக்கம் என்பது ஞானம் பெறாத மனிதனின் கருத்தாகும். ஞானமடைந்தவர் அமைதியாக எவ்வித நோக்கமும் இல்லாது வாழ்கிறார். அவருக்கு நோக்கம் தேவையில்லை. அதனால்தான் அவருக்குக் கவலை ஏற்படுவது இல்லை. அவர் கணத்துக்குக் கணம் வாழ்கிறார். அவர் வாழ்வுக்கு அர்த்தமோ நோக்கமோ இல்லை. அவர் ஒரு ரோஜா மலர் போலவோ, காட்டுப் பகுதியிலிருந்து கூவும் குயில் போலவோ, காலையில் உதிக்கும் சூரியன் போலவோ, கடலில் விழும் பனித்துளி போலவோ இருக்கிறார். அவருக்கு நோக்கம் எதுவுமில்லை. அமைதியாக இருக்கிறார். அவருக்கு எதிர்காலம் என்ற ஒன்று இல்லை

என்பதால் நோக்கம் என்பதும் இல்லை. அவர் இந்த கணத்தில் வாழ்கிறார். அவர் கணத்துக்குக் கணம் வாழ்கிறார். நோக்கம் என்பது விருப்பமாகும். நோக்கம் என்பது உங்களுக்காக சிறப்பான ஏதோ ஒன்றை உருவாக்குவதாகும். நீங்கள் நோக்கமற்றவர் என்பதை உங்களால் நம்ப முடியவில்லை. சட்டென்று தரையில் மல்லாந்து விழுந்து விடுகிறீர்கள். நோக்கம் இல்லையா? உங்கள் தன்னுணர்வு மனம் நோக்கம் என்பது இல்லாதுபோனால் நிலைத்திருக்காது. எனவே உங்களுக்காக ஒரு நோக்கத்தை உருவாக்கிக் கொள்கிறீர்கள். அங்கு எந்த ஜீவராசியும் இல்லாது போனாலும் நீங்கள் நடிக்கிறீர்கள். உங்களைப் பிரதானப்படுத்திக் கொள்கிறீர்கள்.

கடவுள் தனது சாயலில் மனிதனைப் படைத்தார் என்று மத நூலில் சொல்லியிருப்பதால் உங்களுக்கு அகந்தை தோன்றிவிட்டது. நீங்கள் சிறப்பானவர். நிறைவு செய்யப்பட வேண்டிய சில குறிக்கோள் களை கடவுள் தந்திருப்பதாக நம்புகிறீர்கள். கழுதையிடம் கேட்டுப் பாருங்கள். தனது வடிவில் கழுதையை ஆண்டவர் படைத்திருப்பதாக அது கூறும்.

ஒருநாள் நான் டான் மார்க்கஸ் எழுதிய Warty Bliggens என்ற கவிதையைப் படித்தேன்.

அன்றொரு நாள் நான் ஒரு தேரையைச் சந்தித்தேன். அதன் பெயர் வார்டி பிளிகன்ஸ்.

அது நாய்க்குடை ஒன்றின் கீழே திருப்தியுடன் அமர்ந்திருந்தது.

உலகம் உருவாக்கப்பட்டபோது நாய்க் குடையை தனது பிரத்தியேக வசிப்பிடமாக்கி வெய்யில் மழையிலிருந்து தன்னைப் பாதுகாக்க அமைக்கப்பட்டதாகக் கூறியது.

உலக வாழ்க்கைக்கு நோக்கமில்லை என்று என்னிடம் கூற வேண்டாம்

அந்த எண்ணம் தெய்வ நிந்தனை என்றது வார்டி பிளிகன்ஸ்.

மேலும் கொஞ்சம் சம்பாஷணை நீண்டது.

உலகம் எனப்படுவதன் மையமாகத் தான் இருப்பதாக வார்டி பிளிகன்ஸ் கருதியது.

தான் அமர நாய்க்குடை தயாரிக்கவே பூமி தோன்றியதாம்.

பகலில் ஒளி வழங்கச் சூரியனும், இரவில் சந்திரனும் மாறிமாறிச் செயல்படுகிறார்களாம்.

நட்சத்திரக் கூட்டங்கள் வார்டி பிளிகன்ஸ் மகிழ்ச்சிபெற இரவுக்கு அழகூட்ட வருகின்றனவாம்.

ஒவ்வொருவரும் தன்னையே இந்த உலகின் மையமாக எண்ணிக் கொள்கிறார்கள். குறிப்பிட்ட ஒரு நோக்கத்திற்காகவே இயற்கை தன்னைப் படைத்தது என்று நம்புகிறார்கள். உண்மையில், வாழ்க் கைக்கு எந்த ஒரு நோக்கமும் இல்லை. நோக்கம் என்பது ஞானமற்ற மனம் உருவாக்கிய ஒன்று. ஞானமற்ற மனதால் எதிர்காலம் இல்லாது இருக்க முடியாது. அது எதிர்காலத்தில் வாழ்கிறது. அதற்கு இலக்குகள் தேவைப்படுகின்றன.

ஞானம் பெறாத மனிதன் இலக்குகள் சார்ந்து வாழ்பவன். ஞானமடைந்தவர் இப்போதே இக்கணத்தில் வாழ்வை வாழ்ந்து கொண்டிருக்கிறார். இப்போது இங்கு உங்களுக்கு என்ன குறிக்கோள் இருக்க முடியும்? சில சமயம் நீங்கள் மரம் வெட்டுகிறீர்கள். சில சமயம் கிணற்றிலிருந்து தண்ணீர் சுமந்து வருகிறீர்கள். உங்களுக்கு என்ன நோக்கம் உள்ளது? ஆணவம் நிற்கத் தேவையான ஒரு தாங்கு தூண் ஆகும் அது. அதற்கு எந்த நோக்கமும் இல்லை. வாழ்க்கை இயல்பாக இருக்கிறது. நோக்கம் இல்லாதிருப்பதால் வாழ்க்கை மிகவும் அழகுடன் காணப்படுகிறது.

குறிப்பிட்ட நோக்கம் இருப்பதாக நீங்கள் நம்பினால் பிற்போக்குத் தனத்தில் விழுந்துவிடுகிறீர்கள். பிறகு "நோக்கத்தின் நோக்கம் என்ன?" என்ற கேள்வி கேட்கப்படுகிறது. அப்படி கேள்விகள் போய்க்கொண்டே இருக்கின்றன. அதற்கு முடிவே இல்லை. நோக்கம் உள்ளது என்று முட்டாள் ஜனங்கள் மட்டுமே பதிலளிப் பார்கள். அவர்கள் முட்டாள்கள். ஏனென்றால், பிற்போக்குத் தனத்தில் வீழ்கிறோம் என்ற விழிப்புணர்பு அவர்களிடம் கிடையாது.

"கடவுள் மனிதனைப் படைத்தார். எனவே அவனால் மோட்ச மடைய முடியும்" என்று சிலர் கூறுவார்கள். அவர் ஏன் ஆரம்பத் திலேயே அதைத் தந்திருக்கலாகாது? கடவுள் மனிதனைப் படைத்தார். எனவே அவனால் **மோட்சம்** அடைய முடியும். ஆனால் அவன் துவக்கம் முதலே மேட்சத்தில்தான் இருந்து வருகிறான். பிறகு இந்த உலகம் எதற்கு?" கடவுள் உலகத்தைப் படைத்தார். எனவே அவனால் சத்தியத்தைக் கண்டுணர முடியும்." எதற்கு இந்த தேவையற்ற சிரமம்? எது சத்தியம் என்று அவர் எளிதாகச் சொல்லியிருக்கலாம்.

அனைத்தும் தேவையற்றவை போல் தெரிகின்றன. நோக்கம் இருந்தாலும் சரி, இல்லாது போனாலும் சரி. அது வாழ்க்கைச் சக்தி யின் பிரவாகம்தான். வாழ்க்கை தனது சக்தியால் மகிழ்வூட்டுகிறது. எல்லா திசைகளிலும் பொங்கிப் பாய்கிறது. அது மரமாக மாறுகிறது. பாறையாகி மாறுகிறது. நட்சத்திரங்களாக மாறுகிறது. மனிதனாகவும்,

மிருகங்களாகவும், பறவைகளாகவும் மாறுகிறது. மரபு என்று எதுவும் இல்லை. நோக்கம் மரபைக் கொண்டு வருகிறது. சிலர் உயர்ந்தவர் களாகிறார்கள். சிலர் தாழ்ந்தவராகிறார்கள். காரணம் நீங்கள் உயர்ந்த நோக்கம் கொண்டிருக்கிறீர்கள்.

அதில் மரபு சார்ந்த முறை இல்லை இயற்கை ஒன்றுதான். அது பலவித வெளிப்பாடுகளில் பிரவாகிக்கிறது. எங்கோ ஓரிடத்தில் அது பச்சை மரமாகிறது. வேறு ஒரு இடத்தில் அது பட்டாம்பூச்சியாகிறது. மற்றொரு இடத்தில் அது வானவில்லாகிறது. எங்கோ ஓரிடத்தில் அது ஆணாகிறது. ஒரு இடத்தில் அது பெண்ணாகிறது. அதுவே உண்மை நிலையாகும். அங்கு என்ன நோக்கம் இருக்க முடியும்? உங்கள் மனம் மறையும்போது, உங்கள் சிந்தனை அகலும்போது, உங்கள் அகந்தை விலகும்போது நீங்கள் இங்கே இக்கணத்தில் வாழும்போது நோக்க மற்றுப் போகும் அழகைச் சட்டென்று கண்டுணர்வீர்கள்.

வாழ்க்கை ஒரு வியாபாரமல்ல. அது மகிழ்ந்திருத்தலாகும். வியாபாரத்திற்கு நோக்கம் உண்டு. மகிழ்ச்சிக்கு நோக்கம் இல்லை. தர்க்கத்திற்கு நோக்கம் உண்டு. அன்புக்கு நோக்கமில்லை.

### நான்காவது கேள்வி

**ஓஷோ,**

**நீங்கள் பேசுவதைக் கேட்க நான் மூன்று நாட்களாக எனது கணவருடன் வருகிறேன். சொற்பொழிவு நடக்கும்போது அவர் தூங்கி விடுகிறார். நான் என்ன செய்வது?**

அவரிடம் அன்பு காட்டுங்கள். நீங்கள் வரச்சொல்லி வற்புறுத்து வதால் அவர் வருகிறார். அவர் வருவது உங்களுக்கு லஞ்சம் தருவது போன்றதாகும். அல்லது நீங்கள் அவரை இரவில் தூங்கவிடாமல் செய்திருக்கலாம். அவருக்கு தூங்க வேறு இடம் இல்லாது போயிருக் கலாம். இங்கு அவர் ஓய்வாக இருக்கிறார். அவர் மீது நீங்கள் தலை யணையை வீச முடியாது என்று உங்களுக்குத் தெரியும். அதனால் தான் இங்கு தலையணைகளை அனுமதிப்பதில்லை. தனக்கு இடையூறு செய்ய யாருமில்லை என்று கண்டுகொண்டு விட்டார். அதை அனுப விக்கிறார் போலும். அனுபவிக்கட்டும் விட்டுவிடுங்கள்.

தூக்கம் என்பது முறையான ஒரு ஆன்மீகச் செயல்பாடு. நான் அதற்கு எதிரானவன் அல்ல. குறட்டை விட வேண்டாம் என்று மட்டும் சொல்லுங்கள். தூங்கும் மற்றவர்களின் தூக்கத்தை அது கெடுக்கும்.

சூவ் எப்போதும் மாதம் ஒரு தடவை தனது கணவரைத் திரைப் பட அரங்கிற்கு தன்னை அழைத்துச் செல்லும்படி வற்புறுத்துவார். கணவர் ஜாக் திரைப்பட அரங்கை வெறுத்தான்.

"சூவ்! நான் வீட்டில் தங்கி இருந்தபடியே பந்து விளையாட்டை ரசித்திருக்கலாம்" என்று குற்றம் சாட்டுவான்.

உங்களுக்குப் பந்து விளையாட்டு பற்றித்தான் எப்போதும் கவலையா? என்னைப் பற்றிக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். வீட்டுக்குள் நாளெல்லாம் அடைந்து கிடக்கிறேன்" என்று கூறினாள் சூவ்.

அன்று அவர்கள் தங்கள் நண்பர்களுடன் திரையரங்குக்குச் சென்றார்கள்.

படம் இரண்டாம் பாகம் ஓடும்போது ஒரு பலமான குறட்டை யொலி கேட்டது. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். ஜாக் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். சூவ் அவமானத்தில் முகம் சிவந்தார்.

"இப்படி ஒரு அசிங்கமான காரியம் செய்ய எப்படித் துணிந் தீர்கள்? நான் இதை லேசில் விடப் போவதில்லை?

"அவரைத் திட்டாதே! தன்னை அவர் அனுபவித்துக் கொண் டிருந்தார்" என்று அருகில் இருந்த ஒரு பார்வையாளர் கூறினார்.

எனவே, உங்கள் கணவரிடம் அன்பு காட்டுங்கள். சில கணங்கள் தன்னை அனுபவிக்கட்டும். ஓய்வு கொள்ளட்டும். தூங்கிப்போக அனுமதியுங்கள். அதில் தவறு எதுவும் இல்லை. உண்மையில், ஆன்மீகச் சொற்பொழிவுகளின் மீது எந்த முன்னேற்ற முயற்சியையும் மருத்துவ விஞ்ஞானம் செய்யவில்லை. தூக்கம் இல்லாத நிலை ஏற்பட்டால் ஆன்மீகச் சொற்பொழிவுகள் நல்ல மருந்தாக அமை கின்றன. வைத்தியம் பார்த்து ஒரு மருத்துவர் தோற்றுப்போனால், தூக்க மாத்திரைகள் வேலை செய்யவில்லை என்றால், ஆன்மீகச் சொற் பொழிவுகள் கேட்கப் போ" என்று அவர் ஆலோசனை தருகிறார். தூக்கம் இன்மைக்கு மிகவும் புராதனமான மருந்து அதுதான்.

அவர் அனுபவித்து மகிழட்டும், விட்டுவிடுங்கள். அவர் எதையும் தவறவிடவில்லை. நீங்கள் நான் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாலும், என்ன பெற்றீர்கள்? எதைச் சம்பாதித்து விட்டீர்கள்? நீங்கள் ஏதாவது பெற்றால் ஞானமடைவீர்கள். நிஜ மாகவே நீங்கள் மனம், சிந்தனை சார்ந்த ஆய்வுகளில் மூழ்கியிருக்கும் தூக்கத்திலிருந்து விடுபடுவீர்கள். நீங்கள் அவ்வாறான தூக்கத்தில் இருக்கிறீர்கள். அதுபோல அவரும் உறங்குகிறார். உடலளவில் உறங்குகிறார். நீங்கள் கண்களைத் திறந்து வைத்துக்கொண்டு தூங்கு

கிறீர்கள். நீங்கள் என்னைப் பார்ப்பது போலவும், நான் சொல்வதைக் கவனிப்பது போலவும் காட்டிக் கொள்கிறீர்கள். ஆனால் நான் கூறுவதைக் கவனிப்பதில்லை. என்னைக் கவனிப்பதில்லை. ஏனென்றால் நீங்கள் நான் சொல்வதைக் கேட்கும் தருணத்தில், என்னைப் பார்க்கும் கணத்தில் அதே பழைய மனிதராக இருக்க மாட்டீர்கள். உங்கள் வாழ்க்கை முழுமையான மாற்றம் பெற்றுவிடுகிறது. அதிகம் ஒளி பெறுவீர்கள்.

எனவே கவலைப்பட வேண்டாம். நீங்கள் கண்களைத் திறந்தபடி தூங்குகிறீர்கள். அவர் கண்களை மூடிக்கொண்டு தூங்குகிறார். அவரது பாதை மிகவும் இயல்பானது. அவரிடம் அன்பு காட்டுங்கள். சிரமம் தர வேண்டாம். அவர் அருகில் உட்கார்ந்திருக்கச் சிரமப் பட்டால், வேறிடத்தில் சென்று அமர்ந்து கொள்ளுங்கள்.

சிலசமயம் நீங்கள் தூங்கி விழுவீர்கள். ஆனால் அது உறக்கமாக இருக்காது. அப்படியும் நடக்கிறது. கிழக்கு நாடுகளில் நாம் **தாந்த்ரா** என்ற ஒரு சொல்லைப் பெற்றிருக்கிறோம். ஆங்கிலத்தில் அதற்கு இணையான சொல் இல்லை. அது சாதாரணத் தூக்கம் அல்ல. தூக்கம், விழிப்பு இரண்டுக்கும் இடைப்பட்ட ஒருவித உறக்கம் அது. ஏதாவது ஒன்று உங்களுக்குள் நுழையச் சரியான தருணம் அதுதான். அதை ஒரு ஹிப்னாடிஸத் தூக்கம் என்று அழைக்கலாம். ஹிப்னாடிஸம் என்ற வார்த்தையை நான் பயன்படுத்தமாட்டேன். அது மோசமான உறவை உங்கள் மனதுடன் வைத்துள்ளது. உண்மையில், ஹிப்னாடிஸம் என்றால் தூக்கம் என்றுதான் அர்த்தம். ஆனால் வித்தியாசமான தூக்கம். சாதாரணத் தூக்கமல்ல. அதில் இருந்தபடி பிறர் பேசுவதை உங்களால் கேட்க முடியும். தூங்குவீர்கள் ஆனால் கேட்க முடியும்.

சில மனிதர்கள் இருக்கிறார்கள்... ஷீலா அவர்களில் ஒருத்தி. அவள் அயர்ந்து தூங்குகிறாள். அது தூக்கமல்ல. **ஹிப்னாஸிஸ்.** அது **தாந்த்ரா** அவள் என் சொற்பொழிவைக் கவனிக்கிறாள். வேறு யார் பேசுவதையும் கவனிப்பதில்லை.

சில ஹிப்னாடிஸவாதிகளை நீங்கள் பார்த்திருக்கலாம். அவர்கள் மனோவசியம் செய்யும்போது அந்த நபர் காதுக்கு எதுவும் கேட்காது. மனோவசியம் செய்பவர் சொல்வதை மட்டும் கவனிப்பார். அவரது கதவுகள் மனோவசியம் செய்பவருக்குத் திறந்து வைக்கப்பட்டுள்ளது. அங்கு இருவருக்கும் இடையே ஒரு மெல்லிய நூலிழை போன்ற தொடர்பு இருக்கிறது.

என்னிடம் ஆழ்ந்த அன்பு கொண்டவர்கள் தூங்கி விடுவார்கள். ஆனாலும் என்னுடன் தொடர்பில் இருப்பார்கள். நான் சொல்லிக்

கொண்டிருக்கும்போது அதை அவர்களால் நினைவில் வைத்து மீண்டும் கொண்டுவர இயலாது. ஆனால் அதைக் கேட்கிறார்கள். உள்வாங்கிக் கொள்கிறார்கள்.

எனவே கவலைப்படத் தேவையில்லை. உங்கள் கணவர் ஒருவித உடல் சார்ந்த உறக்கத்தில் இருக்கிறார். அதுவும் நல்லதுதான். **ஹிப்னாஸிஸ்** போன்ற மனோவசியத்தில் அவர் இருந்தால், அது உங்களுக்குத் தூக்கமாகத் தெரியும். எனக்கு அது தூக்கமாகத் தெரியாது.

இன்னொரு மூன்றாவது விஷயமும் கிழக்கில் உண்டு. அதற்கும் ஆங்கிலத்தில் இணையான வார்த்தை கிடையாது. அது **யோக நித்திரை** எனப்படுகிறது. ஒருவர் நிம்மதியுடனும், ஓய்வாகவும் படுத்திருப்பார். வெளியிலிருந்து பார்க்கும் ஒவ்வொரு மனிதரும் அவர் உறங்குவதாகவே நினைப்பார்கள். புத்தர் தனது போதி மரத்தரடியில் இருக்கும் இடத்தைக் கடந்து நீங்கள் செல்ல நேர்ந்தால், அவர் உறக்கத்தில் இருப்பதாக நினைப்பீர்கள். ஆனால் அப்படியில்லை. முழுமையான உறக்கத்தில் இல்லை. அவருக்குள் பிரகாசமும், விழிப் புணர்வும் நிறைந்திருக்கின்றன.

ராமகிருஷ்ணா கோமா மயக்க நிலைக்குச் சென்றுவிட்டார். மருத்துவர்கள் பலதடவை அதை காக்கை வலிப்பு நோய் என்று கூறினார்கள். காரணம் அவர் சுயநினைவற்றுப் போயிருந்தார். காக்கை வலிப்புக்காரன் போல வாயில் நுரை தள்ளியிருந்தது. பல மணிநேரம் அவர் சுயநினைவற்று இருந்தார். அவரது உடல் பலமாக விரைத்துப் போயிருந்தது.

ஒருமுறை இவ்வாறு தொடர்ந்து அவர் ஆறு நாட்கள் அதே நிலையில் இருந்தார். அவரைக் கவனித்துக் கொள்வது சிரமமாக இருந்தது. கரண்டியால் உணவூட்ட வேண்டியிருந்தது. கிட்டத்தட்ட உயிரற்றவர் போலிருந்தார். ஆறு நாட்களுக்குப் பிறகு ஒளியும், மகிழ்வும் தாங்கியவராகத் திரும்பி வந்தார். அவர் சொன்ன முதல் விஷயம், "நான் மீண்டும் தூங்கிப் போய்விட்டேன்" என்பதுதான்.

அந்த ஆறு நாட்களும் அவர் விழித்திருந்தார்! "நான் இப்போது மறுபடியும் உறங்கப் போகிறேன்" என்று கண்திறந்ததும் கூறினார்.

நிஜமான விழிப்புணர்வு பெற்றவர்களுக்கு நீங்கள் 'விழிப்பு' என்று சொல்வது எல்லாம் உறக்கம்தான். அதுவே மூன்றாம் நிலை யாகும். உங்கள் கணவர் மூன்றாம் நிலையில் இருப்பதாக நான் எண்ணவில்லை. அப்படியிருந்தால் அவர் உங்கள் கணவராக இருக்க வும் மாட்டார். ஆனால் அவரைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவரை அப்படியே விட்டுவிடுங்கள்.

கணவர்மார்களைத் தனியே விட்டுவிட மனைவிகள் கற்றுக் கொள்ள வேண்டும். மனைவிகளைத் தனியே விட்டுவிட கணவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். ஒவ்வொன்றிலும் குறுக்கிட்டுத் தொந்தரவு செய்ய வேண்டாம். எதற்கெடுத்தாலும் குறை சொல்லிக் கொண்டிருக்க வேண்டாம்.

**ஐந்தாவது கேள்வி**

**ஓஷோ,**

**"துவைத்தலும், சுத்தப்படுத்தலும்தான் பிரதான குறிக்கோள்கள்" என்று லாவோட்ஸு கூறுகிறார். கறைபடாது உங்களால் இருக்க முடியுமா? ஓஷோ கரைபடாது நீங்கள் இருக்கிறீர்களா?**

நான் கறைபடியாது இருக்கிறேன். நீங்களும் கறைபடியாமல் இருக்கிறீர்கள். ஆரம்பம் முதலே நாம் எல்லோரும் கறைபடியாமல் தான் இருந்து வருகிறோம். நிஜமாகவே சுத்தப்படுத்த வேண்டிய அவசியமில்லை. தூய்மைப்படுத்தத் தேவையிலலை. நமது தூய்மை முழுமையானது.

ஒருமுறை ஜென் குரு ஒருவர் தனக்குப் பிறகு பொறுப்பேற்க ஒரு தகுதியானவரைத் தேர்வு செய்ய விரும்பினார். தனது மடாலயத் தில் அதை அறிவித்தார். அங்கு ஐநூறு சிறந்து துறவிகள் இருந்தார்கள். அவர்கள் மத்தியில் குரு, "எனக்கு வயதாகிவிட்டது. எனக்குப் பதிலாக பொறுப்பேற்க ஒருவரை நியமிக்க விரும்புகிறேன். அதற்கு ஒரு பரிட்சை வைத்திருக்கிறேன். யார் ஒருவர் பொறுப்பேற்கத் தனக்குத் தகுதி இருப்பதாக நினைக்கிறாரோ, தான் விழிப்புணர்வு பெற்று மெய்மை நிலை பற்றி அறிந்துகொண்டு விட்டதாக எண்ணுகிறாரோ அவர் எனது குடிலுக்கு வந்து தான் புரிந்து கொண்டவை பற்றி நான்கு வரிகள் குடில் கதவில் எழுதிவிட்டுச் செல்லலாம். மெய்மைநிலை குறித்த உங்கள் அனுபவத்தை நான்கு வரிகளில் தெரிவிக்க வேண்டும்" என்று கூறினார்.

பகல் வேளையில் யாரும் போகவில்லை. அந்த முதியவர் பற்றி அவர்களுக்குத் தெரியும். உங்களால் அவரை ஏமாற்ற முடியாது. ஏதாவது தவறாக எழுதிப் பிடிபட்டுவிட்டால் அங்கேயே அடித்து விடுவார். பெரிய ஊன்றுகோலுடன் முதியவர் அங்கு உட்கார்ந் திருந்தார். யாரும் அங்கு போகவில்லை.

இரவில் அவர் உறங்கிய பிறகு ஒருவர் பதுங்கிப் பதுங்கிச் சென்றார். அந்த கூட்டத்தில் அவர்தான் சிறந்த கல்வியாளர். அழகான நான்கு வரிகளை அவர் எழுதினார். மனம் ஒரு கண்ணாடி. அதில்

ஆசை மற்றும் எண்ணங்கள் என்ற தூசு படிந்து விடுகிறது. அந்த தூசை அகற்றுவதே மெய்மை நிலையாகும்.

கீழே கையொப்பம் இடாது போனால் முதியவர் இதை ஏற்றுக் கொள்ள மாட்டாரோ என்ற கவலை அவருக்கு ஏற்பட்டது. எழுதியது சரி என்று அவர் கூறினால் அதை நான் தான் எழுதினேன் என்று அறிவிப்பேன். சரியில்லை என்றால் மௌனமாகி விடுவேன்" என்று முடிவு செய்தார்.

மறுநாள் அதிகாலையில் முதியவர் கடும் கோபத்தில் இருந்தார். "இந்த பிதற்றலை எழுதியது யார்? எங்கே அந்த நபர்? என்னிடம் கூட்டிவவா. நான் அவனை நான் நையப்புடைக்க வேண்டும்" என்றார். அதை எழுதிய கல்வியாளர் அங்கிருந்து தப்பியோடி விட்டார். சிலர் அவர் குடில் பக்கம் போனதைப் பார்த்திருந்தார்கள். எனவே யாராவது சொல்லி விடுவார்கள் என்ற அச்சம் அவருக்கு இருந்தது. எனவே சில நாட்கள் காட்டுக்குள் சென்று ஒளிந்து கொண்டார்.

துறவிகள் கூட்டத்தினர் எல்லோரும் பரபரப்பில் இருந்தார்கள். காலையிலிருந்து மாலைவரை அந்த ஒரு விஷயம்தான் பேசப்பட்டது. காரணம் எல்லோரும் அந்த வரிகளை ரசித்தார்கள். அவை மிகவும் அழகாகவும், தெளிவாகவும் இருந்தன. மெய்மைநிலையை அவை பிரதிநிதித்துவப்படுத்தின. அதற்கு எப்படி அதை மேம்படுத்த முடியும்?

மனம் ஒரு கண்ணாடி. ஆசை மற்றும் எண்ணங்கள் என்ற தூசு அதில் படிகிறது. அதை சுத்தம் செய்வதே மெய்மை நிலை பெறுதலாகும். தியானம் என்பதும் இதுதான். இதுவே தூய்மை. இதுவே பிரதிபலிப்பு. நீங்கள் கண்ணாடியாக மாறும்போது அதைப் பிரதிபலிப்பீர்கள். வார்த்தைகள் சிறந்தவைதான். ஆனால் உயர்வான புரிதல் இல்லை.

அங்கு துறவி ஒருவர் இருந்தார். பனிரெண்டு வருட காலம் அவர் அரிசியைச் சுத்தம் செய்து கொடுத்துக் கொண்டிருந்தார். பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு அவர் குருவிடம் வந்து "மெய்மை நிலை பற்றி அறிந்துகொள்ள வந்திருக்கிறேன்" என்று கூறினார். குரு அவரைப் பார்த்து, "மெய்மை பற்றி அறிய விருப்பமா அல்லது மெய்மையையே கண்டுணர விருப்பமா? என்று வினவினார்.

குருவின் கண்களைப் பார்த்த துறவி, "என்ன பேசுகிறீர்கள்? நான் எதற்கு மெய்மை **பற்றி** அறிய வேண்டும்? அது எப்படி எனக்கு உதவ முடியும்? எனக்கு மெய்மை வேண்டும். வேறு எதுவும் வேண்டாம். மெய்மை பற்றி அறிந்து கொள்வதில் எனக்கு ஆர்வமில்லை. மெய்மையையே கண்டுணர வேண்டும்" என்றார்.

அதற்கு குரு, "அப்படியானால் ஒரு காரியம் செய். சமையல் அறைக்குச் சென்று அரிசியைச் சுத்தம் செய். என்னிடம் திரும்பவும் வராதே!" எப்போது காலம் கனிகிறதோ அன்று நானே உன்னிடம் வருவேன். நீ செய்ய வேண்டியது ஒரே காரியம்தான். காலை முதல் மாலைவரை அரிசியைச் சுத்தப்படுத்திக் கொண்டிரு" என்றார்.

அங்கு ஐநூறு பேருக்கு அரிசி தேவையாக இருந்தது. அதனால் அந்த மனிதர் மீண்டும் குருவிடம் வரவே இல்லை. பனிரெண்டு ஆண்டுகள் ஓடிவிட்டன. ஒரே காரியத்தை அவர் செய்து வந்தார். அதிகாலை நான்கு மணிக்கு எழுந்துவிடுவார். துறவிகளுக்கு விரைவில் காலை உணவு வேண்டும். இரவு வரையில் அவர் வேலை செய்வார்.

நாளடைவில் எண்ணங்கள் மறைந்தன. மெதுவாக சிந்தனைகள் நின்றுபோயின. சுத்தம் செய்தல் அவருக்கு தியானம் போலாகிவிட்டது.

இரண்டு துறவிகள் பேசிக் கொண்டே அவரைக் கடந்து சென்றார்கள். "அந்த அழகான வரிகளைக் குரு குப்பை என்று கூறி விட்டாரே! குரு மிகவும் கடுமையானவர். இப்படியிருந்தால் பெறுப் பேற்க ஒருவரை கண்டறிவது அவரால் இல்லாத காரியம்" என்றனர். அரிசி சுத்தம் செய்த துறவி அதைக் கேட்டுச் சிரிக்கத் தொடங்கினார். வயிறு குலுங்கச் சிரித்தார். இரண்டு துறவிகள் நின்று அவரைப் பார்த்து, "என்ன ஆயிற்று உங்களுக்கு? ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டனர்.

அதற்கு அவர், "குரு செய்தது சரிதான். அந்த வரிகளை எழுதிய முட்டாள் யார்? அவருக்கு அடி கொடுக்க வேண்டும். அவர் சொன்னது முற்றிலும் தவறு அவருக்கு புரிந்துகொள்ளும் திறன் இல்லை" என்றார்.

அதைக் கேட்டதும் இரண்டு துறவிகளும் அதிர்ந்து போனார்கள். "உங்களால் அந்த வரிகளைத் திருத்தி மேம்படுத்த முடியும் என்று நினைக்கிறீர்களா?" என்று வினவினர்.

"எழுதுவது எப்படி என்பதையே நான் மறந்துவிட்டேன். பனிரெண்டு வருடங்களாகிவிட்டன. நீங்கள் சென்று எழுதுங்கள். இந்த வார்த்தைகளை யார் கூறியது என்ற குருவிடம் சொல்லுங்கள்" என்று மட்டுமே என்னால் கூறமுடியும்."

"நீங்கள் என்னுடன் வரவில்லையா?" என்று துறவிகள் கேட்டனர்.

"நான் யாருடைய பதிலிப் பொறுப்பாளராகவும் இருக்க விரும்ப வில்லை. நீங்கள் சென்று எழுதுங்கள்."

அவர்கள் சென்று எழுதினார்கள்.

அவர் ஆலோசனை தந்தார். "சென்று எழுதுங்கள். மனம் ஒரு கண்ணாடியல்ல. ஆசை மற்றும் எண்ணம் என்ற தூசுகள் எப்படி வந்து ஒட்டும்? இதை அறிந்தவர், மெய்மை நிலையையும் அறிவார்."

குரு அந்த வரிகளைப் படித்தார். மௌனமாக இருந்தார். பாராட்டியும் பேசவில்லை, குறையும் கூறவில்லை. நள்ளிரவு வேளையில் அவர் அரிசி சுத்தம் செய்யும் துறவியிடம் வந்தார். "யாருக்கு இந்த நுண்ணறிவு இருக்கும் என்று எனக்குத் தெரியும். எனது அங்கியை எடுத்துக் கொண்டு இந்த கூட்டத்திலிருந்து காணாமல் போய்விடு. நீதான் எனக்குப் பதிலாக வரும் பொறுப்பாளன். ஆனால் பொழுது விடிவதற்குள் இங்கிருந்து போய்விடு. ஜனங்கள் தெரிந்துகொள்ளும் முன்னர் போய்விடு. காரணம் அது பெரிய அளவு பொறாமையைத் தூண்டி விட்டுவிடும். அறிவாளிகளும், பண்டிதர்களும், பேராசிரியர்களும் மிகவும் பொறாமை கொண்டவர்கள். அவர்கள் உன்னை கொன்று விடுவார்கள். உடனே இங்கிருந்து சென்றுவிடு. வேறு ஒரு மலைப்பகுதிக்குப் போ. ஆனால் எனது ஜோதியை எடுத்துச் செல். நீ என்னைப் புரிந்து கொண்டாய். வெற்றியடைந்து விட்டாய்."

"லாவோட்ஸு, துவைத்தலும், சுத்தம் செய்தலும் பிரதானமான குறிக்கோள் என்று கூறினார். நீங்கள் கறைபடாது இருக்கிறீர்களா?" என்று என்னிடம் கேட்டீர்கள்.

சிலவற்றைச் சுத்தம் செய்ய வேண்டும், துவைக்க வேண்டும் என்று நீங்கள் கருதினால், நீங்கள் கறைபடியாது இருக்க முடியாது. ஆனால் எதையும் துவைக்க வேண்டாம், சுத்தம் செய்ய வேண்டாம் என்று நம்பினால், நீங்கள் கறைபடியாது இருக்கிறீர்கள். நீங்கள் ஆரம்பம் முதலே புத்தர்களாக இருந்து வருகிறீர்கள்! உங்களை நீங்கள் மேம்படுத்திக் கொள்ளத் தேவையில்லை. நீங்கள் யார் என்ற விழிப்புணர்வு மட்டும் போதும். அதுதான் தேவைப்படுகிறது.

கடைசிக் கேள்வி

ஓஷோ,

அன்பு செலுத்த வரைமுறைகள் வகுக்கப்பட்டுவிட்ட இந்த உலகில் உங்களை விடவும் அன்பு செலுத்தியர் வேறு யாராவது உண்டா?

அது உண்மைதான். நான் உங்களை நேசிப்பது போல வேறு யாரும் உங்களை நேசித்ததில்லை. ஆனால் நினைவில் வையுங்கள். மற்றவர்களால் நான் வெறுக்கப்பட்டது போல எவரும் வெறுக்கப்பட்டதில்லை. அது இயல்பானது. அன்பும், இயல்பும் சமநிலைப் பட்டு விடுகின்றன.

இன்று இவ்வளவு போதும்.

## அத்தியாயம் - 9

### முதல் கேள்வி

**ஓஷோ,**

**எனது பூரணத்துவம் என்றால் என்ன? நான் ஏன் அதை ஒதுக்கித் தள்ளிக் கொண்டிருக்கிறேன்?**

உங்களுடைய பூரணத்துவம் எனப்படும் முழுமை நிலையை வைத்துக்கொண்டு எதுவும் செய்திட இயலாது. உங்களுடைய முழுமை, என்னுடைய முழுமை என்றெல்லாம் எதுவும் இல்லை. முழுமை என்பது ஒன்றுதான். அதில் நாம் எல்லோரும் காணாமல் போய்விடுகிறோம். அதுதான் பயத்தை ஏற்படுத்தி விடுகிறது. நீங்கள் ஒரு அங்கமாக இருக்கும்போதுதான் நீங்கள் எஞ்சி நிற்கிறீர்கள். நீங்கள் முழுமை பெற்றிட விரும்பும் கணத்தில் ஒரு வகையான தற்கொலை செய்துகொள்ள வேண்டியிருக்கும். அது ஆன்மீகத் தற்கொலை. நீங்கள் மறைந்து போக வேண்டியிருக்கும்.

பனித்துளி கடலாக மாற வேண்டுமானால் அது கடலில் கலந்து மறைவதே சாத்தியமான ஒரே வழியாகும். பனித்துளியாகவே அது

இறக்க வேண்டும். பனித்துளியாக அது இறந்து போகும் கணத்தில் அது கடலாக மாறி விடுகிறது. அந்த இறப்புதான் அச்சத்தை ஏற்படுத்து கிறது.

மனிதர்கள் கடவுள் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் யாரும் தன்னை இழக்கத் தயாராக இல்லை. எனவே கடவுள் பற்றிய பேச்சு உயிரற்றதாக, அர்த்தமற்றதாக உள்ளது. மக்கள் கடவுளை வணங்கு கிறார்கள். ஆனால் கடவுளுக்கும் தங்களுக்கும் இடையே ஒரு தூரத்தை உருவாக்கிப் பாதுகாக்கிறார்கள். அவர்கள் கோவிலுக்குப் போகி றார்கள். ஆனால் நிஜமாகப் போவதில்லை. தங்கள் கருத்தைப் பிடித்துக் கொண்டு தொங்குவதற்காகப் போகிறார்கள்.

அதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று அகந்தை. முழுமை யிலிருந்து அது மனிதனைப் பிரித்து வைக்கிறது. அது மாயையானது. பிரிந்து நிற்க வழியே கிடையாது. நீங்கள் பிரிந்திருப்பதாக நம்பிக் கொள்கிறீர்கள். உள்ளே ஆழத்தில் முழுமையுடன் ஒன்று சேர்ந்திருக் கிறீர்கள. அகந்தையைச் சுற்றி நீங்கள் ஏற்படுத்தியுள்ள கருத்துக்கள் எல்லாம் கற்பனையானவை. கிழக்கு நாட்டில் அதே **மாயா** என்கிறோம். மாயா என்றால் பயனற்ற கனவுகளின் உலகம் என்று பொருள்.

தனித்திருக்க இயலாது என்பது அடுத்த வழியாகும். உங்கள் வரையறுப்புகள், எல்லைகள், உன்னத ஸ்தானங்கள் போன்றவற்றை உதறும்போது நீங்கள் உண்மையான, பிரம்ம உலகில் நுழைகிறீர்கள். அதன் பிறகு நீங்கள் கனவுகளைக் கடந்து செல்லலாம். பிரதான, அடிப்படைக் கனவு என்னவென்றால் அது தன்னுணர்வு பற்றியது ஆகும். அது நான் என்ற கனவாகும். நீங்களும் இல்லை. நானும் இல்லை. வாழ்க்கை மட்டுமே இருக்கிறது.

ஆனால் அது சிரமமான ஒரு காரியம். வாழ்க்கையின் வெறுமை யில் மறைந்து போவது அச்சத்தை, வலியைத் தருகிறது. உங்கள் சிறிய கனவுலகம் சௌகரியமான உணர்வைத் தருகிறது. உங்களைச் சூழ்ந் துள்ள கனவுகள் கதகதப்பளிக்கின்றன. உங்களுக்குப் பாதுகாப்பும், புகலிடமும் கிடைத்துவிட்டதாக நம்புகிறீர்கள்.

அதனால்தான் மக்கள் அது துயரமானதாக இருந்தாலும் அதைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறார்கள். காரணம் அந்த துயரங்கள் உங்கள் கனவின் ஒரு அங்கமாக, பிரதான அங்கமாக உள்ளன. உங்கள் மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை என்ற இரண்டும் கனவின் இரண்டு அம்சங்கள். மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை என்ற இரண்டும் கிடையாது என்று உண்மைக்குத் தெரியும். உண்மை எல்லா இருமை நிலைக்கும்

அப்பால் இருக்கிறது. அங்கு முழுமையான பேரானந்தம் காணப்படு கிறது. ஆனால் பேரானந்தம் மகிழ்ச்சியல்ல என்பது நினைவிருக் கட்டும். பேரானந்தத்தில் நீங்கள் எந்த மகிழ்ச்சியையும் கண்டறிய முடியாது. மகிழ்ச்சியின்மை என்பதையும் கண்டறிய முடியாது.

அது முற்றிலும் வித்தியாசமான உலகம் அதை ருசித்துப் பார்க் காதவரை உங்களால் அது பற்றி எந்தக் கருத்தையும் கொள்ள முடியாது. பேரின்பம் உங்களுக்கு அர்த்தம் எதுவுமற்றதாக இருக்கிறது. புத்தர் களுக்கு மட்டுமே அது அர்த்தமுள்ளதாகும். அவர்கள் மட்டுமே அதை அறிவார்கள். அதைத் தெரிந்துகொள்ள நீங்கள் ஒரு அடிப்படைத் தேவையை நிறைவு செய்ய வேண்டும். நீங்கள் காணாமல் போக வேண்டும். அது நடக்க முடியாத ஒரு செயல் போல் தோன்றலாம். நீங்கள் இருப்பீர்கள். ஆனாலும் இருக்க மாட்டீர்கள்.

"எனது பூரணத்துவம் என்ன?" என்று கேட்டீர்கள். முழுமையில் சுயம் என்பது இல்லை. அதில் நானும் இல்லை. நீங்களும் இல்லை. சுயம் அங்கு இருக்கும்போது முழுமை இருக்காது. முழுமை அப்போது ஒரு பிரிவுபட்ட துண்டாகவே இருக்கும். முழுமை ஒரு துண்டாகவே இருந்துவரும். அதனால்தான் அகந்தை கொண்ட மனிதர்கள் அற்பர் களிலும் அற்பர்களாக, சிறியவர்களிலும் சிறியவர்களாக இருக் கிறார்கள்.

அதிகம் அகந்தை கொண்ட மனிதர்கள் இழிந்தவர்களாக, இரண்டாம் தரமானவர்களாக இருந்து வருகிறார்கள். தனக்குள் அவருக்கு இடமில்லை. தனது அகந்தையைத் தவிர வேறு எதுவும் அவரிடம் இல்லை. அவர் சிறியவர். நான் என்ற சிறிய ஒரு சொல் அவரது முழு இடத்தையும் நிறைக்கப் போதும்.

எந்த அளவு நீங்கள் அகந்தையை உதறுகிறீர்களோ அந்த அளவு அது கரைந்துவிடும். உங்களுக்கு பெரிய இடம் கிடைக்கும். அகந்தை தீர்க்கமானது. அதை நீங்கள் விளக்க முடியும். துல்லியமாக அதை அடையாளம் காட்டி, "இது நான்" என்று நீங்கள் கூற முடியும். அது நல்ல தெளிவாகும். முழுமை என்பது புரியாத மேகக் கூட்டம். அதை துல்லியமாகக் காட்டமுடியாது. "இதுதான் அது" என்று காட்ட முடியாது. அது மிகவும் பெரியது. எல்லா பக்கமும் அது விரிந்து கிடக்கிறது. அது துவக்கமற்றது. அது முடிவுமற்றது.

விந்தையான அந்த துன்பம் தரும் முழுமைக்குள் ஒரு நுழையத் தயாராக இல்லாதவரையில் அதனுள் ஒரு காலடி எடுத்து வைக்கவும் இயலாது. அது அகந்தைக்கு ஆபத்து விளைவிப்பதாகும். உங்கள் அறிவு என்ற விஷயத்திற்கும் அது ஆபத்தைத் தருகிறது. அது பைத்தியக்காரக் காதல் செயல்பாடு.

வாழ்க்கையுடன் உங்களுக்கு அவ்வாறான ஒரு பைத்தியக்காரக் காதல் இல்லாதவரை, அதற்காக உயிர்விடவும் தயாராக இல்லாத வரை, உங்கள் சிறிய அகந்தையை பிடித்துத் தொங்கியபடிதான் இருப்பீர்கள்.

நான் கேள்விப்பட்ட செய்தியைச் சொல்கிறேன்.

பைத்தியக்கார விடுதியில் தங்கியிருந்த இரு பைத்தியங்கள் தப்பிச் செல்ல முயன்றார்கள். வெளிப்புறச் சுவரை நெருங்கிவிட்ட அவர்களால் அதன் மீது ஏற முடியவில்லை. "இப்போது நாம் என்ன செய்வது ?" என்று முதல் பைத்தியம் கேட்டான்.

"எனக்கு என்ன செய்வதென்று தெரியும். நான் எனது டார்ச் விளக்கு ஒளியை சுவரின் உச்சிவரை பாய்ச்சுகிறேன். நீ அந்த ஒளியைப் பிடித்துக்கொண்டு ஏறிச்சென்று சுவரின் உச்சியை அடைந்த பிறகு நான் மேலே வர உதவி செய்" என்றான்.

"அது முடியாது. நான் ஒன்றும் பைத்தியம் அல்ல. நான் பாதி தூரம் மேலே ஏறியதும் நீ விளக்கொளியை அணைத்து விடுவாய்" என்றான் இரண்டாவது பைத்தியம்.

முழுமைக்குள் நுழைய அதுபோல் நீங்கள் பைத்தியமாக இருக்க வேண்டும். அது ஒரு மரணம். அது காணாமல் போகும் ஒரு காரியம். அது ஆபத்தானது. ஒருவித சூதாட்டம். என்ன நடக்கப் போகிறது என்று உங்களுக்குத் தெரியாது. எதை இழக்கப் போகிறீர்கள் என்று மட்டுமே உங்களுக்குத் தெரியும். என்ன ஆதாயம் பெறுவீர்கள் என்று முன்கூட்டியே உங்களுக்குத் தெரியாது. உங்களிடம் அபரிமிதமான துணிவு இல்லாது போனால் உங்களால் காரியத்தில் இறங்க இயலாது. அது பள்ளத்தாக்கில் குதிப்பது போன்றது. பள்ளத்தாக்கு ஆழம் காண முடியாதது.

ஆனால் அதில் குதித்தவர்கள் தான் போக வேண்டிய இடம் சென்று சேர்ந்திருக்கிறார்கள். அகந்தையுடன் இருந்த அவர்கள் இறக்கும் சமயத்தில் தெய்வீகம் புதுப்பிறவி எடுக்கிறது. கடலாக மாறுவதற்கு பனித்துளியாக இருந்து இறந்துதான் தீர வேண்டும்.

சந்நியாசம் எனப்படுவது அதுதான். உங்கள் புத்திசாலித்தனம், அறிவு, கல்வி போன்றவற்றை உதறித்தள்ளும் வேகத்தை அந்த பைத்தியம் தரவேண்டும். சந்நியாசம் என்பது உங்களுக்குள் இறந்து உலகில் உயிர் பிழைத்திருக்கும் காரியத்தை உருவாக்கும் வேகத்தைத் தருவதாகும். என்ன நடக்கப் போகிறது என்பதில் அதிகம் அக்கறை கொள்ளாதிருந்தால் மட்டுமே அது சாத்தியம். விளைவு பற்றிய அக்கறை இல்லாதிருந்தால் மட்டுமே அதில் நீங்கள் குதிக்க இயலும்.

யாரோ ஒருவர் உங்களை அழைத்துக் கொண்டு அதில் மெது வாகக் குதித்தால், நீங்கள் நோயுற்றுப் போனவராகிறீர்கள். **ஆன்மீகம்** என்பது ஒரு நோய்த் தொற்றாகும். ஆன்மீகத்தையும் போதிக்க முடியாது. அதைப் பற்றிக் கொள்ள வேண்டும். அதைக் கற்றுக் கொள்ள வேறு வழி எதுவும் கிடையாது.

**இரண்டாவது கேள்வி**

**ஓஷோ,**

**முந்தைய தினம் தனது தொப்புளைத் தொடுவதற்குப் பயந்த ஒருவர் பற்றிப் பேசினீர்கள். அவர் ஒருவர் மட்டும் இங்கு அப்படியிருக்கவில்லை. எனக்கும் அதே பிரச்சினை உள்ளது.**

தொப்புள் உள்ள ஒவ்வொருவரும் அப்படி பாதிக்கப்படக் கூடும். உங்களுக்குத் தொப்புள் இல்லாதுபோனால் அப்போதும் துன்பப்படுவீர்கள். அதற்கு வேறு காரணம் கண்டறிவீர்கள். உங்கள் காதுகளைத் தொட பயப்படலாம்.

காரணம் காட்டுவது நிஜமான பிரச்சினை ஆகாது என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். பிரச்சினை எங்கோ ஆழமாக வேரோடி நிற்கிறது. அந்த மனிதர் ஏன் தனது தொப்புளைத் தொடுவதற்கு அஞ்சினார்? தொப்புளைத் தொடுவது ஒரு சாதாரணமான செயல். அது உடலின் மற்ற பாகங்களைத் தொடுவது போன்ற ஒன்றுதான். பிரச்சினை வேறு எங்கோ இருக்கிறது. அது வெறும் அறிகுறிதான்.

தொப்புள் உங்கள் வாழ்வின் இரண்டு முக்கிய மையங்களுடன் தொடர்புடையதாகும். ஒன்று காமம். அடுத்தது மரணம். அந்த இரண்டும் தான் உலகில் அச்சம் தருபவைகளாக உள்ளன. தொப்புள் பெரிய விஷயமல்ல, ஆனால் அது காம மையத்துக்கு மிகவும் நெருக்க மாக இருக்கிறது. நீங்கள் காமத்தை அடக்கி வைத்தால் உங்கள் தொப்புள் உணர்ச்சி மிக்கதாக மாறுகிறது. அடக்கி வைக்கப்பட்ட காமம் தொப்புளின் பின்னால் வேகமாகிறது. எனவே பயம் ஏற்படு கிறது. அடிப்படையில் பயம், காமம் சார்ந்தது. தொப்புள் பற்றியது அல்ல.

உங்கள் காமசக்தியை அடக்கி வைத்தால் அது எங்கே போகும்? அது பெருகத் தொடங்கும். அது காம மையத்தில் பரவத் தொடங்கும். மிக அருகில் உள்ள காம மையம் தொப்புள்தான். அது தொப்புளின் எல்லைக் கோட்டைத் தொடத் துவங்குகிறது.

அதனால்தான் உங்கள் தாயுடனாக வாழ்வைத் தொடர்பாகத் தொப்புள் இருக்கிறது. உங்கள் தாயின் உயிர் தொப்புள் வழியாக

உங்களுக்குள் பாய்கிறது. தொப்புள் ஒரு உள்ளீடற்ற மூங்கில் போன்றது. மிக மிகத் திறமையான ஒரு சக்தி வாகனம். உங்கள் தாயின் சக்தியை உங்களுடைய உயிராக மாற்றுகிறது. தொப்புள் வழியாகவே நீங்கள் உங்கள் தாயின் கர்ப்பப்பையில் ஒன்பது மாதம் வாழ்கிறீர்கள்.

சுரங்கப்பாதை காலியாக இல்லை. நீங்கள் காமத்தை அடக்கினால், காம சக்தி சுரங்கப் பாதையில் நிறையும். அதுதான் பயத்திற்குக் காரணம். யாராவது உங்கள் தொப்புளைத் தொட்டால் அது பயத்தை ஏற்படுத்துகிறது. அவர் உடனே உங்கள் காம விழிப்புணர்வை ஏற்படுத்தி விடுகிறார்.

காம உணர்வு அடக்கி வைக்கப்பட்ட மனிதரின் தொப்புள் காமத்தை தூண்டும் பிராந்தியங்களில் ஒன்றாக மாறிவிடுகிறது. பொதுவாக அது காமப்பிராந்தியம் அல்ல. காமத்தை அதிகம் அடக்கி வைக்கும்போதுதான் அவ்விதம் நேர்கிறது. அதிகச் சக்தியை எடுத்துச் செல்லும் திறன் பெற்ற அந்த காலியான சுரங்கப்பாதை காமத்தை சுமந்து செல்கிறது. எனவே அச்சம் ஏற்படுகிறது.

இரண்டாவது சாத்தியக்கூ என்னவென்றால், தொப்புளுக்குச் சற்றுப் பின்னால் இறப்பு மையம் உள்ளது. அதனால்தான் ஜப்பானி யர்கள் தற்கொலையை ஹரகிரி என்றார்கள். ஹர என்றால் தொப்புள் என்று பொருள். அதை காலங்காலமாக ஜப்பானியர்கள் அறிந்து வைத்திருக்கிறார்கள். அது சூட்சுமமான புள்ளி தொப்புளுக்குப் பின்னால் இருக்கிறது. கத்தியோ அல்லது அம்போ அந்த புள்ளியைத் தொட்டால் அவர் உடனே இறந்து விடுவார். எந்த வலியும் இல்லாமல், சித்திரவதையும் இல்லாமல் இறந்து விடுகிறார். மற்ற வகையிலான மரணம் நிறைய வேதனையுள்ளதாக இருக்கிறது. காரணம் தொப்புள் மரணத்துக்கு நெருக்கமாக அமைந்துள்ளது. தொப்புளுக்குப் பின்னால் அது உள்ளது. அப்படித்தான் இருக்கிறது. ஏனெனில், காமமே வாழ்க்கை. மரணமும், காமமும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள்.

தொப்புளில் இரண்டு சாத்தியங்கள் அமைந்திருக்கின்றன. வாழ்வும், மரணமும் அவையாகும். நீங்கள் வாழ்வை அடக்கி வைத்தால் உங்கள் தொப்புள் மிகவும் காமம் தூண்டும் பிரதேசமாக மாறிவிடும். அடக்கி வைக்கும் மனிதருக்கு அது பயத்தை ஏற்படுத்தி விடும். அழுத்தம் தரும் மனோநிலை உருவாகிறது. அல்லது தொப்புளின் பின்னால் மரணம் காத்திருக்கிறது. மரணத்தின் மீது நீங்கள் அதிகம் வெறுப்புக் கொண்டால், மரணம் பற்றிய பயம் கொண்டாலும்.... மனதை வலுக்கட்டாயமாக அடக்கி வைக்கும் மனிதர்களுக்கும் அவை நேர்கின்றன. இயல்பான வாழ்க்கை வாழும் மனிதர் சாவைக் கண்டு அஞ்சுவதில்லை. உண்மையில் மரணம்

என்பது அவருக்கு வாழ்வின் முடிவல்ல, வாழ்வின் உச்சமாகும். மரணம் வரும். அது வாழ்வின் எதிரி போல வருவதில்லை. இசை என்ற சங்கீதத்தின் ஆரோகணம் போல அது வருகிறது.

தனது வாழ்வை யார் முழுமையாக, விருப்பத்துடன் எவ்வித பயமுமின்றி வாழ்ந்தாரோ அவரை மரணம் அதிகாரப்பூர்வமாகவோ, தன்னிச்சையாகவோ எந்த பயத்தையும் ஏற்படுத்தி விடாது. பயத்தை பாதிரியார்கள் காலங்காலமாக உங்கள் உள்ளத்தில் விதைத்து வைத்திருக்கிறார். உண்மையில் மரணம் என்பது ஒரு பெரிய ஓய்வாக அமைகிறது. மரணம் என்பது வாழ்வின் உன்னதமான மலர்ச்சியாகும். அவர் மரணத்தையும் மகிழ்ந்து அனுபவிப்பார். மரணத்தைக் கொண்டாடவும் அவரால் இயலும்.

அதுதான் ஒரு திட்டமான அளவீடு ஆகும். ஒரு மனிதரால் தனது மரணத்தை அனுபவிக்கவும், கொண்டாடவும் முடிகிறது என்றால், அவர் சரியானபடி வாழ்ந்திருக்கிறார் என்பதை ஒரு காட்டு கிறது. கண்டறிய அது தவிர வேறு அளவீடு கிடையாது. நீங்கள் எப்படி வாழ்ந்தீர்கள் என்பதை உங்கள் மரணம் உறுதிப்படுத்துகிறது. கனி மரத்தின் தன்மையை உறுதிப்படுத்துகிறது. நீங்கள் ஒரு விருட்சம் என்றால், அதிலிருந்து கிடைக்கும் அற்புதமான கனி மரணமே ஆகும். நீங்கள் எவ்வாறு வாழ்ந்தீர்கள்? மகிழ்வுடனா? உங்கள் வாழ்வு பாடலும், கொண்டாட்டமும் நிறைந்து காணப்பட்டதா? பிறருக்கு நன்மை செய்யும் பிரார்த்தனையாக ஆசீர்வாதமாக அமைந்திருந்ததா? உங்களுக்கு உயிர் தந்த இயற்கைக்கு நன்றி கூறும் வகையில் அமைந் திருந்ததா? மரணம் என்பது உன்னதமான பரிசாக முழுமை நிலை மூலம் வந்து சேர்கிறது? நீங்கள் அற்புதமான பேரின்பம் பெறுவீர்கள். நீங்கள் மரணத்தை வரவேற்பீர்கள். நீங்கள் அதைப் பெறுவீர்கள். மரணத்தைத் தழுவிக் கொள்வீர்கள். மரணம் உங்களின் மேலான அன்புக்குரியதாக இருக்கும்.

எந்த ஒரு மனிதர் தனது காமத்தை அடக்கி வைக்கிறாரோ, வாழ்வை உள்ளே அடக்கி வைக்கிறாரோ அவர் சகலத்தையும் அடக்கி வைக்கிறார். எந்த முறையிலும் அவர் நிஜமான வாழ்வு வாழவில்லை. அவரால் மரணத்தை வரவேற்க இயலாது. அவரால் எப்படி முடியும்? அவர் வாழவே இல்லையே? விருட்சம் இன்னும் துளிர்க்கவில்லை. பிறகு எப்படி கனி கிடைக்கும்? அவர் மரணத்தை வரவேற்கும் வகையில் கனியவில்லை. அதனால்தான் பயம் ஏற்படுகிறது. "நான் இன்னும் வாழவே இல்லை. மரணம் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் நெருங்கி வருகிறது", என்று அச்சம் கொள்கிறார்.

உணர்ச்சிகளை அடக்கி வைக்கும் மனிதர் காமம் கண்டு அஞ்சு கிறார். உணர்ச்சிகளை அடக்கி வைக்கும் மனிதர் மரணம் பற்றி பயம் கொள்கிறார். அந்த இரண்டும் தொப்புளுடன் ஆழமான தொடர்புள்ளவை. உங்கள் தொப்புளை நீங்கள் அகற்றிவிட்டால் – பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் அவ்வாறு செய்ய முடியும் – அப்போதும் அந்த பிரச்சினை தீர்ந்து விடாது. எந்த மாற்றமும் ஏற்பட்டு விடாது. பிரச்சினை வேறு இடத்தை கண்டறிந்து குடியேறிவிடும். அது வேறு வடிகாலைத் தேடிக் கொள்ளும்.

எனவே பிரச்சினையை ஆழமாகக் கவனிக்க வேண்டும் என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். நோய்க்குறிகளை ஏமாற்றிவிட முடியாது.

பல வருடகாலமாக ஒருவர் தினமும் மதுச்சாலைக்குச் சென்று வரும் வழக்கம் உடையவராக இருந்தார். ஒரு பியரும், இரண்டு வெங்காய ஊறுகாய்களும் வேண்டும் என்று ஆர்டர் செய்வார். வெங்காய ஊறுகாய் வந்ததும் அவற்றைத் தனது காதுகளில் ஒட்ட வைத்துக் கொண்டு மது அருந்துவார். மதுச்சாலை பரிசாரகன் இச் செயலின் காரணத்தைக் கண்டறிய விரும்பினான். அவர் வந்து வழக்கம்போல வெங்காயம் கேட்டதும் பரிசாரகன், "வெங்காயம் இல்லை. காரட்தான் இருக்கிறது" என்றான்.

வாடிக்கையாளரான அவர், "பரவாயில்லை காரட்டையே கொண்டு வா" என்றார். பரிசாரகன் காரட்டை அவர் தனது காதுகளில் திணித்துக் கொண்டார். அதற்கு மேலும் பொறுமையுடன் இருக்க முடியாத பரிசாரகன், "ஏன் காரட்டை காதில் வைத்துக் கொள் கிறீர்கள்?" என்று கேட்டே விட்டான்.

அதற்கு அந்த வாடிக்கையாளர், "உன்னிடம் ஊறுகாய் வெங்காயம் இல்லை என்பதுதான் காரணம்" என்றார்.

வெளி வேஷங்களால் ஏமாற்றிவிட முடியாது. பிரச்சினையை ஆழமாகப் பாருங்கள். இல்லாதுபோனால் நீங்கள் கேள்விகள் கேட் பீர்கள். உலகில் முட்டாள் ஜனங்கள் நிறைய இருப்பதால் உங்களுக்கு அவர்கள் பதில்களைத் தருவார்கள். அந்த பதில்கள் உங்களுக்கு உதவி செய்யாது. அவை கூடுதல் பிரச்சினைகளை உருவாக்கவும் கூடும். பிரச்சினையைத் தெளிவாக ஒளிவு மறைவின்றி ஆழமாகக் கவனித் தறிய வேண்டும்.

எனவே நான் மீண்டும் சொல்கிறேன். ஒவ்வொருவருக்கும் தொப்புள் இருக்கிறது. ஒவ்வொருவரும் பயங்கள் இருக்கின்றன. இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர், ஜைனர், பௌத்தர் என்று உலகம் முழுவதிலும்

உள்ளவர்களுக்கு உணர்ச்சிகளை அடக்கி வைக்க வேண்டும் என்று கற்றுத் தரப்பட்டுள்ளது. அது ஒரு மோசமான செயல்.

கடந்த காலம் மரணப்படுக்கையில் இருக்கிறது என்பது நல்ல விஷயமாகும். நான் அதற்காக வருந்தவில்லை. கடந்த காலம் இறந்து கொண்டிருக்கிறது என்று மகிழ்ச்சியடைகிறேன். கடந்தகாலம் இறந்து போகும்போது ஒரு புதிய மனிதன் பூமிக்கு வந்து பிறப்பான். அந்த மனிதனால் மகிழ்ச்சியடைய இயலும். வாழ்வதற்கு அச்சம் கொள்வதில்லை. மறு உலகம் பற்றிச் சிந்திப்பதில்லை. கற்பனையில் சொர்க்கத்தைப் படைப்பதில்லை. எல்லா சொர்க்கங்களும் ஆபாசமானவை.

ஒரு மனிதன் காம இச்சையைத் தூண்டும் ஆபாசங்களில் ஆர்வம் கொள்வது எப்போது என்றால், உடலுறவு கொள்ள நிஜமான மனிதர்கள் கிடைக்காதபோதுதான் அது நேர்கிறது. உங்களால் ஒரு ஆணையோ அல்லது பெண்ணையோ தேடிக் கொள்ள முடியவில்லை என்றால் ஆபாசங்களில் ஆர்வம் கொள்வீர்கள். உண்மைக்கு மாற்றாகக் கற்பனை அங்கு இடம் பிடிக்கும். எனவே, எல்லா சொர்க்கங்களும், மேலுலகங்களும் இப்படிப்பட்ட ஆபாசமானவை. நல்ல வாழ்க்கை வாழாத மனிதர்களின் மனதில் இருந்து அவை வெளிப்பட்டவை. அவர்களுக்கு இந்த பூமியில் அழகு தெரியவில்லை. மரணத்திற்குப் பிறகு நீங்கள் வெகுமதி பெறுவீர்கள் என்ற ஒரு நம்பிக்கை மட்டுமே இருக்கிறது.

பயம் அங்கு தங்கியிருக்கிறது. முதலாவது அச்ச் காமம் பற்றியது. காமம் என்பது பிறப்பு, இறப்பு சம்பந்தப்பட்டது. இரண்டாவது அச்சம் மரணம் பற்றியது. மரணம் என்பது இறுதி முடிவாகும். துவக்கம் தொடங்கி முடிவு வரையிலான கதை மிகவும் சிறியது. உங்கள் வாழ்வின் மூன்றில் ஒரு பகுதி தூக்கத்தில் கழிந்துவிடுகிறது. மூன்றில் இரண்டாவது பகுதி அலுவலகப் பணிகளில் கடைகளில், தொழிற்சாலைகளில் கழிகிறது. ஒருவர்மீது ஒருவர் குற்றம் சாட்டல், ஒருவரை ஒருவர் துன்புறுத்துதல், முட்டாள்தனமான காரியங்களில் கழிந்து விடுகிறது.

எத்தனை நாட்கள் நீங்கள் நிஜமாக வாழ்ந்துவிட முடியும்? உங்கள் இருபத்து நான்கு மணி நேரத்தைக் கவனியுங்கள். எத்தைன நிமிடங்கள் அல்லது வினாடிகள் நீங்கள் நிஜமாக வாழ முடியும்? கொண்டாட்டத்துடன் இருக்க முடியும்? அதற்கு எங்கே நேரம் இருக்கிறது? எனவே நீங்கள் அதை தள்ளிப்போடத் துவங்குகிறீர்கள். "நாளைக்கு நான் வாழ்வேன்". நாளைக்கு மரணம்

மட்டுமே வரும். இதுவரை நீங்கள் வாழவில்லை. அந்த வாய்ப்பு கைநழுவிப் போய்க் கொண்டிருப்பதால், பேரச்சம் எழுகிறது.

ஆயிரத்தொரு வழிகளில் அந்த அச்சம் வெளிப்படுத்திக் கொள்கிறது. சிலர் தங்கள் தொப்புளைத் தொடுவதற்கு அஞ்சுகிறார்கள். சிலர் தங்கள் உடலைப் பார்க்க அஞ்சுகிறார்கள். சிலர் காதலுறவு கொள்ளப் பயப்படுகிறார்கள். சிலர் போதுமான உணவு உண்ணவில்லையோ என்று பயந்து ஏதாவது ஒன்றை வயிற்றில் திணித்துக் கொண்டே இருக்கிறீர்கள். போதுமான சக்தி இல்லாவிட்டால் உலகில் தன்னை எப்படிப் பாதுகாத்துக் கொள்ள இயலும் என்று சிலர் பயப்படுகிறார்கள்? போதுமான பணம் இல்லாவிட்டால் உலகில் எப்படி வாழ்வது என்று சிலர் அச்சப்படுகிறார்கள். இப்படி அச்சம் நீண்டு கொண்டே போகிறது. மக்களை கவனித்துப் பாருங்கள். எல்லா விதமான அச்சங்களம் அவர்கள் வாழ்வின் மீது ஆதிக்கம் செலுத்துகின்றன.

பிரபல துப்பறிவாளர் ஷெர்லக் ஹோம்ஸ் சொர்க்கத்திற்குச் சென்றார். தேவதைகள் வந்து அவரை வரவேற்றன. ஆண்டவர் தனது சிம்மாசனத்திலிருந்து இறங்கி வரவேற்றார். "ஹோம்ஸ்! இங்கே ஒரு குழப்பம் ஏற்பட்டு விட்டது. அதை நீங்கள் தீர்த்து வைக்க வேண்டும். ஆதாமும் ஏவாளும் காணாமல் போய்விட்டார்கள். பல யுகங்களாக அவர்களை யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. எங்களுக்காக அவர்களைக் கண்டறிந்து உதவ முடியுமா?

துள்ளியெழுந்து விரைந்த ஹோம்ஸ் கூட்டத்திலிருந்த இரண்டு தேவதூதர்களை ஆண்டவர் எதிரே இழுத்துவந்து நிறுத்தினார். பயத்துடன் அவர்கள் திகைத்துப் போயிருந்தார்கள். "காணாமல் போனவர்கள் இவர்கள்தான்" என்றார்.

ஆதாமும், ஏவாளும் ஒப்புக் கொண்டனர். "நாங்கள் இங்கிருந்து சலித்துப் போய்விட்டோம். புதிதாக வரும், கையொப்பம் கேட்கும் தேவதைகளுடன் சேர்ந்து கொண்டு மாறுவேடத்தில் தங்கியிருந்தோம். பலநூற்றாண்டுகளாக மறைந்திருந்த எங்களை இந்த புத்திகூர்மை யுள்ள மனிதர் கண்டுபிடித்துவிட்டார்.

ஆண்டவர் வியப்புடன், "அதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?" என்று ஹோம்ஸிடம் கேட்டார்.

"கடவுளே! அது ஆரம்பப் பாடம் போன்றது! இங்கிருப்பவர்களில் தொப்புள் இல்லாதவர்கள் அவர்கள் இருவர் மட்டும்தான்" என்றார் ஹோம்ஸ்.

அவர்கள் இப்போதும் பயத்துடன் இருக்கிறார்கள். ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். தொப்புள் அவர்களுக்கு இல்லை. அவர்களுக்கு எப்படி இருக்க முடியும்? கடவுள் அவர்களை களிமண்ணால் படைத்து உயிர் ஊட்டியிருந்தார். அவர்கள் பிறந்துவரவில்லை. தாயின் கர்ப்பத்தில் ஒன்பது மாதங்கள் இருக்கவில்லை. அப்புறம் எப்படி அவர்களுக்குத் தொப்புள் இருக்கும்? அவர்கள் இப்போதும் பயத் துடன் இருக்கிறார்கள். பயந்து ஒளிந்துகொண்டிருக்கிறார்கள்.

தொப்புள் இருந்தாலும், இல்லாவிட்டாலும் உங்கள் பயந்த மனதின் உள்ளே பார்வையை ஓடவிடுங்கள். ஏன் இப்படி மிதமிஞ்சி அச்சம் கொள்கிறீர்கள்? இவ்வாறு உங்களுக்கு நஞ்சூட்டியது யார்? பாதிரியார்களும், அரசியல்வாதிகளும் உங்களை பயப்படுத்தி விட்டார்கள். உங்கள் பயத்தைப் பயன்படுத்தி அவர்கள் வாழ் கிறார்கள். உங்கள் பயத்தைப் பயன்படுத்தி அவர்கள் வாழ்கிறார்கள். அவர்கள் உங்களை ஏமாற்றுகிறார்கள். அவர்களால் உங்களை அச்சுறுத்த முடியும் என்பதால் அவ்வாறு செய்கிறார்கள்.

ஒரு மனிதனுக்குப் பயமூட்டுவதற்குச் செய்யப்படும் முதல் அடிப்படை விஷயம், எது தவறானது என்று சொல்லித் தருவதாகும். தவறானதைச் செய்து பார்க்க ஆசை ஏற்படும். அது இயல்பான ஒன்று. அப்போது அவர் பிடிபடுகிறார். சில இயல்பான விஷயங்களில் பாவச் செயல்கள் என்று அவரிடம் சொல்லப்படுகிறது. அதைச் செய்தால் நரகத்தில் விசப்பட நேரிடும் என்று பயமூட்டப்படுகிறது. நரகம் பற்றிய பயம் காரணமாக சில தனது இயல்பான காரியங்களையும் அவர் நிறுத்தி விடுகிறார். இவ்வாறு தடை செய்து நிறுத்துவதின் வாயிலாக நரகம் சிருஷ்டிக்கப்படுகிறது. அவர் பயந்து போனவராகிறார். அவரைக் கண்டே அவர் அஞ்சுகிறார். தன்னையே அவரால் நம்ப முடிவதில்லை. ஓய்வாக ஒருநாள் இருக்க நேரிட்டால் செய்யக் கூடாது என்று சொன்ன காரியத்தைச் செய்து விடுவோம் என்று அவர் அறிவார்.

அப்படி அவர் செய்தால், குற்ற உணர்வு கொள்கிறார். மீண்டும் வலையில் அகப்பட்டுக் கொள்கிறார். அவ்வாறு அவர் செய்யாதிருந் தால் துயரப்படுகிறார். தனக்குத் தேவையான இயல்பான ஒன்றைச் செய்யாது தவிர்த்துவிட்டது குறித்து வருந்துகிறார்.

ஆழமான ஒரு சதித்திட்டத்துடன் பாதிரியார்களும், அரசியல் வாதிகளும் மனித இனத்தின் மீது ஆதிக்கம் செலுத்துகிறார்கள். மனிதர் களிடம் காணப்படும் அந்த இயல்பான செயல் தவறானது என்று பயமுறுத்துகிறார்கள். நல்லவன், கெட்டவன் என்று மனிதனை இரண்டாகப் பிரித்து விடுகிறார்கள். துறவி, பாவி என்று பாகுபடுத்தி விடுகிறார்கள். ஒருமுறை மனிதனை நீங்கள் பிளவுபடுத்திவிட்டால்

அவனை நீங்கள் அதட்டி ஆட்சி செய்யலாம். பிரித்தாலும் கலை என்பது இன்றுவரை ஒரு ரகசியமாக இருந்து வருகிறது. மனிதன் பிரிக்கப்பட்டிருக்கிறான். பிளவுபட்டுக் கிடக்கிறான்.

உங்களிடமுள்ள பல விஷயங்கள் தவறானவை என்று கூறப் படும்போது குற்றஉணர்வு கொள்கிறீர்கள். அவை தவறானவை என்று நினைப்பதால் மட்டும் அவற்றை உதறிவிட முடிவதில்லை. முடிந்த வரை அவற்றை மனதிற்குள் அடக்கி வைக்கிறீர்கள். அப்படி அடக்கி வைக்கும்போது நீங்கள் மேலும் மேலும் மோசமாகிறீர்கள். அவற்றை அடக்கி வைக்கும்போது மேலும் மேலும் மதிப்பிழந்து போகிறீர்கள். உங்கள் மீது கழிவிரக்கம் கொள்கிறீர்கள். நீங்கள்தான் உலகிலேயே மோசமான பாவி என்று நினைக்கிறீர்கள். நீங்கள் நரகத்தில் வருந்த நேரிடும் என்று பலதடவை உங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. நரகம் பற்றி நீங்கள் யோசிக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் அது உங்கள் வேரில் இருக்கிறது. பாதிரியார்களையும், அரசியல்வாதிகளை யும் பின்பற்றினால் உங்களுக்கு சொர்க்கம் பரிசாகக் கிடைக்கும் என்று சொல்லப்பட்டுள்ளது.

இவை மிருகங்களைப் பழக்க உபயோகிக்கும் அடிப்படைப் பயிற்சிகள். இதுவே ஸ்கின்னேரியன் மனோதத்துவமாகும். யாராவது ஒருவரின் நடத்தையில் மாற்றம், மேம்பாடு ஏற்பட வேண்டும். நீங்கள் விரும்பினால் அதற்கு இந்த இரண்டு தந்திரங்கள் பயன்படுகின்றன. எதையாவது அவர் செய்ய வேண்டும் என்று விரும்பினாலும், அவர் செய்த ஒன்றுக்குப் பரிசளிக்க விரும்பினாலும், எப்போதாவது ஒன்றைச் செய்யாதிருந்தாலும், அவருக்கு தண்டனை கொடுங்கள். இவ்வாறு தான் எலிகள் பயிற்றுவிக்கப்படுகின்றன. மிருகக்காட்சி சாலைகளில் யானைகள் இவ்விதம்தான் பயிற்றுவிக்கப்படுகின்றன. அதையே அவர்கள் மனிதர்களுக்கும் செய்கிறார்கள்.

பாதிரியார்களும், அரசியல்வாதிகளும் மனித இனத்தை மோசமாக அவமானப்படுத்துகிறார்கள். அப்படிப்பட்ட மனிதர்களை நாம் இன்னும் சகித்துக் கொண்டு இருப்பது வியப்பளிக்கிறது. மனிதர்களை அவர்கள் எலிகளைப்போல நடத்துகிறார்கள். அதுவே மிகப்பெரிய அவமானமாக இருந்து வருகிறது.

எலிகளை வைத்துச் சோதனை செய்யும் மனோதத்துவ நிபுணர்கள் மீது கோபம் கொள்ள வேண்டாம். அந்த பரிசோதனைகள் வாயிலாக மனதர்கள் பற்றிய தீர்மான முடிவுகள் கிடைக்கின்றன. அவர்கள் மீது கோபப்பட வேண்டாம். மனோதத்துவவாதிகள் இந்த அரங்கிற்கு வருவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அவ்வாறுதான் நடந்து கொண்டிருக்கிறது. அவர் மிகவும் ஒரு புதிய

வரவு. ஆனால் மனிதன் மனோதத்துவம் ஒருவித லௌகீகத் தந்திரம் மூலம், பழக்கவழக்கங்கள் சார்ந்த தந்திரம் மூலம் அதிகாரம் செலுத்தப் படுகிறது. நரகம் பற்றிய பயத்தை மனிதனிடம் ஏற்படுத்துவதே அந்த தந்திரமாகும். "இதைச் சாப்பிடு. இதைச் சாப்பிடாவிட்டால் நீ சொர்க்கம் செல்ல இயலாது. இதைச் சாப்பிடாதே! இதைச் சாப்பிட்டால் நீ நரகத்திற்குப் போவாய்" என்று மனிதர்கள் மிரட்டப்படுகிறார்கள்.

சிறிய விஷயங்களிலும் மிரட்டல் விடுக்கப்படுகிறது. புத்தமத நூல்களில் முப்பத்து மூவாயிரம் விதிமுறைகள் துறவிகளுக்கு இருக் கின்றன என்று உங்களுக்குத் தெரியுமா? முப்பத்து மூவாயிரம் விதி முறைகள்! அவற்றை நினைவில் வைத்துக் கொள்வதே முடியாத காரியம். வாழ்க்கை நடத்துவதற்கு முப்பத்து மூவாயிரம் விதிமுறை களைப் பின்பற்ற வேண்டும். இந்த சிறிய வாழ்நாளில் முப்பத்து மூவாயரம் விதிமுறைகள். அவற்றைப் பின்பற்ற இயலாது போவதால் குற்ற உணர்வுக்கு ஆட்படுகிறீர்கள். பல்வேறு விதிமுறைகளை நீங்கள் தவறவிட்டு விடுவதைக் காண்கிறீர்கள். எல்லா விதிமுறைகளையும் உங்களால் பின்பற்ற இயலாது. எனவே நரகம் நிச்சயம்.

நரகம் பற்றிச் சிறிது யோசித்துப் பாருங்கள். துறவிகள் என்று உங்களால் அழைக்கப்படும் நபர்கள் எல்லாம் சொர்க்கம் நரகம் பற்றி கற்பனையான செய்திகளில் மிதமிஞ்சியவர்கள். எல்லா வகையான சித்திரவதைகளையும் நரகத்தில் உருவாக்கிவிட்டார்கள். அடால்ஃப் ஹிட்லர் எதையும் புதிதாக உருவாக்கி விடவில்லை. அடால்ஃப் ஹிட்லர் மதநூல்களில் இருந்துதான் ஜனங்களை எப்படிச் சித்திரவதை செய்வது என்று கற்றுக் கொண்டிருக்க வேண்டும். உங்கள் துறவிகள் நரகம் பற்றிச் சொல்லியிருந்ததை அவர் சற்று மேம்படுத்தினார். நிஜமான நரகத்தை அவர் பூமியில் உருவாக்கினார்.

உங்கள் சொர்க்கம் பற்றி நினைத்துப் பாருங்கள். அங்கு எல்லா விதமான சுகங்களும் இருக்கின்றன. அந்த எல்லா சுகங்களும் பூமியில் கிடைக்கின்றன. அவற்றை நீங்கள் அனுபவிப்பதைப் பாதிரியார்கள் குறை கூறுகிறார்கள். இங்கு மது அருந்துதல் ஒரு பாவம். சொர்க்கத்தில் அது **ஃபிர்தவ்ஸ்** என்று துறவிகளுக்கு வெகுமதியாகத் தரப்படுகிறது. சொர்க்கத்தில் மதுச்சாலையைத் தேடிச் செல்ல வேண்டியதில்லை. அங்கே மது ஆறாக ஓடுகிறது. நதியாக ஓடுகிறது! நீங்கள் குடிக்க வேண்டாம். நீந்திக் களிக்கலாம். அதில் மூழ்கிப் போகலாம்.

இங்கே அழகான பெண்ணைப் பார்ப்பது பாவச் செயல். பெண் கவர்ச்சிகரமாக இருப்பது பாவம். உங்கள் துறவிகள் சொர்க்கத்தில் என்ன செய்கிறார்கள்? அழகிய பெண்களை அனுபவிக்கிறார்கள். பூமியில் உள்ள பெண்களைக் காட்டிலும் சொர்க்கத்தில் உள்ள அந்தப்

பெண்கள் மிகவும் அழகானவர்கள். அவர்கள் நித்திய கன்னிகைகள். அவர்கள் வயது பதினெட்டில் அப்படியே நின்றுவிட்டது. வயதான பெண்கள் யாரையும் சொர்க்கத்தில் காண முடியாது. என்னால் கண்டறிய முடியவில்லை. நான் எல்லா மதநூல்களையும் புரட்டிப் பார்த்தேன். வயதான பெண் பற்றிய ஒரு குறிப்பையும் பார்க்க முடிய வில்லை. எல்லோரும் பதினெட்டு வயதுடைய மங்கையர்களாகவே இருக்கிறார்கள். பல நூற்றாண்டுகள் கடந்து விட்டன. ஆனாலும், அவர்கள் பதினெட்டு வயதிலேயே நிற்கிறார்கள்.

அவர்கள் தங்கநிற மேனியுடையவர்கள். அவர்களுக்கு வியர்வை வராது. அவர்களுக்கு வாசனைத் திரவியங்கள், துர்நெடியை மறைக்கும் பொருட்கள், அழகு சாதனப் பொருட்கள் எவையும் தேவையில்லை. அவர்கள் உடல் தங்கம். கண்கள் வைரங்கள். என்றும் இளமை அவர்களுக்கு இருக்கிறது. ஆனால் அவர்கள் துறவிகளுக்கு மட்டுமே கிடைப்பார்கள் என்பது நினைவிருக்கட்டும்! நீங்கள் ஒரு பாவியாக இருந்தால்...... பாவி என்பவர் யார்? பூமியில் ஒரு பெண் மீது மோகம் கொள்பவன் பாவி. அன்பை உதறிவிட்டு, தன்னை வருத்திக்கொண்டு இமயம் சென்று முள் படுக்கையில் படுப்பவர் துறவி என்று மதிக்கப்படுகிறார்.

புகழ்பெற்ற துறவி ஒருவர் இறந்து போனார். மறுநாள் அவரது தலைமைச் சீடர் இறந்து போனார். குரு இல்லாமல் சீடரால் வாழ முடியவில்லை. "எனது குரு ஆறாக ஓடும் மதுவில் நீந்திக் கொண் டிருப்பார். அழகான பெண்கள் அவருக்குக் கிடைத்திருப்பார்கள். காரணம் அவர் ஒரு சிறந்த பக்திமான்" என்று எண்ணிக் கொண்டார்.

அங்கு அப்படித்தான் இருந்தது! சீடர் சொர்க்கத்தை அடைந்த போது ஒரு தங்க மரத்தடியில் குரு பூமியில் இருப்பதுபோலவே நிர்வாணமாக உட்கார்ந்திருந்தார். மரத்தின் இலைகள் தங்கத்தாலும், மலர்கள் வைரத்தாலும், மரகதக் கல்லாலும் இழைக்கப்பட்டிருந்தன. ஹாலிவுட் நடிகை மார்லின் மன்ரோ சாயலில் ஒரு அழகான பெண் அவரை அணைத்துக் கொண்டிருந்தார்.

சீடர் குருவின் காலில் விழுந்து வணங்கினார். "எனது ஆண்டவரே! நீங்கள் வெகுமதி பெறுவீர்கள் என்று எனக்குத் தெரியும். எப்படி கிடைக்காமல் போகும்? உலகில் நீங்கள் அதிகம் சிரமப்பட்டு விட்டீர்கள். எந்த ஒரு பெண்ணையும் அங்கே தொட்டதில்லை. எந்தப் பெண்ணையும் பார்த்ததில்லை. எந்த பெண்ணையும் காதலித்தது இல்லை. குகைகளில் சென்று தஞ்சம் புகுந்து கொண்டீர்கள். அந்த பக்திக்கு இப்போது வெகுமதி கிடைத்திருக்கிறது. அழிவற்ற நித்தி யத்தில் வாழ்ந்து அனுபவிக்கலாம்...

குரு சீடரைப் பார்த்து, "முட்டாளே! பேச்சை நிறுத்து! என்ன நடக்கிறது என்று நீ புரிந்துகொள்ள வில்லை. இந்த பெண் எனக்குக் கிடைத்த வெகுமதியல்ல. அவளுக்கு அளிக்கப்பட்ட தண்டனையாக நான் இருக்கிறேன்" என்றார்.

உணர்ச்சிகளை அடக்கி வைத்துள்ள மனிதர்கள் ஏற்படுத்திய கற்பனைதான் சொர்க்கம், நரகம் போன்றவையாகும். உங்களுக்கு முட்டாள்தனமானகக் கற்றுத் தரப்பட்டுள்ளது. அவ்விதம் நீங்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். 'ஆன்மீகம்' எனப்படும் அந்த கல்வியால் நீங்கள் உள்முகச் சச்சரவில் தடுமாறுகிறீர்கள். அந்த உள்முகச் சச்சரவு பயம், பேராசை போன்றவற்றை ஏற்படுத்துகிறது. அந்த பயம், பேராசைகளுக்கு ஒரு வடிகால் வேண்டும். எங்கு அதைக் கண்டு பிடித்தாலும் அது பொருத்தமற்று இருக்கிறது. ஒரு வடிகாலை நிறுத்தினால் வேறு இடத்தில் இன்னொன்று வெளிப்படுகிறது. வடிகாலை நிறுத்துவதற்குப் பதிலாக அதன் ஆணிவேரை, அதன் காரணத்தை கண்டறிய வேண்டும்.

நீங்கள் உங்களுக்குள் பிரிவுபட்டுக் கிடந்தால் பிளவுபட்டு நின்றால், அது நான்தான் என்று உங்களை உங்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. பாதிரியார்களாலும், நீங்கள் அரசியல்வாதிகளாலும் செய்யயப்பட்டு வந்தால் பயம், நடுக்கமும் கொண்டவராக இருப் பீர்கள். நீங்கள் நடுங்கியபடி இருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். ஆழமான பயத்தில் உள்ள ஒருவரை எளிதில் அதிகாரம் செய்ய முடியும். ஒரு வியாபாரப் பொருள் போலாக்கி வசப்படுத்த இயலும்.

பயந்து கிடக்கும் ஒருவர் எளிதில் யாருக்கும் அடிமைப்பட்டு விடத் தயாராக இருக்கிறார். உங்கள் எல்லா பயங்களையும் நீங்கள் உதறிவிட்டு தருணத்தில்...... அவற்றை நீங்கள் உதறிவிட முடியும். காரணம் அவை எல்லாம் செயற்கையாக உருவாக்கப்பட்டவை. அவை உங்கள் மீது திணிக்கப்பட்டவை. அவை உங்கள் இயல்பான அம்சங்களில் ஒன்றல்ல. எனவே அவற்றை எளிதாக உதறிவிட முடியும். உங்கள் பயங்களை உதறித் தள்ளும் தருணத்தில் நீங்கள் ஒரு பிளவுபடாத ஒற்றை நிலையை அடையத் துவங்குகிறீர்கள். நீங்கள் ஒன்றுபடுகிறீர்கள். நீங்கள் தனிமனிதராகிறீர்கள்.

தனிமனிதர் என்பதன் அர்த்தத்தை நினைவில் வையுங்கள். பிரிக்க இயலாதவரே தனிமனிதர். தனிமனிதர் என்ற வார்த்தையின் ஆழமான அர்த்தம் அதுதான். பிரிக்க முடியாதவராக நீங்கள் இன்னும் மாறவில்லை. நீங்கள் தனிமனித நிலையை அடைய வேண்டும்.

அதற்கான வழி உங்கள் மீது திணிக்கப்பட்டுள்ள பொய்யான பிரிவு களை உதறுவதே ஆகும். பிரிக்கமுடியாத தனிமனிதராக நீங்கள் மாறும் போது உங்கள் பயங்கள் எல்லாம் மறைந்துவிடும்.

பேருந்து ஓட்டுனர் ஒலி எழுப்புகிறார். ஆனால் நீங்கள் சாலை யின் நடுவே நடந்து செல்கிறீர்கள் என்பது மாதிரியான அர்த்தம் எதையும் தரும் வகையில் பயம் விலகல் என்று நான் சொல்லவில்லை. அப்படி நடந்து செல்வது பயமற்ற தன்மையல்ல. அது முட்டாள்தனம். பாம்பு உங்களைக் கடந்து செல்லும்போது அலட்சியாக இருப்பதை பயம் விலகிய நிலை என்றும் நான் கூறவில்லை. அதுவும் முட்டாள் தனம்தான். அப்போது பயப்படுவதுதான் புத்திசாலித்தனம். பாம்பு வரும் பாதையிலிருந்து நீங்கள் துள்ளிக் குதித்து விலகவிட வேண்டும். அது அறிவுள்ள செயல். அப்போது ஏற்படும் பயம் கணக்கில் சேராது. அந்த பயம் பயன்தருவதாகும். அது உங்களைப் பாதுகாக்கிறது. எனவே அது உங்கள் நண்பன்.

தொப்புளைத் தொடுவது பற்றிய பயம், காதல் கொள்ளப் பயம், தனித்திருக்கப் பயம், அமைதியாக உட்கார்ந்திருக்க அச்சம், கூட்டத் தினருடன் கலந்து பழக அச்சம், தனியறையில் இருக்கப் பயம், விமானப் பயணம் மேற்கொள்ள அச்சம், தண்டிக்கப்பட்டவராக இருப்பது போன்று சதாகாலமும் அச்சப்படாமல், உலகம் உங்களுக்கு எதிராக உள்ளது போன்ற பயம். இதுபோன்ற எல்லா பயங்களும் விலகிவிடும். இயல்புக்கு மாறான பயங்கள் விலகிவிடும். நியாயமான பயங்கள் இருப்பதில் தவறில்லை.

ஓ'ஹாரா தனது வீட்டின் அருகே இருந்த மதுச்சாலையில் மது அருந்திவிட்டுப் பேசினார். "நான் எதற்கும் பயப்பட்டதில்லை" என்று பெருமையுடன் பேசினார்.

"ஓ! அப்படியா!" என்றார் பக்கத்தில் இருந்த ஒரு வாடிக்கை யாளர்.

"ஆம்! அப்படித்தான்! ஃபுளோரிடாவில் வீசிய சூறாவளிகளில் பயணம் செய்திருக்கிறேன். மத்திய மேற்குப் பகுதிகளின் சுழல் காற்றைக் கண்டிருக்கிறேனே். மிஸிஸிப்பி நதி வெள்ளப் பெருக்கைப் பார்த்திருக்கிறேன். லாஸ் ஏஞ்ஜெலிஸ் நிலநடுக்கங்களைப் பார்த்திருக் கிறேன். இவை எதுவும் என்னை பயம் கொள்ள வைத்ததில்லை. அது மட்டுமின்றி நான் இரண்டாம் உலகப் போரில், கொரியா யுத்தத்தில், வியட்னாம் சண்டையில் எல்லாம் பங்கு கொண்டிருக்கிறேன். எதுவும் எனக்கு அச்சம் தரவில்லை" என்று கூறிவிட்டு மேலும் ஒரு வாய் மதுவை உறிஞ்சினார்.

"ஓ, ஹாரா! உங்கள் மனைவி தெருவில் வந்து கொண்டிருப்பதை நான் பார்த்தேன்" என்றார் அவரது மதுச்சாலை நண்பர் ஒருவர்.

"ஐயோ!" என்று புலம்பியபடி அவர் தரையில் மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்யத் துவங்கினார்.

யுத்த களம் நோக்கிச் செல்ல நீங்கள் அச்சப்படாது இருக்கலாம். புலியுடன் சண்டையிடவும் பயம் இல்லாது இருக்கலாம். ஆனால் உங்கள் மனைவியைக் கண்டு அச்சமடைகிறீர்கள். உங்கள் கணவரைக் கண்டு பயப்படுகிறீர்கள். உங்கள் குழந்தைகளைக் கண்டு பயம் கொள்கிறீர்கள். பெற்றோரைக் கண்டு அச்சம் அடைகிறீர்கள். அது சோகமான விஷயம்தான். ஆனாலும் நாம் அப்படித்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமது உறவுமுறைகள் எல்லாம் பயத்தை அடிப் படையாகக் கொண்டவை. தனது மனைவியை அச்சப்படுத்தாது போனால் தான் நிஜமான ஆண் அல்ல என்று கணவன் நினைக்கிறான். தனது கணவரைப் பயமுறுத்தாது இருந்தால் தனது அதிகாரம் நிலைக்காது என்று மனைவி நினைக்கிறாள். எல்லாம் அதிகாரம் சார்ந்த அரசியல்தான்.

இயல்பாகவே ஆண் தோல்வியாளனாக இருக்கிறான். ஆண் சந்தைக் கடையில் சண்டையிட வேண்டியிருக்கிறது. நிறையப் போட்டி யாளர்கள் இருக்கிறார்கள். நிறையப் போட்டிகள் இருக்கின்றன. ஒருவர் குறல்வளையை ஒருவர் பிடிக்கிறார்கள். ஒருவர் நாள் முழுவதும் போராடிவிட்டு சலித்து வீடு திரும்புகிறார். மனைவி மலர்ச்சியுடன் இருக்கிறாள். நாள் முழுவதும் அவள் கணவர் வீடு திரும்பக் காத்திருக்கிறாள். கணவன் சண்டையிடும் நிலையில் இல்லை. ஏற்கெனவே அவன் தளர்ந்து போயிருக்கிறான். அவனுக்கு ஓய்வும், அமைதியும் தேவை. காரணம் மறுநாள் மீண்டும் சந்தைக் கடையில் சண்டை ஆரம்பமாகிவிடும். வீட்டில் மனைவி நாள் முழுவதும் காத்திருக்கிறாள். அவள் கோபம் அதிகரிக்கிறது. ஏமாற்றம் அதிகரிக்கிறது. அதற்கு வடிகால் இல்லை. எனவே கணவன் மீது பாய்கிறாள். எந்த ஒரு சாக்குப்போக்கு கிடைத்தாலும் சண்டை துவங்கி விடுகிறது. கணவன் பின்வாங்கிச் சமாதானமாகிப் போகிறான்.

பெண் கையாளும் வழிமுறைகள் சூட்சுமம் நிறைந்தவை. அவள் அழுவாள், கதறுவாள், உணவு சமைத்து வைக்கமாட்டாள். அல்லது உணவில் அதிகம் உப்பைப் போட்டு விடுவாள். அவளது வழிமுறைகள் மிகவும் நுட்பமானவை. நாள் முழுவதுமான சச்சர வுக்குப் பிறகு மேற்கொண்டு சண்டை வேண்டாம் என்று கணவன் நினைக்கிறான். எதுவாக இருந்தாலும் சரி என்று சொல்லிச் சமாதான மாகிவிட நினைக்கிறான். அதனால்தான் எல்லா கணவர்களும்

மனைவிக்கு அடங்கியவர்களாக இருக்கிறார்கள். மனைவிக்கு அடங்காத கணவன் வெகு அபூர்வம். அதுதான் இயல்பான சூழ்நிலை.

ஒரு மனிதர் தலைவிரி கோலமாக நடைபாதையில் தள்ளாடிய படி செல்வதைக் கண்ட காவல்துறைக் கண்காணிப்பு வாகனம் திரும்பி வந்தது. அவன் உடலில் ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. ஆடைகள் கிழிபட்டிருந்தன. அவன் அதிர்ச்சியில் உறைந்து போயிருந்தான்.

"அதிகாரியே! எனக்கு உதவி செய்யுங்கள்" என்று அவன் கெஞ்சினான்.

வாகனத்திலிருந்து குதித்து வெளியே வந்த அதிகாரி, "என்ன நடந்தது?" என்று கேட்டார்.

"நான் அடிபட்டுப் போனேன். அவள் எனது பணம், கார் எல்லாவற்றையும் எடுத்துச் சென்று விட்டாள்."

"யார் அது?"

"அந்த அமேஸான்தான்."

"உங்களை இந்த நிலைக்கு ஆளாக்கியது ஒரு பெண்ணா?"

"ஆமாம்."

"அந்த பெண்ணின் அங்க அடையாளம் பற்றிச் சொல்ல முடியுமா?"

அந்த மனிதர் காவலரின் பக்கம் தனது பார்வையைத் திருப்பினார். "அவள் ஐந்தடி பத்தரை அங்கல உயரம். உடல் எடை இருநூறு பவுண்டுகள். கருநிறக் கூந்தல். தலையின் பின்புறம் நரைத் தீற்றல் தெரியும். அவள் அணிந்திருந்த காலணியின் அளவு பத்து சைஸ். வலது தோளில் ஒரு மச்சம் இருக்கிறது."

அவள் காலணியின் அளவு உட்பட அற்புதமான முறையில் அங்க அடையாளம் சொல்லி விட்டீர்கள். இது எப்படி முடிந்தது?"

அந்த மனிதர் தலையைக் குனிந்து கொண்டு, "அவள் என் மனைவி" என்றார்.

கடந்த காலங்களில் குழந்தைகள் பெற்றோருக்கு பயப்பட்டன. இப்போது சக்கரம் திசைமாறிவிட்டது. பெற்றோர் குழந்தைகளைக் கண்டு அஞ்சுகிறார்கள். முன்பு மாணவர்கள் ஆசிரியரைக் கண்டு பயப்பட்டார்க்ள. இப்போது விஷயம் மாறிப்போய் விட்டது. ஆசிரியர் களும், பேராசிரியர்களும் மாணவர்களைக் கண்டு அச்சப்படுகிறார்கள். பயம் என்பது இவ்விதமாகவோ அல்லது அவ்விதமாகவோ அமைகிறது.

ஒரு மனிதர் தன்னை உணர்ந்து ஒருங்கிணைப்பு செய்து கொண்டால், அவர் தனி மனிதராகிறார். பயத்திலிருந்து விடுபடுகிறார். பயப்படாது இருக்கும் மனிதர் பிறரை அச்சப்பட வைக்கவும் மாட்டார். அவர் அச்சமற்று இருப்பதுடன் பிறர் அச்சப்படக் காரணமாகவும் அமைய மாட்டார்.

அதனால்தான் துறவிகள் என்பவர்கள் எல்லாம் பெயரளவுக்குத்தான் என்று நான் கூறுகிறேன். இன்னும் அவர்கள் பயத்திலிருந்து விடுபடவில்லை. இன்றுவரை அவர்கள் உங்களை பயப்பட வைத்துக் கொண்டிருக்கிறார்கள். பயத்திற்கு அப்பாற்பட்டவராக இருக்கும் எந்த ஒரு மனிதரும் மற்றவர்களைப் பயமுறுத்த மாட்டார். யார் ஒருவரையும் அச்சப்பட வைப்பது சமூகத்திற்கு நஞ்சூட்டுவது போன்றதாகும். அது மனிதத்தன்மையற்ற செயலாகும்.

எதற்காகவும் நான் உங்களை அச்சுறுத்துவது கிடையாது. ஒரு சிறிய காரியம் நீங்கள் நரகத்திற்குப் போவீர்கள் என்று கூற மாட்டேன். உங்களை பேராசை கொண்டவராகவும் மாற்ற மாட்டேன். காரணம் பயமும், பேராசையும் ஒன்று சேர்ந்திருப்பவை. நீங்கள் சந்நியாசியானால் சொர்க்கம் செல்வீர்கள் என்றும் நான் கூறமாட்டேன். ஒருங்கிணைந்த தனிநபராக நீங்கள் இருக்கும்போது சொர்க்கத்தில் இருப்பதாகவே ஆகிறது என்றுதான் நான் கூறுகிறேன். அது எதிர்காலம் குறித்த விஷயம் அல்ல.

இது புத்தரின் நிஜமான உடல். இந்த பூமியே சொர்க்கம்.

சொர்க்கம் நரகம் என்றெல்லாம் எதுவும் கிடையாது. இரண்டு விதமான மனோதத்துவங்கள் உள்ளன. ஒன்று தனிமனித மனோதத்துவம். அடுத்தது பிளவுபட்ட மனிதனின் மனோதத்துவம்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**அறிவு என்பது தவறான பிரதேசம் என்று நீங்கள் கூறுகிறீர்கள். அத்துடன் இந்த புதிய உலகிற்கு அறிவியல் அவசியமான அங்கம் என்றும் கூறு கிறீர்கள். மனதின் துணையின்றி அறிவியலை உருவாக்க முடியுமா? தயவு செய்து விளக்குங்கள்.**

உண்மையான அறிவியல் எப்போதும் அறிவற்ற நிலையில்தான் உருவாகிறது. அறிவியலில் புகழ்பெற்ற கண்டுபிடிப்புகள் எல்லாம் அறிவின் மூலம் வெளிப்படவில்லை. உள்ளுணர்வின் மூலமே வெளிப்பட்டன. சிறந்த கண்டுபிடிப்புகள், புகழ்பெற்ற புதிய சாதனைகள் எல்லாம் உள்ளுணர்வு மூலமே ஆர்க்கிமிடீஸ் தொடங்கி

ஐன்ஸ்டீன்வரை வெளிப்பட்டன. ஆர்க்கிமிடீஸின் கதை உங்களுக்குத் தெரியும். தனது குளியல் அறையில் சுடுநீர் தொட்டியில் அவர் படுத்துக் கொண்டு ஓய்வாக இருந்தபோதுதான் அந்த கண்டுபிடிப்பு வெளிப் பட்டது. அவர் பல நாட்கள் கவலையுடன் இருந்தார். அந்த நாட்டின் அரசன் அவரிடம் ஒரு கேள்வி கேட்டிருந்தார். அரசரிடம் அழகான ஒரு தங்க மணிமகுடம் இருந்தது. அது சுத்தமான தங்கத்தில் செய்யப் பட்டதான அல்லது கலப்பு உள்ளதா என்று அறிந்துகொள்ள அவர் விரும்பினார். மணிமகுடத்தை சேதப்படுத்தாமல் அதை கண்டறிய வேண்டும் என்று எண்ணினார்.

அது ஒரு குழப்பமான விஷயம். தங்கம் எவ்வளவு இருக்கிறது, மற்ற உலோகங்கள் எவ்வளவு என்று எவ்வாறு கண்டுபிடிப்பது? அவர் கடுமையாக முயன்று பார்த்தார். இரவுகளில் தூங்கவே இல்லை. தீர்வு கண்டறிய முடியும் என்ற நம்பிக்கை எழவில்லை. ஆனால் அது நடந்து விட்டது.

குளியல் தொட்டி நிறைந்திருந்தது. அவர் தொட்டிக்குள் இறங்கியதும் கொஞ்சம் தண்ணீர் தொட்டியிலிருந்து வடிந்து வெளி யேறியது. பளீரென்று ஒரு மின்னல்போல் அந்த கருத்து அவர் மனதில் தோன்றியது. தொட்டியிலிருந்து வெளியேறிய தண்ணீரின் அளவு எனது எடைக்குச் சமமானது. உடனே விஷயம் கிளிக்கென்று வெளிப் பட்டது. "இப்போது நாம் தங்கத்தைத் தண்ணீரில் வைத்தால் கொஞ்சம் தண்ணீர் வெளியேறும். அந்த தண்ணீரை வைத்துக் கொண்டு தங்கத்தின் அளவை கண்டறியலாம்."

அவர் சிலிர்த்துப் போனார். அவர் அப்போது நிர்வாணமாக இருந்தார். நிர்வாணம் என்ற உணர்வே அகன்றுவிட்டது. அந்த அளவுக்கு ஆனந்தம் பொங்கியிருந்தது. வீதிகளின் வழியே, "யூரேகா, யூரேகா (நான் கண்டுபிடித்து விட்டேன், நான் கண்டுபிடித்து விட்டேன்) என்று கூவியபடி ஓடினார்.

அது உள்ளுணர்வு மூலம் தோன்றிய கண்டுபிடிப்பாகும். அறிவின் துணையுடன் கண்டறியப்பட்டதல்ல.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் பலமணிநேரம் குளியல் தொட்டியில் உட்கார்ந்திருப்பார் என்று உங்களுக்குத் தெரியுமா? ஆர்க்கமிட்டீஸ் போல தனக்கும் ஏதாவது சட்டென்று உள்ளுணர்வு மூலம் கண்டு பிடிப்பு வெளிப்படலாம் என்ற நம்பிக்கையாக இருக்கலாம். இந்திய அறிவுஜீவிகளில் ஒருவரான ராம் மனோகர் லோஹியா அவரைக் காணச் சென்றிருந்தார். அந்த கதை முழுவதையும் அவர் என்னிடம் கூறினார். அவர் நாடறிந்த நல்ல நேர்மையான அரசியல்வாதி. விஷயங்

களை ஆர்வத்துடன் நோக்குவார். சிறந்த தொலைநோக்குள்ள அறிவாளி. அவர் ஜெர்மனியில் கல்வி கற்றவர் என்பதால் ஐன்ஸ்டீனை அறிந்த பலரை நண்பர்களாகக் கொண்டிருந்தார். அவர்களில் சில பொதுவான நண்பர்கள் மூலம் சந்திப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

டாக்டர் லோஹியா சரியான நேரத்துக்கு சென்றார். ஆனால் ஐன்ஸ்டீனின் மனைவி, நீங்கள் "கொஞ்சம் காத்திருக்க வேண்டும். ஏனென்றால், அவர் குளியல் தொட்டியில் குளிக்கிறார். எப்போது அவர் வெளியே வருவார் என்று யாருக்கும் தெரியாது" என்றார்.

அரைமணி நேரம் கடந்து விட்டது. ஒருமணி நேரம் ஆயிற்று. லோஹியா அவரது மனைவியைப் பார்த்து "இன்னும் எவ்வளவு நேரம் இது நீடிக்கும்?" என்று கேட்டார்.

அதற்கு அவள், "யாரும் கணித்துச் சொல்லிவிட முடியாது" என்றாள்.

"குளிக்கும் தொட்டியில் உட்கார்ந்துகொண்டு அவர் என்ன செய்கிறார்?"

அந்த பெண் சிரித்தபடியே "அவர் சோப்பு நுரைக் குமிழ்களை வைத்து விளையாடிக் கொண்டிருப்பார்" என்றாள்.

"எதற்காக அப்படிச் செய்கிறார்?"

"அப்படி விளையாடும்போது அவருக்கு பலதடவை யோசித்துப் பார்த்து விடை தெரியாது தோற்றுப் போனவைகளுக்கு ஏற்ற நுட்ப மான பதில்கள் கிடைக்கும். குளியல் தொட்டியில் அவர் உட்கார்ந் திருக்கும்போதுதான் மனதில் பளிச்சென்று விஷயங்கள் வெளிப் படும்."

ஏன் அவர் குளியல் தொட்டியை அதற்குப் பயன்படுத்தினார்? அங்கு நீங்கள் ஓய்வாக இருக்கிறீர்கள். சிந்தனையின் அடிப்படையே ஓய்வுகொள்ளல்தான். நீங்கள் ஓய்வாக இருக்கும்போது எல்லா மன இறுக்கங்களும் அகல்கின்றன. வெந்நீர், குளியலறையின் அமைதி, உங்கள் தனிமை... இப்போது மேற்கு நாடுகளில் குளியலறைகள் கோவில் போல அழகாக அமைக்கப்படுகின்றன. சிலர் தங்கள் உட்காரும் அறைகளை குளியலறையில் அமைத்துக் கொள்கிறார்கள். அதுவும் அழகானதுதான். ஒருவர் ஓய்வு கொள்ளலாம், தியானிக்கலாம், தியான நிலையில் பல விஷயங்கள் வெளிப்படுகின்றன.

என்னுடன் பல வருடங்களாக வாழும் சில சந்நியாசிகளைத் திவ்யா இப்போது சந்தித்து நேர்காணல் நடத்தியிருக்கிறார். விவேக் குடன் ஒரு நேர்காணல் நடத்த அவர் விரும்புகிறார். எப்படி நேர்

காணல் தருவது என்று விவேக் கவலைப்படுகிறார். குளியலறையில் அவர் இருக்கும்போது சில கருத்துகள் தோன்றுகின்றன.

நான் விவேக்கிடம், "கவலைப்படாதே! திவ்யாவை அழைத்து அவரைக் குளியல் அறையில் உட்காரச் சொல். நீ குளிக்கும் தொட்டில் உட்கார். பிறகு நேர்காணல் நடக்கட்டும்! என்றேன். ஆனால் விவேக் கிற்றுத் தைரியம் வரவில்லை.

குளியல் தொட்டி எப்போதும் கோபம் வரவழைப்பதாகவே இருக்கும். உலகின் புகழ்பெற்ற அறிவியலாளர்கள் எல்லாம் அதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். சில சமயம் பல வருடங்கள் உழைத்தும் கிடைக்காதிருக்கும். ஒருநாள் திடீரென்று அது வந்துவிடும். வெகு அப்பாலிலிருந்து வரும். அதை ஒரு சிந்தனை முடிவு என்று கூற முடியாது. அது யோசிப்பில் கிடைத்த முடிவு அல்ல.

"அறிவு தவறான பிரதேசத்தில் இருக்கிறது என்று நீங்கள் கூறு கிறீர்கள். புதிய உலகிற்கு அறிவியல் அவசியமான ஒரு அங்கம் என்றும் கூறுகிறீர்களே!" என்று என்னிடம் கேட்டீர்கள்.

ஆம். அறிவியல் எப்போதும் சிந்தனைக்கு அப்பால்தான் இருக்கிறது. அறிவின் பகுதியில் இல்லை. எப்போதெல்லாம் அறிவிலிருந்து ஏதாவது ஒன்று தோன்றுகிறதோ அது அறிவியல் அல்ல, வெறும் தொழில்நுட்பம் மட்டும்தான். தொழில்நுட்பம் என்பது ஒரு எளிய விஷயம். அது நுண்ணறிவு அல்ல. ஆனால் நுண்ணறிவின் மேம்பாடு தொழில் நுட்பம் அறிவிலிருந்து வருகிறது. காரணம் மனம் என்பதே ஒரு தொழில்நுட்பக் கருவிதான். அது ஒரு உயிரியல் தொழில் நுட்பமாகும்.

எல்லா இயந்திரங்களும் அறிவிலிருந்து வெளிப்பட்டன. காரணம் அறிவும் ஒரு கருவிதான். ஆனால் நுண்ணறிவு அங்கிருந்து வெளிப்படுவதில்லை. எந்த கணினியும் இதுவரை நுண்ணறிவை வழங்கியதில்லை. நுண்ணறிவு அதற்கு அப்பாலிலிருந்து வருகிறது. அறிவு என்பது உங்கள் உடலின் மேற்பரப்பு. நுண்ணறிவு உயிரின் ஆழத்திலிருந்து வெளிப்படுகிறது. தியானம் உங்களை அந்த மையம் நோக்கிக் கொண்டு செல்லும்.

எனவே எனது அறிக்கையில் எந்த ஒரு முரண்பாடும் இல்லை. அறிவு தவறான பிரதேசத்தில் இருக்கிறது என்று நான் சொல்லும் போது, அறிவை வைத்து அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டாம் என்று அர்த்தம். நீங்கள் உங்கள் அறிவாக மாறிவிடாதீர்கள். அறிவைக் காட்டிலும், மிக அதிகமான அளவு பெரியவர் நீங்கள். அறிவு என்பது உங்களுக்குள் இருக்கும் ஒரு சிறிய இயந்திர இயக்கம்தான். அதைப்

பயன்படுத்திக் கொள்ளுங்கள். ஆனால் அதனால் அடையாளப்படாதீர்கள். காரைப் பயன்படுத்துது போல் அதைப் பயன்படுத்துங்கள். அது ஒரு இயந்திர இயக்கம்தான். நீங்கள் காரைப் பயன்படுத்தலாம். நீங்களே காராக மாறிவிட முடியாது. அறிவு என்பது உங்களுக்குள் இருக்கும் ஒரு இயக்கம். அதனால் அடையாளப்படுத்தப்படாதீர்கள். அதற்கு அவசியம் இல்லை. அடையாளப்படுத்துதல் தவறான பிரதேசத்தை உருவாக்குகிறது.

"நான் தான் அறிவு" என்று நீங்கள் சிந்திக்கத் துவங்கும்போது நீங்கள் தவறான பிரதேசத்திற்குச் செல்கிறீர்கள். "நான் அறிவு அல்ல. அறிவின் எஜமான். என்னால் அறிவைப் பயன்படுத்த முடியும்" என்று நீங்கள் அறியும்போது அறிவு ஒரு பெருமதிப்புள்ள இயந்திரமாக மாறுகிறது. அது பெரிய தொழில்நுட்பங்களை உருவாக்க வல்லது.

மனமற்ற நிலையில் இருந்து ஆன்மீகம் தோன்றுவதுபோல, மனமற்ற நிலையில் இருந்துதான் அறிவியல் உருவாகிறது. ஆன்மீகம், அறிவியல் என்ற இரண்டின் ஆதார மையங்களும் வெவ்வேறானவை அல்ல. ஒரே ஆதார மையம் சார்ந்தவை. அவை சட்டென்று வருபவை. நுண்ணறிவு சார்ந்தவை. உணர்வுபூர்வமான மின்னல் போன்றவை.

தொழில்நுட்பம் அறிவிலிருந்து வருகிறது. யோகா, மந்திரம், யந்திரம் போன்ற ஆன்மீகத் தொழில்நுட்பமும் அறிவிலிருந்தே வருகிறது. யோகா என்பது உடலின் ஆசன நிலைகள் பற்றியது. அது உங்களுக்குள் நீங்கள் ஆழமாகச் செல்ல உதவுகிறது. அவை அறிவின் மூலம் உருவாக்கப்பட்டவை. அதுதான் ஆன்மீகத் தொழில் நுட்பம். எனவே யோகா என்பது எந்த ஒரு மதத்தின் அங்கமாகவும் இல்லாது தனித்திருக்கிறது. கிறிஸ்தவ யோகா, இந்துமத யோகா, புத்தமத யோகா, ஜைன யோகா என்று பல யோகாக்கள் இருந்திட இயலும்.

ஆனால் யோகா என்பது ஒரு தொழில்நுட்பம். ஒரு இயந்திரம் இந்துவாகி விடாது. இயந்திரம் முகமதியராகிவிடாது. கடைத் தெருவுக்குச் சென்று நீங்கள் முகமதியக்கார் இந்து கார் என்று எதையும் வாங்க முடியாது. இயந்திரங்கள் வெறும் இயந்திரங்கள்தான். யோகா ஒரு தொழில்நுட்பம். மந்திரம் ஒரு தொழில்நுட்பம். அது அறிவின் மூலம் உருவாக்கப்பட்டது. மந்திரம் என்பது மனம் என்ற வேரை அடிப்படையாகக் கொண்டதாகும். அந்த இரண்டு சொற்களும் மன் (Man) என்ற சமஸ்கிருதச் சொல்லில் இருந்து தோன்றியவை. ஒரு பிரிவு அறிவாகவும், ஒரு பிரிவு மந்திரமாகவும் மாறியது. இரண்டும் அறிவின் அங்கங்கள்.

அறிவியல் தொழில்நுட்பம் அறிவினால் உருவாக்கப்பட்டதாகும். ஆன்மீகத் தொழில் நுட்பமும் அறிவினால் உருவாக்கப்பட்டது

தான். கோவில், மசூதி, தேவாலயம், வழிபாடு, மதநூல்கள் என்ற இவை எல்லாம் அறிவினால் உருவாக்கம் செய்யப்பட்டவை. ஆனால் உள்ளுணர்வு மின்னல் போன்றது. புத்தர் போதி மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறார்.... முதல் முறையாக அவர் முழுமையான விழிப்புணர்வை அடைகிறார். அது எந்தவகையான அறிவின் செயலும் அல்ல. அது அறிவின் அங்கமல்ல. அதற்கும் அப்பாற்பட்டது. உங்கள் உடல், அறிவு, அகந்தைகள் மூலம் எதுவும் செய்திட முடியாதது. அது தூய்மையானது. புனிதமானது. அது நித்தியத்தின் ஒரு அங்கமாகும். அந்த நேரத்தில் புத்தரின் அறிவு முழு ஓய்வில் இருந்தது. அப்பாலிலிருந்து வந்தது அவரை ஊடுருவியது. அவர் கடவுளானார்.

ஏழு நாட்கள் அவர் மௌனமாக அமர்ந்திருந்தார். அதன் தாக்கம் அப்படிப்பட்டது. வாய் திறந்து அவர் ஒரு வார்த்தை பேசவில்லை. சொர்க்கத்தில் இருந்த தேவர்கள் மிகவும் கவலைப்பட்டார்கள் என்று ஒரு கதை உண்டு. அவர் அமைதியாக இருந்துவிட்டால், பூமியில் குருடாகவும், தடுமாறிக் கொண்டும் இருக்கும் லட்சக்கணக்கான மக்களுக்கு யார் கற்றுக் கொடுப்பது? அது 4 அழகான புராணக்கதை. முக்கியத்துவமும் அழகும் கொண்டது.

தேவர்கள் புத்தரிடம் வந்து வணங்கி நின்றார்கள். "பேசுங்கள்! நீங்கள் எதை அடைந்தீர்கள் என்று மக்களிடம் கூறுங்கள்" என்று வேண்டினார்கள். அப்போது புத்தர் பேசினார். அது அறிவிலிருந்து வந்தது. அறிவின் ஒரு அங்கமாக அது இருந்தது. அமைதியில் அந்த விந்தை நிகழ்ந்தது. அதன் பிறகு அவர் சொற்களைப் பயன்படுத்த வேண்டியிருந்தது. அந்த வார்த்தைகள் அறிவு சார்ந்தவை.

நான் அறிந்து கொண்டவை எல்லாம் அறிவுக்கு அப்பாற்பட்டவை. ஆனால் அறிவின் வாயிலாக அவற்றைத் தெரிவிக்கிறேன். எனது சொற்கள் அறிவின் ஒரு அங்கம். ஆனால் எனது அறிதல் அறிவின் அங்கம் அல்ல.

நான்காவது கேள்வி

ஓஷோ,

மகிழ்ச்சி என்பது என்ன?

மகிழ்ச்சி என்பது மகிழ்ச்சியின்மை என்பதன் மறுபக்கமாகும். நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க விரும்பினால் மகிழ்ச்சியற்றவராக இருந்திட வேண்டும். இந்த கூற்று நடைமுறைக்கு ஏற்ற மாதிரி இல்லை என்று தோன்றலாம். அது அப்படியல்ல. வாழ்க்கை அவ்விதம் தான் இருந்து வருகிறது. மகிழ்ச்சியற்ற மனிதரால் மட்டுமே மகிழ்ச்சி

யடைய முடியும். மகிழ்ச்சியின்மை உருவாக்கும் சூழ்நிலைகளின் வழியேதான் மகிழ்ச்சியை உணரமுடியும்.

பல மாதங்கள் நீங்கள் நோயுற்று இருந்துவிட்டுச் சட்டென்று உடல் நலம் பெறும்போது அதிகமான மகிழ்ச்சியை அடைவீர்கள். நோய் ஏற்படுவதற்கு முன்னர் பல வருடகாலம் ஆரோக்கியமாக இருந்தீர்கள். அப்போது மகிழ்ச்சியுடன் இல்லை. மகிழ்ச்சி பற்றிய எண்ணமே மனதில் தோன்றவில்லை. இப்போது ஆரோக்கியம் பெற்றதும் மகிழ்ச்சி கொள்கிறீர்கள். அது ஏன்? எங்கிருந்து அந்த மகிழ்ச்சி வந்தது? உங்கள் நோயுற்ற நிலையில் இருந்துதான் அது வந்தது? உங்கள் உடல்நலக்குறைவு மகிழ்ச்சியின்மையை ஏற்படுத்தியது. இப்போது மீண்டும் நலம் பெற்றுவிட்டீர்கள். வித்தியாசமாக ஏதாவது நடந்தால் மட்டுமே உங்களால் அதை உணர முடியும்.

ஒரு ஏழை மனிதர் செல்வந்தராக மாறினால் அவர் மகிழ்வு கொள்வார். மிதமிஞ்சிய ஆனந்தம் அடைவார். ஆனால் பணக்காரர்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதை உங்களால் காணமுடியாது. அவர்கள் செல்வம் நிறைந்தவர்கள். எனவே மகிழ்ச்சி என்பதற்கு அங்கு இடமில்லை. அந்த உணர்வை அவர்கள் அடையவில்லை. கூடுதல் செல்வம் சேரும்போது மகிழ்ச்சி குறைவாகவே இருக்கும். நீங்கள் உலகிலேயே செல்வந்தராக மாறினால் மகிழ்ச்சி என்பதையே மறந்து விடுவீர்கள். தினமும் அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. மகிழ்ச்சியின்மை என்ற கடலில் உள்ள ஒரு தீர்வுதான் மகிழ்ச்சியாகும். அது மகிழ்ச்சியின்மையின் ஒரு அங்கம்.

நான் கேட்டதைச் சொல்கிறேன்.

திரு. ஜோன்ஸின் மகன் மாடியில் வயலின் வாத்தியப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தான். வேதனையுடன் முகம் சுளித்த ஜோன்ஸ், "இதை இனியும் என்னால் சகிக்க முடியாது. ஒரு வருடகாலம் பயிற்சி நடக்கிறது. விலை உயர்ந்த வயலின் வாங்கப்பட்டிருக்கிறது. ஆனால் நம் மகன் வாசிப்பு பூனையைச் சித்திரவதை செய்தால் அது எழுப்பும் குரல்போல் இருக்கிறது" என்றார் தனது மனைவியிடம்.

திருமதி. ஜோன்ஸ் அதற்கு, "நீங்கள் ஏமாற்றம் கொண்ட நிலையில் பேசுகிறீர்கள். அவன் பெரிய வாத்திய மேதையாக இருந்ததில்லையே?" என்று ஆறுதல் சொன்னாள்.

"தெருவோர வாத்தியக்காரனாகவும் அவனால் வரமுடியாது. ஜனங்கள் அழுகியதை எடுத்து வீசுவார்கள்."

மறுநாள் அதே சமயத்தில் ஒருவித அமைதி வீட்டில் நிலவியது. "என்ன விநோதம்! இந்த சமயத்தில் அவன் வாத்தியம் பயிற்சி செய்வானே!" என்று கூறினாள் திருமதி. ஜோன்ஸ்.

ஜோன்ஸின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. "அமைதி. அருமையாக இருக்கிறது."

"நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று சந்தேகத்துடன் அவள் கேட்டாள்.

"வெகு எளிய விஷயம். அமெரிக்க அரசு விவசாயம் செய்ய வேண்டாம் என்று விவசாயிகளுக்கு நிதியுதவி செய்ய முடியுமானால், எனது மகனை வாசிக்க வேண்டாம் என்று சொல்லி நிதியுதவி செய்ய என்னால் ஏன் முடியாது?"

யாரும் உங்கள் வீட்டில் வயலின் வாசிக்கவில்லை. பூனையைத் துன்புறுத்துவது போல யாரும் வாசிக்கவும் இல்லை. ஆனாலும் உங்களுக்கு மனதில் அமைதி இல்லை. "அமைதி அற்புதமானது" என்று நீங்கள் சொல்லவில்லை.

சுதந்திரம் என்றால் என்னவென்று சிறைக் கைதிகளுக்குத்தான் நன்கு தெரியும். அவன் சிறையிலிருந்து வெளியே வந்ததும் மரங்கள், சூரியன், வானம் போன்றவற்றைப் பார்க்கிறான். மனிதர்களைப் பார்க்கிறான். தனது கை, கால்களுக்கு எந்தச் சங்கிலியும் போட்டுப் பிணைக்கவில்லை என்று அறிகிறான். அப்போது அவன் சுதந்திரம் என்றால் என்ன என்று அறிகிறான். ஆனால் விரைவில் மறந்து விடுகிறான்.

சுதந்திரம் பற்றிய விழிப்புணர்வு உங்களிடம் இல்லையா? இருக்கிறதா? எப்போதாவது உங்கள் சுதந்திரத்தை அனுபவித்திருக்கிறீர்களா? உங்கள் கைகளில் எந்த விலங்கும் இல்லை என்று எப்போதாவது நடனமாடி மகிழ்ந்தது உண்டா? நீங்கள் சிறையில் இல்லை என்று எப்போதாவது நடனமிட்டு மகிழ்ந்தது உண்டா? கதவுத் துவாரத்தின் வழியே வானத்தைப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லாமல் நேரடியாக வானத்தைப் பார்க்க முடிகிறது என்று ஆனந்தமாக நடனமாடியது உண்டா? இல்லை. அப்படிப்பட்ட எந்த மகிழ்ச்சியும் உங்களுக்கு ஏற்படவில்லை.

ஒரு பெரிய செல்வந்தர் மகிழ்ச்சியடைய விரும்பினார். எல்லா வகையான வழிகளிலும் முயன்று தோல்வியே கண்டார். பல துறவிகளிடம் சென்றார். யாரும் அவருக்கு உதவ முடியவில்லை. ஒருவர் அவருக்கு ஆலோசனை கூறினார். "முல்லா நஸ்ருதீனிடம் செல்லுங்கள்.

அவர் ஒரு நகரத்தில் வசிக்கிறார். அவர் ஒருவரால் மட்டுமே உங்களுக்கு ஏதாவது உதவிட முடியும்."

செல்வந்தர் ஒரு பை நிறைய வைரங்களை எடுத்துக்கொண்டு சென்றார். நகருக்கு வெளியே மரத்தடியில் அமர்ந்து ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த முல்லா நஸ்ருதீனிடம் அதைக் காட்டினார். "நான் மிகவும் துயரப்படும் மனிதனாக இருக்கிறேன். எனக்கு மகிழ்ச்சி வேண்டும். அதற்காக எதையும் தருவதற்குத் தயாராக இருக்கிறேன். மகிழ்ச்சி என்றால் என்ன என்று இதுவரை அனுபவித்துப் பார்த்தது கிடையாது. மரணம் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. எனக்கு உதவி செய்ய உங்களால் முடியுமா? நான் மகிழ்ச்சியுடன் இருப்பது எப்படி? உலக வாழ்க்கைக்குத் தேவையான எல்லாப் பொருட்களும் என்னிடம் உள்ளன. ஆனாலும் மகிழ்ச்சி இல்லை. அது ஏன்?" என்று கேட்டார்.

முல்லா அந்த மனிதரைப் பார்த்தார். என்ன நடக்கிறது என்று அவர் புரிந்து கொள்வதற்கு முன்னர் முல்லா துள்ளியெழுந்து அந்த பையைப் பிடுங்கிக் கொண்டு ஓடினார்.

செல்வந்தர் கத்திக்கொண்டே பின்னால் ஓடினார். "நான் ஏமாந்து விட்டேன். பொருள் கொள்ளையடிக்கப்பட்டு விட்டது."

முல்லாவுக்கு நகரின் வீதிகள் எல்லாம் நன்கு தெரியும். இதிலும் அதிலும் வளைந்து வளைந்து ஓடினார். செல்வந்தர் தனது வாழ்நாளில் ஓடியதே இல்லை. அவர் அழுதார். கன்னங்களில் கண்ணீர் வழிந்தது. "நான் முழுமையாகக் கொள்ளையடிக்கப்பட்டு விட்டேன். எனது வாழ்நாள் சம்பாத்தியம் முழுவதும் போய்விட்டது. ஜனங்களே என்னைக் காப்பாற்றுங்கள், உதவி செய்யுங்கள்" என்று கூவினார்.

ஒரு கும்பல் அவரைப் பின்தொடர்ந்தது. அவர் முல்லாவை நெருங்கியபோது அவர் செல்வந்தரை எங்கு சந்தித்தாரோ அதே இடத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டார்கள். செல்வந்தரின் குதிரை இன்னும் அங்கே நின்று கொண்டிருந்தது. முல்லா மரத்தடியில் அமர்ந்திருந்தார். செல்வந்தர் அழுது கொண்டிருந்தார், பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார். முல்லா அவர் பையைத் திருப்பிக் கொடுத்தார்.

செல்வந்தர், "ஆண்டவனே நன்றி! என்றார். கண்களில் ஆனந்தக் கண்ணீர். மனதில் நிம்மதி.

முல்லா அவரிடம், "பாருங்கள்! உங்களை நான் மகிழ்ச்சியடைய வைத்துவிட்டேன். மகிழ்ச்சி என்றால் என்னவென்று இப்போது உங்களுக்குத் தெரிந்துவிட்டது. பல வருடங்களாக இந்த பை உங்களிடம் இருக்கிறது. ஆனால் மகிழ்ச்சி இல்லை. அதை உங்களிடம் இருந்து அகற்ற வேண்டும்" என்றார்.

மகிழ்ச்சி என்பது மகிழ்ச்சியின்மையின் ஒரு அங்கம். எனவே மகிழ்ச்சி உங்கள் வாழ்வின் குறிக்கோளாக இருக்கலாகாது. எனவே நீங்கள் மகிழ்ச்சியடைய வேண்டும் என்றால், மகிழ்ச்சியற்றவராக இருக்க வேண்டும். நீங்கள் மகிழ்ச்சியற்றவராக இருக்கும்போது சில கணங்கள் மட்டும் மகிழ்ச்சியடைய முடியும்.

மகிழ்ச்சி என்பது குறிக்கோள் அல்ல. பேரின்பமே குறிக் கோளாகும். "மகிழ்ச்சி என்றால் என்ன?" என்று என்னிடம் கேட்கா தீர்கள். நீங்கள் மகிழ்ச்சியைத் தேடுகிறீர்கள் என்பதை அது காட்டு கிறது. மகிழ்ச்சியைத் தேடுவதற்காக நீங்கள் இங்கு வந்திருந்தால், நீங்கள் ஒரு தவறான இடத்துக்கு வந்துவிட்டீர்கள். முல்லா நஸ்ரு தீனிடம் செல்லுங்கள்.

எனது முயற்சி இங்கு பேரின்பத்தை உருவாக்குவதே ஆகும். மகிழ்ச்சியை ஏற்படுத்துவதல்ல. மகிழ்ச்சி மதிப்பில்லாதது. அது மகிழ்ச்சியின்மையைச் சார்ந்திருக்கிறது. பேரின்பம் பூரணமானது. ஒருவர் மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை என்ற இரட்டை நிலைகள் கடந்து அப்பால் செல்கிறார். அவர் இரண்டையும் கவனிக்கிறார். மகிழ்ச்சி வருகிறது. அவர் அதை கவனிக்கிறார். ஆனால் அதனுடன் சம்பந்தப் பட்டுக் கொள்வதில்லை. "நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நிம்மதி அற்புதமானது" என்று கூறுவதில்லை. அவர் வெறுமனே பார்க்கிறார். "ஆம்! ஒரு வெள்ளை மேகம் கடந்து போகிறது" என்கிறார்.

அதன் பிறகு மகிழ்ச்சியின்மை வருகிறது. அதற்காக அவர் வருத்தமடைவதில்லை. "ஒரு கருப்பு மேகம் கடந்து போகிறது. நான் பார்வையாளனாக, சாட்சியாக இருக்கிறேன்" என்கிறார்.

பார்வையாளராக இருந்து தியானிப்பது என்பது இதுதான். தோல்வி வருகிறது, வெற்றி வருகிறது. நீங்கள் பாராட்டப்படு கிறீர்கள், குற்றம் சாட்டப்படுகிறீர்கள். நீங்கள் மதிக்கப்படுகிறீர்கள், அவமானப்படுத்தப்படுகிறீர்கள். எல்லாவகையான விஷயங்களும் நடக்கின்றன. அவை இரட்டைநிலை கொண்டவை. நீங்கள் வேடிக்கை மட்டும் பார்க்கிறீர்கள். இரட்டை நிலைகளைப் பார்க்கும்போது மூன்றாவது சக்தி ஒன்று உங்களுக்குள் உருவாகிறது. மூன்றாவது பரிமாணம் உங்களுக்குள் உருவாகிறது. இரட்டை நிலை என்பது இரண்டு பரிமாணங்கள். ஒரு பரிமாணம் மகிழ்ச்சி. இன்னொரு பரமாணம் மகிழ்ச்சியின்மை. இரண்டையும் பார்க்கும்போது உங்களுக்குள் ஒரு ஆழம் ஏற்படுகிறது. மூன்றாம் பரிமாணமான சாட்சி உருவாகிறது.

அந்த மூன்றாவது பரிமாணம் பேரின்பத்தைக் கொண்டுவரும். பேரின்பம் தனக்கு எதிரான நிலைகள் எதுவும் அற்றது. அது நடுநிலை

யானது. சாந்தமானது. அமைதியானது. அது கிளர்ச்சியற்ற ஆனந்த நிலையாகும்.

மகிழ்ச்சி என்பது என்ன என்று என்னால் விளக்கிச் சொல்ல முடியாது. காரணம், நீங்கள் எப்படிப்பட்ட மனிதர் என்பதைப் பொறுத்து அது அமைகிறது. உங்களுக்கு எது சந்தோஷமாகத் தெரி கிறதோ அது உங்கள் சகோதரருக்கு மகிழ்ச்சியற்றதாக இருக்கிறது. உங்களுக்கு எது மகிழ்ச்சியற்ற ஒன்றோ அது உங்கள் பக்கத்து வீட்டுக் காரருக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது.

நான்கு பெண்கள் அழகு நிலையத்தில் தலைமுடியை உலர்த்தும் கருவியின் அடியில் பல மணிநேரம் அமர்ந்திருந்தார்கள். அரட்டை யடித்துச் சலித்துப்போன அவர்கள் தத்துவ விசாரத்தில் இறங்கினார்கள். முதல் பெண்மணி என் கணவர் சம்பளக் காசோலையை வீட்டுக்குக் கொண்டு வரும்போது எனக்கு மகிழ்ச்சி ஏற்படும்" என்றாள்.

இரண்டாவது பெண்மணி, "லாஸ் வெகாஸில் சூதாடி வெற்றி பெறும்போது "மகிழச்சி பிறக்கும்" என்றாள்.

மூன்றாவது பெண், "எனது கணவர் குழந்தைகள் யாரும் இல்லாமல் விடுமுறையைக் கழிப்பதுதான் மகிழ்ச்சி" என்றாள்.

நான்காவது பெண், "கலோரிகள் பற்றிய கவலையின்றி உண்பது தான் மகிழ்ச்சி" என்றாள்.

அவர்கள் பேசுவதைக் காதில் வாங்கிக் கொண்டிருந்த கேசப் பராமரிப்புப் பெண்மணி அடுத்தவளிடம், "இந்த கோழிகளின் கொக்கரிப்பைக் கேட்காமலிருப்பதே மகிழ்ச்சி" என்றாள்.

மகிழ்ச்சி என்பது மனிதர்களைப் பொறுத்து அமைகிறது. உங்கள் மகிழ்ச்சி உங்கள் தனிப்பட்ட குணாதிசயம். வேறு ஒருவருக்கு அது மகிழ்ச்சியற்றதாக இருக்கலாம். அதில் உண்மை இல்லை. அது உங்கள் கனவு மட்டும்தான். நீங்கள் விரும்பும் எந்த கனவையும் காணலாம். சிலருக்கு அதிகாரம் மகிழ்ச்சி தருகிறது. சிலருக்கு பணம் மகிழ்ச்சி தருகிறது. சிலருக்குப் பணம் துயரத்தை ஏற்படுத்துகிறது. அவர் தப்பி யோடுகிறார். பணத்தைத் துறக்கிறார். அனைத்து அதிகாரங்களையும் உதறுகிறார். காட்டுக்குப் போய்விடுகிறார். சிலருக்கு மக்கள் மகிழ்ச்சி தருகிறார்கள். சிலருக்குத் தனிமை பிடிக்கிறது. மகிழ்ச்சி என்பது உங்களைப் பொறுத்து மாறும் விஷயம்.

எனக்கு மகிழ்ச்சியில் எல்லாம் ஆர்வம் இல்லை. அடிப்படை யில் அது தனது எதிர்நிலையைச் சார்ந்திருக்கிறது. தனது எதிர்நிலை யைச் சார்ந்துள்ள எதுவும் உங்களை பிரிவுபடுத்துகிறது. பிரிவுபட்டு வாழ்வது நரகத்தில் வாழ்வது போன்றதாகும்.

தனது எதிர்நிலையைச் சார்ந்து இருக்காத ஒன்றை அடைய நான் விரும்புகிறேன். அதற்கு எதிர்நிலை என்பதே இருக்கலாகாது. பேரின்பத்திற்கு எதிர்நிலை கிடையாது. பேரானந்தம் பெறுவதற்கு ஒருவர் தனது அகத்தை அடைய வேண்டும். அப்போது அவர் புத்த ராகிறார். தெளிவு, அமைதி, மௌனம் போன்றவை இருந்தாலும் அது முழுமையான பேரானந்தம் ஆகும்.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**நேற்றைய சொற்பொழிவின்போது மக்கள் தீவிரமான மன நிலையில் இருக்கிறார்கள், அதிக தீவிரம் கொண்டவர்கள் நோயாளிகள் என்றீர்கள். நானும் அதிதீவிரம் கொண்டவனாக இருப்பதாக உணர்கிறேன். அருகில் ஒரு கும்பல் வெகுநேரம் சிரித்துப் பேசியபடி கும்மாளமடிக்கிறது. நான் அங்கு உட்கார்ந் திருக்கிறேன். சூழ்நிலை வேடிக்கையானதாக இருப்பதாக உணரவில்லை. அதிலிருந்து விலகி ஒரு அசௌகர்ய உணர்வுடன் இருக்கிறேன். எனது தீவிரம் என்னை நோயுற வைக்கிறது. மேலும் தீவிரமாக இறங்கச் சொல்கிறது. நான் அதிகம் நோயுற்றவனா?**

தீவிரம் என்பது அகந்தை கொண்ட மனதின் ஒரு அங்கம். அகந்தை தீவிரம் காட்ட விரும்புகிறது. அது, "நான் சாதாரணமானவன் அல்ல. நான் விசேஷமானவன். இந்த சாதாரண மனிதர்கள் சிரிக் கிறார்கள். வேடிக்கைப் பேச்சில் ஈடுபடுகிறார்கள். இந்த சாதாரண மனிதர்கள் சாதாரணமான, மேலோட்டமான வாழ்க்கை வாழ் கிறார்கள். நான் பவித்திரமானவன். நான் அற்ப விஷயங்களில் ஆர்வம் கொள்வதில்லை. உண்மையின் மீது, தெய்வீகம் மீது, ஞானத்தின் மீது எனது ஆர்வம் செல்கிறது" என்று வேஷம் போடுகிறது.

அவை அகந்தையின் பயணங்கள். அகந்தை தீவிரமானது. அகந்தை வேஷம் போடுவதற்காக நிறைய அறிவைச் சேகரித்து வைத் திருக்கிறது. அகந்தை எப்போதும் அறிவை மேலும் மேலும் சேர்க் கிறது. அகந்தை வாழ்வை ரசிக்கும் திறனற்றது. எப்போது நீங்கள் ரசிக்கத் தொடங்குகிறீர்களோ அப்போது அகந்தை மறைந்து விடுகிறது. மகிழ்ச்சியும், அகந்தையும் ஒன்றாக இருக்க முடியாது. நீங்கள் முகத்தைத் தொடங்கப் போட்டுக் கொண்டு மகிழ்ச்சியின்றி "எனது தகுதிக்கு இது குறைவான நிலை. இது மதிப்பானது அல்ல" என்று கூறித் திரியும்போதுதான் அகந்தை அங்கு வாழ்ந்திருக்கும்.

அதுதான் உங்களுக்கு நடந்து கொண்டு இருக்கிறது, அனுதாஸா! நீங்கள் தீவிரமாக நோயுற்று இருக்கிறீர்கள். இந்த அறிவுசார்ந்த

விஷயத்தை உதறுங்கள். உங்களைப் புனிதமானவராக எண்ணிக் கொள்வதை விட்டுத் தள்ளுங்கள். ஜனங்களுடன் கலந்து பழகுங்கள். சிறிய விஷயங்களில் மகிழ்வு கொள்ளுங்கள். சிரியுங்கள், வேடிக்கைப் பேச்சில் ஈடுபடுங்கள், காதல் புரியுங்கள், சிறிய விஷயங்களில் இறங்குங்கள்! உங்களைச் சுற்றி அகந்தைக் கட்டமைப்பை ஏற்படுத்திக் கொள்ளாவிட்டால் சிறிய விஷயங்களும் பெரிய மகிழ்ச்சி தரும்.

நீங்கள் நிறைய அறிவுள்ளவராக, நிறைய பக்திமானாக, அதிகம் பவித்திரமானவராக, அதிக ஆன்மீகவாதியாக இருந்தால் மூடிக் கிடக்கும் நிலையில் நீங்கள் இருப்பீர்கள். அதன்பிறகு எதுவும் உங்களுக்கு வியப்பளிக்காது. காரணம் வியப்படையச் செய்யும் நீங்கள் அனுமதிப்பதில்லை. எதையும் வியப்படையச் செய்ய எப்படி அனுமதிக்க முடியும்? அது உங்களுடைய அறியாமையைக் காட்டுவ தாக எண்ணுகிறீர்கள்.

சிறிய குழந்தைகளைப் பாருங்கள். அவர்கள் எதைக் கண்டாலும் வியப்படைகிறார்கள். ஒவ்வொரு விஷயமும் வியப்பூட்டுகிறது. பட்டாம்பூச்சி, மலர், மரத்திலிருந்து உதிரும் இலை போன்ற அனைத்தும் வியப்பைத் தருகின்றன. குழந்தைகளைப் பாருங்கள். அவர்கள் எவ்வளவு வியப்புடன் இருக்கிறார்கள் என்று பாருங்கள். வியப்பை வெளிக்காட்டும் கண்கள். அவை கபடமற்றவை. ஒளிவு மறைவற்றவை. அகன்று திறந்திருக்கின்றன. அதனால்தான் அதைப் பற்றியும், இதைப் பற்றியும் கேள்விகள் கேட்கிறார்கள். ஒவ்வொன்றைப் பற்றியும் கேள்வி கேட்கிறார்கள். அவர்கள் கேள்விகள் அபாரமான அழகுள்ளவை. அவர்கள் எளிமையாக, "எனக்குத் தெரியாது. நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்கிறார்கள். அவர்கள் வாழ்க்கை கேள்விகள் நிறைந்தது. அகந்தையுள்ள மனிதன் தனக்குத் தெரியாது என்பதை ஒப்புக்கொள்ள மாட்டான்.

நான் பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோது எனக்கு ஒரு பேராசிரியர் இருந்தார். எந்த ஒரு புத்தகம் பற்றிச் சொன்னாலும், "நானும் அதைப் படித்திருக்கிறேன்" என்று கூறுவார். ஒருநாள் மூன்று புத்தகங்களின் பெயர்களைக் குறிப்பிட்டேன். அப்படி ஒரு புத்தகங் களே இல்லை. அதை எழுதியதாகச் சொல்லப்பட்ட ஆசிரியரும் இல்லை. அதற்கு அவர் வழக்கம்போல "நானும் அந்த புத்தகங்களைப் படித்திருக்கிறேன். அவை அருமையான புத்தகங்கள்" என்றார்.

"அவற்றை எங்கே வாங்கினீர்கள்?" என்று நான் கேட்டேன்.

"நூலகத்திலிருந்து" என்றார்.

"சரி என்னுடன் வாருங்கள்."

"நீ என்ன சொல்கிறாய்?"

"நான் அந்த மூன்று புத்தகங்களையும் பார்க்க வேண்டும்" என்றேன்.

அப்போது அவர் சற்று தயக்கம் காட்டினார். நூலகம் செல்லும் வழியில் "பல வருடங்களுக்கு முன்பு அவற்றை நான் படித்தேன்" என்றார்.

"நீங்கள் படித்தீர்கள் என்பது உறுதிதானே?"

"ஆம்" என்றார். அந்த ஆமில் உறுதி தென்படவில்லை. நூலகத்தை நெருங்கியதும், உண்மையில் நான் அவற்றைப் படிக்க வில்லை. அவற்றைப் பற்றிக் கேள்விப்பட்டதுடன் சரி."

"அப்படியே இருக்கட்டும்! நூலகத்திற்கு வாருங்கள். அந்த மூன்று புத்தகங்களைத் தேடுவோம்" என்றேன். நாங்கள் தேடினோம். அவை அகப்படவில்லை. நூலகத்தில் அந்த புத்தகங்கள் இங்கு இருந்த தில்லை. அதன் ஆசிரியர்கள் பற்றியும் நான் கேள்விப்பட்டதில்லை" என்றார்.

நான் பேராசிரியரைப் பார்த்து, இந்த புத்தகத்தை படிக்காமல் இருந்தால், நான் படித்தேன் என்று இனிமேல் சொல்லாதீர்கள். அதை நினைவில் வையுங்கள். இந்த மூன்று புத்தகங்களும் கற்பனை யானவை. அவை நிஜமாகவே இல்லை. நீங்கள் அகப்பட்டுக் கொண் டீர்கள். கடந்த இரண்டு வருடங்களாக நீங்கள் கூறுவதை நான் கவனித்து வருகிறேன்...." நீங்கள் எதைச் சொன்னாலும், நானும் அதைப் படித்திருக்கிறேன் என்று அவர் கூறுவார். எனக்குத் தெரியாது என்று சொல்ல அவரால் இயலவில்லை.

இது ஒரு தீவிரமான நோய் நிலை. அனுதாஸா! மக்களுடன் சிரித்துப் பழகுங்கள். வாழ்க்கை வியப்பான விஷயங்கள் நிறைந்த ஒன்று. தெரிந்துகொள்ள நிறைய இருக்கின்றன. தெரிந்துகொள்ள எப்போதும் நிறைய மிச்சமிருக்கின்றன. எல்லாம் தெரிந்தவர் என்று யாரும் கிடையாது. இம்மாதிரியான புத்தியை உதறிவிடுங்கள்.

உங்களை விசேஷமானவராக எண்ணிக் கொள்ளாதீர்கள். சிறப்பானவர் என்று யாரும் கிடையாது. காரணம், எல்லோருமே சிறப்பானவர்கள்தான். யாரும் அசாதாரணமானவர் இல்லை. காரணம், எல்லோருமே அசாதாரணமானவர்கள்தான். நீங்கள் திறந்த மன துடனும், விழிப்புடனும் இருந்தால் வாழ்வின் ஒவ்வொரு கணத்திலும் அறியாத விஷயங்கள் நிறைய இருப்பதை உணரலாம். ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும்போது வியப்பு ஏற்படும். வாழ்வின் ஒவ்வொரு

எட்டிலும் வியப்பு ஏற்பட்டால், ஒவ்வொரு கணமும் வியப்பைத் தந்தால் உங்கள் வாழ்க்கை ஒரு பாடலாக, நடனமாக, கொண்டாட்டமாக மாறிவிடும்.

சிறப்பு விருந்து ஒன்றிற்காக உயிருடன் கோழி வாங்கி வருமாறு ஒருவரை அவரது மனைவி கேட்டுக் கொண்டாள்.

கோழி வாங்கிக்கொண்டு திரும்பும் வழியில்தான் வீட்டுச் சாவியை எடுத்துவர மறந்துவிட்டது அவருக்கு நினைவு வந்தது. அந்த சமயத்தில் சிலமணிநேரம் மனைவி வீட்டில் இருக்கமாட்டாள்.

நேரத்தைப் போக்க ஒரு திரைப்படம் பார்க்க சென்றார். திரைப்பட அரங்கில் நுழைந்ததும் கோழியைத் தனது கால்சட்டைப் பையில் திணித்துக் கொண்டார்.

அவர் உட்கார்ந்து படம் பார்க்கலானார். படம் அவருக்குப் பிடித்துப் போயிற்று. படம் பார்க்கும் ரசனையில் கோழி அவரது கால் சட்டையிலிருந்து வெளியே தலையை நீட்டியதைக் கவனிக்கவில்லை.

அவரை அடுத்து உட்கார்ந்திருந்த இரண்டு பெண்களில் ஒருத்தி மற்றவளை முழங்கையால் இடித்தாள். "அந்த ஆளின் கால்சட்டையில் இருந்து முட்டிக்கொண்டு தெரிவதைப் பார்" என்றாள்.

அடுத்தவள், "ஒன்று மட்டும்தான் தெரிந்ததா? எல்லாவற்றையும் பார்த்துவிட்டாயா?" என்று கேட்டாள்.

முதல் பெண் அதற்கு, "இந்த ஒன்று எனது சோளப் பொறியைத் தின்கிறது" என்றாள்.

இன்று இவ்வளவு போதுமா?

## அத்தியாயம் - 10

### முதல் கேள்வி

ஓஷோ,

**நான் உங்கள் மீது அன்பு கொண்டு விட்டேன். அது ஏன்?**

மன்னிக்க வேண்டும். உங்கள் கேள்வி பதில் சொல்ல முடியாத ஒன்று. பதில் சொல்லமுடியாத கேள்வி இது ஒன்றுதான். எனவே அதன் அழகு அதில்தான் உள்ளது. பதில்சொல்லமுடியாத ஒரு கேள்வியை நீங்கள் எப்போது சந்திக்கிறீர்களோ அப்போது உண்மைக்கு மிக அருகில் சென்று விடுகிறீர்கள்.

அன்பு ஒரு விந்தை. அது பிரச்சினை அல்ல, அது வாழ்ந்து பார்ப்பதற்கானது. தீர்வு காண்பதற்கானது அல்ல. உண்மையில் அது கேள்வியல்ல. அதனால்தான் பதிலளிக்க முடியாதிருக்கிறது. அதிலிருந்து ஒரு கேள்வியை நீங்கள் உருவாக்கலாம். அது மொழி சார்ந்த வார்த்தைகளின் கட்டமைப்பாக இருக்கும். கேள்வியாக இருக்காது.

அன்புக்கு எந்த நோக்கமும் இல்லை. அது அன்பு மட்டும்தான். அன்பு அர்த்தமற்றது. அசட்டுத்தனமானது, நோக்கமற்றது. அதனால்

தான் அது அவ்வளவு அழகாக இருக்கிறது. அதுத வியாபாரப் பொருள் இல்லை. அது உலகப் பொருள் அல்ல. அதற்கு அப்பாற்பட்டது. அப்பாலிலிருந்து வந்த ஒரு பார்வையாளர். எனவே அதற்கு எந்த காரணமும் கண்டறிய முடியாது.

அன்பு செலுத்த ஏதாவது காரணம் கண்டுபிடிக்க முடியும் என்றால் அது அன்பாக இருக்காது. வேறு ஏதாவதாக இருக்கும். அது ஏன் என்பதற்கு நீங்கள் விடை சொல்ல முடியுமானால் அது வேறு ஏதோ ஒன்றுதான், அன்பு அல்ல.

அன்பு செலுத்துவதே முழு நோக்கமாகும். எனவே அன்புக்கு வேறு நோக்கம் கிடையாது. அனைத்தின் முடிவாகவும் அன்பு இருக்கிறது. சகலமும் அன்பை நோக்கிச் செல்லும். கருவிகளாக உள்ளன. எனவே வேறு ஒன்றுக்கு கருவியாக அன்பு இருந்திட முடியாது. அது உயர்வான மதிப்புடையது.

கேள்விகளை எப்படி உருவாக்குவது என்று அறிவுக்குத் தெரியும் என்பதால் கேள்வி எழுகிறது. விந்தையாக இருப்பதை அது ஒப்புக் கொள்ளாது. விந்தையான புரியாத விஷயம் மனதில் அச்சத்தை உருவாக்குகிறது. ஏனென்றால் அறிவினால் அதைத் திறமையாகக் கையாள முடியாது. அறிவு ஆயிரத்தொரு கேள்விகளை எழுப்புகிறது. கேள்விகளுக்கு எல்லாம் பதில் கிடைக்காதவரையில் அறிவு அமைதியடைவது இல்லை. கேள்விகளுக்கு பதில் கிடைக்கவில்லை என்றால் முழு நிகழ்வையும் அறிவு மறுத்து ஒதுக்கும் குணம் கொண்டது. "அது விடை தெரியாததாக இருக்கும்போது அன்பு என்பதும் இருக்க முடியாது" என்று அது கூறுகிறது.

ஒன்றைத் திறமையாகக் கையாள முடியும் என்றால் மட்டுமே அறிவு அதை நம்புகிறது. அதனால்தான் அறிவு தெய்வீகத்தை நிராகரிக்கிறது. தெய்வீகம் என்பது அன்பின் சாரம் தவிர வேறு எதுவும் அல்ல. அறிவு அன்பை நிராகரிக்கிறது. அறிவு அழகை நிராகரிக்கிறது. விந்தையாகத் தோன்றும் ஒவ்வொரு விஷயத்தையும் அறிவு நிராகரிக்கிறது. அல்லது அதை அறிவு என்ற தளத்துக்குக் கீழிறக்க வேண்டும். அதை அவ்வாறு அதைக் கீழிறக்கும் சக்தியற்றுப் போகும்போது "தெய்வீகம் என்று எதுவும் இல்லை. அன்பு என்றும் ஏதுமில்லை. விந்தையானது என்றும் ஏதுமில்லை" என்று மறுப்புத் தெரிவிக்க ஆரம்பிக்கிறது.

விந்தை அச்சமூட்டுவதாக இருக்கிறது. காரணம் அது பரந்து விரிந்தது. அறிவு அதனுள் விழுந்தால் காணாமல் போய்விட நேரிடும் என்று அஞ்சுகிறது. அதனால்தான் எல்லா மொழிகளிலும் "காதலில் விழுதல்" என்ற விளக்கம் காணப்படுகிறது. அது மனதிலிருந்து எழும்

தூஷணையாகும். "நீங்கள் விழுந்து விட்டீர்கள். நீங்கள் உங்கள் தரத்தைத் தாழ்த்திக் கொண்டு விட்டீர்கள். உண்மை அல்லாத ஒன்றின் பக்கம் செல்கிறீர்கள். அதைத் தெளிவான கோட்பாடுகள் மூலம் வடிவமைக்க முடியாது. நீங்கள் தெளிவற்ற ஒன்றினுள் விழுந்து விட்டீர்கள். நீங்கள் குழம்பிப் போகிறீர்கள். அதைத் தவிர்த்து விடுங்கள்!"

அறிவு எப்போதும் "காதலைத் தவிர்த்துவிடு" என்று கூறுகிறது. அதனால்தான் உலகில் குறைவான அளவே அன்பைக் காண முடிகிறது. குழந்தைப் பருவம், மழலையர் பள்ளி தொடங்கி பல்கலைக் கழகம் வரையில் நாம் அறிவு பற்றிப் போதிக்கிறோம். இதயத்தை மறந்து விடுகிறோம். நாம் இதயத்தை புறவழிச் சாலையில் செல்ல அனுமதிக் கிறோம். காரணம் இதயம்தான் விந்தைகளுக்கான நுழைவாயிலாக உள்ளது. அங்கு ஏன் என்ற கேள்விகளுக்கு விடை கிடையாது.

ஒருவர் மனதை நிராகரித்தால், அவர் வாழ்வின் எல்லா இன்பங் களையும் தவிர்த்தவராகிறார். தனது உள்மையத்தை அவர் தவிர்க் கிறார். தனது மன ஆழத்தை தவிர்த்துவிடுகிறார். அவர் தனது மன உணர்வுகளை ஒதுக்கி விடுகிறார். வாழ்வு சாத்தியப்படுத்தும் சிறந்த அனுபவங்களை அவர் நிராகரிக்கிறார். அன்பு சார்ந்த அனுபவங்களை நிராகரிக்கிறார்.

ஏன் என்ற கேள்வியை தயவுசெய்து உதறித் தள்ளுங்கள். நீங்கள் காதலில் விழுந்துவிட்டால் மேலும் மேலும் அதில் ஆழ்ந்து விடு வீர்கள். அதற்கு முடிவே இல்லை. அது ஆழம் காண முடியாத பள்ளத் தாக்கு. அதில் விழுந்தால் மேலும் மேலும் கூடுதல் ஆழத்தில் விழு பவராகிறீர்கள். பள்ளத்தாக்கின் அடிவாரம் நோக்கிச் செல்லும்போது சிறந்த பல விந்தைகள் வசப்படுகின்றன. அதன் பிறகு வாழ்க்கை கவிதையாகி விடுகிறது. உரைநடையாக இருப்பதில்லை. வாழ்க்கை ஒரு ஓசையாக இருப்பதில்லை. இனிய மெல்லிசையாக மாறுகிறது. வாழ்க்கை ஒரு வஸ்துவாக இல்லாமல் தெய்வீகமான ஒன்றாக மாறுகிறது.

ஆனால் மிக மெதுவாக, ஏன், எப்படி என்ற கேள்விகள் மறை கின்றன. நீங்கள் அந்த கணத்தில் வாழ்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை அபாரமாக முன்னிலைப்படுத்தப்படுகிறது. எந்த கேள்விகளும் கிடையாது. வாழ்க்கை என்றால் என்ன என்று நீங்கள் அறிவீர்கள். ஆனால் அது பற்றி எவ்வித **அறிவும்** உங்களிடம் கிடையாது.

தெரிந்து கொள்ளல் வேறு. அறிவு வேறு. அன்பு ஒரு விந்தை. அதை அனுபவித்து அறியலாம். தெரிந்து கொள்வது சாத்தியம். அறிவு

பெறுவது சாத்தியமல்ல. அதை வார்த்தைகளில் விளக்கிட இயலாது. ஒரு ஆழ்ந்த சுவையாக அது உங்களுக்குள் இருக்கிறது. அதை எந்த வார்த்தைகள் மூலமும் வெளிக்கொண்டு வந்துவிட இயலாது.

ஏன் என்று சிலர் உங்களிடம் கேட்டால் நீங்கள் இழப்பில் இருக்கிறீர்கள். இங்கே பல அன்பர்கள் இருக்கிறார்கள். அது மாணவருக்கும், ஆசிரியருக்கும் இடையிலான உறவு அல்ல. அது குருவுக்கும், சீடனுக்கும் இடையிலான உறவாகும். அதை நான் பைத்தியக்கார விளையாட்டு என்று அழைப்பது வழக்கம். M குரு சார்பில் நிற்கிறார். சீடர்கள் சார்பில் நிற்கிறார். குரு சிஷ்ய விளையாட்டு. அது பைத்தியக்கார விளையாட்டு. அது முழுமையான பைத்தியக்காரத்தனம்.

எனது பைத்தியக்கார மனிதர்கள் பற்றிக் கேட்கிறீர்கள். நீங்கள் விவேக்கை கேளுங்கள். இரண்டு பிறவிகளாக அவள் என் மீது அன்பு கொண்டிருக்கிறாள். இது என்னுடனான அவளது இரண்டாவது வாழ்க்கையாகும். அவளை ஏன் என்று கேளுங்கள். அதற்கு பதில் சொல்வது இயலாத காரியம். அவள் அழுவாள் அல்லது சிரிப்பாள். அல்லது நடனமிடலாம். ஏன் என்ற கேள்விக்கு பதில் இல்லை. ஏன் என்ற கேள்வியே அங்கு இல்லை.

அன்பு செலுத்துதல் இயல்பாக நிகழ்கிறது. அது ஒரு நிகழ்வு! நீங்கள் அதைச் செய்தால், அப்போது ஏன் என்று பதில் தர முடியும். ஆனால் காரியமாற்றுபவராக நீங்கள் இல்லை. எங்கோ தொலைவிலிருந்து வரும் ஒன்றின் உபசரணையாளராக மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். ஒரு விருந்தினர் அப்பாலிலிருந்து வந்து உங்கள் கதவைத் தட்டுகிறார். அது ஏன் என்ற கேள்விக்கு எப்படி பதில் சொல்ல முடியும். அவரை நீங்கள் அதற்கு முன்னர் பார்த்ததில்லை. அப்படி ஒருவரை அறிந்திருந்தாலும் அது அடக்கிவிட முடியாத ஒன்று. வார்த்தைகள் எல்லாம் போதுமானவை அல்ல. கண்ணீர் சிலவற்றைக் கூறும். ஒருவேளை நடனம், பாடல் அல்லது அணைப்பு ஏதாவதைச் சொல்லக்கூடும். சொற்கள் போதுமானவையல்ல.

வார்த்தைகள் லெளகீக வாழ்க்கைக்கு உரிய சந்தைக்கடை விஷயம். அன்புக்கு அவற்றை உங்களால் பயன்படுத்த முடியாது. வழிபாட்டிற்கு அவற்றைப் பயன்படுத்த முடியாது. எங்கும், எப்போதும் தெரியாத ஒன்றைப் பற்றி உணர்ந்தறிய அதைப் பயன்படுத்த முடியாது. தெரிந்தது, தெரியாதது என்ற இரண்டுக்கும் இடையில் உள்ள எல்லையை நீங்கள் அடையும்போது, மரத்திலிருந்து காய்ந்த இலைகள் உதிர்வதுபோல சொற்கள் உதிர்ந்து மறைந்துவிடும். அப்போது முற்றிலும் புதிய ஒரு அனுபவம் வெளிப்படும். வார்த்தைகளற்ற அனுபவம் அது.

நீங்கள்கொஞ்சம் பயந்திருக்கிறீர்கள். அதனால் கேள்வி கேட்கிறீர்கள். அது அச்சமூட்டுவதாக இருக்கிறது. காரணம் அன்பு செலுத்தும்போது தொடர்ந்து நீங்கள் ஆதிக்கம் செய்பவராக இருக்க இயலாது. அது அச்சமூட்டுவதாக இருக்கிறது. காரணம் அன்பு செலுத்தும்போது அகந்தை மறைந்துபோகிறது. அது அச்சமூட்டுவதாக உள்ளது. காரணம் நீங்கள் இறந்து போக வேண்டியிருக்கிறது. அன்புக்கு அதுபோன்ற தியாகங்கள் தேவைப்படுகின்றன. அது மதிப்புமிக்கது, காரணம் மரணத்தின் வாயிலாக உயிர்த்தெழுதல் நடக்கிறது.

அன்பில் மரித்துப் போங்கள். அன்பைப்போல பிறப்பெடுப்பீர்கள். மீண்டும் பழைய நிலையில் இருக்க மாட்டீர்கள். உலகம் முற்றிலும் புதிதாகத் தோன்றும். நிறைய அன்பு இருந்தால், அதே உலகம் தெய்வீகமாகத் தெரியும். அன்பே நான் தரும் செய்தியாகும். ஆனால் போதிக்கும்போது அது குறித்துப் பேசுவதில்லை. அன்பாக நான் இங்கு வாழ்கிறேன். அது கிரியா ஊக்கியாக அமைந்து ஏதோ ஒன்றை உங்களிடம் தூண்டுகிறது. ஏதோ ஒன்று உங்களிடம் வளரத் தொடங்குகிறது. நீங்கள் சூல் கொள்கிறீர்கள்.

ஒரு பெண் முதல் முறை கர்ப்பமாகும் சமயத்தில் நிறைய அச்சப்படுகிறாள். அதில் வலிகள், வேதனைகள், கனம் போன்றவற்றை உணர்கிறாள். முற்றிலும் புதிய ஒன்று நடந்தேறுகிறது. அவள் எங்கே போகிறாள், என்ன நடக்கிறது என்று தெரிவதில்லை. புதிய உயிர் ஜனிக்கிறது.

அன்பில் நீங்கள் சூல் கொள்கிறீர்கள். புதிய உயிர் தோன்றுகிறது. முதலில் அது கனமாக இருக்கிறது. முதலில் அது முற்றிலும் புதிதாக இருப்பதால் தப்பியோடிவிட ஆசைப்படுகிறீர்கள். அன்பிலிருந்து ஒருபோதும் தப்பியோட வேண்டாம். காரணம் அன்பே தெய்வீகத்தின் கோவிலாகும். அது நிகழும்போது அது நடந்தேற அனுமதியுங்கள். நடந்தேற உதவுங்கள். நீங்கள் இறந்து, மறைந்து போகவேண்டியிருந்தால் இறந்து மறைந்து போய்விடுங்கள். சவாலை ஏற்றுக் கொள்ளுங்கள். சவாலை எதிர்கொள்ளுங்கள். அதன் பிறகு முதல் முறையாக உங்கள் வாழ்வில் மதிப்புமிக்க ஒன்றைப் பெறுவீர்கள். ஒரு தெய்வீக நறுமணம் கிட்டும்.

நீங்கள் ஏன் அன்பின் பிடியில் அகப்பட நேர்ந்தது என்று என்னால் விளக்கம் அளிக்க இயலாது. நான் வாழ்க்கையுடன் அன்புப் பிணைப்பு கொண்டிருக்கிறேன். நான் அன்பு வயப்பட்ட நிலையில் இருக்கிறேன். சமநிலை கொண்ட ஒன்றை நான் உங்களுக்குள் நான் உருவாக்க வேண்டும். அது செயலும், விளைவும் சார்ந்த விஷயம்

போன்றது அல்ல. ஆனால் கார்ல் கஸ்டாவ் ஜுங் கூறியது போல, உடனிணைந்து செயல்படும் விதியாக அது இருக்கும்.

ஒரு சிறிய அறையில் அமர்ந்து நீங்கள் சிதார் வாசித்தால், அறையின் மூலையில் இருக்கும் மற்றொரு சிதார் தானாக அதற்கு இசைவுகாட்டி ஒலியெழுப்பும் என்று கூறப்படுகிறது. அது அதிர் வடையும். அதன் தந்திகள் நடனமிடத் துவங்கும். நீங்கள் ஒரு சிதார் வாசிக்கிறீர்கள். மற்றொன்றைத் தொடவேயில்லை. நீங்கள் உங்கள் சிதாரை வாசிக்கும்போது ஏதோ ஒன்று அடுத்த சிதார் நோக்கிச் செல்கிறது. இது செயலும் விளைவும் சார்ந்த விதிமுறை அல்ல. உடனிணைந்து செயல்படும் விதியாகும்.

நான் அன்பாக இருக்கிறேன். நீங்கள் என் அருகில் நெருங்கி வந்தால் ஏதோ ஒன்று உங்கள் உள்ளத்தில் நடனமிடத் தொடங்குகிறது. அதை அனுமதியுங்கள். உங்கள் சமூகம் அதற்கு எதிராக இருக்கிறது. உங்கள் கல்விமுறை அதற்கு எதிராக இருக்கிறது. உங்கள் வாழ்க்கை இன்றுவரை அதற்கு எதிராக இருந்து வருகிறது. முதலடி எடுத்து வைப்பது கடினமான செயல்தான். அவற்றை எடுத்து வைத்தே ஆக வேண்டும். இல்லாதுபோனால் வாழ்வின் சிறப்பை நீங்கள் தவற விட்டு விடுவீர்கள்.

சிறப்புமிக்கவை எல்லாம் அன்பு கொண்டவர்களுக்கே வெளிப் படும். ஒரு உண்மையான சீடர் அன்பு கொண்டவராக இருக்கிறார்.

ஏன் என்று கேட்பதற்குப் பதிலாக, முன்னேறித் தாவிக் குதி யுங்கள். எனது வர்ணத்தில் கலந்து நீங்களும் நிறம் பெறுங்கள். இந்த வளரும் குழுவினரின் ஒரு அங்கமாக, இந்த அலைவீச்சின் ஒரு அங்க மாக இருந்தால் நீங்கள் தெய்வீகத்தை அடைவது எளிது. தனியே முயன்றால் அது கடினமாக இருக்கும். பலர் சேர்ந்து முன்னோக்கி நகரும்போது அது எளிதானதாக மாறுகிறது. ஒருவருக்கு ஒருவர் அங்கே உதவி செய்கிறார்கள்.

சந்நியாசம் என்பது வேறு ஒன்றுமில்லை. விந்தையான ஒரு பள்ளியை உருவாக்கிப் பயணப் பாதையில் ஒருவருக்கு ஒருவரை உதவி செய்திடலே ஆகும். பயணம் நீண்டதாகவும், கடினமான தாகவும், இலக்கு வெகு தொலைவில் இருப்பதாகவும் அமைந்திருக் கிறது. ஆயிரத்தொரு தடைகளும், படுகுழிகளும் பாதையில் உள்ளன. எந்த நேரத்திலும் ஒருவர் வழிதவறிப் போய்விடலாம். நீங்கள் மேல் நோக்கிச் செல்லும்போது அது மேலும் கடினமானதாக மாறிவிடுகிறது. மூச்சு விடுவதும் சிரமமாகி விடுகிறது. மேலே செல்லும்போது தவறி விழுந்துவிடும் ஆபத்து பெரிய அளவில் இருக்கிறது. பலர் ஒன்று

சேர்ந்து செல்லும்போது ஒருவரை ஒருவர் பிடித்துக் கொள்வார்கள். ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வார்கள்.

நீங்கள் என்னுடன் அன்புகொள்ளத் தொடங்கிவிட்டீர்கள். ஏன் என்று கேட்பதற்குப் பதிலாக அதனுள் ஆழமாக பயணியுங்கள். அதன் ஆழத்தைக் கண்டறியுங்கள். அவை உங்கள் கேள்விக்குப் பதில் தராது. உங்கள் கேள்வியை காணாமல் போகச் செய்துவிடும். அனுபவம் அறிவாக மாறிவிடாது. அனுபவம் உங்களை மேலும் கபடமற்றவராக மாற்றுகிறது. உண்மை அனுபவங்கள் உங்களை கூடுதல் அறிவாளி யாக மாற்றுவதற்குப் பதிலாக அதிக அளவில் கபடமற்றவராக மாற்று கின்றன. பிரச்சினைகள் இங்கே தீர்க்கப்படுவதில்லை. காணாமல் போகுமாறு செய்யப்படுகின்றன.

இரண்டாவது கேள்வி

ஓஷோ,

நம்மில் பெரும்பாலானவர்கள் பிதாகோரஸை கணித சூத்திரம் கண்டறிந்த வராகவே எண்ணி வருகிறோம். ஒரு செங்கோண முக்கோணத்தின் பரப்பளவு மற்ற அதன் இருபக்கங்களின் கூட்டுத் தொகைக்குச் சமம் என்ற அந்த சூத்திரத்தில் ஏதாவது விந்தையான முக்கியத்துவம் உண்டா?

தோற்றம் எனப்படும் இந்த சூத்திரம் மூலம் பல நூற்றாண்டு களாக பிதாகோரஸ் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார். மேற்கு நாடுகளில் அவர் ஒரு புத்தர் என்பதை மக்கள் சுத்தமாக மறந்து போய் விட்டார்கள். அவர் ஒரு சிறந்த கணிதமேதை என்று மட்டுமே நினைத் திருந்தார்கள். வரலாற்றுப் புத்தகங்களில் அவர் கணிதமேதை என்று தான் குறிப்பிடப்பட்டார். பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகங்களில் அவரது தேற்றம் காரணமாகவே அவர் நினைவு கூறப்பட்டார்.

இந்த தேற்றம் ஒரு ஆபத்தான நிரூபணமாகிவிட்டது. அவர் அதை கண்டறியாது இருந்திருந்தால் மிகவும் நன்றாக இருந்திருக்கும். அவர் ஒரு இறைமையிலாளர் (Mystic) என்று இனம் கண்டு கொண் டிருப்பார்கள். அந்த தேற்றத்தை வேறு யாராவது ஒருநாள் கண்டு பிடிக்கவே செய்திருப்பார்கள். விஷயங்கள் வெகுகாலம் காத்திருப்ப தில்லை. எந்த ஒரு அறிவியல் கண்டுபிடிப்பும் நிகழவே செய்யும். அதற்குக் கூடுதலாகச் சில வருடங்கள் பிடிக்கலாம்.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் புவியீர்ப்பு விசைக் கோட்பாடு ஒரு சிக்கலான விஷயம். இப்போது அது எல்லோருக்கும் நன்கு தெரிந்த ஒன்று. ஐன்ஸ்டீன் அதை கண்டுபிடிக்காமல் இருந்திருந்தால், இரண்டு மூன்று வருடங்களில் வேறு யாராவது அதை கண்டுபிடிக்கவே

செய்திருப்பார்கள். அது ஏன்? அறிவியல் என்பது கூடுதல் குறைச்சலான ஒரு தொகுப்பு விந்தை.

ஆன்மீகம் தனிமனிதன் சார்ந்தது. அறிவியல் சமூகம் சார்ந்தது. ஆன்மீகத்திற்கு வாரிசு பாரம்பரியம் கிடையாது. அறிவியல் பாரம்பரியமுள்ளது. எடிசனின் கண்டுபிடிப்பு நிகழ்ந்ததும் யாரோ ஒருவர் அதில் கூடுதல் மேம்பாடுகளை ஏற்படுத்துவார். நியூட்டன் விதி கண்டறிந்த பிறகு ஐன்ஸ்டீன் தேவையான ஒருவராக மாறுகிறார். இது செயலும், விளைவும் சார்ந்த உலகம். ஒன்று மற்றொன்றுக்கு வழியமைத்துச் செல்கிறது.

ஆனால் ஆன்மீக உலகில் பாரம்பரியம் என்பது சாத்தியமில்லை. புத்தர் தோன்றவில்லை என்றால் வேறு யாரோ ஒருவர் புத்தர் கண்டறிய இருந்ததை வெளிப்படுத்த வேண்டிய அவசியம் இல்லை. ஏசு தோன்றவில்லை என்றால் வேறு ஒருவர் ஏசு வந்த அதே பாதையில் வர வேண்டும் என்ற அவசியமில்லை. அது தனிமனித நிலை. முற்றிலுமான தனிமனிதநிலை. அதுவே ஆன்மீகத்தின் அழகாகும். அது சமூகம் சார்ந்த முயற்சியல்ல.

அறிவியல் தொடர்ந்து முன்னேறிச் சென்று கொண்டேயிருக்கிறது. அது கடந்த காலத்தைச் சார்ந்திருக்கிறது. ஆன்மீகம் கடந்த காலத்தைச் சார்ந்து இல்லை. நியூட்டன் இல்லை என்றால் ஐன்ஸ்டீன் இல்லை. அவசியமான ஒரு தொடர்புக் கண்ணியாக நியூட்டன் தேவைப்படுகிறார். ஆனால் கிருஷ்ணர் இல்லாவிட்டாலும் புத்தர் அங்கு இருப்பார். தொடர்புக் கண்ணி தேவையில்லை. கடந்த காலத்தில் புத்தர் இல்லாது போயிருந்தாலும் நான் இங்கே இருக்க முடியும். தொடர்புக் கண்ணி தேவையில்லை.

ஆன்மீகம் உங்கள் சுயமையம் நோக்கி உள்முகமாகச் செல்கிறது. அறிவியல் இயற்கை விதிகளைக் கண்டறிய வெளிப்புறமாகச் செல்கிறது. அது எல்லோருக்கும் கிடைக்கக் கூடியது. விரைவிலா, தாமதமாகவா எப்போது கிடைக்கும் என்பதுதான் கேள்வி. ஒவ்வொரு அறிவியல் கண்டுபிடிப்பும் நடந்தேறவே செய்யும்.

ஆனால் பிதாகோரஸ் தனது கணிதத் தேற்றம் மூலம் தொலைந்து போனார். அதன் வாயிலாகவே அவர் பெரிதும் அடையாளப்படுத்தப்பட்டார். அவர் ஒரு கணிதமேதை என்றுதான் அறியப்பட்டார். அவரது உண்மை இயல்பு கணித மேதாவிலாசம் அல்ல. அது அவரது பொழுது போக்கு. கணிதம் அவருக்கு ஒரு பொழுது போக்காக அமைந்திருந்தது. கிருஷ்ணர் புல்லாங்குழல் ஊதுவதைப் பொழுது போக்காகக் கொண்டிருந்ததுபோல இதுவும் இருந்தது. மக்கள் அவரை ஒரு இறைமை

யிலாளர் என்பதை மறந்து விடாமல் இருந்தது நல்லதுதான். அவரை புல்லாங்குழல் வாசிப்பவர் என்று எண்ணாமல் இருந்தது நல்லதுதான்.

ஆனால் பிதாகோரஸுக்கு அப்படித்தான் நடந்தது. மேற்கு நாடு என்பதால் அவ்விதம் நடந்துவிட்டது. வெளியுலகில் பயன்படுத்தப் படும் விஷயங்களின் மீது மேற்கு நாட்டவர்கள் அதிக அக்கறை காட்டுவார்கள். அவரது தேற்றம் அர்த்தம் நிறைந்தது. அந்த தேற்றம் இல்லாது போயிருந்தால் வடிவ கணிதத்தில் முக்கியமான ஒன்று தவறிப் போயிருக்கும். அதை அவர் நிறைவு செய்தார்.

அடிப்படையில் அவர் ஒரு கணிதமேதை என்று மேற்கு நாட்டினர் நினைத்தார்கள். இறைமையியல் என்பது அவரது கிறுக்குத் தனம் என்று கருதினார்கள். விஷயம் தலைகீழாக்கப்பட்டுவிட்டது. இறைமையியல் அவர் உயிர், கணிதம் அவரது பொழுதுபோக்கு, அதில் இறைமையியல் முக்கியத்துவப்படுத்தப்படவில்லை.

மேலும் எனக்கு வடிவகணிதம் பற்றி அதிகம் தெரியாது. அது பிதாகோரஸின் தேற்றம் என்பது மட்டும் தெரியும்.

முன்னர் ஒரு காலத்தில் இந்தியக் குறுநில மன்னர் ஒருவருக்கு மூன்று மனைவிகள் இருந்தனர். கொஞ்சம் விநோதமான நிகழ்வாக அந்த மூன்று பெண்களும் ஒரே சமயத்தில் கர்ப்பம் அடைந்தார்கள். பிரசவம் நெருங்கும் சமயத்தில் வந்தபோது புதுமையாக ஏதாவது நடக்க வேண்டும் என்று அவர் விரும்பினார்.

முதல் மனைவியை இறக்குமதி செய்யப்பட்ட சிங்கத் தோலில் உருவாக்கப்பட்ட கூடாரத்தில் தங்கவைத்தார். இரண்டாவது மனைவியை இறக்குமதி செய்யப்பட்ட புலித்தோலில் உருவாக்கப் பட்ட கூடாரத்தில் தங்கவைத்தார். மூன்றாவது மனைவியை நீர்யானைத் தோலில் உருவாக்கப்பட்ட கூடாரத்தில் தங்கவைத்தார்.

முதல் மனைவிக்கு சிறிய ஒரு ஆண் குழந்தை பிறந்தது. "அபாரம்! இவன் சிறந்த போர்வீரனாக வளர்வான்" என்று மன்னர் மகிழ்ந்தார். இரண்டாவது மனைவிக்கு பெண் குழந்தை பிறந்தது. "அற்புதம்! நமது இனத்திற்கு மண்-மாதா பிறந்திருக்கிறாள்" என்று புகழ்ந்தார். மூன்றாவது மனைவிக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. மற்ற இரண்டு பெண்களுக்கு இந்த மூன்றாவது மனைவி சமமானவள் என்று நிரூபணமாயிற்று.

அது தவிர வேறு ஒன்று எனக்கு பிதாகோரஸின் வடிவகணிதம் பற்றிய தேற்றம் குறித்துத் தெரியாது.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**அறிவு விருட்சம் படைப்பின் ஒரு அங்கம் என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆதாமும், ஏவாளும் அதன் கனியைத் தின்னக் கூடாது என்று தடுக்கப் பட்டிருந்தார்கள். ஒருவர் அறிவு பெறும்போது என்ன நடக்கிறது? அந்த மரத்தின் கனியையும், மரத்தையும் அவர் எப்படிப் பயன்படுத்த முடியும்?**

ஈடன் தோட்டத்தில் இரண்டு விசேஷ மரங்கள் இருந்தன. ஒன்று அறிவு விருட்சம் எனப்பட்டது. அந்த மரத்தைப் பயன்படுத்தக் கூடாது என்று ஆண்டவர் ஆதாம், ஏவாளுக்குத் தடை விதித்திருந்தார். மரத்தின் பழத்தைத் தின்னக் கூடாது. மற்றொரு மரம் இருந்தது. வாழ்க்கை மரம். அவற்றிலிருந்து எதையும் தின்னக்கூடாது என்று ஆதாம் ஏவாளுக்கு ஆண்டவர் தடை விதித்திருந்தார். வாழ்க்கை மரம் பற்றி ஆதாமும், ஏவாளும் அக்கறைப்படவில்லை. அறிவு மரம் மீதுதான் ஆர்வம் கொண்டார்கள்.

இந்த குட்டிக்கதை அழகானது. மிகவும் முக்கியத்துவம் அமைந்த ஒரு குட்டிக்கதை என்பதை நினைவில் வையுங்கள். ஆண்டவர், ஆதாம், ஏவாள் சம்பந்தப்பட்டது அல்ல. அது உங்களுடன் ஒரு வகையில் சம்பந்தப்பட்டது.

நாம் ஈடன் தோட்டத்தில் இருக்கிறோம். உயிர் மரம், அறிவு மரம் என்று இரண்டு மரங்கள் அங்கு உள்ளன. ஒவ்வொருவரும் அறிவு மரத்தின் மீதுதான் ஆர்வம் கொள்கிறார்கள். உயிர் மரத்தின் மீது அக்கறை காட்டுவோர் வெகு அபூர்வம். உயிர் மரத்தின் மீது அக்கறை கொள்பவர் புத்தராக, ஏசுவாக, மகாவீரராக, நபிகள் நாயகமாக மாறுகிறார். வெகு சிலர் மட்டும்தான் உயிர் மரம் மீது ஆர்வம் காட்டுகிறார்கள்.

உதாரணமாக முதல் கேள்வியைப் பார்க்கலாம். "நான் உங்கள் மீது அன்பு கொண்டுவிட்டேன். அது ஏன்?" இது அறிவு மரம் நோக்கிய நகர்வு. ஏன் என்ற கேள்வி அதன் பாதை. அன்புடன் இருப்பதை நம்மால் தடை செய்ய முடியாது. ஏன் என்ற கேள்வி கேட்கப்பட வேண்டும். நீங்கள் அன்பு கொள்வதை நிறுத்தினால் உயிர் மரத்தின் கனியை உண்பீர்கள். ஏன் என்ற கேள்வியைக் கேட்டால் உயிர் மரத் திலிருந்து விலகிச் செல்வீர்கள். அறிவு மரம் நோக்கி நகர்வீர்கள்.

ஏன் என்று தெரிந்துகொள்ள விரும்பினால் அது பயனற்ற செயல். அது உங்களுக்குப் போஷாக்கு அளிக்காது. அங்கு இருப்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். உலகிலுள்ள எல்லா நூலகத்தையும் ஒரு மனித மூளைக்குள் அடக்கிவிட முடியும். ஆனால் நீங்கள்

இதுவரை நிஜமாக எதையும் தெரிந்துகொள்ளவில்லை. நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கவில்லை.

அந்த குட்டிக்கதை குறியீட்டு வெளிப்பாடாகும். அது நமது கதை. நீங்கள் ஒரு ரோஜா மலரைப் பார்த்தால் அதை நெருங்கிச் செல்வதற்குப் பதிலாக, தொட்டு அதை நுகர்ந்து பார்ப்பதற்குப் பதிலாக, அதனருகே நடனமிட்டு ஆழ்ந்து அன்பு வழிபாடு செய்வதற்குப் பதிலாக, "இது எங்கிருந்து வந்தது? என்ன வகை ரோஜா இது?" என்று கேள்விகள் கேட்கிறீர்கள். கடந்த காலத்தில் பார்த்த வேறு ரோஜாக்களுடன் அதை ஒப்பிடுகிறீர்கள். அதைவிட இது பெரியதா, சிறியதா, அழகு கூடுதலா குறைச்சலா என்று பார்க்கிறீர்கள். ரோஜாவைப் பார்க்கும் தருணத்தில் நீங்கள் அறிவு மரம் நோக்கிச் செல்கிறீர்கள். நீங்கள் அனுபவங்களில் வாழவில்லை. ரோஜாவைப் பார்த்து நடனமாடவில்லை. ரோஜாவை உணரவில்லை.

மூங்கிலுக்கு நீங்கள் வர்ணம் பூச வேண்டுமென்றால் முதலில் நீங்கள் மூங்கிலாக மாறவேண்டும் என்று ஜென் கூறுகிறது.

ஜென் குரு ஒருவர் தனது சீடரை காட்டுக்கு அனுப்பினார். குரு நல்ல ஓவியர். சீடரும் திறமையான ஓவியர்தான். காட்டுக்குச் சென்று மூங்கில்களுடன் இருந்து மூங்கிலாகவே மாறும்படி சீடரிடம் குரு கூறினார். எப்போது மூங்கிலாக மாறுகிறாயோ அப்போது வந்து ஓவியம் வரையலாம். மூங்கிலாக மாறாத வரையில் நீ எது வரைந்தாலும் அடிப்படையில் அது தவறாகவே இருக்கும். காரணம் நீ மூங்கிலை உள்ளே இருந்து பார்த்ததில்லை" என்றார்.

இதுதான் புகைப்படத்திற்கும் ஓவியத்திற்கும் இடையிலான வேறுபாடாகும். புகைப்படம் வெளிப்பரப்பை மட்டும் காட்டுகிறது. மூங்கிலின் வெளிப்புறத்தைக் காட்டுகிறது. ஒரு ஓவியர் மூங்கிலின் வெளிப்புறத்தை வரைந்தார். ஓவியருக்கு என்ன அவசியம் இருக்கிறது? புகைப்படக் கருவி இன்னும் சிறப்பாக அதைச் செய்துவிடும். வேகமாகவும் செய்துவிடும். ஆனால் புகைப்படக் கருவி ஓவியரைப் பின்தள்ளி அகற்றிவிட முடியாது. ஒரு காரியத்தைக் கருவியால் செய்ய முடியாது. அதனால் மூங்கிலாக மாற முடியாது. ஓவியர் மூங்கிலாக மாறமுடியும்.

சீடர் காட்டுக்குச் சென்றார். மூன்று வருடகாலம் அவரைப் பற்றி எதுவும் தெரியவில்லை. குரு கவலைப்படலானார். "நீண்ட காலமாகி விட்டது" என்றார். குருவுக்கு வயதாகிக் கொண்டிருந்தது. சிலரை அனுப்பிச் சீடரைத் தேடச் சொன்னார். "அவர் எங்கே இருக்கிறார்?" என்று அவர்கள் கேட்டதற்கு, "எங்கே மூங்கில்களைப் பார்க்கிறீர்

களோ, அங்கே தேடிப் பாருங்கள். அவன் எங்காவது மூங்கிலாகவே மாறியிருப்பான்" என்றார்.

சீடர் மூங்கிலாக இருந்த நிலையில் அகப்பட்டார். பல மூங்கில் களுக்கு நடுவே நின்று கொண்டிருந்தார். அது அழகான காலை நேரம். காற்றடித்துக் கொண்டிருந்தது. மூங்கில்கள் அசைந்தாடின. சீடரும் அவைகளுடன் சேர்ந்து அசைந்தாடினர். அவரைத் தேடிச் சென்றவர்கள் வியந்துபோயினர். அவர் ஒரு மனிதராக இல்லை என்று கண்டு கொண்டார்கள். முழுவதும் தன்னை மறந்துவிட்டார். அவர் ஒரு மூங்கில். மூங்கில் சூரிய ஒளியைப் பருகுவதுபோல் அவர் பருகிக் கொண்டு இருந்தார். அவர் சகதியில் நின்றிருந்தார். அவர் கால்கள் கிட்டத்தட்ட வேர்களாகவே மாறியிருந்தன. அவர் அசைந்தாடிக் கொண்டிருந்தார்.

வந்தவர்கள் அவரைப் பிடித்து இழுத்து வெளியேற்ற வேண்டி யிருந்தது. வற்புறுத்தி குருவிடம் அழைத்து செல்ல வேண்டியிருந்தது. குரு அவரைப் பார்த்துவிட்டு "முற்றிலும் சரி". இப்போது ஓவியம் வரையலாம். நீ நிஜமான மூங்கில் வரையப் போகிறாய். வெளியில் இருந்து மட்டும் மூங்கிலை நீ பார்க்கவில்லை. உட்புறத்தையும் பார்த்து இருக்கிறாய். இப்போது உட்புறம் இருந்தும் அதை நீ அறிந் திருக்கிறாய். அதுதான் உண்மையான அறிதலாகும். அதுவே வாழ்வை அறிதலாகும்" என்றார்.

ஆதாமும், ஏவாளும் அறிவு மரம் மீது விருப்பம் கொண்டார்கள். நாம் எல்லோரும் அறிவு மரம்மீது விருப்பம் கொள்வதுபோலவே அவர்களும் நடந்து கொண்டனர். சிறிய குழந்தைகளைப் பாருங்கள். அவை உடனே கேள்விகள் கேட்க ஆரம்பித்துவிடும். "ஏன்? ஏன் அது அப்படி இருக்கிறது?" என்று வினவும். ஆதாமும், ஏவாளும் மீண்டும் அறிவு மரம் நோக்கி நகர்ந்தார்கள்.

அறிவு மரத்தின் கனியை உண்பதற்கு நீங்களும் போகலாம். ஆனால் அது உங்களுக்குப் போஷாக்கு தராது. நிறைவு தராது. உங்களிடம் குப்பைகள் நிறைந்து கிடக்கும். காரணம் அறிவு என்பது தகவல். அது அனுபவமல்ல. அனுபவம் மட்டுமே விடுதலை தரும். உண்மையில் அனுபவம் மட்டுமே உங்களை அறிந்தவராக்கும்.

அறிவுள்ளவராக இருப்பது என்பது ஒருவகை. தெரிந்தவராக இருப்பது என்பது முற்றிலும் வேறு வகை. நவீன தத்துவவாதி அறிவுள்ளவர். அவர் அறிவு மரத்தின் கனியை உண்கிறார். பிதா கோரஸின் தத்துவவாதி பிதாகோரஸின் கருத்தைச் சார்ந்த தத்துவவாதி பார்வையாளராக, தெரிந்து கொள்பவராக இருக்கிறார். அவர் தியானிக்

கிறார். மெதுவாக இயற்கையோடு கலந்து அதில் மூழ்கிவிடுகிறார். முழுமையின் ஒரு அங்கமாக அவர் அதனுடன் கலந்து போகிறார். அப்போது முற்றிலும் புதிய அறிதல் ஏற்படுகிறது. அதன் தரமும் வித்தியாசமாக இருக்கிறது.

"அறிவு விருட்சம் படைப்பின் ஒரு அங்கம் என்று எழுதப் பட்டிருக்கிறது. ஆதாமும், ஏவாளும் அதன் கனியைத் தின்னக் கூடாது என்று தடுக்கப்பட்டிருந்தார்கள். ஒருவர் அறிவு பெறும்போது என்ன நடக்கிறது? அந்த மரத்தின் கனியையும், மரத்தையும் அவர் எப்படிப் பயன்படுத்த முடியும்? என்று நீங்கள் என்னிடம் கேட்டீர்கள்.

அறிவு மரத்தின் கனியை நீங்கள் உண்டால் எப்போதும் ஞானம் பெற்றிட முடியாது. நிறையத் தகவல்களையே சேகரித்துக் கொள் வீர்கள். ஞானம் பற்றியும், கடந்த காலத்தில் ஞானம் அடைந்த மனிதர்கள் பற்றியும் இருக்கலாம். ஆனால் அது உங்களின் சொந்த மான புரிதல் அல்ல. உங்களிடமிருந்து அது வெளிப்படவில்லை. அது உங்களின் சுய விழிப்புணர்வாக இருக்க முடியாது.

நீங்கள் அறிவுமரத்தின் கனியை உண்டால், நீங்கள் வாழ்வை, அன்பை, மகிழ்வை, சோகத்தை அனுபவித்தால் - கசப்பையும், இனிப்பையும் அனுபவித்தால் - நீங்கள் வாழ்வை அனுபவித்தால் அது முழுமை பெற்றதாக அமையும். அதன் உயரங்கள், ஆழங்களைக் காண்பிர்கள். பள்ளத்தாக்குகள், சிகரங்கள் கொண்ட இரவுகள், பிரகாச மான நாட்கள், துயரங்கள், ஆனந்தங்கள் போன்றவற்றைக் காண்பீர்கள். வாழ்வின் முழுமையை அனுபவித்தால் நீங்கள் ஞானம் பெறுவீர்கள். வாழ்வை முழுமையாக அனுபவித்தால் மட்டுமே அது ஞானத்தைக் கொண்டுவரும். நீங்கள் ஞானம் பெறும்போது நீங்களே ஒரு அறிவு விருட்சமாக மாறுகிறீர்கள். அறிவு விருட்சத்தின் கனியை உண்டதால் யாரும் அந்த விருட்சமாக மாறமுடியாது. வாழ்க்கை மரத்தின் கனியை உண்டால்தான் அறிவு மரமாக மாறமுடியும்.

புத்தர் நாற்பத்து இரண்டு வருடங்கள் மக்கள் மத்தியில் உரை யாற்றினார். அவர் ஞானம் பெற்ற நாளில் அறிவு விருட்சமாக மாறி விட்டார். நீங்கள் ஒரு புத்தரிடம் சென்றால் அங்கே கிடைக்கும் கனி களை உண்ண முயலாதீர்கள். ஒவ்வொரு ஞானம் பெற்றவரும் அறிவு மரம்தான். அந்த கனியை உண்பதற்குப் பதிலாக - அவை சுவை யாகவும் இனிப்பாகவும் இருக்கும் - புத்தநிலையில் வாழ்ந்திட முயலுங்கள். புத்தரிடமிருந்து தகவல்கள் சேகரிப்பதற்குப் பதிலாக அவரது உணர்வுகளை கிரகித்துக் கொள்ளுங்கள்.

பல தடவை மக்கள் இங்கே வருகிறார்கள். நான் எதைச் சொன்னாலும் அதைக் குறித்து வைத்துக் கொள்கிறார்கள். குறிப்பாக

இந்தியர்கள் இதைச் செய்கிறார்கள். ஒரு மருத்துவர் இங்கே வருவார். தொடர்ந்து குறிப்புகள் எழுதிக் கொண்டே இருப்பார். நான் அவரை அழைத்து "என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர், "நீங்கள் எது சொன்னாலும் அழகாக இருக்கிறது. நான் மறந்து போய் விடக்கூடாது என்பதற்காக அவற்றைக் குறித்துக் கொள்கிறேன்" என்றார்.

இந்த மனிதர் கனியை உண்கிறார். தகவல் சேகரிக்கிறார். என்னை முழுமையாகத் தவறவிடுகிறார்! நான் என்ன சொல்கிறேன் என்பதில் அவர் கவனம் செலுத்தவில்லை. அதை எழுதுவதிலும், மனனம் செய்வதிலும்தான் ஆர்வம் கொள்கிறார். என்ன சொல்லப் படுகிறது என்று அவர் புரிந்து கொள்வதில்லை. புரிந்துகொள்ள வேண்டுமானால் முழுமையான கவனத்துடன், என்னுடன் இசைந்து இருக்க வேண்டும்.

இது பேச்சு மூலமான தொடர்பு சம்பந்தப்பட்டதல்ல. இது பேச்சற்ற தொடர்பாகும். உணர்வுகளை உறிஞ்சிக் கொள்ள வேண்டும். அதனால்தான் நான் ஒரு உண்மையான சீடர் நரமாமிசம் உண்ணும் காட்டுமிராண்டி போலிருக்க வேண்டும் என்று அடிக்கடி கூறுகிறேன். அவர் குருவை உண்கிறார். குருவை அருந்துகிறார். குடிகாரராகி விடுகிறார். அவர் சக்தியைப் பெற்றுக் கொள்கிறார்.

இடமாற்றம் பெறுவது அறிவு அல்ல. சக்தி ஆகும். அந்த இட மாற்றம் ஒளியாக இருக்க வேண்டும். அது மதநூல்களுக்கு அப்பாற் பட்டது. நான் என்ன சொல்கிறேன் என்பதில் மட்டும் நீங்கள் கவன மாக இருந்தால், நீங்கள் பல அழகான கனிகளைச் சேகரிப்பீர்கள். அது ஆதாம், ஏவாள் செய்தது போன்ற காரியம்தான்.

அப்படியானால் அந்த சர்ப்பம் யார்? அது உங்கள் மனதைப் பிரதிநிதித்துபவப்படுத்துகிறது. உங்கள் மனம் ஆர்வம் நிறைந்தது. உங்கள் மனம் எப்போதும் தொடர்ந்து தகவல்களுக்காக அலைந்து திரிகிறது. உங்கள் மனம் சர்ப்பமாகும். உங்கள் மனம் முடிந்தவரை யில் அறிவு மரத்தின் கனிகளை உண்ணுங்கள். எந்த அளவு உண்ண முடியுமோ அந்த அளவு கடவுள்போல மாறுவீர்கள்" என்று தூண்டி விடுகிறது.

கடவுள் போல மாறுவது என்பது வேறு விஷயம். கடவுளாகவே மாறுவது முற்றிலும் மாறுபட்ட வேறு விஷயம். நீங்கள் கடவுளாகவே மாறிவிட்டால், கடவுள்போன்ற நிலை என்பத எதற்குத் தேவை? அது ஒரு எளிய மாற்றுப் பொருள். நீங்கள் பார்ப்பவராக, அறிபவராக மாறும்போது அறிவுள்ளவராக இருக்க வேண்டிய அவசியம் என்ன?

நீங்கள் சுயமாக ஒரு புத்தராக மாறும்போது அதற்குக் கீழான ஒரு நிலையில் ஏன் அமர வேண்டும்? கீழான ஒன்றில் ஏன் திருப்தி அடைந்திட வேண்டும்? அதை நீங்களே சுவைத்துப் பாருங்கள்! அறவு மரம் என்ற அதுவே வாழ்க்கை மரமாக மாறிவிடும்.

புத்தர் என்பவர்கள் வெறும் வழிகாட்டிதான். நீங்கள் அப் பாதையில் நடந்து சென்றாக வேண்டும்" என்று புத்தர் கூறுகிறார்.

ஜென் பிரிவினர், "விரல்கள் நிலாவைச் சுட்டிக் காட்டுகின்றன" என்கிறார்கள். விரல்கள் மீது அதிக ஆர்வம் காட்டாதீர்கள். விரல்களை மறந்துவிடுங்கள். வானத்து நிலவைப் பாருங்கள். புரிதல் உள்ள மனிதன் விரல்களை மறந்துவிட்டு நிலவைப் பார்ப்பான். விழிப்பு, சுயஉணர்வு, எச்சரிக்கை போன்றவை இல்லாத மனிதன் விரல்களைச் சப்பிக்கொண்டு நிலவை மறந்துவிடுகிறான்.

அப்படித்தான் பண்டிதர் என்ற அறிவாளி பிறக்கிறார். பூமியில் உள்ள மனிதர்களில் மிகவும் முட்டாள்கள் பண்டிதர்கள்தான். அவர் களின் முட்டாள்தனமே அறிவாக இருக்கிறது. அது பெருமளவு அறிவால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அவர்களால் கீதை, குரான், பைபிளில் இருந்து மேற்கோள் காட்ட முடியும். அவை எல்லாம் தங்களுக்குத் தெரியும் என்று அவர்களுக்குத் தெரியும். அதேசமயம் அவர்களுக்கு எதுவும் தெரியாது. அடியாழத்தில் அவர்கள் வெறுமை யாக இருக்கிறார்கள்.

அறிவின்மீது நீங்கள் அதிகம் ஆர்வம் காட்டினால் நீங்கள் வெறுமையாக, உள்ளீடு இல்லாமல், அற்பமாகிப் போவீர்கள். வாழ்தல் மீது ஆர்வம் காட்டுங்கள். வாழ்தலே நிஜமான விஷய மாகும். தியானம் என்றால் என்ன என்று தகவல்கள் சேகரிக்காதீர்கள். தியானம் செய்யத் துவங்குங்கள்! நடனம் என்றால் என்ன என்று தகவல்கள் சேகரிக்காதீர்கள். நடனத்திற்காகவே கலைக்களஞ்சியங்கள் இருக்கின்றன. நீங்கள் நடனமாடாவிட்டால் முழு கலைக்களஞ் சியமும் பயனற்றதுதான். அந்த கலைக்களஞ்சியங்களைச் சுமந்து திரிந்தால் அவை பெரும் சுமைகளாகிவிடும். நடனம் சம்பந்தப்பட்ட கலைக்களஞ்சியத்தை சுமந்து திரிவதால் அந்த அதிகமான கனம் உங்களை நடனமாட விடாது. அது தடையாக அமைந்துவிடும்.

எல்லா கலைக்களஞ்சியங்களையும் அப்பால் போடுங்கள். மனிதர்கள் நடமாடும் கலைக்களஞ்சியங்களாக மாறிவிட்டார்கள். அறிவின் சுமையிலிருந்து விடுபட்டு வாழத் தொடங்குங்கள். நீங்கள் வாழத் தொடங்கினால் சாதாரணப் பொருட்களும் அசாதாரண அழகுடன் திகழும் சிறிய பொருட்கள் - வாழ்வு சிறிய விஷயங்களின்

தொகுப்பாக இருக்கிறது - தீவிரம், விருப்பம், அன்பு போன்ற தகுதியை நீங்கள் அங்கு கொண்டுவந்தால், அவை மாற்றமடைந்து ஒளிபெறும்.

ஞானம் பெற்ற ஒருவர் அறிவு மரமாக மாறுகிறார். புத்தர்களிடம் கவனமாக இருங்கள்! "என்னை வழியில் சந்தித்தால் கொன்று விடுங்கள்" என்று அதனால்தான் புத்தர் கூறினார். புத்தர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள்.

மஜாராஸ்திரர் தனது சீடர்களிடம் கடைசியாக கூறியது "என்னிடம் எச்சரிக்கையாக இருங்கள்!" என்பதுதான். மலைப் பகுதிக்குச் சென்று மறைந்து இறந்துவிடப் புறப்பட்டார். மலையின் அமைதியில், நித்திய கன்னித்தன்மையில் கலந்து இறந்துவிட விரும்பினார். அவர் அழகான நீண்ட வாழ்வு வாழ்ந்தார். இப்போது இறக்கும்போதும் அழகான மரணத்தை விரும்பினார். சலசலக்கும் நீரோட்டம், பறவைகள், மலர்கள், இனிய நறுமணம் வீசும் பள்ளத் தாக்குப் பகுதியில் அழகாக இறக்க விரும்பினார்.

சீடர்கள் அவரிடம், "உங்கள் கடைசிச் செய்தி என்ன?" என்று கேட்டார்கள்.

அவர், "என்னிடம் எச்சரிக்கையாக இருங்கள்" என்றார்.

எல்லா சிறந்த மனிதர்களின் கடைசிச் செய்தியும் இப்படித்தான் இருக்கின்றன.

புத்தர் தனது உடலை உதறித் தள்ளிய சமயத்தில் ஆனந்தர் என்ற அவரது தலைமைச் சீடர் "பகவானே! உங்கள் கடைசிச் செய்தி என்ன?" என்று கேட்டார்.

புத்தர் கண்திறந்து பார்த்துவிட்டு, "உனக்கு நீயே ஒளியாக இரு. என்னைப் பற்றிய சகலத்தையும் மறந்துவிடு. உனக்கு நீயே ஒளியாக இரு" என்றார்.

வாழுங்கள், களித்திருங்கள், அன்புகாட்டுங்கள். புத்தரிடம் இருந்து ஏதாவது கற்றுக்கொள்ள விரும்பினால், ஞானம் பெற்ற ஒருவரிடமிருந்து அறிய விரும்பினால் விரல்களை மறந்துவிட்டு வானத்து நிலவைப் பாருங்கள். நிலவே வாழ்க்கை. விரல்கள் அறிவு மட்டுமே ஆகும்.

நான்காவது கேள்வி

ஓஷோ,

மூன்று மாதங்களுக்கு மேலாக நான் சந்நியாசம் பெறுவது பற்றி யோசித்து வருகிறேன். அதற்கு ஏன் இத்தனை எதிர்ப்பு

**என்று புரியவில்லை. அது பலருக்கு எளிதான ஒரு காரியமாகத் திகழ்கிறது. இது பற்றி நீங்கள் ஏதாவது கூறமுடியுமா?**

பிரச்சினைக்குள் நாம் ஆழமாகச் சென்று பார்க்க வேண்டும். விருப்பம் கொள்ளும் திறனற்றவராக நீங்கள் இருக்கிறீர்கள். சுய விருப்பம் கொள்வது எப்படி என்று உங்களுக்கு மறந்துபோய்விட்டது. உலகிலுள்ள எல்லோருக்கும் இவ்விதம்தான் நடக்கிறது. குழந்தைப் பருவத்தில் பெற்றோர் உங்களுக்கான முடிவுகளை எடுக்கிறார்கள். நீங்கள் முடிவெடுக்க அவர்கள் விரும்புவதில்லை. சுயவிருப்பம் கொள்ள உங்களை அனுமதிப்பதில்லை. உங்கள் சார்பில் அவர்கள் விரும்புகிறார்கள். உங்களுக்காக அவர்கள் சிந்திக்கிறார்ள். உங்களுக் காக அவர்கள் முடிவு செ்கிறார்கள்.

என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. குழந்தைகள் ஏதுமறியா தவர்கள். எனவே பெற்றோர்தான் அவர்களுக்காக முடிவு செய்ய வேண்டும். இல்லாவிட்டால் குழந்தை பிழைத்திருக்க இயலாது. குழந்தைகளுக்காக பெற்றோர் சிந்தித்து, விரும்பி, முடிவு செய்து உதவு கிறார்கள். ஆனால் மற்றொரு உதவியும் உண்டு. காலங்காலமாக எல்லா பெற்றோரும் அப்படித்தான் இருக்கிறார்கள் என்பது வெளிப் படையானது. அந்த மற்றொன்ற மிகவும் முக்கியமானது.

குழந்தை வளர்ந்து சிந்திக்கும், விரும்பும், முடிவெடுக்கும் பக்குவம் பெற்றதும் அவனுக்கு அமைதி தந்து முடிவெடுக்க விட்டு விட ேண்டும். அவனுக்கு உதவி செய்யலாம். ஒத்துழைப்புத் தரலாம். தட்டிக் கொடுக்கலாம். குழந்தை சுயமாக காரியமற்றுத் தூண்ட வேண்டும்.

எந்த பெற்றோரும் அவ்வாறு செய்வதில்லை. குழந்தை இன்னும் தங்களைச் சார்ந்தே இருப்பதாக அவர்கள் எண்ணிக் கொள் கிறார்கள். குழந்தை கீழ்படிந்து நடப்பதை எண்ணி அதை அனுபவித்து மகிழ்கிறார்கள். குழந்தை எப்போதும் தங்களை எதிர்பார்த்து நிற்பதை அனுபவிக்கிறார்கள். அது அகந்தையை நிறைவு செய்யும் காரிய மாகும். தங்கள் முதல் கடமையை அவர்கள் நிறைவேற்ற வேண்டும். அது அவசியம். ஆனால் இரண்டாவது கடமையை ஒருபோதும் நிறைவேற்றுவதில்லை. அது மிகவும் முக்கியமானது.

பெற்றோர் நிஜமாகவே குழந்தை மீது அன்பு கொண்டிருந்தால் அவர்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். குழந்தை ஒரு முடிவு எடுக்கும் தருணத்தில் குழந்தையை அதன் போக்கில் விட்டுவிட வேண்டும். எவ்வித நிர்பந்தமும் செய்யக்கூடாது.

ஆனால் அப்படி நடப்பதில்லை. சமூகம் நோய் பீடித்துக் கிடக்கிறது. அந்த நோயின் காரணம் யாருக்கும் சுயமாகச் சிந்திக்க, முடிவெடுக்க, அனுமதி இல்லை. ஒவ்வொருவரும் உத்தரவிடும் ஒருவரை எதிர்பார்க்கிறார்கள்.

மூன்று மாதகாலம் சந்நியாசியாவது பற்றி நான் யோசித்தேன் என்கிறீர்கள். மூன்று மாதங்களா? நீங்கள் மூன்று மாதங்கள் அல்ல மூன்று வருடங்கள் வரையிலும் சிந்திக்கலாம். எப்படிச் சிந்தித்தோம் என்பதை நீங்கள் மறந்து போனீர்கள். தெரியாத ஒன்றினுள் எப்படிக் காலடி எடுத்து வைப்பது என்று உங்களுக்குத் தெரியவில்லை. நீங்கள் விருப்பம் கொள்ளவும், அதை பரிசோதித்துப் பார்க்கவும் உங்கள் குழந்தைப் பருவத்தில் உங்களுக்கு ஒத்துழைப்பு கிடைக்கவில்லை.

அந்த நோதனை சிலசமம் தவறாகவும், குறைபாடானதாகவும் அமையும்போது அதுவும் மதிப்புள்ளதுதான். தவறுகளில் இருந்துதான் ஒருவர் எதையும் கற்றுக்கொள்ள முடியும். ஆபத்தான பாதை வழியே தான் கற்றல் வந்து சேர்கிறது. நீங்கள் முயற்சிக்க வேண்டும், பரிசோதிக்க வேண்டும். நீங்கள் செய்யும் எதுவும் தவறாகிப் போகலாம். அதை நினைவில் கொள்ள வேண்டும். அதற்கு உத்திரவாதம் இல்லை.

புதிய ஒன்று எப்படி உத்திரவாதமானதாக இருக்க முடியும்? உங்கள் பெற்றோர் அங்கு இல்லை. உங்கள் ஆசிரியர்கள் அங்கு இல்லை. உங்கள் பாதிரியார்கள் அங்கு இல்லை. உங்கள் தலைவர்கள் எனப்படுவோரும் அங்கு இல்லை. நீங்கள் அங்கு தனித்துவிடப் பட்டிருக்கிறீர்கள். புதிய சூழ்நிலை அது. என்ன செய்வதென்று உங்களுக்குத் தெரியவில்லை. அதை இதற்கு முன்னர் சமாளித்த தில்லை. எந்த சிக்கலையும் நீங்களே எதிர்கொள்ள வேண்டும்.

இதையே தாமஸ் ஹன்னா இயந்திரமனித நிலை என்று கூறினார். வெகு அரிதாகவே ஒரு மனிதனை உலகில் நீங்கள் காண முடியும். நீங்கள் பார்க்கும் மனிதர்கள் எல்லோரும் இயந்திர மனிதர்கள். இயந்திர மனிதன் சுயமாக முடிவெடுத்துச் செயல்பட அனுமதிக்கப்டுபதில்லை. அவன் முடமாகி, ஸ்தம்பித்து இருக்கிறான். கட்டளையிட்டு வழிநடத்த ஒருவரைத் தேடுகிறான்.

இயந்திரமனிதன் எப்போதும் ஒரு முரட்டு எஜமானரைத் தேடுகிறான். எது செய்யலாம் எது செய்யக் கூடாது என்று எஜமான் சொல்ல வேண்டியுள்ளது. அவன் எப்போதும் ஒரு தலைவனைத் தேடுகிறான். எப்போதும் அடிமைத்தனதைத் தேடுகிறான். சிந்திக்கும் பொறுப்பை பிறரிடம் தள்ளிவிட நினைக்கிறான். இயந்திர மனிதனுக்கு சிந்தனை கடினமான வேலை. அது மகிழ்ச்சி தருவதாக, தூண்டுதல்

ஏற்படுத்துவதாக இல்லை. அவன் கவலை கொள்கிறான். அவனால் எந்த முடிவையும் எடுக்க இயலவில்லை. தனது முடிவு தவறாகி விடலாம் என்று அஞ்சுகிறான்.

இயந்திர மனிதன் என்பவன் வளராத சிறுவன் போன்றவன். அதனால்தான் உலகம் முழுவதும் இயந்திர மனிதர்களாகவே இருக்கிறார்கள். யாரும் வளர்ந்த மனிதர்களாக இல்லை. ஒவ்வொருவருக்கும் தந்தை என்ற ஒருவர் தேவைப்படுகிறார்.

உங்கள் சொந்தக் காலில் நில்லுங்கள். சந்நியாசம் கொள்ளுங்கள் என்றோ அல்லது அது வேண்டாம் என்றோ கூறவில்லை. அப்படிச் சொல்ல நான் யார்? உங்கள் சொந்தக்காலில் நில்லுங்கள். அது பற்றி யோசியுங்கள். உங்களுக்கு உத்தரவிட யாரும் இல்லை. பொறுப்பு முழுவதையும் உங்கள் தோளில் ஏற்றிக் கொள்ளுங்கள். அதுவே வளர்ந்த மனிதரின் அடையாளம். "நான் பொறுப்பேற்கிறேன். அனுபவம் பெறுகிறேன். அறிந்து கொள்வதற்காக நான் போகும் பாதை தவறாக இருக்கலாம் அல்லது சரியானதாகவும் இருக்கலாம். அதுபற்றி யாருக்குத் தெரியும்?" எப்போதும் அப்படி நடக்க வாய்ப்பு உள்ளது.

அப்படியான வாய்ப்பு குறித்து இயந்திர மனிதன் பெரிதும் அச்சம் கொள்கிறான். அவனுக்கு உத்திரவாதம் தேவை. இப்படிச் செய் என்று சொல்ல ஒருவர் எப்போதும் அவனுக்குத் தேவைப்படுகிறார். இல்லாவிடில் அவன் முட்டாள்தனமான அதீத எல்லைக்குச் சென்று விடுவான். எதைச் செய்யலாம் செய்யக்கூடாது என்ற அறிய ஜோதிடம் பார்க்கிறான். ஜோதிடர், கைரேகை பார்ப்பவர்களிடம் செல்கிறான். யாராவது ஒருவர் அவன் சார்பில் முடிவு செய்ய வேண்டும் என்று விரும்புகிறான். மற்றவர்கள் மீது பொறுப்பைச் சுமத்துகிறான். ஏதாவது தவறாகிப் போனால், "நான் என்ன செய்யட்டும்? ஜோதிடர் தவறாகச் சொல்லிவிட்டார். நான் என்ன செய்யட்டும்? கைரேகை பார்த்துச் சொன்னவர் ஒரு முட்டாள்" என்று வழக்கம்போல் கூறுவான்.

உங்கள் வாழ்வுக்கு வேறு யாரோ ஒருவர் பொறுப்பேற்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள். அப்படிச் செய்தால் நீங்கள் எப்படி வளர முடியும்? நீங்கள் எப்படி சுதந்திரம் பெற முடியும்? நீங்கள் சிறைப்பட்டே கிடைக்க நேரிடும்.

இயந்திர மனித நிலையை உதறித்தள்ளுங்கள். அதை உதறித் தள்ளுவதற்கான ஒரேவழி நீங்கள் சுயமாக விருப்பம் கொள்ளத் தொடங்க வேண்டும், சுயமாக முடிவெடுக்க வேண்டும். எப்போது தவறு செய்ய நேர்ந்தாலும் அதற்குப் பொறுப்பேற்றுக் கொள்ளுங்கள்.

தப்பு செய்வதில் எந்த தவறும் இல்லை. தப்பு செய்யும்போதுதான் எது சரி என்று தெரிகிறது. பொய்யானதை அறியும்போது உண்மை எது என்று புலப்படுகிறது. திருமபத்திரும்ப விழும்போது ஒருவர் எப்படி விழாமல் இருப்பது என்று தெரிந்து கொள்கிறார். திரும்பத் திரும்ப திசைமாறிப் போகும்போது பாதை தறிப்போகாமல் இருப்பது எப்படி என்று புரிந்து கொள்ளலாம். அதைத்தவிர வேறு வழியில்லை.

நீங்கள் தவறான சூழ்நிலைகளில் வளர்க்கப்பட்டுள்ளீர்கள். அதே விதமாகவே ஒவ்வொருவரும் வளர்க்கப்பட்டுள்ளார். உங்கள் பெற்றோர், உங்கள் ஆசிரியர்கள், உங்கள் தலைவர்கள், உங்கள் பாதிரியார்கள் எல்லோரும் இயந்திர மனிதர்கள். காரணம் அவர்களின் பெற்றோரும், ஆசிரியர்களும், பாதிரியார்களும் இயந்திர மனிதர்களாகவே இருந்தார்கள். அது தொடர்ந்து நடந்து கொண்டிருக் கிறது. நீங்கள் திரும்பிப் பார்த்தால் ஒவ்வொரு இயந்திர மனிதரும் அடுத்த மனிதரை இயந்திர மனிதராகவே மாற்றுகிறார்கள் என்பது புரியும்.

உங்களுக்கு ஒரு குழந்தை பிறந்தால் நீங்களும் அதே தவறைச் செய்கிறீர்கள். உங்கள் பெற்றோர் செய்த அதே தவறை நீங்களும் செய் கிறீர்கள். குழந்தையைச் சுயமாகச் செயல்பட அனுமதிப்பதில்லை. செய்திருந்தால் நீங்கள் வியந்து போயிருப்பீர்கள். குழந்தைகள் மிகவும் அறிவானவர்கள். ஆம், அவர்களுக்கு உங்கள் வழிகாட்டல் தேவை, உங்கள் உதவி தேவை. அவர்கள் விபரமறியாதவர்கள். ஆனால் அவர்கள் மிகவும் அறிவாளிகள். எனவே பெற்றோர் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். எப்போது உதவி செய்ய வேண்டும், எப்போது அதை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று தெரிந்துகொள்ள வேண்டும். உங்கள் குழந்தை நடக்கப் பழகும்போது கையைப் பிடித்துக் கொள்வது நல்லதுதான். ஆனால் வாழ்நாள் முழுவதும் அவன் கையைப் பிடித்துக் கொண்டே இருக்காதீர்கள்.

மனோதத்துவரீதியாக இதுதான் நடந்து வருகிறது. உங்கள் பெற்றோர் சென்ற பிறகும் நீங்ள் அவர்கள் பிடியில் இருந்தபடி நடக் கிறீர்கள். இன்னும் நீங்கள் தடுமாறியபடி அவர்களை பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் தந்தையை காணவில்லை என்றால் உடனே பாதிரியாரிடம் சென்று விடுகிறீர்கள். "தந்தையே!" என்று பாதிரியாரை அழைப்பது தற்கொலையானது அல்ல. குறிப்பாக கத்தோலிக்கப் பாதிரியார் ஒரு தந்தையாக இருக்க இயலாது. அவரை தந்தையே என்று அழைப்பது அழிவற்ற செயல், முட்டாள்தனம். அவர் எந்தவகையில் தந்தை? அவர் திருமணம் இல்லாத துறவி. எப்படி அவர் தந்தையாக முடியும்? ஆனால் நீங்கள் அவரை தந்தை என்கிறீர்கள்.

கடவுளையும் நீங்கள் தந்தை என்கிறீர்கள். அப்படியானால் தாய் எங்கே? உங்கள் தெய்வீக மும்மை நிலையில் பெண்ணுக்கு இடமில்லை. **தந்தை ஏசு.** கடவுள் தந்தையாகிறார். ஏசு மகனாகிறார். புனித ஆவி என்பது மூன்றாவதாக உள்ளது. அது பெண்ணாக இல்லாத வரை மும்மையில் பெண்ணுக்கு இடமே கிடையாது. அல்லது மும்மை நிலை என்பதே ஒரு வேடிக்கையான விஷயமாக இருக்கலாம்.

கடவுளை ஏன் தந்தை என்று அழைக்கிறீர்கள்? இதைச் செய், அதைச் செய்யாதே என்று கட்டளையிடும், வழிகாட்டும், பாதுகாக்கும், ஆபத்திலிருந்து விடுவிக்கும் ஒருவரைத் தேடும் மனோரீதியான தேடல் காரணமாக அவ்வாறு அழைக்கிறீர்கள். நீங்கள் அவரைச் சார்ந்திருக்கலாம். அதிகம் அவரைச் சார்ந்திருக்கும்போது உங்கள் தனித்துவம் குறைந்து போகிறது.

நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்ற விழிப்புணர்வு உங்களிடம் இல்லை. அது வழக்கமான ஒன்றாகிவிட்டது. அந்த குணம் ஆழமாக வேரோடிவிட்டது. பந்தங்களை உதறவேண்டும். சந்நியாசம் என்பது அதுதான். அது ஒரு புதிய சிறை அல்ல. நான் இங்கே உங்கள் தந்தையாக இருந்து செயல்படவில்லை.

ஏசு கூறிய ஒரு விநோதமான அறிக்கை பற்றி உங்களுக்கு நினைவு இருக்கிறதா? கிறிஸ்தவர்கள் அதில் அதிக கவனம் செலுத்தவில்லை. உண்மையில அவர்கள் குழப்ப உணர்வுடன் இருக்கிறார்கள். ஏசு தனது சீடர்களிடம், "உங்கள் தாய் தந்தையரை நீங்கள் வெறுத்து ஒதுக்காதவரை என்னைப் பின்பற்ற இயலாது" என்றார். இது ஏசுவின் அறிக்கை போலவே தெரியவில்லை. அன்பு நிறைந்த, பேரன்பு பூண்டவர் அவர். "அன்பே கடவுள்" என்கிறார். அன்பை போதிக்கும் அவர், "உங்கள் தாய் தந்தையரை நீங்கள் வெறுத்து ஒதுக்காதவரை என்னைப் பின்பற்ற இயலாது" என்கிறார்.

ஒரு கிறிஸ்தவப் பாதிரியாரிடம் இதை நீங்கள் காட்டினால் அவர் கலக்கம் கொள்வார். அதை நான் பலதடவை பார்த்திருக்கிறேன். அவர்கள் மிகவும் தடுமாறிப் போனார்கள். எப்படியும் அந்த விஷயத்திலிருந்து விலகிவிடவே விரும்பினார்கள். ஆனால் உங்களால் அதிலிருந்து விலகிவிட முடியாது. அது அங்குதான் உள்ளது. ஆனால் அது மிகவும் முக்கியத்துவம் நிறைந்த ஒரு அறிக்கை.

ஏசு உங்கள் நிஜமான தாய் தந்தையர் பற்றிப் பேசவில்லை. தாய் தந்தை என்ற மனோரீதியான தேடல் பற்றிப் பேசுகிறார். யாரோ ஒருவர் அல்லது ஏதோ ஒன்றைச் சார்ந்திருக்க எண்ணி மனோரீதியாகத் தேடுதல் நடக்கிறது. அதை உதறித்தள்ள வேண்டும். சார்ந்திருக்கும்

குணத்தை நீங்கள் வெறுக்க வேண்டும். இந்த அடிமைத்தனத்தை நீங்கள் வெறுக்க வேண்டும்.

யாராவது இந்த அடிமைத்தனம் அகல உதவி செய்தால் அவரோடு நீங்கள் சண்டையிடுகிறீர்கள். காரணம் இந்த அடிமைத்தனம் மிகவும் மதிப்புமிக்கது என்று நீங்கள் எணிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் ஏசுவோடு சண்டையிடுகிறீர்கள், சாக்ரட்டீஸிடம் சண்டையிடுகிறீர்கள். என்னுடன் சண்டையிடுகிறீர்கள். நான் உங்களைப் பிணைத்துள்ள விலங்குகளை அகற்ற முயல்வதுதான் உங்களுக்கு இடையூறாக இருக்கிறது. ஆனால் நீங்கள் அந்த விலங்குகள் பற்றிச் சிந்திப்ப தில்லை. அவை விலங்குகள் என்று தெரியவில்லை. அவை சிறந்த ஆபரணங்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். விலையுயர்ந்தத் தங்க நகை என்று நினைக்கிறீர்கள். அவற்றை அகற்றினால் நீங்கள் வெறுமையாகி ஏழ்மைப்பட்டுப் போய்விட நேரிடும் என்று நினைக் காதீர்கள். அது இயந்திர மனித நிலை. ஒவ்வொரு இயந்திர மனிதரும் நிஜமான மனிதராக வேண்டும்.

ஒவ்வொரு குழந்தையும் மனிதனாகவே பிறக்கிறது. சமூகம் அவனை முடமாக்கிச் செயற்கை மனிதனாக மாற்றி உருவாக்கி விடுகிறது. எல்லா சமூகமும் இதைச் செய்கிறது. கிறிஸ்தவம், இந்து, முகமதியம், பௌத்தம் என்று எல்லா சமூகமும் இதைச் செய்கிறது. இன்றுவரை மனித இனத்தின் வரலாறு அடிமைத்தனத்தின் வரலாறாகவே இருந்து வருகிறது.

ஒரு சிலர் மட்டும் இந்த அடிமைச் சக்கரத்தின் பிடியிலிருந்து விடுபட்டிருக்கிறார்கள். புத்தர், கிருஷ்ணர், பகாவுத்தீன், பிதாகோரஸ், ஜோராஸ்திரர் போன்றவர்கள் விடுபட்டிருக்கிறார்கள். எப்படி அவர்கள் விடுபட்டு நிஜமான, உண்மையான மனிதர்களாக மாறி னார்கள் என்பது வியப்பு அளிப்பதாக உள்ளது. காரணம் அந்த அடிமைச் சக்கரம் பெரியது. அதன் கட்டமைப்பு மிகப் பெரியது, சிக்கலானது. சமூகம் பலமான பிடியில் உங்களை வசப்படுத்தி வைத்திருக்கிறது. உங்களின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் ஆரம்ப காலம் முதல் அதன் அடிமைத்தனம் ஊடுருவிக் கிடக்கிறது. ஆழ்ந்து கிடக்கிறது.

சமூகம் உங்கள் மீது என்ன நிகழ்த்திக் கொண்டிருக்கிறது என்ற விழிப்புணர்வு உங்களுக்கு இல்லை. உங்கள் சமூகம் எளிதாக உங்களை கடும் நோய்க்கு ஆட்படுத்திவிட்டது. அது உங்களை மிகவும் துன்பப்பட வைத்துவிட்டது. அதனால்தான் நீங்கள் அதுபோன்ற விஷயங்களை விரும்புகிறீர்கள். யாராவது ஒருவர் வாழ்க்கை துயர மானது என்று சொன்னால் நீங்கள் உடனே அதை ஏற்றுக் கொள்

கிறீர்கள். வாழ்க்கை துன்பமானதாக இருப்பதால் நீங்கள் ஏற்கவில்லை. வாழ்க்கை துன்பமானது என்ற அறிக்கையாலும் ஏற்கவில்லை. அதற்கு எந்த தர்க்கரீதியான ஆதரவும் செய்யவில்லை. ஆனால் ஏன் மக்கள் உடனே அதற்கு ஒப்புதல் தருகிறார்கள்? காரணம் அவர்கள் அனுபவம் அதற்கு ஆதரவு தருகிறது. துயரங்களை மட்டுமே அவர்கள் அறிவார்கள். துன்பங்களைப் பற்றி அவர்களுக்குத் தெரியும். எனவே உடனே ஒப்புக் கொள்கிறார்கள். "ஆம்" வாழக்கை துயரமானது. அதிலிருந்து நான் விடுபடுவது எப்படி?" என்று கேட்கிறார்கள்.

வாழ்க்கை ஒரு பேரின்பம் என்று நான் உங்களுக்கு அறிவிக் கிறேன். வாழ்வை உதறிவிட்டு ஓடவேண்டியதில்லை. நீங்கள் கற்றுக் கொண்டிருக்கும் பழைய வாழ்க்கைப் பாதையைத்தான் உதற வேண்டும். உங்கள் இயந்திர மனிதத்தனத்தை உதறவேண்டும். உங்கள் இயல்பு நிலைமீது திணிக்கப்பட்டுள்ளவை அனைத்தையும் உதற வேண்டும். அவை உங்களுக்கு அந்நியமானவை. நீங்கள் ஒரு நிஜமான மனிதராக மாற வேண்டும்.

சந்நியாசியாக மாறுவது ஒரு எளிய பாவனைதான். சுதந்திரமாக மாறுவதற்குத் தயாராக வேண்டும். தேசம் கடந்தவராக, தேசமற்றவராக மாறவேண்டும். ஒரு சந்நியாசி தன்னை இந்தியன் என்றோ ஜெர்மானியன் என்றோ, இத்தாலியன் என்றோ எண்ணிக்கொள்ள மாட்டார். கடவுச் சீட்டை (Passport) எடுத்துச் செல்ல நேர்ந்தாலும் தான் ஒரு இத்தாலியன் என்று ஆழ்ந்த எண்ணம் கொண்டிருக்க மாட்டான். அவன் உலகிற்குப் பொதுவானவன்.

ஒரு சந்நியாசி தன்னை இந்துவாகவோ, கிறிஸ்தவராகவோ, முகமதியராகவோ எண்ணிக் கொள்வதில்லை. மக்களிடம் அது பற்றிச் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. ஏனெனில் தேவையற்ற தொந்தரவுகளை உங்களுக்கு ஏற்படுத்த நான் விரும்பவில்லை. அவ்வாறு இருக்கும்போது உங்களுக்கு போதுமான அளவு இடை யூறுகள் ஏற்படுகின்றன. ஆனால் அடியாழ மனதில் "நான் இப்போது ஒரு மனிதனாக மட்டும் இருக்கிறேன்" என்று உணர்வீர்கள். நீங்கள் தேசம், இனம், நிறம், மதம் போன்ற தடைகளை எல்லாம் கடந்து செல்வீர்கள்.

அடிப்படையில் உங்கள் வளர்ப்பு முறையை நீங்கள் உதறித் தள்ளினால் மீண்டும் பேதமை கொண்ட பழைய நிலைக்குத் திரும்பு வீர்கள். வாழ்க்கையை ஆராய்ந்து அறியத் தொடங்குவீர்கள்.

இப்போது எதற்காக அச்சப்படுகிறீர்கள்? மூன்று மாதங்களாக யோசித்து வருகிறீர்கள்.... மூன்று தேவையின்றி மாதங்கள் வீணாகி

விட்டன. நீங்கள் சந்நியாசியாக மாறியிருந்தால் அது எப்படிப்பட்டது என்று இந்த மூன்று மாதங்களில் அனுபவப்பூர்வமாக அறிந்திருப் பீர்கள். நீங்கள் அறிவு மரத்தின் கனியை உணர்கிறீர்கள். நீங்கள் வாழ்க்கை மரத்தின் கனியை உண்ண வேண்டும்.

முடிவு செய்த விஷயத்தை எப்போதும் அனுபவப்பூர்வமாக அறிய வேண்டும். நீங்கள் போதுமான அளவு யோசித்துவிட்டீர்கள். யோசிக்க எதுவும் மிச்சம் வைத்திருப்பீர்கள் என்று நான் நினைக்க வில்லை. மூன்று மாதங்கள் என்பது ஒரு நீண்டகாலம். நீங்கள் அதில் சுற்றிச் சுற்றி வந்திருக்கிறீர்கள். இனி யோசிக்க அங்கு என்ன இருக் கிறது? அனுபவித்து உணருங்கள்! அனுபவம் பெறுவதற்கு நான் உங்களை அழைக்கிறேன். கலந்து கொள்ளுங்கள். வெளியிலிருந்து விஷயங்களைப் பார்க்கிறீர்கள்.

மூங்கிலை ஓவியமாக வரையவேண்டுமானால் ஒருவர் மூங்கிலாகவே மாறவேண்டும். சந்நியாசம் பற்றித் தெரிய வேண்டு மானால் அவர் சந்நியாசியாக மாறவேண்டும்.

ஐந்தாவது கேள்வி

ஓஷோ,

முழுமையாக நீங்களாக இருக்க வேண்டும் என்று கூறினீர்கள். தயவு செய்து இதுபற்றி விளக்குங்கள். அதன் அர்த்தம் என்ன, அப்படி மாறுவது எப்படி? என் மனம் உதாரணங்கள், சூழ் நிலைகள் குறித்து யோசிக்கிறது. எனக்கு எதுவும் பிடிபடவில்லை.

நான் கூறியதை நீங்கள் கவனித்துக் கேட்கவில்லை. முழுமை நிலை வேண்டுமானால், நீங்கள் நீங்களாகவே இருக்க வேண்டும். அது எப்படி என்று தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. ஏற்கெனவே அப்படித்தான் இருக்கிறீர்கள்! வழிமுறைகள், பாதைகள் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதும் இல்லை. எப்படி அவ்வாறு மாறுவது என்ற கேள்வி தேவையில்லை. ஏற்கெனவே அந்த நிலை தான் இருந்து வருகிறது.

உங்கள் மனம் விருப்பம் கொள்வதைப் பழக்கமாகிக் கொண்டு விட்டது. இலக்குகள், எதிர்காலம் பற்றி ஆசைப்படுகிறது. நீங்கள் நீங்களாக இருங்கள் என்று நான் கூறினால் அதை உங்கள் மனதிற்கு வேறுவிதமான தகவலாகத் தருகிறீர்கள். "முழுமைநிலை பெறுவது எப்படி?" என்று கேள்வி கேட்கிறீர்கள்.

நீங்கள் நீங்களாக மாறவேண்டும் என்று நான் கூறவில்லை. ஏற்கெனவே நீங்கள் அப்படித்தான் இருக்கிறீர்கள்! எப்படி மாறுவது

என்ற கேள்வி தேவையில்லை. எப்படி மாறுவது என்று கேட்க வேண்டாம். காரணம் அது உங்களை உங்களிடமிருந்து வேறு பாதையில் தவறாக அழைத்துச் சென்றுவிடும். மாற்றம் பெறுதல் எல்லாவற்றையும் உதறிவிடுங்கள். மாறுதல்கள் நின்றுபோகட்டும். எப்படி இருக்கிறீர்களோ அவ்விதமே இக்கணத்தில் வாழுங்கள். நீங்கள் இருப்பது போலவே வாழுங்கள். மதிப்பீடு செய்ய வேண்டாம். தீர்ப்பு அளிக்க வேண்டாம். **நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ** அவ்விதம் இக்கணத்தில் வாழுங்கள். இப்போது சோகமாக இருந்தால், இக்கணத்தில் அந்த சோகத்துடன் வாழுங்கள். சோகம் மோசமானது என்று கூறாதீர்கள். சோகம் மோசமானது என்று கூறும் சமயத்தில் நீங்கள் முரண்பாட்டை ஏற்படுத்திக் கொள்கிறீர்கள். இப்போது நீங்கள் மீண்டும் **சோகமற்று** இருக்க முயற்சி செய்கிறீர்கள்.

உங்களுக்கு ஏற்படும் எந்த ஒரு நிலையையும் குற்றம் சொல்லாதீர்கள். அதை ஏற்றுக் கொண்டு வாழுங்கள். அந்த முழுமையான ஒப்புதல் மூலம் வேறவிதமாக, வேறு யாரோ ஒருவர் போல வாழ நினைக்கும் எண்ணம் மறையும். அந்த ஒப்புதல் மூலம் சிறந்த புரிதல் எழுகிறது. அது ஒரு துணைப் பொருளாக வந்து சேர்கிறது. அந்த புரிதலில் பல விஷயங்கள் மறைந்துபோகின்றன. நீங்கள் அவற்றை மறைந்துபோக வைக்க வேண்டியதில்லை.

கவலை மறையும், கோபம் மறையும், பேராசை மறையும். நீங்கள் அவற்றை மறையச் செய்யவில்லை. உங்கள் இருப்புநிலை பற்றிய ஒப்புதல் புரிதலைத் தருகிறது. ஒப்புதலின் துணைப்பொருளாக அது இருக்கிறது. அந்த புரிதலில், புரிதல் ஒளியில் பல விஷயங்கள் எளிதாக மறையும். இதற்கு முன்னர் உங்களுக்குத் தெரிந்து இருக்காத பல விஷயங்கள் தோன்ற ஆரம்பிக்கும்.

சந்தோஷம் எழும். அந்த சக்திதான் சோகமாகவும் மறைய வல்லது. ஆனால் இப்போது புரிதலின் வாயிலாக சோகம் தலைதூக்குகிறது. கிடைக்கும் சக்தி மகிழ்ச்சியாக மாறிவிடும். அது உயர்ந்த எல்லை வரை செல்லக்கூடியது. கோபம் தரும் அதே சக்தி பரிவாக மாறுகிறது. பேராசை, காமம், பொறாமை, பிறர் பொருளை வசப்படுத்தும் எண்ணம் போன்றவை அன்பாகவும், பகிர்ந்தளிக்கும் குணமாகவும் மாறும்.

இவ்வாறு விஷயங்கள் நடக்கின்றன. அவற்றை நீங்கள் **செய்யவில்லை.** அவற்றை நீங்கள் செய்தால் என்னைப் புரிந்து கொள்ளவில்லை என்று பொருள்.

நீங்கள் பயன்படுத்தும் அதே சொற்களையே நானும் பயன்படுத்த வேண்டியுள்ளது. அவற்றை நான் புதிய அர்த்தங்களுடன்

பயன்படுத்த வேண்டும். அந்த அர்த்தங்களை கவனத்துடன் கேளுங்கள். அந்த புதிய சம்பந்தப்படுதலைக் கவனத்துடன் கேளுங்கள். இல்லா விட்டால் நான் சொல்வது ஒன்றாகவும், நீங்கள் புரிந்துகொள்வது வேறாகவும் இருக்கும்.

ஒரு பெண் காவல்நிலையத்துக்கு ஓடினாள். அவளது ஆடைகள் கிழிந்து அலங்கோலமாக இருந்தன. "எனக்கு உதவி செய்யுங்கள். எனக்கு உதவி செய்யுங்கள்! "I have graped" என்றாள்.

"graped என்றா சொன்னாய்? நீ கற்பழிக்கப்பட்டாய் (rape) என்றா கூறுகிறாய்? என்றார் காவல்துறை அதிகாரி.

"கற்பழிக்கப்படவில்லை. ஒரு கொத்து திராட்சை grape என்னிடமிருந்து பறிக்கப்பட்டுவிட்டது" என்றாள்.

graped போன்ற சொற்களையும் நான் பயன்படுத்த வேண்டியுள்ளது. ஆனால் அதை உங்களால் புரிந்துகொள்ள முடியாது. நீங்கள் பயன்படுத்தும் சொற்களையே நானும் பயன்படுத்த வேண்டும். ஆனால் அதை நீங்கள் ஒரு குறிப்பிட்ட அர்த்தத்தில் பயன்படுத்துகிறீர்கள். நான் அர்த்தத்தை மாற்ற வேண்டியிருக்கிறது. அந்த பழைய வார்த்தைகளுக்குப் புதுவர்ணம் தரவேண்டியுள்ளது. நான் அவற்றுக்குப் புதிய வடிவமும், புதிய முக்கியத்துவமும் தர வேண்டியுள்ளது.

நான் வார்த்தைகளைப் பயன்படுத்தும்போது நான் அதற்கு என்ன முக்கியத்துவம் தருகிறேன் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அந்த முக்கியத்துவம் பிரதானம். வார்த்தை ஒரு சுமைதாங்கி மட்டுமே. புதிய முக்கியத்துவத்தை அது சுமந்து வருகிறது. அதனால்தான் அதை கவனத்துடன் நீங்கள் கேட்க வேண்டும். இல்லாதுபோனால் அது பெரிய சிரமம் அல்ல. நான் கூறுவதை நீங்கள் கேட்கலாம், கவனம் அதிகம் தேவையில்லை. ஆனால் அது கவனித்தலாகாது. அது வெறுமனே கேட்டலாகும். நான் கூறுவதை நீங்கள் எளிதாகக் கேட்கலாம். நீங்கள் மிகவும் கவனமாக, விழிப்புடன், எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். நீங்கள் முழுமையாக என்னுடன் சேர்ந்திருக்க வேண்டும்.

"நீங்கள் நீங்களாக மாறுங்கள்" என்று நான் கூறவில்லை. "மாறுவதை நிறுத்துங்கள். நீங்கள் நீங்களாகவேதான் இருக்கிறீர்கள்" என்று கூறுகிறேன்.

முழுமையாக நீங்கள் நீங்களாக இருப்பது என்றால் என்ன, அது பற்றி தயவுசெய்து விளக்குங்கள்" என்று கேட்டீர்கள். நீங்கள் முழுமையாக நீங்களாகவே இருக்கிறீர்கள். அதை நீங்கள் ஒப்புக்கொள்ள

வில்லை. அதை நிராகரிக்கிறீர்கள். நிராகரிப்பை உதறுங்கள். எப்போது ஏதாவது ஒன்றை நீங்கள் நிராகரிக்கிறீர்களோ அப்போது நிராகரிக்கப் பட்ட பகுதி உங்களிடம் வலி, கசப்பு, காயத்தை ஏற்படுத்தும். அந்த காயங்கள் பிரச்சினைகளாக மாறுகின்றன. உங்கள் உடலின் சில பகுதிகளாக அந்த நிராரிக்கப்பட்டவை இருக்கின்றன. அவற்றை நீங்கள் தடை செய்கிறீர்கள். தங்களை வெளிப்படுத்திக் கொள்ள அவை கொதிக்கின்றன. அவை உங்களுக்குள் பெருகி வளர்த்து பித்தாக்கு கின்றன.

மேலோட்டமாக ஒரு முகத்தை நீங்கள் பராமரிக்கிறீர்கள். உள்ளே ஆழத்தில் நீங்கள் பைத்தியமாக இருக்கிறீர்கள். அவற்றை அனுமதியுங்கள். அவை உங்களின் ஒரு அங்கம். உங்களின் முக்கிய மான பகுதிகளில் அது ஒன்று. அந்த ஒப்புதல் தருவது மிகவும் முக்கிய மாகும்.

அதனால்தான் இந்த குழு உருவாக்கப்பட்டுள்ளது. நான் பல வித்தியாசமான மனோதத்துவச் சிகிச்சைகளுக்கு ஏற்பாடு செய் துள்ளேன். அவை பொதுமக்களால் தவறாகப் புரிந்துகொள்ளப் பட்டுள்ளன. அவ்வாறுதான் இருக்கும். மனோதத்துவச் சிகிச்சையின் போது நீங்கள் தடை செய்த பகுதிகள் எல்லாவற்றையும் வெளியே கொண்டுவரும் சூழ்நிலை ஏற்படும்.

ஒருவர் தனது கோபத்தை அடக்கித் தடைசெய்தல், அது மனோ தத்துவச் சிகிச்சை தரவேண்டிய சூழலை உருவாக்குகிறது. அதன் பிறகு மனோதத்துவச் சிகிச்சை மட்டுமே ஏதாவது உதவி செய்ய முடியும். அது சிகிச்சையாக மாறினால் நீங்கள் குணம் பெறலாம். காயங்களை கிழித்துத் திறக்க வேண்டியுள்ளது. அப்போது அதிகம் சீழ் வெளி யேறத் தொடங்குகிறது.

தாக்குதல் நடத்தும் குழுவைக் கண்டதும் நீங்கள் நோய்வாய்ப் படுகிறீர்கள். நோய்வாய்ப்பட்ட உணர்வு உங்களுக்கு ஏற்படுகிறது. மிருகத்தனம் வெளிப்படுவதை நீங்கள் காண்கிறீர்கள். மனிதர்கள் அப்படிப்பட்ட மிருகங்களாக இருப்பார்கள் என்று கற்பனை செய் திருக்க மாட்டீர்கள். அந்த மிருகத்தனம் உங்களிடமும் இருக்கிறது. அவை உள்ளே அமுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அமுக்கி வைப்பது மூலம் அவற்றை கரைந்துபோகச் செய்ய முடியாது.

தாக்குதல் நடத்தும் குழு - தாக்குதல் என்பதன் அர்த்தம் அது தான் - உங்கள் முழுமைநிலையை எதிர்த்து நீங்கள் தாக்குதல் நடத்து கிறீர்கள். அடக்கி வைக்கப்பட்ட அனைத்தையும் நீங்கள் வெளிக் கொண்டுவர வேண்டும். எல்லாவற்றையும் கொண்டுவர வேண்டும். எது நல்லது, எது கெட்டது என்ற மதிப்பீடு இல்லாமல் எல்லாவற்றை

யும் வெளிக்கொணர வேண்டும். சட்டென்று பெரிய மிருகங்கள் உள்ளே கர்ஜிப்பதைக் காண்பீர்கள். அவை மூர்க்கத்தனமானவை. வன்முறை கூடாது என்று உங்களுக்கு கற்றுத் தரப்பட்டுள்ளது. உங்கள் அகிம்சைக் குணம் வன்முறையை அடக்கி வைக்கிறது.

கடும் மூர்க்கம் ஏற்பட எந்த காரணமும் இல்லாமல் ஏற்படுகிறது. நீங்கள் சுவரைத் தாக்குகிறீர்கள். உங்களை நீங்களே தாக்கிக் கொள்கிறீர்கள். "நான் என்ன செய்கிறேன்? இதற்கு முன்பு இப்படிச் செய்ததில்லை. எங்கிருந்து அது வருகிறது? அது பேரலையாக, அலை வீச்சாக வருகிறது. முழு செயல்பாடும் அவ்வாறு நடக்க வைக்கிறது.

எல்லா பகுதிகளும் வெளிப்படுத்தப்படும்போது உங்கள் காமம், உங்கள் கோபம், உங்கள் பொறாமை, உங்கள் பேராசை, உங்கள் மூர்க்கம் போன்றவை வெளிப்பட்ட பிறகு ஒருவித பேரமைதி எழுகிறது. புயலைத் தொடர்ந்து அமைதி வருகிறது.

அதை பொதுமக்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. அவர்கள் பெருமளவு தங்கள் பாதுகாப்பில் இருக்கிறார்கள். அவர்கள் புரிந்து கொள்ளவும் விரும்புவதில்லை. புரிந்துகொள்ளல் என்றால், அதை உள்நோக்கிப் பார்க்க வேண்டும். தங்களிடம் இருப்பவை உள்ளேயும் இருப்பதைக் காண்பார்கள்.

அவற்றை உங்கள் உள்ளே நீங்கள் பாதுகாத்தல் எப்போதும் ஒருவித நோயுள்ள நிலையில் இருப்பீர்கள். உங்கள் சமூகம் உங்களுக்குத் தந்தது இதைத்தான். சமூகம் உங்களை ஒரு மோசமான நோயாளியாக்கி வைத்திருக்கிறது. இந்த சமூகம் முழுவதும் துன்பத்தில் இருக்கிறது. எந்த சமூகம் கவலை கொண்டு இருக்கிறதோ அங்கு உங்களால் விழிப்புணர்வு பெற்றிட முடியாது. ஒவ்வொருவரும் அதே பாதிப்பை அடைந்திருக்கிறார்கள்.

முழுமை பெற்று இருத்தல் என்றால், நீங்கள்தான் உலகின் முதல் மனிதரான ஆதாம் அல்லது ஏவாளாக எண்ணிக் கொள்ளுதல் ஆகும். நீங்கள் இதுவரை எந்த பாதிரியாரையும், எந்த மதநெறியாளரையும் சந்திக்கவில்லை. எந்த மொரார்ஜி தேசாயையும் சந்திக்கவில்லை. எப்படி இருக்க வேண்டும் யாரும் கற்றுத்தரவில்லை. என்ன செய்ய வேண்டும் என்று கூறவில்லை. உங்களை முதல் பெண்மணியாகவோ அல்லது ஆணாகவோ எண்ணிக் கொள்ளுங்கள். அதை ஒப்புக் கொள்ளுங்கள். ஏனெனில் ஒப்புக்கொள்ளல் தவிர அதில் ஆழ்ந்து விட வேறு வழியில்லை.

புத்தர் அந்த நிலையை **ததாதா** என்கிறார். அதற்கு ஒப்புக்கொள் என்று பொருள். கடவுள் உங்களுக்கு அந்த விஷயங்களைத் தந்திருக்

கிறார். அவற்றுக்கு அர்த்தம் இருக்கிறது. அறிந்துகொள்ள முடியாத சில மலர்களின் விதைகள் அவை. அவற்றைப் பயன்படுத்த வேண்டும். ஒப்புக்கொள்ளல் என்ற மண்ணில் அந்த விதைகள் விழுந்து மறை கின்றன. புரிதல் என்ற பெரிய மரம் முளைக்கிறது. பேரானந்தம், மகிழ்ச்சி, கொண்டாட்டம் என்ற லட்சக்கணக்கான மலர்கள் அதில் மலர்கின்றன.

"எனது மனம் சூழ்நிலைகளையும், உதாரணங்களையும் கணக்கிட்டுப் பார்க்கிறது என்கிறீர்கள். "ஆனால் எனக்கு புரியவில்லை" என்கிறீர்கள். என்ன உதாரணங்கள்? என்ன சூழ்நிலை? உங்கள் மனம் ஆரம்பத்திலிருந்தே கணக்கீடு செய்து கொண்டிருந்தால், நீங்கள் எப்படி இருக்க வேண்டும் என்று திட்டமிடுவதாக அர்த்தம். எந்த ஒரு திட்டமிடலும் ஒப்புக்கொள்ளல் என்ற செயலுக்கு எதிரானது. நீங்கள் திட்டமிடக் கூடாது. கணக்கீடு செய்யக்கூடாது. உங்களை நீங்கள் கண்டறிய வேண்டும். உங்கள் உண்மை நிலையை நீங்கள் எதிர்கொள்ள வேண்டும்.

உங்கள் உண்மைநிலை குறித்துப் பெரிதும் அச்சம் கொள்கிறீர்கள். ஆன்மீக உண்மை நிலை, உடல்சார்ந்த உண்மைநிலை, மனோவியல் உண்மைநிலை குறித்து பெரிதும் அச்சம் கொள்கிறீர்கள். அதை நாம் மறைத்துக் கொள்கிறோம். உடல் அமைப்பை ஆடைகள் போட்டு மறைக்கிறோம். மனோதத்துவ நிலையை வார்த்தைகள், கோட்பாடுகள், மதநூல்கள் மூலம் மறைக்கிறோம். ஆன்மீக நிலைகளை கொள்கைகள், கடவுள், நிர்வாணம், ஞானம் போன்ற பெரிய கொள்கைகள் மூலம் மறைக்கிறோம். நாம் மறைத்துக் கொண்டே இருக்கிறோம்.

உங்கள் மறைவிடத்திலிருந்து வெளியே வாருங்கள். அந்த குகைளில் இருந்து வெளியேறுங்கள். சூரியஒளி வீசும் திறந்தவெளிக்கு வாருங்கள். காற்றடிக்கும் பகுதிக்கு வாருங்கள். மழையில் நனை யுங்கள். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அது அழகானதாகவே இருக்கிறது. உங்கள் நிலை உங்களைப் போலவே பூரணத்துவம் பெற்றதாக உள்ளது. இயற்கை பூரணத்துவமற்ற பொருட்களை உருவாக்காது. அவ்வாறு செய்ய அதனால் இயலாது. பூரணத்துவமற்ற நிலையில் இருந்தே பூரணத்துவம் பிறக்கிறது.

முழுமையாக ஒப்புக்கொள்ளல் என்று நான் போதிப்பது இதைத்தான்.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**மக்கள் காமஇச்சையில் தீவிரமாக இருப்பது பற்றி நிறையவே பேசி யிருக்கிறீர்கள். தீவிரம் என்பது என்ன? உணவு, ஆடைகள், சுத்தம் இத்யாதிகளில் எது தீவிரமாக இருக்கிறது.**

தீவிரம் அல்லது அதீத ஆர்வம் என்பது முக்கியத்துவமற்ற ஒன்று மீது கூடுதல் கவனத்தையும், சக்தியையும் செலுத்துவதாகும். பெருமளவில் நீங்கள் ஏதோ ஒன்றின்மீது கவனத்தைச் செலுத்து கிறீர்கள். அதன் மூலம் கவர்ந்து இழுக்கப்படுகிறீர்கள்.

தீவிரம் என்பது உங்களுக்குள் நீங்கள் ஏற்படுத்திக் கொள்ளும் ஒரு வசியமாகும். மற்ற அனைத்தும் வாழ்விலிருந்து மறைந்து அந்த குறிப்பிட்ட ஒன்று மட்டுமே மனதில் நிற்கிறது. அதுவே குறிக் கோளாகி விடுகிறது. உங்கள் வாழ்க்கை ஒற்றைப் பரிபூரணம் கொண்டதாகிறது. அதுவே தீவிரம் ஆகும்.

வாழ்க்கை பல்பரிமாணம் கொண்டதாக இருக்க வேண்டும். சிலர் இருக்கிறார்கள். எப்போதும் அவர்கள் காமம் பற்றியே சிந்திக் கிறார்கள். இருபத்து நான்கு மணிநேரமும் அது பற்றியே சிந்திக் கிறார்கள். அடியாழத்தில் அவர்கள் மனது ஒளிந்து கொள்கிறது. அவர்கள் செய்வது ஏதாவது ஒரு காரியமாக இருக்கலாம். ஆனால் காமம் பற்றியே சிந்திக்கிறார்கள். காமம் வெறுக்கத்தக்க ஒரு விஷய மல்ல. நான் காமத்திற்கெதிரானவன் அல்ல என்பது நினைவிருக் கட்டும். நான் எதற்கும் எதிரானவன் அல்ல. தீவிரம் என்றால், மற்ற விஷயங்களை அது பின்னுக்குத் தள்ளிவிட்டது என்று பொருள். உணவின் மீது தீவிரம் காட்டும் மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து உணவு பற்றியே யோசிக்கிறார்கள். அது எதிர்மறையான அல்லது நேர்மறையான தீவிரமாக இருக்கலாம்.

பேரரசன் நீரோ பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். நேர் மறையான உணவுத் தீவிரம் கொண்டவராக அவர் இருந்தார். எப்போதும் அவர் அருகில் நான்கு மருத்துவர்கள் இருப்பார்கள். அவருக்கு வாந்தி ஏற்பட உதவி செய்வார்கள். அவர் மிக அதிகமாக உண்பார். பெரும் அசௌகரியமும், வயிற்று வலியும் ஏற்படுவதை உணர்வார். மருத்துவர்கள் அவருக்கு வாந்தி ஏற்பட உதவுவார்கள். அப்படி வாந்தி ஏற்பட உதவியதும் பேரரசர் மீண்டும் சாப்பிடத் துவங்குவார். சிலசமயம் ஒரு நாளைக்கு அவர் இருபது தடவை உண்பார். இருபது தடவை வாந்தியெடுப்பார்.

இதுதான் தீவிரம். உணவு தீவிரம் காட்டக்கூடியது அல்ல. இரண்டு அல்லது மூன்றுமுறை உண்பது முறையானது. அது உங்களின் தேவையாகும். உடல்சார்ந்த தேவையாக அது இருக்கிறது. உங்களுக்கு ஊட்டம் தேவை. நீரோ போன்று மாறுவது இரங்கத் தக்க நிலை.

உணவின் மீது எதிர்மறைத் தீவிரம் காட்டும் மக்கள் இருக் கிறார்கள். அவர்களை இந்தியாவில் நீங்கள் காணலாம். அவர்கள் பட்டினி கிடக்கிறார்கள். உணவு பற்றி எப்போதும் யோசிக்கிறார்கள். உணவுதான் தெய்வீகத்தை எட்டத் தடையாக இருக்கிறது என்றால், அந்த உன்னத நிலையை அடைய விரதம் என்ற பெயரில் பட்டினி கிடந்தால் போதும் என்று நினைக்கிறார்கள். தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்ளும் மனித சித்திரவதையாளர்களாக இருக் கிறார்கள். அது எதிர்மறைத் தீவிரம்.

பட்டினி கிடக்கும்போது நீங்கள் உணவு பற்றி யோசிக்கிறீர்கள். நீரோ உணவு பற்றி யோசித்தது போல யோசிக்கிறீர்கள். நீரோ அதிகம் சிந்திக்காமல் இருந்திருக்கலாம். சிந்திக்க அங்கு நேரமில்லை. ஒரு நாளைக்கு இருபது தடவை சாப்பிட்டால் எங்கே சிந்திக்க முடியும்? ஆனால் பட்டினி கிடக்கும் மனிதருக்கு இருபத்து நான்கு மணிநேரம் கிடைக்கிறது. பட்டினி கிடந்தால் உங்களால் தூங்க முடியாது. உடல் பசியோடு இருக்கிறது.

உடல் போஷாக்குடன் இருக்கும்போது தூக்கம் அவசியம். விரதம் இருக்கும்போது உங்களால் தூங்க முடியாது. ஒன்றிரண்டு மணிநேரம் தூங்க இயலும். எனவே இருபத்து இரண்டு மணிநேரம் யோசிக்கிறீர்கள். மற்ற இரண்டு மணிநேரம் உணவு பற்றிக் கனவு காண்கிறீர்கள். அது எதிர்மறைத் தீவிரம்.

சில மனிதர்கள் நேர்மறையான காம இச்சையுடன் காணப்படு கிறார்கள். காமம் தவிர வேறு எதையும் யோசிப்பதில்லை. ஒவ்வொரு விஷயத்திலும் காமம் பற்றியே சிந்திக்கிறார்கள். எதிர்மறைக் காம உணர்வு கொண்ட மனிதர்களும் உண்டு. அவர்களை நீங்கள் **பிரம்மச் சாரி** என்கிறீர்கள். துறவிகள் என்கிறீர்கள். அவர்கள் தொடர்ச்சியாக எதிர்மறை நிலையில் காமம் பற்றிச் சிந்திக்கிறீர்கள்.

தீவிரம் என்றால், ஏதோ ஒன்று உங்கள் முழு வாழ்க்கையாக மாறுகிறது. மற்ற எதுவும் உங்கள் வாழ்வாக மாறுவதில்லை. ஒவ்வொன்றும் அதனதன் இடத்தில் இருக்கின்றன. வாழ்க்கை ஒரு வாத்திய இசையாகிறது. அது உணவாக இருக்கக் கூடாது. காமமாக இருக்கக் கூடாது. பணமாக இருக்கக் கூடாது. அதிகாரமாக இருக்கக்

கூடாது. வேறு எந்த பொருளாகவும் இருக்கக் கூடாது. பலவாறான வைகளாக அவை இருக்கலாம். எல்லாவிதமான பரிமாணங்களிலும் கிடைக்கும்போது நீங்கள் செல்வந்தராகி விடுகிறீர்கள்.

உணர்ச்சிவசப்பட்ட ஒருவர் காதலில் விழுந்தார். பெண்ணின் மனதைப் பலதடவை உடைத்தார். புதிய காதலிக்கு கடிதம் எழுதும் போது "என் அன்பே. நீதிமன்ற விசாரணையின்போது தங்கள் அபிப் பிராயம் கூறும் ஜுரிகளே.... என்று ஆரம்பிக்கிறார்.

காரணம் திருமணம் என்பது விவாகரத்து!

ஒரு காலத்தில் ஸ்பெயினிலிருந்து
ஒரு பெண்மணி வந்திருந்தாள்
அவள் ஒன்றைச் சதா விரும்பினாள்
எப்போதும் விரும்பினாள்
மறுபடியும் மறுபடியும் தொடர்ந்து விரும்பினாள்.

வாழ்வின் ஏதாவது ஒன்றின் மீது நீங்கள் கவரப்படுவதே தீவிரம் எனப்படுகிறது. உணர்வு நிலைகளை இழந்துவிடுகிறீர்கள். அதன் பிறகு உங்கள் வாழ்க்கை அசிங்கமானதாக, முட்டாள்தனமானதாகி விடுகிறது.

ஹெர்மனுக்கு உணவு என்றால் பிடிக்கும். உணவு அவருக்குப் பிடித்தமான விஷயம். உணவே அவரது ஆன்மீகம். உணவே அவர் கடவுள். இந்திய ஞானிகள் கூறிய 'அன்னம் பிரம்மம்' என்ற கூற்றை அவர் அப்படியே ஏற்றுக் கொண்டார். உணவே கடவுள் என்று அதன் பொருள். ஆனால் முற்றிலும் வித்தியாசமான அர்த்தம் கொண்டது அந்த கூற்று.

பஞ்சம் தோன்றும் ஒரு எதிர்கால உலகம் பற்றிய அச்சம் அவரிடம் இருந்தது. ஹெர்மன் பத்து வருடத்துக்குத் தேவையான டப்பாவில் அடைக்கப்பட்ட உணவு வகைகளைச் சேமித்து வைத்திருந்தார்.

அவரது மனைவி ஹெர்மனிடம் என்ன செய்யப் போகிறீர்கள்? வீட்டிலும், கார் நிறுத்தும் இடத்திலும் டப்பாவில் அடைக்கப்பட்ட உணவுகள் கூரையைத் தொடுமளவு அடுக்கப்பட்டுள்ளன' என்றாள்.

"நான் என்ன செய்கிறேன் என்று எனக்குத் தெரியும். கவலைப் படாதே!" என்றார் ஹெர்மன்.

நாம் படுக்கைக்குப் போகும் போதெல்லாம் இந்த டப்பாக்களை நகர்த்தி வைக்க வேண்டியிருப்பதும், வீடு ஒரு கிடங்கு போலிருப் பதும் சங்கடம் தருவதில்லையா?" என்று அவர் கேட்டார்.

"கவலைப்படாதே! நான் ஒருபோதும் பட்டினியோடு இருக்க நேரிடாது" என்றார்.

ஒருநாள் ஹெர்மன் கடுமையான வயிற்று நோவால் அவதிப் பட்டார். மருத்துவர் வரவழைக்கப்பட்டார். உணவுப் பெட்டிகளின் நடுவே தனது மருந்துப் பையுடன் நுழைந்த மருத்துவர் முனகிக் கொண்டிருக்கும் நோயாளியைப் பார்ததார்.

"டாக்டர்! டப்பா உணவுகளை அதிகமாக உண்டது வயிற்று வலியை ஏற்படுத்தியிருக்குமோ?"

"இல்லை. அதனால் இல்லை உணவுப் பெட்டிகளை நீங்கள் தூக்கியதால் குடல்வால் இறுக்கம் ஏற்பட்டிருக்கிறது" என்று பரிசோதித்த மருத்துவர் கூறினார்.

அந்த வகையான மனிதர்களை நீங்கள் எல்லா இடங்களிலும் காணலாம். பணத்தைப் பற்றி மட்டுமே யோசிக்கும் மக்கள் இருக் கிறார்கள். அவர்களின் ஒரே இலக்கு அதுதான். முடிந்தவரை உலகி லேயே பெரிய தொகையுடன் கூடிய வங்கிக் கணக்கை உருவாக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். அரசியல் அதிகாரம் வேண்டும் என்று ஆசைப்படும் மனிதர்கள் இருக்கிறார்கள். அதற்காகவே வாழ்வை அர்ப்பணிக்கிறார்கள். நாட்டின் ஜனாதிபதியாவது எப்படி, பிரதமராவது எப்படி என்று யோசிக்கிறார்கள். அவர்கள் தீவிரம் நிறைந்த மனிதர்கள். தங்கள் வாழ்வை அவர்கள் இழந்து விட்டார்கள். எதையும் அவர்களால் ரசிக்க முடியாது. அவர்கள் இப்போது இங்கு வாழவில்லை. தங்கள் ஒற்றைக் குறிக்கோளின்மீது கவனத்துடன் இருக்கிறார்கள். எதுவும் தீவிரமானதாகலாம். சுத்தமாக இருப்பது ஒருவித தீவிரத்தை ஏற்படுத்தலாம்.

நான் ஒரு நண்பனின் வீட்டில் வசிக்க நேர்ந்தது. அவர் மனைவி சுத்தமாக இருக்கும் விஷயத்தில் ஒரு பைத்தியம். சகலமும் சக்கிதமாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படுவாள். சுத்தம் மோசமானதல்ல. ஆனால் அதுதான் பிரச்சினை தந்தது. சுத்தம் பார்க்கும் மனிதர்கள் பகுத்தறிவாதிகளாக இருக்கலாம். சுத்தம் மோசமானதல்ல. சுத்தமாக இருப்பது ஒன்றுமட்டும் இங்கு போதாது.

அவள் ஒரு பைத்தியம். நாள் முழுவதும் அவள் தரையைத் தேய்த்துச் சுத்தம் செய்வாள். சுவர்களையும், அறைகலன்களையும் (Furnitures) சுத்தம் செய்வாள். அவள் இல்லம் பார்க்க மதிப்புமிக்க தாகத் தெரியும். பார்க்க மட்டுமே மதிப்புடன் தெரியும். அதை பயன் படுத்த இயலாது. எந்த விருந்தினரையும் அவள் வரவேற்பதில்லை.

குழந்தைகள் வந்தால் தொந்தரவு ஏற்பட்டு விடலாம். அவள் கணவரும் அறைகலன்களைப் பயன்படுத்தமாட்டார். ஏதாவது கீறல் விழுந்துவிட்டால் தொல்லை வந்துசேரும்.

சுத்தம் நல்ல ஒரு விஷயம்தான். ஆனால் சுத்தம் மட்டுமே போதாது. தெளிவுடன் இருக்க வேண்டும் என்றால் தங்க விதிமுறையை நினைவில் கொள்ள வேண்டும். அளவு அதிகமாக இருப்பது நோய் போன்றது. எல்லாவிதமான கடைசி எல்லைகளையும் தவிர்த்து விடுங்கள். மையத்தில் நிலைத்திருங்கள். அதுவே பிதாகோரஸ் உங்களுக்குத் தரும் தங்கத் தகவலாகும். எப்போதும் நடுநிலையாக இருங்கள். விளிம்பு எல்லை நோக்கி ஒருபோதும் செல்லாதீர்கள். அப்போது தெளிவுடனும், ஆரோக்கியமாகவும், முழுமையுடனும் இருப்பீர்கள்.

இன்று இவ்வளவு போதும்.

முற்றும் .